உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

தேவகோட்டை

தி—வகைப்பிள்ளையார் கோயிலின் கணுள்ள

ஸ்ரீ விசாலாக்ஷியம்பா ஸமேத

# விசுவநாதர் கோயிற்

# றிருப்பணி முறையீடு.

---

இது

தேவகோட்டையின்கண்

இளையாற்றக்குடிக் கோயிற் பெருமரபூர் வகுப்பு

மஹா-௱-௱-ஸ்ரீ, மஹாகனம் பொருந்திய

## தி—வகையார்களது ஸமூகத்துக்கு,

அவர்களுள்ளொருவராகிய

## வெ. ஆ. தி. மா.

# சிதம்பரச் செட்டியார்

இயற்றியது.




சென்னை

ஆனந்த அச்சி யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

---

கலியுகாதி-௫௲௩௰-ல் நிகழாநின்ற பிரமோதூதஹு சிம்மரவி.

1930

32-2

## இந்த நூலிலுள்ள

# சருக்கங்கள்.

---



---

இந்நூலுட்காட்டியுள்ள

# பிரமாண நூல்கள்.

## தமிழ் நூல்.

1 விநாயக புராணம்.
2 கந்த புராணம்.
3 பெரிய புராணம்.
4 திருவிளையாடற் புராணம்.
5 காஞ்சிப் புராணம்.
6 திருவானைக்காப் புராணம்.
7 தணிகைப் புராணம்.
8 கூர்ம புராணம்.
9 சேது புராணம்.
10 முந்திய திருக்காளத்திப் புராணம்.
11 பிந்திய திருக்காளத்திப் புராணம்.
12 கடம்பவன புராணம்.
13 அருணகிரி புராணம்.
14 திருவாரூர்ப் புராணம்.
15 கோயிற் புராணம்.
16 திருநாகைக் காரோணப் புராணம்.
17 திருக்குற்றாலப் புராணம்.
18 பேரூர்ப் புராணம்.
19 திருக்கூவப் புராணம்.
20 திருப்பெருந்துறைப் புராணம்.
21 மாயூரப் புராணம்.
22 விருத்தாசல புராணம்.

23 திருவாப்பனூர்ப் புராணம்.
24 அருணாசல புராணம்.
25 திருக்குடந்தைப் புராணம்.
26 திருக்கடந்தைப் புராணம்.
27 சீகாழிப் புராணம்.
28 திருவான்மியூர்ப் புராணம்.
29 திருக்குறுக்கைப் புராணம்.
30 திருவதிகைப் புராணம்.
31 திருநெல்வேலிப் புராணம்.
32 புள்ளிருக்கு வேளூர்ப் புராணம்.
33 திருப்பூவணப் புராணம்.
34 சாயாவன புராணம்.
35 திருவாளொளி புற்றூர்ப் புராணம்.
36 மண்ணிப்படிக்கரைப் புராணம்.
37 திருமயிலைப் புராணம்.
38 திருப்பா திரிப்புலியூர்ப் புராணம்.
39 திருப்பறியலூர்ப் புராணம்.
40 உறையூர்ப் புராணம்.
41 திருக்கருவைத்தல புராணம்.
42 திருவேற்காட்டுப் புராணம்.
43 தனியூர்ப் புராணம்.
44 திருவெற்றியூர்ப் புராணம்.
45 சூரைமாநகர்ப் புராணம்.
46 வீரவன புராணம்.
47 கோயிலூர்ப் புராணம்.
48 திருப்புத்தூர்ப் புராணம்.
49 அத்தீச்சுர புராணம்.
50 சூதவன புராணம்.
51 திருவாத வூரடிகள் புராணம்.
52 இளசைப் புராணம்.
53 திருவேடகப் புராணம்.
54 திருச்சுழியற் புராணம்.

55 வைரவன் கோயிற் புராணம்.
56 காளையார்கோயிற் புராணம்.
57 கச்சியப்ப சிவாசாரியர் புராணம்.
58 திருப்புனவாயிற் புராணம்.
59 கரையேற விட்டநகர்ப் புராணம்.
60 அரிமழுத்தல புராணம்.
61 கோட்டூர்ப் புராணம்.
62 கண்டதேவிப் புராணம்.
63 சந்தானசாரிய புராண சங்கிரகம்.
64 திருமந்திரம்.
65 தேவாரம்.
66 திருவாசகம்.
67 திருக்கோவையார்.
68 திருவிசைப்பா.
69 திருப்பல்லாண்டு.
70 சிவஞான போதம்.
71 சிவஞான சித்தியார்.
72 சிவப்பிர காசம்.
73 உண்மை விளக்கம்.
74 திருவருட் பயன்.
75 நெஞ்சு விடு தூது.
76 சங்கற்ப நிராகரணம்.
77 போற்றிப்பஃறொடை.
78 சிவரகசியம்.
79 சூத சங்கிதை.
80 வாயு சங்கிதை.
81 உபதேச காண்டம்.
82 காசிகாண்டம்.
83 சிவதத்துவ விவேகம்.
84 சைவசமய நெறி.
85 சிவபுண்ணியத் தெளிவு.
86 சிவதருமோத் தரம்.

87 பாரதம்.
88 கம்ப ராமாயணம்.
89 வைராக்கிய தீபம்.
90 அவிரோத வுந்தியார்.
91 பிரபுலிங்க லீலை.
92 ஒழிவி லொடுக்கம்.
93 திருக்குறள்.
94 நாலடியார்.
95 பகவற்கீதை.
96 ஞானவா சிட்டம்.
97 கைவல்லிய நவநீதம்.
98 ஆசௌச தீபிகை.
99 ஆத்திசூடி.
100 கொன்றை வேந்தன்.
101 மூதுரை.
102 நல்வழி.
103 நன்னெறி.
104 நீதிநெறி விளக்கம்.
105 நீதி வெண்பா.
106 சீவக சிந்தாமணி.
107 கல்லாடம்.
108 திரிகடுகம்.
109 நான்மஃணிக் கடிகை.
110 அறநெறிச் சாரம்.
111 பிங்கலந்தை நிகண்டு.
112 சூடாமணி நிகண்டு.
113 நன்னூல்.
114 பட்டினத்தடிகள் பாடல்.
115 தாயுமானசுவாமி பாடல்.
116 சிதம்பர மும்மணிக்கோவை.
117 சிதம்பரச் செய்யுட்கோவை.
118 திருவாரூர் நான்மணிமாலை.

119 மீனுக்ஷியம்மை பிள்ளைத்தமிழ்.
120 பண்டார மும்மணிக்கோவை.
121 கந்தர் கலிவெண்பா.
122 கந்தரனு பூதி.
123 கந்த ரலங்காரம்.
124 அரதத்தாசாரிய சுலோக மொழிபெயர்ப்பகவல்.
125 இளசைப்பதிற்றுப்பத்தந் தாதி.
126 கலைசைப்பதிற்றுப்பத்தந் தாதி.
127 திருமுல்லைவாயிலந் தாதி.
128 பழமலையந் தாதி.
129 சோணசைல மாலை.
130 நால்வர் நான்மணிமாலை.
131 குளத்தூர்ச் சோமேசர் முதுமொழி வெண்பா.
132 கச்சியானந்த ருத்திரேசர் பதிகம்.
133 அருணகிரியந் தாதி.
134 சௌந்தரிய லகரி.
135 திருப்புகழ்.
136 திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி.
137 திருவருணைக் கலம்பகம்.
138 குமரேசர் சதகம்.
139 தனிப்பாடற் றிரட்டு.

## சமஸ்க்ருத நூல்.

140 நீதி சாஸ்த்திரம்.
141 விநாயகஸ் தோத்திரம்.
142 விநாயகப்ரதிஷ்டா விதி.
143 விநாயக ஸகஸ்ரநாமம்.
144 லளிதாஸகஸ்ர நாமம்.
145 பாரதம்.
146 அதர்வசிகா வாக்யம்.
147 சுவேதாச் சுவதரோபநிஷதவாக்யும்.

148 தைத்திரீ யோபநிஷதவாக்யம்.
149 காரணாகமம்.
150 காமிகாகமம்.
151 சுப்ரபேதாகமம்.
152 சூக்ஷமாகமம்.
153 சகலாகமஸார ஸங்க்ரஹம்.
154 சகஸ்ராகம நிரூபணம்.
155 சிரஞோத்தாரண தசகம்.
156 பரார்த்த நித்ய பூஜாபத்ததி.
157 நித்யகர்ம கலாதீபிகை.
158 சில்ப விஸ்வகர்மீயம்.
159 குமார தந்திரம்.
160 பிராயச்சித்த விதானம்.
161 மார்க்கண்டேயஸ்தோத்திரம்.
162 லிங்காஷ்டகம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

தேவகோட்டை

தி—வகைப் பிள்ளையார் கோயிலின்கணுள்ள

ஸ்ரீ விசாலாக்ஷியம்பா ஸமேத

# விசுவநாதர் கோயிற் றிருப்பணி முறையீடு.



## பாயிரம்.

### காப்பு.

பூவுலக மெல்லாம் பொலிவெய்தத் தேவைநகர்
மேவுவிசா லாக்ஷிவிசு வேசருறை—கோவில்செயுங்
கன்னற் பணிவிதியைக் காட்டிமுறை யீடுசெய
முன்னிற்ப ஞானை முகன். (1)

தறையூ டமலன் றளிப்பணிச்சீ ரைச்சொன்
முறையீ டிதனைமுற்று வித்திஃ—† திறைநூல்கொண்
டோதினதென் றூர்க்கு முணர்த்துஞ் சகாயன்மலை
மாதினது மூத்த மகன். (2)

† இறைநூல்-பதினூலாகிய சிவாகம மிருபத்தெட்டு.

* கண்ணப்பர் தொன்னும காரணத்தைத் தாரணித்த
திண்ணப்பர் செய்கணப திக்கருகன்—அண்ணல்விசு
வேசனவன் கற்பணிச்சீர் வேய்முறையீட் டிற்கருகன்
பேசியக ணேச பிரான். (3)

தனைப்போ தகன்றந்தை தாய்தேவெல் லாமாய்
நினைப்போர்க்கு முன்வந்து நிற்கும்—எனைப்போலுந்
தீனர்க்குப் பந்து § ஜகத்யோநி சிற்சோதி
ஆனைக்கன் றின்முகத்தை யார்ந்து. (4)

அருவுரு விசுவ நாத னதிலந நியமாய் நின்ற
திருவுருக் கணேச னென்று செப்புவ துண்மை யாயில்
வருமகே சன்க ணேசன் மகேசைவல் லபையே யாயிற்
பருவமொ டிந்நூன் முற்றப் பண்ணுவன் சுமுக னன்றே. (5)

## கைலாஸவிநாயகர் துதி.

சயிலேச குமாரிசிவ யோகத்திற் பிரணவகுஞ்
சரமாய்த் தோன்றிப்
பயிலேச லறுமடியார்க் கிடர்தீர்த்தின் புதவவந்த
பாக்கி யத்தை
மயிலேறி தமயனைநம் வல்லபைக்கு நாயகனை
வனைந்த நீற்றுற்
கயிலாய நிகர்வடிவக் கயிலாய கணபதியைக்
கருதி வாழ்வாம். (6)

---

* கண்ணப்பர் தொல் நாமகாரணம்-கண்ணப்ப நாயனாருடைய முந்திய திண்ணனாரென்ற காரணப் பெயர்; நாமகாரணம் என்பதை, காரணநாமம் என மொழிமாற்றிப் பொருளுரைக்க; தாரணித்தல் - தரித்தல், பேசிய-சொல்ல; இது ஈண்டுச் செய்யிய வென்னும் வாய்பாட்டு வினை யெச்சம்; பெயரெச்சமாகக் கொள்ளினுமமையும்.

§ ஜகத்யோநி-இது விநாயக ஸஹஸ்ரநாமத்துளொன்று.

## விசுவநாதசுவாமி துதி.

எச்சமயத்தேவர்க்கு மெழுத்தினு ளகரம்போல [கும்
†அச்சினுக் கச்சாய் நின்றுய்த் தனைவர்க்குந் தான்முன்னு
உச்சமதுணர வேத முரைபசு பதிப்பேர் வாய்ந்த
விச்சுவ நாதன் பாத விரைமலர் வணக்கஞ் செய்வாம். (7)

## விசாலாக்ஷியம்மை துதி.

உளத்துவகை மீக்கூர வேட்டனவேட் டாங்குதனை
யுபாசிப் போர்க்குத்
தளத்துயர்செம் பதுமநிதி சங்கநிதி வானுள்கை
தாணியாள்கை
வளத்தசந்தா நவதிசௌபாக் கியவதிரு பவதிகுண
வதியாய் மன்னுங்
§ களத்திரத்தொ டருளும்விசா லாக்ஷிஜகந் மாதாவைக்
கருதி வாழ்வாம். (8)

தெருணிகழ்த்தி யிருடணித்துச் சிற்றறிவான் முன்செய்பிழை
சிந்தை செய்யா
தருணிகழ்த்தித் * தியாதாக்கட் கநவரத சிவாநந்த
மளித்த லாலே
கருணையினல் விசாலித்த கண்ணுடையா ளெனக்கற்றோர்
கழறுந் தன்பேர்ப்
பொருணயத்தை விளக்கிநிற்கும் விசாலாக்ஷி யம்மைபதம்
புந்தி செய்வாம். (9)

---

† அச்சினுக்கச்சு-உயிர்க்குயிர், உச்சம்-உயர்வு. * தியாதா-தியானிப்போர்.
§ களத்திரம்-மனைவி.

## தண்டபாணி துதி.

கொண்ட லூர்புரு கூதனை யாதிய
அண்ட ருக்கிட ராற்று மசுரரைத்
துண்ட மாக்கிச் சுவர்க்க சுகமருள்
தண்ட பாணி சரண்சர ணாகுமால். (10)

## தருமநந்தி துதி.

‡ பெருமனந்தி நிலாப்பிறைப் பிஞ்ஞகன்
ஒருமனந்தி கழமுன் புதித்தருள்
தருமநந்தி சரண சதுஷ்டயம்
பொருமனந்தி யொழிந்திடப் போற்றுவாம். (11)

## சண்டேசர் துதி.

எந்தச் சுற்ற மெனினுஞ் சிவார்ச்சனைக்
கந்தஞ் செய்யி னடன்முறை யாமெனத்
தந்தை தாளைத் தடிந்தரன் றருள்பெறும்
மைந்தர் தாட்கு வணக்கம் வணக்கநாம். (12)

---

‡ பெருமன்-ஸர்வவியாபகன்; இதனை "அந்தணாரூ ரெந்தையெம்பெரும" எனத் திருவாரூர் நான்மணி மாலையில் வருமாற் றாலறிக. அந்தி-செவ்வானம், தருமநந்தி - அறக்கடவுளாகிய இடபதேவர்; இவர் சிவபெருமானது திருவுள்ளத்தில் ஆதிகாலத்தில் உதித்தமையை "பொன்வலிகாட்டும் வேணிப் புண்ணிய னுளத்து வந்தாய் நின்வலி நீயுங் காணாய்" எனச் சீகாழிப்புராணம் புகலியான வத்தியாயம்-15-ற் கூறப்படுமாற்றாலறிக. சரணசதுஷ்டயம்-நான்கு பாதங்கள்; நந்தல்-கெடுதல்; இதனை "நந்தல் கேடுடனே யாக்கம்" எனவரும் சூடாமணி நிகண்டுச் செய்யுளாலறிக.

## நூல் செய்தற்குக் காரணமும், நூற்பெயரும்.

* பொருத்தவிர் தேவைத் தீனு வகைப்பொது வாரை முன்னிட்
டருத்தமண் டபமி லாமற் சிவாலய மாற்ற லாகா
துருத்தக வதுவைத் தாற்று மென்றவர்க் குரைத்த தாகுந்
திருத்தகு மிந்நூ னுமந் திருப்பணி முறையீ டாமால். (13)

## அவையடக்கம்.

† பங்கத்த தென்று வாசப் பதுமத்தை மறுவோ டுற்ற
அங்கத்த தென்று சீத வலவனை யுவரித் தென்று
சங்கத்தைத் தள்ளா ரீசன் றிருப்பணித் தன்மை சாற்றும்
இங்கித்தை யவைபோற் கொள்வ ரென்சொலென் றிகழார் நல்லோர். (14)

## பாயிரம் முற்றிற்று.

---

* பொருத்தவிர்-ஒப்பில்லாத; பொருவுதல்-ஒத்தல்; இதனை—விநாயக புராணம் திருநாட்டுப்படலம் 152-ல் "பொருவில் சாரலிற் பொலிதரும்" எனவும், திருவெற்றியூர்ப்புராணம் திருமால்வழிபடுபடலம் - 15-ல் "பொருவிலாவறம்" எனவும் வருமாற்றாலறிக.

† பங்கம்-சேறு. அலவன்-சந்திரன். உவரி-உப்புக்கடல். சங்கம்-சங்கு.

# நூல்வரலாற்றுச் சருக்கம்.

## நூதனச் செய்யுள்.

*சிகையார்க்கும் வளத்தேவ கோட்டையின்கட்டிருந் தொண்டத்
தொகையார்க்குட் டிண்ணனூர் பேர்தாங்கித் தொல்புகழாற்
†திகையார்க்குந் திண்ணப்ப வணிகர்குலத் துதிதீன
வகையார்க்கிந் நூல்வந்த வரலாற்றை யினிதுரைப்பாம்.

---

தேவகோட்டையின்கண்ணே திண்ணப்ப செட்டியாரவர்களது உயர்குடிப்பிறத்தற் சிறப்புவாய்ந்து விளங்கிவருகின்ற,

## கனம்பொருந்திய, தி-வகையார்களே !

இந்த நூலானது, விசுவநாதர் கோயிற் றிருப்பணி விஷயத்தை உங்கள் ஸமூகத்துக்கு முறையிடுதல் பற்றி யியற்றப் பெறுதலால் "விசுவநாதர் கோயிற்றிருப்பணி முறையீடு" என்னும் பெயர்வைக்கப் பெற்றது.

இந்த நூலானது, உங்களது சிறப்பு நன்மையையும், நாடு நகரமனைத்திற்குஞ் செழிப்புத்தரத்தக்க பொது நன்மையையுங் கருதி உங்களுடைய ஸமூகத்துக்கு உபவிஷயங்களையுந் தழுவி யமைத்து அடியேனாற் செய்யப் பெற்றது.

---

* சிகை ஆர்த்தல்-உணவிற்குரிய பதார்த்தங்களை விளைவித்தல்; சிகை என்பதற்கு, உணவு என்பது பொருளாம்; இதனை "மறு சிகை நீக்கியுண்டாரும்" என நாலடியார் முதற்செய்யுளில் வருமாற்றாலறிக; ஆர்த்தல்-ஈண்டுப் பொருந்து வித்தல்.

† திகை ஆர்த்தல், திசைகளைப்பந்தித்தடக்குதல்; திகை என்பதற்கு, திசை என்பது பொருள்; இதனை "திசையுஞ் சுணங்குந்திகை யெனலாகும்" எனப் பிங்கலந்தைச் சூத்திரத்திற் கூறு மாற்றாலறிக; ஆர்த்தல் என்பதற்கு, ஈண்டுப் பந்தித்தல் என்பது பொருளாம்; இதனை "ஆர்த்தபிறவித் துயர்கெட" எனத் திருவாசகத்திருவெம்பாவையிற் கூறுமாற்றாலறிக.

ஆதலால் இந்தநூலை, கூறிய என்னியல்பு நோக்காது இத னுட் கூறப்பட்ட ஈசன்திருப்பணியியல்பு நோக்கி நீங்களனை வருந் தயவுசெய்து அங்கீகரித்துப் பார்வையிடவேண்டுமென மிகவும் வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

கடவுண் மகிமையைக் கூறுதலுங் கேட்டலுஞ் செய்தவழி, அது, எல்லாமங்களங்களையு மடைவிக்கு முபாசனைக் கேது வாகிய அன்பைப் பெருக்குதலால், அதன் பொருட்டு இந்நூ லாரம்பத்திற் பரமசிவ மகிமைச்சருக்க மெனவும், பராசத்தி மகிமைச்சருக்க மெனவும், விநாயகமகிமைச்சருக்க மெனவும் மூன்று சருக்கங்கள் கூறப்பட்டன; அவற்றின்பின் பிள்ளையார் கோயிலின் வரலாறு தெரிதற்பொருட்டு-தி-வகைப்பிள்ளையார் கோயில் வரலாற்றுச் சருக்கமென ஒருசருக்கமும், அதன் பின் விசுவநாதப் பிரதிஷ்ட்டைக்குச் சிவலிங்க வாணலிங்க மகிமைத் தேர்ச்சியே காரணமாதலாற் பிரதிஷ்ட்டாபகர்கள் முற்காலத் திலே தேர்ந்து செய்தனர்களென்பது தெரிதற் பொருட்டுச் சிவலிங்கமகிமைச்சருக்கம் வாணலிங்கமகிமைச்சருக்க மென இரண்டு சருக்கங்களும், அவற்றின் பின் விசுவநாதர் கோயிலின் வரலாறு தெரிதற்பொருட்டு விசுவநாதர்கோயில் வரலாற்றுச் சருக்கமென ஒருசருக்கமும், அதன்பின் பிள்ளையார்கோயிலும் விசுவநாதர் கோயிலுஞ் சேர்ந்து-தி-வகைப்பொது வியாபகத்தி லிருந்து வருகின்றமை தெரிதற்பொருட்டு உபயாலயச் சேர்க் கைச் சருக்கமென ஒருசருக்கமும், உபயாலயங்களுஞ் சேர்ந்த பிறகு திருப்பணி செய்ய முயன்ற முயற்சியும் அம்முயற்சிக்கண் ணடந்த வர்த்தமானங்களுந் தெரிதற்பொருட்டுத் திருப்பணி முயற்சி வர்த்தமானச் சருக்கமென ஒருசருக்கமும், அதன்பின் மேற்படி சருக்கத்துள் விளக்கப்பட்ட-தி-ராம-தி-சுப்பிரமணி யஞ் செட்டியார், முறையிட்டாரைத் தாயாதிப்ருஷ்டஞ் செய்யக் கருதியுரைத்த ஒருவிஷயமட்டுங் கலியுகதர்ம மென்பது பற்றி இந்த யுகக்கொடுமை தெரிதற்பொருட்டுக் கலியுகக்கொடுமைச்

சருக்கமென ஒருசருக்கமும், அதன்பின் வேத சிவாகமாதிகளி லுள்ள விதிவிலக்கை யுணர்ந்து ஆதிசைவ சிவாசாரியர்கள் கூறும் விதரணைப்படி செய்யத்தக்கது திருப்பணியாதலால் அவைகளின்மகிமையும் அவர்களின்மகிமையுந் தெரிதற்பொ ருட்டு வேத சிவாகமமகிமைச் சருக்கம், ஆதிசைவ சிவாசாரிய மகிமைச் சருக்கமென இரண்டுசருக்கங்களும், அவற்றின்பின் தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால் விசுவநாதர் விசா லாக்ஷிக்கு அர்த்த மண்டபம் வைக்காமற் போடப்பட்டிருக்கிற பிளான்படிசெய்தாற் றுன்பம்விளையுமென்பதும் அர்த்தமண்ட பம் சிவாலயத்துக்குச் சுருதியுக்தியநுபவ மூன்றானுந் துணிந் தெடுக்கப்பட்ட முக்கியாங்கமா யுள்ளதென்பதும் அதனை வைத் துச்செய்தா லின்பம்விளையுமென்பதுந் தெரிதற்பொருட்டுத் திருப்பணிச்சருக்கமென ஒருசருக்கமும், அதன்பின் தி-வகை யார்களை அடியேன் வேண்டிக்கொள்ளும் விஷயந் தெரிதற் பொருட்டு வேண்டுகோட்சருக்கமென ஒருசருக்கமும் கூறப் பட்டன; ஆகவே இந்த நூலானது, வரலாற்றுச்சருக்கமுள்படப் பதினேந்து சருக்கங்களாற் பூர்த்தியடைந்து விளங்கா நிற்கும். சுபம்.

நூல் வரலாற்றுச்சருக்கம் முற்றிற்று.

---

# பரமசிவ மகிமைச் சருக்கம்.

## நூதனச் செய்யுள்.

பாரினிற் கமல முதன்மலர் தாமே
பரிதிமுன் மலர்வபோ *லளவில்
பேருல கமுந்தன் சந்நிதிப் படூஉம்
பெற்றியாற் றொழிற்பட நின்ற
பூரணப் பரம சிவன்மகி மையையம்
புயனரி முழுவது முணரார்
ஆரினி வல்லார் நமதுசிற் றறிவிற்
கெட்டிய வளவினி லறைவாம்.

---

ஸ்ரீமத் அகண்டாகாரசச்சிதாநந்த ஜோதிர்மய சுத்தசைதந்யப் பிரமமானது, அநாதிமல முத்த சித்துருவாகியதன்னை, அநாதிமல பெத்தசித்துருவாகிய ஆன்மாக்கள் மனவாக்குக் காயங்களால் வழிபட்டு மல நீக்கமுஞ் சிவத்துவ விளக்கமும் பெற்றுய்ய வேண்டுமென அவர்கண்மீது கைம்மாறு கருதாது வைத்த பெருங்கருணைத் திறத்தால் அக்கருணையையே, தனக்கு, அருவம் அருவுருவம் உருவமென்னும் மூவகைத் திருமேனிகளாகக் கொண்டெழுந்தருளிற்று;

அம்மூவகையுள், அருவத்திருமேனி மேனிலக்கண்ணதாய்ச் சிவம் சத்தி நாதம் விந்துவென நான்காயும், உருவத் திருமேனி

---

* உலகம் சிவசந்நிதிக்கட் டொழிற்படுமென்பதனை "மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த- தென்னு மறையி னியன் மறந்தாய்" எனவருஞ் சிவஞானபோத வெண்பாவானும் "இறைவன்றன் சந்நிதிக்க ணுலகின்றன் சேட்டை யென்னு-மறைகளு மறந்தாய்" எனவருஞ் சிவஞான சித்தித்திரு விருத்தத்தானும் அறிக.

கீழ்நிலைக் கண்ணதாய் மகேசுவரன் உருத்திரன் விட்டுணு பிரமா வென நான்காயும், அருவுருவத்திருமேனி நடுநிலைக் கண்ணதாய்ச் சதாசிவனென ஒன்றாயும் விளங்கிநிற்குமாதலால் அவ்வொன்பதும், நவவடிவங்களென்று சொல்லப்படும்; அவ்வொன்பதனுட் பிரம விட்டுணு வடிவமிரண்டாக வைத்தெண்ணப்பட்டிருப்பதெவற்றை யெனில்? தேவாரத்தில் "நூறு கோடி பிரமர்கணொந்தினர் ஆறு கோடிநா ராயண ரங்ஙனே" எனவும், சித்தாந்த சாஸ்திரத்துளொன்றாகிய போற்றிப்பஃறொடையில் "நல்வினைக்கண் வாளுளின் மாலாயயனாகி" எனவும், கந்தபுராணம் ததீசிப்படலம்-22-ல் "விதிமுத லாகி யுள்ளோர் வியனுயிர்த்தொகையாம்" எனவுங் குறிப்பிட்டோதப் பெற்றவராய் அவ்வப் பதம்பெற்றுத் தொழில்செய்யும் பிராகிருதப் பாதந்திரப் பிரம விட்டுணுக்களது வடிவங்களையன்று; திருவாசகத்தில் "முழுவதும் படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை-காப்போற் காக்குங் கடவுள்" எனச் சிறப்பித்தோதப்பட்டனவாகிய, அக்கர்த்தாக்களைப் படைத்துங்காத்தும் நிற்குமவசரத்திலதற்கேற்பப் பரமசிவன் சுவதந்திரத்திற் கொண்டு நிற்குஞ் சுத்த வடிவங்களையேயாம்; அருவம் நிஷ்களமெனவும் உருவம் சகளமெனவும் அருவுருவம் சகளநிஷ்கள மெனவுங் கூறப்படும். அவற்றுள், அருவம் கட்புலப்படாததும் அருவுருவமு முருவமும் கட்புலப்படுவனவுமாகும்; அருவுருவமாகிய சிவலிங்கமூர்த்தியின் கண்ணின்றும் மகேசுவரபேதமாகிய சந்திரசேகரர், அர்த்தநாரீசுவரர், நடராஜர், கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், விருஷபாரூடர், காமதஹனர், காலகாலர், திரிபுரதஹனர், கங்காதரர், கஜஸம்ஹாரர், தக்ஷயாகஸம்ஹாரர், சங்கரநாராயணர், கிராதரூபர், கங்காள தாரணர், சண்டேசாநுக்ரஹர், நீலகண்டர், சக்கரப்பிரதர் சோமாஸ்கந்தர், கணேசாநுக்ரஹர், ஏகபாதர், சுகாசனர், தக்ஷிணாமூர்த்தி, உமாமஹேசுவரர், லிங்கோற்பவ ரென்னும் இருபத்தைந்து உருவ மூர்த்திகளும் விநாயகர் சுப்பிரமணியர்

வயிரவர் வீரபத்திரர் முதலியவுருவ மூர்த்திகளெல்லாமுந் தோன்றிக் காக்ஷிதந் தருளும்; மேற்கூறிய மூர்த்திபேதம் பலவாயிருப்பினும், அவ்வெல்லாவற்றுள்ளும் தன்மைதிரியாதபடி நிற்கும் மூர்த்திமான் ஒருவனேயாம். இவற்றிற்குப்பிரமாணம் :—

## விநாயக புராணம்.

### உமையம்மை சதுர்த்தி விரதங்கேட்ட படலம்-40.

"ஒன்ற தாய்ப்பல வாயரு வாயுரு வாகி
நின்றெ லாவுல கத்தினு நீக்கமி லாத
துன்று சோதியே கணபதி யெனச்சொலு நாமம்
நன்று தாங்கிய தறிமதி நாமெலா முய்ய"

## கந்த புராணம்.

### திருவவதாரப் படலம்-92. சூரனமைச்சியற் படலம்-119.

### சந்திரசாபப் படலம்-28.

"அருவமு முருவு மாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகிக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன்னிரண்டுங்கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய"

"தன்னை நேரிலாப் பரம்பொரு டனியுருக் கொண்ட
தென்ன காரண மென்றியே லைந்தொழி லியற்றி
முன்னை யாருயிர்ப் பாசங்கண் முழுவது மகற்றிப்
பின்னை வீடுபே றருளுவா னினைந்தபே ரருளே"

"விரிசுடர் கெழுவிய வெள்ளி யோங்கலின்
அருளுரு வெய்தியே யமலன் மேயதே"

## பெரிய புராணம்.

தில்லைவாழந்தணர்-2. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர்-67.

"கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
அற்புதக் கோல நீடி யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி"

"ஆரணமு முலகேழு மீன்றருளி யனைத்தினுக்குங்
காரணமாய் வளம்பெருகு கருணை திரு வடிவான
சீரணங்கு சிவபெருமா னருளுத லுஞ் சென்றணைந்து
வாரிணங்கு திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி"

## சிவஞான சித்தியார்.

சுபக்கம் முதற்சூத்திரம்-46-55-67. இரண்டாஞ் சூத்திரம்-74.

"உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றேன்றுங்
கருமமு மருள ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு டனக்கொன் றின்றி
அருளுரு வுயிருக் கென்றே யாக்கின னசிந்த னன்றே"

"உருமேனி தரித்துக் கொண்ட தென்றலு முருவி றந்த
அருமேனி யதுவுங் கண்டோ மருவுரு வான போது
திருமேனி யுபயம் பெற்றேஞ் செப்பிய மூன்று நந்தங்
கருமேனி கழிக்க வந்த கருணையின் வடிவு காணே"

"ஒருவனே யிராவ ணாதி பாவக முற்றுற் போலத்
தருவனிவ் வுருவ மெல்லாந் தன்மையுந் திரியா னாகும்"

"சிவஞ்சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழு மீசன்
உவந்தரு ளுருத்தி ரன்றான் மாலய னென்றி னென்றுப்
பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மொன்று
நவந்தரு பேத மேக நாதனே நடிப்பன் கண்டாய்"

## சிவப்பிரகாசம்.

முதற் சூத்திரம்-2.

"நாடரிய கருணை திரு வுருவ மாகி"

### உண்மைவிளக்கம்-38.

"உரையுணர்வுக் கெட்டா வொருவன்மிகு பஞ்சாக்
காத்தால் வரைமகடான் பாதி—பரையிடமாக்
காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு"

### திருவருட்பயன்-5.

"அருவு முருவு மறிஞர்க் கறிவாம்,
உருவு முடையா னுளன்"

### தேவாரம்.

போது-சிவனெனுமோசைத் திருப்பதிகம்-2.

"அரிதரு கண்ணி யாளை யொருபாக மாக
வருள்கா ரணத்தின் வருவார்"

### திருமந்திரம்.

1763-1764-1810.

"உருவு மருவு முருவோ டருவும்
மருவும் பரசிவன் மன்பல் லுயிர்க்கும்
குருவு மெனநிற்குங் கொள்கைய னாகும்
தருவென நல்குஞ் சதாசிவன் றானே"

"நாலான கீழ துருவ நடுநிற்க
மேலான நான்கு மருவு மிகநாப்ப
ணாலான வொன்று மருவுரு நண்ணலாற்
பாலா மிவையாம் பரசிவன் றானே"

"தலையான நான்குந் தனதரு வாகும்
அலையா வருவுரு வாகுஞ் சதாசிவம்
நிலையான கீழ்நான்கும் நீடுரு வாகும்
துலையா விவைமுற்று மாயல்ல தொன்றே"

## உபதேச காண்டம்.

சரியையாதி மான்மியச்சருக்கம்-46.

"நிட்களமென் றுரைப்பர்மகா சதாசிவத்தைச் சகளநிட்
களமென் றோதி,
உட்கருதி யுரைப்பர்சதா சிவத்தைமகேச் சுரஞ்சகள
மென்ப ருண்மை,
பெட்புறுமுப் பொருட்குமொரு பேதமிலை"

## கோயிற் புராணம்.

பாயிரம்.2.

" ஆரணங்கண் முடிந்தபதத் தாநந்த வொளியுலகிற்
காரணங்கற் பனைகடந்த கருணைதிரு வுருவாகி"

## திருக்குற்றாலப் புராணம்.

தக்கன் வேள்விச்சருக்கம்-5.

" ஒங்குலகின் பொருட்டாகச் செயல் புரியக்
கருணைதிரு வுருவாக் கொள்வன்"

## திருநாகைக்காரோணப் புராணம்.

கடவுள் வாழ்த்து-4. அநந்தீசப் படலம்-30.

"அருவமுத லொரு மூன் றுட் கட்புலனு வனவிரண்டா லவற்று
ளெல்லா—வுருவமு முண்டாக்கிடுவித் துபயமே"

"உருநான்கு மருநான்கு முபயமொன் று மமைந்தான்"

## காஞ்சிப் புராணம்.

தழுவக்குழைந்த படலம்-50.

"அருநான்கு முருநான்கு மருவுருவந் தானென்று மாக
வொன்பான்—திருமேனி தோற்று வித்து"

## திருக்கூவப் புராணம்.

### திரிபுரதகனச் சருக்கம்-71.

"நிறைந்தநின் றெல்லை யுண்மை நிலைதிரி வின்றி யாங்கள்
பிறந்திறந் திடுத தீர்ப்பான் பேரரு ளுருவு கொண்டிங்
குறைந்தநின் கருணை போற்றி"

## திருப்பூவணப் புராணம்.

### உமாதேவி திருவவதாரச்சருக்கம்-57-59.

"தன்னிக ராகி நின்ற சகளநிட் களமெ மக்கு
மன்னிய வுருவ மாகும்"

"உருவொரு நான்க தாகி யுற்றிடு மருவ நான்காய்
அருவுரு வொன்றே யாகி யையைந்து பேத மாகி"

## திருப்பெருந்துறைப் புராணம்.

### உருத்திரமூர்த்த முரைத்த படலம்-7-8.

### மகேச்சுரமூர்த்த முரைத்த படலம்-3.

"நவந்தரு விதத்து மேகநா யகனே நடிப்ப னென்
றுகமஞ் சொலலால்"

"நித்தரா கியசங் காரகா ரணர்முன் னிகழ்த்திய
விலிங்கத்திற் றோன்றி"

"நவந்தருபே தங்கடொறு மேகனுய் நடித்திடுநல் லான்ம
நாத—சிவன்றிகழுஞ் சதாசிவரின் மகேச்சுரராய்த் திகழ்ந்தெழு
ந்து சிறப்பி னிந்தப்—புவனமுழு துயுநிமித்தம் பொருந் திருபத்
தைந்துருவிற் புணர்ந்து நின்றிவ்—வவனிமிசை விளையாடு மற்
புதந்தேர்ந் தியாவரெடுத் தறைய வல்லார்"

## தாயுமானசுவாமி பாடல்.

### பாயப்புலி-10.

"சிவமாதி நான்முகக் கோவந்தம் நான்மறை செப்புகின்ற
நவமாயிலங்கிய வொன்றே"

---

இவ்வாறு திருவருட் டிருமேனி கொண்டருளிய சிவபெருமான், ஏனைத்தேவர் மனிதராதியர்களைப்போல, தான், முக்குண வசப்பட்டுழலான்; இவன் திரிகுண ரஹிதனென்பதனை, விநாயக புராணம் முக்கலர்தக்கனுக் குபதேசித்தபடலம்-21-ல் "குணங் குறி கடந்த நாதன் கொழியருட் கிலக்கமானீர்" எனவும், கௌசானனர் திருவவதாரப்படலம்-48-ல் "மேவு குணுதீ தனு மாயும் விளங்கா நின்றான்" எனவும், விக்கினராசர் திருவவதாரப் படலம்-34-ல் "நில்வகை யனைத்தையு நிறுத்து நிர்க்குண" எனவும், 109-ல் "குறிகுணங் கடந்த புராண" எனவும், கந்தபுராணம் அநந்தன்சாப நீங்கு படலம் 17-ல் "சொற்குண மூவகைத் தொடர்பு மில்லதோர், நிர்க்குண னவன்செய னிகழ்த் தற்பாலதோ" எனவும், திருவெற்றியூர்ப்புராணம் நாட்டுப் படலம்-19-ல் "குறிகு ணத்தினைக் கடந்த சேய்க்கன்பினர்" எனவும், திருக்கைலாயப் படலம்-10-ல் "வாட்ட நீவுமப் பரன் குணு தீதனும் வாய்மை" எனவும், தாயுமானசுவாமி பாடல் கருணாகரக்கடவுள்-1-ல் "நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப" எனவும் வருவனவாதியாய பிரமாணங்களாலறியலாம்; முக்குணங்களாவன—தாமஸம், ராஜஸம், சாத்துவிக மென்பவைகளாம்.

இன்னமும் இச்சிவபெருமான், ஏனைக்கடவுளரி லொருவர்க்கேனுஞ் செல்லத்தகாக் காரணத்தா லேனைமத நூல்களிற் கூறப்படாதனவும் தனக்கெனச் சிவாகமத்துட் கூறப்பட்டிருப்பனவுமான வஸ்துலக்ஷண எண்குணங்களை யுடையவனுமாவான்; இவன் அஷ்டகுண ஸஹிதனென்பதனை, திருவிடைமருதூர்த் தேவாரம்-4-ல் "எண்குணத்தா ரெண்ணு யிருந்தார் போலு மிடைமருது மேவிய வீசனுரே" எனவும், திருக்காறுட்டு முள்ளூர்த் தேவாரம்-3-ல் "இறையவனை மறையவனை யெண்குணத்தி னானை" எனவும், பொதுத் தேவாரம் குறுந்தொகை-8-ல் "எட்டு வான்குணத் தீசனெம் மான்றனை" என

வும், சித்தாந்த சாத்திரம் நெஞ்சு விடுதூதில் "யார்க்கு மெழுதா வியற்குணங்க ளெட்டானை" எனவும், திருக்குறள்-9-ல் "கோ ளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்—றாளை வணங் காத்தலை" எனவும், விநாயகபுராணம் அரசியற்கைப்படலம்-11-ல் "விருப்பொடு வெறுப்பிலாத மிக்க வெண்குணத்தோ டொன்றா யிருப்பவன்" என்வும், மயூரேசர் திருவவதாரப்படலம்-206-ல் "எண்குணச் செல்வனு மவ்வயி னிலாபனைச் சோதிக்க வெண் ணுபு" எனவும், திருத்தணிகைப் புராணம் வீராட்ட காசப் படலம் 81-ல் "எண்குணந் தனக்கே யன்றி யில்லாதா யெங்கு நின்ற வொண்குணப் பொருளேயான வுத்தமக் குமரப் புத் தேள்" எனவும், சூரைமாநகர்ப் புராணம் சூரியன் பூசித்த படலம்-11-ல் "ஒண்குண மில்லா னாகி யுயிர்க்குயி ராகி நிற்கு மெண்குணச் செல்வன்" எனவும் வருவனவாதியாய பிரமாணங் களா லறியலாம்; எண்குணங்களாவன—தன்வயத்தனாதல், தூய வுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவி லாற்றலுடைமை, வரம்பி லின்பமுடைமை யென்பவைகளாம்.

இன்னமும் இச்சிவபெருமான், மனவாக்குக் காயங்கட் கெட்டாதபடி அவைகளைக் கடந்து நிற்பவனுமாவான், இவன் வாங்மநாதீதனென்பதனை, திருவதிகைத் தேவாரம் - 7 - ல் "உரையா லுணரப்படாதவடி" எனவும், சிவஞானசித்தியார் சுபக்கம் மங்கலவாழ்த்து-4-ல் "மறையினா லயனான் மாலான் மனத்தினால் வாக்கான் மற்றுங்—குறைவிலா வளவினாலுங் கூறொணா தாகி நின்ற விறைவனார்" எனவும், மேற்படி ஆறாஞ் சூத்திரம்-5-ல் "மனத்தொடு வாக்கிறந்த சித்துரு அது" என வும், திருமந்திரம்-2854-ல் "வாக்கு மனமு மறைந்த மறைப் பொருள்" எனவும், திருவிளையாடற்புராணம் பாயிரம்-13-ல் "வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலா யெல்லாமா யல்ல

துமா யிருந்த தனை" என்வும், விநாயகபுராணம் வியாசர் பிரம தேவனையடுத்த படலம்-20-ல் "அவரவர் மனத்துக் கெட்டா அரும்பொரு ளாயினும்" எனவும், பிரமசிருட்டிப்படலம் 17-ல் "உரையானு முணர்வானு முடலானு மறிவரியாய்" என வும், கிருச்சமதர் வரம்பெறு படலம்-5-ல் "மனவாக்குறு காயமு மெட்டரிய வளர்பே ரொளியாய்" எனவும், 15-ல் "காண்டல் கருத லுரையிவற்ருற்காணுயை" எனவும், கெசானனர் திரு வவதாரப்படலம்-126-ல் "மனுதி தனக்கு மெட்டாத வத்து" எனவும், கந்த புராணம் காமதகனப்படலம்-82-ல் "வாக்கினுல் மனத்தா லெட்டா வள்ளல்" எனவும், கோயிற் புராணம் இரணியவன்மச் சருக்கம் 65-ல் "வாக்கொடு மனமி றந்த மன்னவ னெங்கு மாகி நீக்கற நிறைந்தா னேனும்" எனவும் பேரூர்ப்புராணம் கௌரி தவம்புரி படலம்-31-ல் "வாயினுன் மனத்தா னீண்ட வடிவினு லெட்ட வொண்ணுத் தாயிலாத்தா யன்னுன்" எனவும், கந்தர் கலி வெணபாவில் "மநாதிகளுக்கெட் டா வடிவாய்," எனவும், கந்தரனுபூதி-26-ல் "வேதாகம ஞாந விநோத மநோதீதா" எனவும், தாயுமானசுவாமி பாடல் பரசிவ வணக்கம்-1-ல் "மனவாக்கினிற் றட்டாம னின்றதெது" எனவும், உடல் பொய் யுறவு-20-ல் "மனத்தாலும் வாக்காலும் மன்ன வொண்ணு மோன வினத்தாரை" எனவும், 25-ல் "சொல்லுக் கடங்காச் சுகப்பொருளே" எனவும், பைங்கிளிக்கண்ணி-24-ல் "சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை" எனவும், காண் பேனே வென்கண்ணி-26-ல் "வாக்கான் மனத்தான் மதிப்பரி யாய்" எனவும் வருவன வாதியாய பிரமாணங்களாலறியலாம்.

இன்னமும் இச்சிவபெருமான், வேதாதி நூல்களாலும் மாலயனுதி தேவரனைவர்களாலும் அளவிட்டோதுதற்கும் அறி தற்கும் அடங்காத வியல்பினையுடையவனுவான். அவ்வியல் புடையா னென்பதனை, கோயிற் றேவாரம்-10-ல் "நாடி நாரண நான்முக னென்றிவர் தேடியுந் திரிந்துங் காணவல்லரோ" என

வும், திருவாரூர்த் திருத்தாண்டகம்-4-ல் "விண்ணியங்கு தேவர்களும் வேதநான்கும் விரைமலர்மே னான்முகனு மாலுங் கூடி யெண்ணரிய திருநாம முடையாய்" எனவும், திருவாசகம் திருச்சாழல்-17-ல் "நான் மறைக டாமறியா வெம்பெருமா னீசாவென் றேத்தினகாண் சாழலோ" எனவும், கோயிற்றிருவிசைப்பா-11-ல் "மறைகளு மமரர் கூட்டமு மாட்டா தயன்றிரு மாலொடு மயங்கி முறை முறை முறையிட் டோர்வரி யாயை" எனவும், சித்தாந்த சாத்திரம் நெஞ்சுவிடுதூதில் "பூமேவு முந்திப் புயல் வண்ணன் பொற்பமைந்த நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன் றாமேவிப் பன்றியு மன்னமுமாப் பாரிடந்தும் வான்பறந்து மென்று மறியா வியல்பினன்" எனவும், திருவிளையாடற் புராணம் பாயிரம்-29-ல் "அல்லையி தல்லை யீதென மறைகளு மன்மைச் சொல்லி னற்றுதித் திளைக்குமிச் சுந்தரன்" எனவும், நான் மாடக் கூடலான படலம்-1-ல் "பெருநூல் வேதங்கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற்-பாதங்களோவ வளையிந்நாதி பகர்வாரை யாயு மவரே" எனவும், கல்லானைக்குக் கரும்பருத்திய படலம்-27-ல் "நின்னுன் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும்-பன்னு ளருச்சித்தும் பாதந்தலைசுமந்தும்-உள்ளுமம் வாசித்து முன்னையறி யேனென்று-சொன்னு லடியனேன் சோதனைத்தோ நின்னியல்பே" எனவும், விறகுவிற்ற படலம்-34-ல் "பாடன் மறையுந் தெளியாப் பரமன்" எனவும், விநாயக புராணம் வியாசர் பிரமதேவனை யடுத்தபடலம்-20-ல் "அவிர் மறை யின்னு. மன்மைமொழியினு லளக்கின்றுனும்" எனவும், கௌசானனர் திருவவதாரப்படலம்—29-ல் "மறைகூவி யறியாத பெருமானை" எனவும், கந்த புராணம் சூரனமைச்சியற்படலம் 127-ல் "வேதக் காக்ஷிக்கு முபநிடத் துச்சியில் விரித்த போதக் காக்ஷிக்குங் காணலன்" எனவும், ததீசியுத்தரப் படலம்-346-ல் "ஆரணம் யாவையு மறிந்து நாடொணுப் பூரண" எனவும், சூரபன்மன் வதைப்படலம்-447-ல் "வேதனு மயனு மேனை விண்ண

வர் பலருங்காணு நாதன்'' எனவும், சூதசங்கிதை பாயிரம்-45-ல் "ஆற்றநெடு நாளுழந்து பன்மறையு மாலயனு மளவு செய்து சாற்றரிய சிவபெருமான்'' எனவும், கோயிற்புராணம் பதஞ் சலிச்சருக்கம்-67-ல் "ஆரண மனைத்து நாகின் றுடுது மென்று போற்றும்-காரணங் காலந் திக்குக் கருத்திடங் காணமாட்டா'' எனவும், புள்ளிருக்கு வேளூர்ப்புராணம் திருவவதாரச்சருக்கம்-19-ல் "ஆரணம் முணர்ந் தறிவரும் புராதன'' எனவும், திருவிழாச்சருக்கம்-2-ல் "ஆரணந் தேடிக்காணு வையனே'' எனவும், சிதம்பர மும்மணிக்கோவை-16-ல் "வேத புருடனும் யாதுநின் னிலையெனத் தேறலன்'' எனவும், கச்சியாநந்த ருத்திரேசர்பதிகம் 9-ல் "இருக்கெலா மளவிட் டின்னு மினைத்தென வறிய வெட்டாத் திருக்குலா வியபே ரின்பச் செழுங்கடல்'' எனவும், வருவன வாதியாய பிரமாணங்களா லறியலாம்.

இன்னமும் இச்சிவபெருமான், தன்னானு மறியப்படாத அபார மகிமையை யுடையவனுவான்; அத்தகைய மகிமைய னென்பதனை, திருவாசகம் திருச்சாழல்-19-ல் "தம் பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ'' எனவும், கந்தபுராணம் சூரனமைச் சியற்படலம்-128-ல் "தானுங் காண்கிலனின்னமுந் தன்பெருந் தலைமை'' எனவும், புள்ளிருக்கு வேளூர்ப் புராணம் திருவவதாரச்சருக்கம்-5-ல் "தன்பெரு மகிமை தானறியாத தற்பரம்'' எனவும், திருவாத வூரடிகள் புராணம் மண்சுமந்த சருக்கம்-56-ல் "தப்பெருமை யறியாத தம்மிறைவர்'' எனவும், வருவனவாதியாய பிரமாணங்களா லறியலாம்.

இன்னமும் இச்சிவபெருமான், சங்கரநாம முடையோனு தலாற் சுகத்தையடைய விரும்பினவர்களும், உருத்திர நாம முடையோனுதலால் வியசனங்களை யொழித்துக்கொள்ள விரும்பினவர்களும், பிறப்பிலி இறப்பிலி யென்னு நாமங்களை யுடையோனுதலாற் சநந மரண துக்கத்தை யொழித்துக்கொள்ள

விரும்பினவர்களும், காமதஹந நாமமுடையோனுதலாற் கடக்க முடியாத காம மயக்கத்தைக் கடக்க விரும்பினவர்களும், கால கால நாமமுடையோனுதலாற் றப்பித்துக்கொள்ள முடியாத இயம வாதையினின்றுந் தப்பித்துக்கொள்ள விரும்பினவர் களும் முக்கியமாய்ச் சரணுகதியடையத்தக்க கடவுளாவான்; அண்ட பிண்ட சராசரங்களெல்லாம் அலறிச் சின்னாபின்னமாம் படிக் கெழுந்த ஆலஹால விஷத்தை யுண்டிருண்ட கண்ட முடையோனுதலால், அந்நீலகண்டமே, இப்பெருமானது அப யப்ரதானத்தையும் அதுல வல்லபத்தையு முணர்த்தி நிற்கும்.

இன்னமும் இச்சிவபெருமான், சீவர்களின் பொருட்டுத் திருவருளான் மேற்கொண்ட நாமரூபச் செயல்களும், அவற்ருல் விளங்கத்தக்க அவனதாற்றல்களும் வேத சிவாகம புராணுதி களிற் கூறப்படுவன, கணக்கிலடங்காதனவாகும்.

அழிவில்லாதவனென்ற அர்த்தத்தைத் தரத்தக்க அச்சுத நாமத்தை விஷ்ட்ணுமூர்த்தி உடையனுதலும், பிறவாதவ னென்ற அர்த்தத்தைத் தரத்தக்க அஜநாமத்தைப் பிரமா உடையனுதலும், இறவாதவரென்ற அர்த்தத்தைத் தரத்தக்க அமர நாமத்தைத் தேவர்க ளனைவரும் உடையராதலும் ஔப சாரிகமென்று கந்தபுராணம் சூரனமைச்சியற் படலம்-140-ல் "அச்சு தன்னயனமரரா கியபெய ரவர்க்கு-நிச்ச யம்படு முக பனே யானபோ னினது-வச்சி ரத்தனி யாக்கையு மழிவிலா வரமும்-முச்ச கந்தொழப் பல்லுக மிருத்தலாய் முடியும்" என வும், மார்க்கண்டேயப்படலம்-236-ல் "கனக்கு முண்டகக் காமரு கண்ணினன்- றனக்குமுண்டு சதுர்முகற்குண்டு மற்றெனக்கு முண்டு பிறப் பிறப்பு" எனவும் வருஞ்செய்யுட்க ளறிவுறுத்து கின்றன.

இனி, சைவசமய நூல் சிவபெருமானுக்குப் பரத்துவங் கூறுமாறு போல, இதரசமய நூல்களில் ஒவ்வொன்றுந் தனித்

தனி அவ்வச் சமய வீடுபேருய்நிற்குங் கடவுளர்களுக்கு நாம ரூபச்செயல்களோடு பரத்துவங் கூறுகின்றனவே யெனில், ஆம்; அந்த இதரசமய மெல்லாவற்றினும் உபாசகர்க்குப் பயனும் கடவுளர்க்காற்றலு முண்டென்ப துண்மையே யாகும்; உண்டேனும், இச் சிவபெருமானுக்கும் இதர கடவுளர்களுக்கு முளதாய வியாபகவியாப்பிய தாரதம்மியத்தை, கடவுளரனைவருஞ் சீவர்க்கு நதிருசியராகலிற் கண்டறிதல் கூடாமையாற் பொது நூலாகிய வேதப்பிரமாணத்தைக் கொண்டு ஊகித்தறிந்துதான், பரத்துவ முடையாரை நிச்சயிக்கவேண்டும்.

பொது நூலாகிய வேதம் ஒவ்வொரு கடவுளரையும் பற்றிப் பிரதிபாதிக்கின்ற விடந்தோறும் ஆங்காங் கவ்வவர்க்கும் பரத்துவங் கூறுதலால் எல்லாரையும் ஒப்பக் கொள்ளலாமோ வெனில், அவ்வாறு கொண்டாற் பரத்துவமுடையா ரநேகராகி, அது, அநேகேசுவர வாதமாய் முடியுமாதலால், அவ்வாறு கோடல் பொருத்த மன்று; பொருத்தமன்றேல் வேதம் அநேகரைக் கூறுவானேனெனில், தாயானவள் குழந்தைகளின் வயக் கிரமப்பருவம் நோக்கி சீரணசக்திக் கேற்ற வேற்ற ஆகார பேதங்களைக் கொடுத்து வளர்க்குமாறு போல, வேதமும் சீவர்களின் பிரக்ஞா பரிபக்குவ பேத நோக்கி உபாஸநாசக்திக் கேற்ற வேற்ற கடவுளரைக் கடைப்பிடித்துப் பிரவர்த்தித்துய்யட்டு மென்ற கருத்தாற் கடவுட் பரத்துவத்தைப் பலபடக் கூறிவைத்ததே யொழிய வேறில்லை.

வேதம் சீவபரிபக்குவத்தை நோக்கி அவ்வாறு பலபடக் கூறிவைத்த போதினும், சிவபெருமானைப்பற்றிக் கூறுமிடங்களில் "ஏவ" என்னுந் தேற்றேகாரத்தோடுங்கூடிய விசேஷ விதிவசனங்களாற் கூறியும், ஏனைக்கடவுளர்களைப் பற்றிக் கூறுமிடங்களிற் சாமானிய துதிவசனங்களாற் கூறியு மிருத்த

லால் வேதத்தின் (அந்தரங்கம்) உள்ளீடான கருத்துச் சிவ பரத்துவமேயாகும்.

வேதத்தின் உட்கருத்து, சிவபரத்துவமா யிருத்தலாலே தான், அவ்வேதத்துக்கும் அக்கருத்தையேயுடைய சிவாகமத்துக்கும் பேதமில்லை என மேலோர்களெல்லாங் கூறியிருக்கின்றூர்கள்; அவ்வாறு மேலோர்கள் கூறியிருத்தலை, பிரமமீமாஞ்சைக்கு நீலகண்ட சிவாசாரியரியற்றிய பாஷ்யத்தில் "வேத சிவாகமங்கட்குப் பேதங் காண்கின்றிலம் வேதமே சிவாகமம்" என வருதலாலும், திருமந்திரம்-2397-ல் "வேதமொ டாகம மெய்யா மிறைவனூல்-ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக-நாதனுரையிவை நாடி லிரண்டந்தம்-பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே" என வருதலா லு மறியலாம்.

இனி, வேதங்களும் அவைகளின் முடிவாய் விளங்கும் உபநிடதங்களும் கடவுட்பகுதியைப் பற்றிக் கூறிய வாக்கியங்களையும் விஷயங்களையும் மஹத்துவ லெகுத்துவ விபக்தஞ்செய்து பார்க்கும்போது ஸர்வவல்லபமுடைய பரத்துவத்தகுதி சிவபெருமா னொருவனுக்கே சித்திக்கின்ற தென எடுத்துக்காட்டி அநேக நூல்கள் ஸ்தாபிக்கின்றன; அவைகள் கீழ்க்காட்டப்படும்.

வேதோபநிடதங்கள், "எந்தத் தெய்வத்தை யாவர் வணங்கின போதிலும் அந்த வணக்கங்க ளெல்லாம் முடிவிற் சிவபெருமானை யடைகின்றன" வென்று கூறுகின்றன; இவ்வாறு கூறுவது நாராயணோப நிடதம்.

இன்னமும், "சிவபெருமானொருவனே பசுபதியா யுள்ளவன்" என்றும், "அவனை யொழிந்த மற்றெல்லாரும் பசுவர்க்கங்களே யாவர்" என்றுங் கூறுகின்றன; பசு என்பதற்கு, பாசத்தாற் கட்டுண்ட தென்பது பொருள், பசுபதி என்பதற்கு, பசுவர்க்கங்கட் கெல்லாங் கர்த்தா வென்பது பொருள்.

இன்னமும், "சிவஞானத்தாலன்றிச் சீவவர்க்கங்கள் அநாதி மலநீங்கி முத்தியடையுமென்று சொல்லுதலானது ரூப மில்லாத ஆகாசத்தின் றோலையுரித்து வஸ்திரமாயுடுத்துதற் கொப்பாகும்" என்று கூறுகின்றன; இவ்வாறு கூறுதலை, சுவேதாச்சுவதரோபநிஷத்தில் ஆருவ தத்தியாயத்தில் பத்தொன்பதாவது வாக்கியம் "யதா சர்மவத் ஆகாசம் வேஷ்ட யிஷ்யந்தி மாநவா: ததா சிவ மவிக்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி" என வருமாற்ருலறியலாம்.

இன்னமும், "பரவஸ்து ஈசுவரனே சிவனொருவனே தியானிக்கற் பாலான் அவனே மங்களத்தைச் செய்கிறவன் அந்நியர்களை யெல்லாம் நீக்கிவிடு" என்றும், "நாராயணன் தியாதாக்களுக்குட் சிரேஷ்டன்" என்றும் கூறுகின்றன; இவ்வாறு கூறுதலை "பர ஈசோவா சிவ ஏகோ த்யேய: சிவங்கரஸ் ஸர்வமந்யத் பரித்யச்ய ஸமாப்தா தர்வசிகா" என வரும் அதர்வசிகா வாக்கியத்தாலும் "நாராயண பரோத்யாதா" என வரும் தைத்திரீய மஹோப நிஷத்து வாக்கியத்தாலு மறியலாம்; இவற்றையும் ஏனையவற்றின் பிரமாணங்களையும் வேத பாரகர்களின் றுவாராவாக நன்கறியலாம்; சிவபெருமான், தாளொருவனே தியேயபதியாயிருத்த லாற்றுன் மற்றொருவரும் பெறற் கரியதான "வேத்தியன்" என்னும் பெயர் வாய்க்கப் பெற்று விளங்குகின்றனன். இவனுக்கே இப்பெயருண்மையை, வாயுசங்கிதை உமாமகேசுர வுபாசனையுரைத்த வத்தியாயம்-4-ல் "சாற்று சிவனை மாதவத்தோர் தயங்கு மறிவா லறிதலாற் போற்றியுரைப்பர் வேத்தியனென்று" எனவருமாற்ருலறியலாம்; தியேயன் என்பதற்கு, தியானிக்கப் படுவோ னென்பது பொருள்; தியாதாக்கள் என்பதற்கு, தியானிப்பவர்க ளென்பது பொருள்.

மேலே நான்கு பாராவிற் சுருக்கமாய்க் காட்டப்பட்ட வேதோப நிஷத்துப் பிரமாணத்தால், ஞாதிரு ஞாந ஞேயமாகிய

காண்பான், காக்ஷி, காக்ஷிப்பொருண் மூன்றும், சிவஸம்பந்த மாயிருந்தாற்றான் உத்தம மாகு மென்றும் இதர ஸம்பந்தமா யிருப்பன வெல்லாம் அதம மேயாகு மென்றுங் கிரிதீபதரிசனம் போற் றெரிவதாற், சர்வ வல்லபமுடைய பரத்துவம் சிவ பெருமா னொருவனுக்கே நிர்விவாதமாகச் சித்திக்கின்றது.

இன்னமும், வேதோபநிஷதங்கள் சிவபெருமா னொரு வனையே, தன்னை யொத்தாரு மிக்காரு மில்லாத மஹாதேவன் என்றும், பிரம விட்டுணுக் களாற் காணப்படாதவன் என்றும், தான் அன்னோர்க்கதிகனுதல் தெரியும்படி கற்ப முடிவிலவர் களைத் தஹித்த சாம்ப லென்பாதிகளைத் தன்மேனியிற் றரித்தி ருப்பவன் என்றும், சரீரிகளெவரையுந் தன்குணத் தொடக்கித் தான் அவர்குணத்தூடு புகாதவன் என்றும், இத் தன்மைய னென அளவிட்டு எம்மாற் சொல்லுதற்கரிய தெய் வீகமுடையவன் என்றும், ஏனைக்கடவுளர்களாற் றருதற் கிய லாததான மோக்ஷத்தைத் தரத்தக்க மோக்ஷதாதா என்றும், மோக்ஷாபேக்ஷக ரெல்லாம் விஷ்ட்ணுப் பிரமாதிகளை யொழித்து விட்டுத் தன்னையே வழிபடும்படி நின்ற உமாஸஹாயன் என் றும், உயிர்க்குயிராயிருப்பவன் என்றும், அணுவிற் கணுவும் மஹத்துக்கு மஹத்துமா யிருப்பவன் என்றும், விச்சுவப் பெயரையும் எக்ஞப் பெயரையுந்தாங்கி விளங்குகின்ற விஷ்ட்ணு மூர்த்திக்கு அதிகனுந்தன்மையால், விச்சுவாதிகன் விச்சுவஸே வியன் விச்சுவாந்தர்யாமி எக்ஞாதிபதி யென்னும் பெயர்களைத் தாங்கி விளங்குகின்றவன் என்றும், தான் சமஸ்தருக்கும் மூலமாவதன்றித் தனக்கொரு மூலமில்லாதவன் என்றும், உயிர் களை விட்டு நீங்காத பஞ்ச கிர்த்திய தாண்டவன் என்றும், ஆதி மத்யாந்த வர்ஜ்ஜிதன் என்றும், ஜோதிஸ்வரூபன் என்றும், நிருப பதமான ஈசுவரநாமம் தன்னையே குறிப்பிக்கப்பெற்ற கௌரவ முடையவன் என்றும் சத்தியஞ் செய்துரைக்கின்றன.

சிவபெருமான், ஸர்வ ஸம்ஹாரகாலத்தில் விஷ்ட்ணுப் பிரமேந்திராதி ஸமஸ்த தேவர்களையுந் தஹித்து அந்தத் தஹந பஸ்மத்தைத் தன்றிருமேனியிற் றரித்தமையால், ஆகமுடிவிலெஞ்சிய விறைவன் இவனே என்னும் பாவனையானது அநவரதமுஞ் சீவர்கட்குண்டாகி யுய்யுமாற்றாற்றான், மேற் கூறிய ஸமஸ்த தேவதாரூபமான பசுவினின்றுமுண்டான கோமயத்தைத் தஹித்தலாலாகிய விபூதியைத் தரிக்கும்படி காலாக்நிருத்ரம், பஸ்மஜாபாலம் முதலிய வேதோபநிஷதங்கள் கட்டளையிடுகின்றன; இது சாஸ்த்திரங்களின் முடிந்தகருத் தென்பதனை, தணிகைப் புராணம் இராமனருள் பெறுபடலம்-13-ல் "விண்ணவருடலமுழுவதும் பொடித்த வெண் பொடி யணிந்தருளிறையப்-பண்ணவர் முழுது முறுப்பினுளடங்கும் பசுமயம் பொடித்த வெண்ணீறு-புண்ணியம் வளர்க்கு முயிர்க்கெலாந் தரிப்பப் புகன்றனன்" எனவருமாற்றானும், பெரியபுராணம் சண்டேசுரநாயனார் -19-ல் "துங்க வமரர் திருமுனிவர் கணங்கள் சூழ்ந்து பிரியாத-அங்கமனைத்துந் தாமுடைய வல்லவோ நல்லானினங்கள்" எனவும்; 21-ல் "நீலகண்டர் செய்யசடை நிருத்தர் சாத்து நீறுதரு மூலமவதாரஞ் செய்யு மூர்த்தம்" எனவும் வருமாற்றானும், திருநாகைக் காரோணப்புராணம்-புண்டரீக முனிவர் முதற்காட்சியுரைத்த படலம்-25-ல் "திருத்தமிகு மறைமுடிபாய்த் திகழ்தருகா லாக்கினிசார்-உருத்திரப் பேருபநிடத முதலாயவுரைப்பதெலாம்-வருத்தமற வுலகனைத்து மிளப்பொழித்து மாதேவன்-பொருத்தமுற மெய்ப்பூசும் புண்ணிய நீறே பிறிதோ" என வருமாற்றானும் அறியலாம்.

இன்னமும், சிவபெருமானே பரம்பொருளெனச் சர்வ சாஸ்த்திர புராணேதிகாச ப்ரபந்தாதி நூல்களெல்லாமுமே உறுதியாய்க் கூறுகின்றன. எத்தனையோ கோடி விஷ்ட்ணுப் பிரமேந்திராதி கடவுளர்களழியவும், என்று மழியாத அநாதி நித்ய வஸ்துவா யிருப்பவன் சிவபெருமா னொருவனேயாம். கற்பங்க

டோறு மழிகின்ற விஷ்ட்ணுப் பிரமாக்களது கபாலமாதி களே பரங்களை ஆபரணமாகச் சிவபெருமான் அணிந்திருப்பதானது, அவர்களுடைய அநித்தியத்தன்மையையுந் தன்னுடைய நித்தியத்தன்மையையுங் காட்டுதற்பொருட்டாலு மன்றி, அவர்களும் ஏனையோரும் அதனைத் தெரிந்து தன்னைத் தொழுதுய்யட்டுமெனக் கொண்ட கருணையாலுமேயாம் சிவபெருமான், எல்லாக் கடவுளர்களுந் தன்னை யஞ்சலித்துத் தொழுது நிற்க, தான் அஞ்சலிக்கும் படியாய்த் தனக்குமேலொரு தலைவனை யில்லாதானென்பதனை, கீழ்க்காட்டப்பட்ட "சேர்ந்தறியாக் கையானை" என வருந் திருவாசகத்தா லறியலாம். சிவபெருமானை யுபாசித்து அவனருளைப் பெறுமாயின், அற்ப ஜந்துக்களும் விஷ்ட்ணுப் பிரமேந்திராதி பதவிகளை யடையும். விஷ்ட்ணு தசாவதாரத்திலும் சிவார்ச்சனை செய்திருக்கின்றனர். எல்லாக் கடவுளரும் சிவசேஷமேயாவர்; சேஷம் என்ற சொல்லுக்கு, ஈண்டு அடிமை என்பது பொருளாம். எந்தெந்தக் கடவுளரை எவரெவர் வணங்கின போதிலும் மேற் கூறிய சேஷவிசேஷத்தால் அந்தந்தக் கடவுளர்பால் நின்று அவரவர்க்கும் வணக்கப் பலனைச் சிவபெருமானே கொடுப்பன். பாவிகளுக்கும் அஞ்ஞானிகளுக்கும், சிவபெருமானே பரம்பொருளென்கின்ற நெஞ்சுறுதி உண்டாக மாட்டாது. விஷ்ட்ணுப் பிரமாக்களை, ஸர்வாதிக ரென்றாவது சிவபெருமானுக் குயர்ந்தோ ரென்றாவது ஒத்தோ ரென்றாவது கூறுபவர்கள் நரகத்தி லழுந்துவார்கள். விஷ்ட்ணு வாதி கடவுளர்களின் முன்பு, சிவபாவனை பண்ணிச் சிவநாமங்களைச் சொல்லித் துதித்து வணங்கினும் பாசம் நீங்கும்; சிவபெருமான் முன்பு, அவனை விஷ்ட்ணு வாதியராகப் பாவனை பண்ணி அவர்களது நாமங்களைச் சொல்லித் துதித்தால் அவ்வாறு துதித்தவர் நரகமடைவர்; ஆதலாற் சிவபெருமானை விஷ்ட்ணுவாதியராகப் பாவித்தல் முறையல்ல; ஏனென்றால்? தாஸனை ராஜனாகப் பாவிக்கலாம், ராஜனைத் தாஸனாகப் பாவித்

தல் கூடாது, அது போலுதலாலெனவறிக. விஷ்ட்ணுப் பிரமேந்திராதி கடவுளரனைவரும், தங்களைச் சிவபெருமானுக் கன்பு பூண்டடிமை செய்து வாழுகின்ற வானவர்களாகப் பாவித்து வழிபடுவார்க் கருள் செய்வார்க ளேயன்றி, வேறுவித பாவனை செய்பவர்களைப் பகைபாளிகளாக எண்ணுவார்கள்; வழிபாடு நன்றெனினும், வழிபடப் பெறுமவ் வானவர்களது பண்பறிந் தாற்று விடத்து, அது, வழிபடுவார்க்குத் தவறாய் முடிதலால், "நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர் - பண்பறிந் தாற்றாக் கடை" என்னும் அருமைத்திருக்குறள், ஈண்டுச் சிந்திக்கற் பாலது. பிரணவம், காயத்திரி, வேதங்கட்குரிய பிரதானப் பொருள் சிவபெருமானே யாவன்; அவனவ்வா றுதலே, பிறர்க் கன்றியவனுக்கே யுரித்தான கொன்றைமலர் ஓங்கார வடிவமா யமைந்திருத்தலாலும், காயத்திரி நடுவட் "பர்க்க" நாமம் அமைந்திருத்தலாலும், மும்மறையு ணடுமறை யாகிய எசுர்வேத மத்யத்தில் பதக்க நடுநாயக ரத்னம் போல ஸ்ரீருத்திராத்தியாயமும் அதன் மத்யத்திற் சிவமந்திரமும் அமைந்திருத்தலானு மறியலாம். வேதோபநிஷதங்கள், சிவபெருமானது பெருமையைப் பற்றிக் கூறும்போது முழுப்பாகமுங் கூறும்; ஏனையோர்களைப் பற்றிக் கூறும்போது பாதிப்பாகந்தான் கூறும். வேதோபநிஷதங்களாற் கூறப்படுவன, சிவலிங்கார்ச்சனையுஞ் சிவசிந்ந தாரணங்களுமேயாகும். சிவபெருமானை, அரிபிரமேந்திராதி சமஸ்தர்களும் அர்ச்சனை செய்திருப்பதற்குத் திருஷ்டாந்தமாக இவ்வுலகத்திற் பற்பல சிவக்ஷேத்திரங்களையும் சிவலிங்கமூர்த்திகளையும் அருச்சித்தோர்களின் பெயர்களால் விளங்கி வரக்காண்கின்றோம்; அவைகளைப்பற்றிக் கூறுஞ் சரித்திரங்களையுங் கேட்கின்றோம்; சிவபெருமான்போய் எவரையாவது அருச்சித்தா னென்பதாக ஒரு க்ஷேத்திரத்தையாவது சரித்திரத்தையாவது கண்டதுமில்லை; கேட்டது மில்லை; இல்லையென்ற இந்த விஷயத்தை, "சிவனை யாவரே யருச்சனை செயாதவர் சிவன்மற்-றெவரை யாயினும் மருச்சனை

யியற்றிய துண்டோ" எனவருங் காஞ்சிப்புராணச் செய்யுளா லும், "இன்னுமுயர் பரசிவனை யிருதினையி னுயிரனைத்தும்-மன் னும்வழி பாடியற்றி வயங்கியவைக் கறிகுறியா-மின்னுதலம் பல பொலியு மன்றிமிளி ரனையபிரான்-உன்னு மொருவரைப்பூசை யுஞற்றியது முண்டுகொலோ" எனவரும் திருநாகைக் காரோ ணப் புராணச் செய்யுளானு மறியலாம். எல்லா அவயவங்களும் சிரசுக்கு மேற்போகாமை போலவும், எல்லா நதிகளும் கங்கைக்கு மேற்போகாமை போலவும் இதர தெய்வாராதனைப் பலன்க ளெல்லாமும் சிவாராதனைப் பலனுக்கு மேலாகமாட்டாதன வாகும். இந்த உலகத்திலே ஸமஸ்தர்களும் பிறந்து வாழ்ந் திறந்த கதைகளைக் கேட்டிருக்கின்றோம்; சிவபெருமான் அவ் வாறான கதையைக் கேட்டதே யில்லை; இல்லை யென்பதை "எல் லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்- சொல்லாற் றெளிந்தே நஞ் சோணேசன்-இல்லிற்-பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்துண்-டிறந்தகதை யுங்கேட்டிலேம்" எனவரும் அருணகிரி யந்தாதிச் செய்யுளா லறியலாம். சிவபெருமானே முழுமுதற் கடவுளெனக் கொள்ளாத பேதைகள் பிறந்த குலத்தின் கண் ணும் பிறவாநின்ற குலத்தின் கண்ணும் பிறக்குங் குலத்தின் கண்ணுந் தாம்போய்ப் பிறவாதிருக்க வேண்டு மென்பதும், தாம் பிறந்த குலத்தின் கண்ணே அப்பேதைகள் வந்து பிறக்கலாகா தென்பதும், சிவபெருமானை யன்றி மற்று மோர் தெய்வ முண் டெனக் கனவிலு நினைக்க அஞ்சுவதும் தீவிரதர பக்தியை யுடைய மஹான்களது துணிந்த கருத்தாகும்; அவர்களது துணிந்த கருத்தாகு மென்பதனை, "வையமிசைத் தோற்றமுதற் சாங்காறு மன்றவனைத்—தெய்வமெனப் பேணுத் திருவிலிக ளென்குலத்தில்-எய்தியொரு ஞான்றும் பிறவற்க வெய்துறினும்- வெய்தெனமற்றுங்கே விளிந்தொழிக வெம்மானே" "சிறந்துன் னைத் தெய்வமெனக் கொள்ளாத சீத்தை-பிறந்த குலம்பிறவா நின்றகுலம் பீளின்-உறந்த குலத்து முமை யொருபான் மேயாய்-

மறந்தும் பிறவாத வாழ்வெனக்கு வேண்டுமால்" எனவருங் காஞ்சிப்புராணச் செய்யுட்களாலும் "மற்றோர் தெய்வங் கன விலு நினையாது- சாயா வன்பினை நாடொறுந் தழைப்பவர்-தாயே யாகி வளர்த்தனை போற்றி" "கற்றைவார் சடையெம் மண்ணல் கண்ணுதல் பாத நண்ணி-மற்றுமோர் தெய்வந்தன்னை யுண்டென நினைந்தெம் பெம்மாற்-கற்றிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே" "இருவரான் மாறு காணு வெம்பிரான் றம் பிரானுந்-திருவுரு வன்றி மற்றோர் தேவரெத் தேவ ரென்ன-அரு வரா தவரைக் கண்டா லம்மநா மஞ்சுமாறே" எனவருந் திரு வாசகச் செய்யுட்களாலும் அறியலாம். முன்னொருகாலத்திற் காசி க்ஷேத்திரத்தில் விசுவநாதப் பெருமானது சந்நிதியில் நைமிசாரணிய முனிவர்குழாத்தின் மத்தியில் விஷ்ட்ணு மூர்த் தியே பரப்பிரமமெனக் கூறிய நாவுந் தூக்கியகையு மசைக்க முடியாமற் றம்பிக்கத் தளர்ந்து நின்ற வியாசமுனிவர்க் கெதிரே வந்துதோன்றி விஷ்ட்ணு மூர்த்தியானவர், "வியாசனே உன் கொடுஞ்சொற் கேட்டு என் வயிற்றிலெரிபற்ற வுளமஞ்சி யீங்கு வந்தேன் பரப்பிரமம் நானன்று பரமசிவனே பரப்பிரமமாவான் அவனைப் போற்றி யுய்தி" எனலும் அம்முனிவர் அவ்வாறு செய்து இருந்துமிழந்த நாவையுங்கையையும் பெற்றுய்ந்தா ரெனில், சிவ பரத்துவத்தை யுணர்தற்கு வேறு பிரமாணமும் வேண்டுமோ? மேற்கூறியபடி வியாச முனிவர் காசியிற் பிழைத் துய்ந்த சரித்திரத்தை, காசி காண்டத்தில் வியாதன் கையும்நாவு மெழாது நின்ற அத்தியாயத்திலும், காஞ்சிப் புராணத்திற் சார்ந்தாசயப் படலத்திலும் விரிவாய்க்காணலாம். எந்த வுலகிற் றேடினும் சிவபெருமானை யொத்த பரதெய்வம் இல்லை; இல்லை யென்பதனை, "சிவனை யொக்குந் தெய்வந் தேடினு மில்லை-அவ னொடொப் பாரிங் கியாவருமில்லை" எனவரும் திருமந்திரத்தா லறியலாம். சிவ பரத்துவத்தை விளக்கும் நூல்கள் அளவிறந் தனவுள; அவற்றுள் ஆராய்ச்சிக் கெட்டின சிற்சிலநூலேயாம்;

அவற்றுட் குறிப்பான சிலபாக்கள் மட்டும் கீழ்க்காட்டப்பட்டன; காட்டப்பட்டவற்று ளமைந்திருக்கும் விஷயமே அநேகம்; அவைகண் முழுவதையும் விரிவஞ்சி இவ்வசனக்கிரமத்திலெழுதவில்லை; கீழ்க்காட்டப்பட்ட பாக்களை ஆராயின் வெளிப்படையாய் விளங்கத்தக்கனவேயாம்.

ஆதலால் எந்தப் பாஷையிலுள்ள எந்த வைதிக சைவ மார்க்கநூல்களை ஆராயினும் சிவபெருமானே எங்கும் நிறைந்த எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாவானென்பது, சத்தியம் சத்தியம் முக்காலுஞ் சத்தியம். இவற்றிற்குப் பிரமாணம்:—

# சிவபரத்துவ நிரூபணப் பாக்கள்.

## திருமந்திரம்-5.

“சிவனொடொக் குந்தெய்வந் தேடினு மில்லை
அவனொடொப் பாரிங் கியாவரு மில்லை”

## தேவாரம்.

பொது, ஆதிபுராணத்திருக்குறுந்தொகை-3-4-5. தசபுராணம்-2.
தனித்திருவிருக்குக்குறள்-1-2. தனித்திருவிருத்தம்-7.
திருமறுமாற்றத் திருத்தாண்டகம்-5.

“நூறு கோடி பிரமர்க ணொந்தினார்
ஆறு கோடிநா ராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெணி லிந்திரர்
ஈறி லாதவ னீச னொருவனே”

“வாது செய்து மயங்கு மனத்தராய்
ஏது சொல்லுவி ராகிலு மேழைகாள்
யாதொர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வனலாற் றேவர்மற் றில்லையே”

“கூவ லாமை குரைகட லாமையைக்
கூவ லோடொக்கு மோகட லென்றல்போற்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே ”

“பரமொரு தெய்வ மெய்த விதுவொப்பதில்லை
* * * சிவனுய மூர்த்தி யவனு நமக்கொர் சரணே ”

“ கல்லானிழ-லல்லாத்தேவை-நல்லார்பேணு-ரல்லோ நாமே ”

“கொன்றைசூடி-நின்ற தேவை-யன்றியொன்று-நன்றிலோமே”

“பெருங்கடன் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடன் மூடி யிறக்கு மிறந்தான் களேபரமுங்
கருங்கடல் வண்ணன் களேபர முங்கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே ”

“ சென்றுநாஞ் சிறுதெய்வஞ் சேர்வோ மல்லோஞ்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம் ”

## திருவாசகம்.

திருவண்டப்பகுதி-1. போற்றித்திருவகவல்-1. திருச்சதகம்-2-4.
திருவம்மானை-13. திருக்கோத்தும்பி-5. அச்சப்பத்து-1-2.

“வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியுந்
தோற்றமுஞ் சிறப்பு மீற்றொடு புணரிய
மாப்பே ரூழியு நீக்கமு நிலையுஞ்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்
தெறியது வளியிற் கொட்கப் பெயர்க்குங் குழகன்
* * * அறுவகைச்சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபேருய் நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோன் ”

" மற்றோர் தெய்வங் கனவிலு நினையாது
* * * சாயாவன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி"

" உள்ளேன் பிறதெய்வ முன்னையல் லாதெங்க ளுத்தமனே "

" சாவமுன் னாட்டக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி
ஆவவெந் தாயென் றவிதா விடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிராலெனாடு மெண்ணிவிண் ணாண்டுமண்மேற்
றேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே "

" செய்யானை வெண்ணீறணிந்தானைச் சேர்ந்தறியாக்கையானை "

" அத்தேவர் தேவ ரவர்தேவ ரென்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேது மில்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ "

" கற்றைவார் சடையெம் மண்ணல் கண்ணுதல் பாத நண்ணி
மற்றுமோர் தெய்வந் தன்னை யுண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே"

" இருவரான் மாறு காணு வெம்பிரான் றம்பி ரானுந்
திருவுரு வன்றி மற்றோர் தேவரெத் தேவ ரென்ன
அருவரா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே "

## திருவிசைப்பா.

### சேந்தனார்-5.

" இத்தெய்வ நெறிநன் றென்றிருண் மாயப் பிறப்பறு
விந்திர சாலப்
பொய்த்தெய்வ நெறிநான் புகாவகை புரிந்த புராணசிந்
தாமணி வைத்த

மெய்த்தெய்வ நெறிநான் மறையவர் வீழிமிழலை விண்
ணிழிசெழுங் கோயில் [ரே"
அத்தெய்வ நெறியிற் சிவமலாதவமு மறிவரோவறிவுடையோ

## திருப்பல்லாண்டு-4.

"சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த தூமனத்தொண்ட
சில்லாண்டிற் சிதையுஞ் சிலதேவர் சிறுநெறி சேராமே[ருள்ளீர்
வில்லாண்ட கனகத்திரண் மேருவிடங்கன் விடைப்பாகன்[மே"
பல்லாண்டென்னும் பதங்கடந் தானுக்கே பல்லாண்டுகூறுது

## பெரியபுராணம்.

திருமலைச்சிறப்பு-19. திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்-856.

"சம்பு வின்னடித் தாமரைப் போதலால்
எம்பி ரானிறைஞ் சாயிது வென்னென"

"தோற்றவர் கழுவி லேறித் தோற்றிடத் தோற்றுந் தம்பம்
ஆற்றிடை யமண ரோலை யழிவிஞ லார்ந்த தம்பம்
வேற்றொரு தெய்வ மின்மை விளக்கிய பதாகைத் தம்பம்
போற்றுசிர்ப் பிள்ளை யார்தம் புகழ்ச்சயத் தம்ப மாகும்"

## சிவஞானசித்தியார்.

சுபக்கம்-முதற்சூத்திரம்-48-49-50-51-52-53.
இரண்டாஞ்சூத்திரம்-25-26.

"உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்ப தோரார்
உலகவ னுருவிற் ரேன்றி யொடுங்கிடு மென்று மோரார்
உலகினுக் குயிரு மாகி யுலகுமாய் நின்ற தோரார்
உலகினி லொருவ னென்ப ருருவினை யுணரா ரெல்லாம்"

"தேவரி னொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர்
மூவராய் நின்ற தோரார் முதலுருப் பாதி மாதர்
ஆவது முணரா ராதி யரியயற் கறிய வொண்ணு
மேவுரு நிலையு மோரா ரவனுரு விளைவு மோரார்"

"போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேகியா னற்போற் செய்த வினையினை வீட்டலோரார்
ஊகியா மூட ரெல்லா மும்பரி லொருவ னென்பர்"

"ஒன்றொடொன் றெவ்வா வேடமொருவனே தரித்துக்கோண்டு
நின்றலா லுலக நீங்கி நின்றன னென்று மோரார்
அன்றியவ் வேட மெல்லா மருள்புரி தொழிலென் றோரார்
கொன்றது வினையைக் கொன்று நின்றவக்குணமென் றோரார்"

"நாயகன் கண்ண யப்பா னுயகி புதைப்ப வெங்கும்
பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பிற்
றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னர்"

"கண்ணுதல் யோகி ருப்பக் காமனின் றிடவேட் கைக்கு
விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார் மாறன்
எண்ணிவேண் மதனை யேவ வெரிவிழித் திமவான் பெற்ற
பெண்ணினைப் புணர்ந்து யிர்க்குப் பேரின்ப மளித்த தோரார்"

"யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யும்
ஆதலா லவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே"

"இங்குநாஞ் சிலர்க்குப் பூசை யியற்றினு லிவர்க ளோவந்.
தங்குவான் றருவா ரன்றே லத்தெய்வ மத்த னைக்காண்
எங்கும்வாழ் தெய்வ மெல்லா மிறைவனு ணையினு னிற்ப
தங்குநாஞ் செய்யுஞ் செய்திக் காணைவைப் பால ளிப்பன்"

## திருவருட்பயன்-6.

"பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவன்
இல்லாதா னெங்க ளிறை"

## கந்தபுராணம்.

மேருப்படலம்-18-26. உபதேசப்படலம்-17.முதல்-32-வரை-59-63. ததீசிப்படலம்-18-முதல் 22-வரை ததீசியுத்தரப்படலம்-12-13-14.

"ஆரணன் றனது மைந்தர்க் கரும்பெறன் ஞான போதம்
ஓரிறை காட்டு முன்ன ருலகெலா மொருப்பா டொன்றி
யீருடன் முயங்கு மார்வ மின்றியே யிருந்த யார்க்குங்
காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற் பாற்றோ"

"நாகமார் சடிலத் தண்ண லூற்பெருந் தவரு முய்ய
யோகுசேர் நிலைமை காட்டு மொருகணத் துயிரின் பொம்மல்
வாகைவே டானு நிற்க மையனும் புணர்ப்பு மற்ற
ஆகையா லகில மெல்லா மவனென்கை தெரிந்த வன்றே"

"யாதொரு பொருளை யாவ ரிறைஞ்சினு மதுபோய் முக்கண்
ஆதியை யடையு மம்மா வங்கது போலத் தொல்லை
வேதம துரைக்க நின்ற வியன்புக ழனைத்து மேலாம்
நாதனை யணுகு மெல்லா நதிகளுங் கடல்சென் றென்ன"

"கேளினி மைந்த வேதக் கிளையெலா மியம்பு கின்ற
ருளுரை சிவனே யெல்லாந் தோற்றுவித் தளித்து மாற்றி
மீளவுந் தருகின் றானும் வியனுயிர்க் கருளை நல்கி
ஆளுநா யகனு மாதி யந்தமி லோனு மென்னும்"

"அத்தனும் பகவன் றானு மருவமு முருவு மாகுஞ்
சுத்தனு முணர்தற் கொண்ணுச் சோதியு மியாண்டு மேவுஞ்
சித்தனு மநாதி தானுந் தேவர்க டேவு மென்றும்
நித்தனு முயிர்க்கு ளீங்கா நிருத்தனு மவனே யென்னும்"

"மூன்றெனு முலகந் தன்னின் முளைத்திடு பொருளை யெல்லாம்
ஈன்றருள் புரியுந் தாதை யெனுந்தியம் பகனும் யார்க்குஞ்
சான்றென நிற்கின் றோனுந் தானுவும் பரனுந் தன்னைப்
போன்றவ ருயர்ந்தோ ரில்லாப் புங்கவன் றானு மென்னும்"

"அன்னவு மேகன் றானு மளப்பருங் குணத்தி னானுங்
கன்னனு மயனுந் தம்மாற் காணிய நில்லான் றானும்
பெண்ணொடா ணலிய தென்னும் பெற்றியி லோனும் யாரும்
எண்ணிய வெண்ணி யாங்கே யீபவன் றானு மென்னும்"

"விதிமுத லுரைக்க நின்ற வியனுயிர்த் தொகைகட் கெல்லாம்
பதியென வருளுந் தொன்மைப் பசுபதி தானு மன்னோர்க்
கதிகனென் றெவருந் தேற வாங்கவர் துஞ்ச வெந்த
பொதிதரு பலியு மென்பும் புனைபவன் றானு மென்னும்"

"ஊன்புகு மெவரை யுந்தன் னெண்குணத் தொடுக்கித் தானே
வான்புக லாகி நின்று மற்றவர் குணங்க ளூடு
தான்புக லில்லா தோனுந் தன்னிய லினைய தென்றே
யான்புக லரிய தேவு மீசனு மவனே யென்னும்"

"அன்றியு மொன்று கேண்மோ வம்புய னாதி யாகி
நின்றவர் தம்மை யெல்லா நீக்கியச் சிவனென் றுள்ள
ஒன்றொரு முதல்வன் றானே யுய்த்திடு முத்தி வேண்டின்
என்றுமஃ தியம்பிற் றென்னின் யாவரே தேவ ராவார்"

"பரசிவ னுணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையு மென்றும்
விரவிய துயர்க்கி றெய்தி வீடுபே றடைது மென்றல்
உருவமில் விசும்பிற் றோலை யுரித்துடுப் பதற்கொப் பென்றே
பெருமறை யியம்பிற் றென்னிற் பின்னுமோர் சான்றுமுண்டோ"

"இன்னமும் பலவுண் டன்னாற் கியம்பிய மறையின் வாய்மை
அன்னதை யெனக்கு முன்னி யறையொணு தறைவ னென்னிற்
பன்னெடுங் காலந் தேயும் பகரினு முலவா தென்பான்
முன்னமீ துணர்ந்தா யேனு மோகமுற் றுய்கொ லையா"

"காரெழில் புரையு மேனிக் கண்ணனை யென்னைப் பின்னை
ஆரையும் புகழும் வேத மான்றனைத் துதித்த தேபோல்
ஒருரை விளம்பிற் றுண்டோ வுரைத்தது முகம னென்றே
பேருல கறிய முன்னும் பின்னரும் விலக்கிற் றன்றே"

"நான்மறை தனிலோர் பாக நாரமார் கடவுட் சென்னி
மேன்மைய தியம்பு மெம்மை விண்ணவர் தம்மை யேனைப்
பான்மைகொள் பூதந் தன்னைப் பல்பொரு டனையும் பாதி
தான்மொழிந் திடுமா லீது தவறல வுணர்தி தக்கோய்"

"நம்மையும் பரமென் றுன்னி நாதனிற் சிறப்புச் செய்யும்
வெம்மைகொ ணெஞ்சர் தீரா விழுமவெந் நிரயம் வீழ்வர்
தம்மையஃ தெடுத்தல் செய்யா சமமெனப் புகல்கிற் போர்கள்
எம்மையுந் துயர மென்னு மிருங்கடற் படுப்ப ரன்றே"

"கானுறு புலித்தோ லாடைக் கண்ணுதற் கடவுட் கன்ப
ரானவ ரென்று மன்னுற் கடித்தொழில் புரிந்து வாழும்
வானவ ரென்று மெம்மை வழுத்தினர்க் கருள்வோ மல்லா
ஏனையர் தம்மைத் தெவ்வென் றெண்ணியே யிருத்தும் யாமே"

"பதியான் பாசந் தன்னிற் பட்டுழல் பசுநா மென்றே
விதியொடு மறைகள் கூறுமெய்ம்மையைத் தெளிய வேண்டின்
இதுவென வுரைப்பன் யாங்க ளிவ்வா சியற்ற வீசன்
அதிர்கழ லருச்சித் தேத்து மாலயம் பலவுங் காண்டி"

"அவனருள் பெறுது முத்தி யடைந்தனரில்லை யல்லால்
அவனரு ளின்றி வாழு மமரரும் யாரு மில்லை
அவனரு ளெய்தி னெய்தா வரும்பொரு ளில்லை யானை
அவனல திறைவ னில்லை யவனை நீ யடைதி யென்றான்"

"அன்ன தோர்சிவன் பரமென மறையெலா மறையும்
இன்னு மாங்கவ னில்லையினைக் கண்ணனும் யானும்
உன்னி நாடியுங் காண்கில மவன்பதி யொழிந்தோர்
மன்னு யிர்த்தொகை யென்றன னன்னதொன் மலரோன்"

"ஆத லாலெங்க ளீசனே பரம்பொரு ளல்லா
ஏதி லாரெலா முயிர்த்தொகை யாகுமா லிதனைக்
காத லாலுரைத் தேனன்று வாய்மையே காண்டி
வேத மேமுத லாகிய கலையெலாம் விளம்பும்"

"மலரயன் முதலே யாக வரம்பிலா வுயிரை முன்னந்
தலையளித் துதவு கின்ற தாதையா யளித்து மாற்றி
உலகெலா மாகி யொன்றா யுயிர்க்குயி ராகி மேலாய்
இலகிய சிவனை நீத்தோ யாகமொன் றியற்ற நின்றாய்"

"புங்கவ ரெவர்க்கு நல்கும் புவிபுக ழவிகொள் வானும்
அங்கியின் முதலும் வேள்விக் கதிபனு மளிக்கின் றானும்
சங்கரன் றானே வேதஞ் சாற்றுமான் மகத்துக் காதி
இங்கொரு தேவுண் டென்னி னெழுகென வுரைத்தி மாதோ"

"மாலயன் முதலோர் யாரும் வரம்பிலித் திருவை யெய்த
மேலைநா ளளித்தோன் றானும் விமலனு மனையர்க் கெல்லாம்
மூலமுந் தனக்கு வேறோர் முதலிலா தவனு மெங்கள்
ஆலமர் கடவு ளன்றி யமரரில் யாவ ரம்மா"

"தேவதே வன்மா தேவன் சிறப்புடை யீச னெங்கோன்
மூவரின் முதல்வ னேகன் முடிவிற்கு முடிவாய் நின்றோன்
ஆவியு ளாவி யானோ னந்தண னாதி யென்றே
ஏவரை யிசைத்த வம்மா வெல்லையின் மறைக ளெல்லாம்"

"விதிமுத லாகி யுள்ளோர் வியனுயிர்த் தொகையா மீசன்
பதியவன் பணிய தன்றே பரித்தன ரினைய ரெல்லாம்
இதுவுமச் சுருதி வாய்மை"

"பரம னிவ்வகை யடுந்தொறு மடுந்தொறும் பலவாம்
பிரம னாதியோ ரென்பினைத் தரிக்குமப் பெரியோர்
சிரமெ லாந்தொடுத் தணியலா வணிந்திடுஞ் சிகைதன்
உரமு லாவுமுந் நூலென வேபணிந் துறையும்"

"அல்ல தங்கவர் தங்களை முத்தலை யயிலான்
மெல்ல வேயெடுத் தேந்திடு மவர்தமை விழியாற்
றொல்லை நாளினீ றாக்கியும் புனைந்திடுந் தூயோன்
மல்லன் மாதவ மனையவ ரியற்றிய வகையால்"

"ஆத லாற்றனை வியப்பதற் கன்றவை யணிதல்
ஈத லாதொரு திறமுள தியாவரு மெவர்க்கும்
நாத னேயிவ னென்றுதன் பாங்கரே நண்ணித்
தீதெ லாமொரீஇ முத்திபெற் றுய்ந்திடுஞ் செயலே"

## சூதசங்கிதை.

பரம விஞ்ஞான முரைத்த வத்தியாயம் 26. சருவ சாத்திர சங்கிரக முரைத்த வத்தியாயம் 10-12-15. வேதார்த்தத்தை யுரைத்த வத்தியாயம் 36 முதல் 47 வரை. வேதப் பிராமாணிய விசாரமுரைத்த வத்தியாயம் 20-21-22. திருமா லகம்பாவ நீங்கியானந்த நடந்தரி சித்த வத்தியாயம் 11. சிவபூசா விதியுஞ் செய்தோர் பெருமையு முரைத்த வத்தியாயம் 3.

"மறைகளா கமங்க ளுருத்திர னுக்கு மன்சுய சொரூபத்தி னானும்—அறைதரு பரதத் துவசொரூபத்தி னானுமம் மாபெரு விசேடம்—நிறைதர வுரைத்த படிமுடித் துளவ நெடுந்தொடை மாயவன் றனக்கும்,—நறைவழிந் தொழுகு கமலநான் முகற்கும் நவின்றதின் றானுணர்ந் திடுவீர்"

"மாயவற்கு மலர்மகற்கு முருத்திரதே வன்குறைந்த மாண்ப னென்றும்—நேயமுறு சமமானே னென்று முளத் திடைநினைப் போர் நீந்தற் கொண்ணாத்—தீயநர கிடைவிழுவா ரிருவருக்கு முருத்திரனே சிறந்தோ னென்று—தூயமனத் திடைநினைவார் முத்தியெனும் பெருவாரி திளைந்து வாழ்வார்"

"காரியசொ ரூபமா கியசெந்தா மரைத்தடங்கட் கரியோன் முன்னோர்—சிரியர்கான் முக்கியமாத் தியானஞ்செய் திடத்தக்க தேவ ரல்லர்—பேரியன்மெய்ச் சிவசேட மெல்லாரு மாதலிற்பே சிதர மான—தாரியல்தோட் டேவரைநீத் துச்சிவனை யேயுள்க றகுதி மாதோ"

"பந்தமிலீர் பலசொல்லி யென்னைவே றாயதெய்வப் பற்று நீக்கிச்—சிந்தலிலாப் போகமுத்திக் காச்சிவனை யேதியானஞ் செய்ய வேண்டும்"

"மட்ட வாங்குழன் மலைமகள் கூறுடை யானை
அட்ட மூர்த்தியை யளவிலின் பருள்பர சிவனை
இட்ட மாவுளத் துத்தியா னித்தலே யென்றுஞ்
சட்ட வுத்தம முத்தம மென்பர்நற் றகையோர்"

"கதநி லாவிய திகிரியார் கரத்தனைக் கவின்மான்
மதம்வி ராந்தனக் கலைமகன் மணாளனை மற்றைப்
பதம்வி ராவுவா னவரையுட் டியானித்தல் பகரின்
அதமமேயென வறைவர்நூ லுணர்ச்சிய ரதனால்"

"முத்தி சேர்தரும் வாஞ்சையர் மாயன்முன் னோரைப்
பித்தி ஞகிய தேவர்க ளெனப்பிரித் தொழித்துச்
சத்தி கூறுடைப் பரமனைத் தியானித்த றகவாற்
பத்தி யிர்மறை முடிவுமிவ் வணம்பகர்ந் திடுமே"

"சித்த மார்தரு பக்குவர் செழுங்கதி யுறுபாக்
குத்த மப்பர சிவனையே தியானிப்ப ருறுவார்
சுத்த சித்தமி லபக்குவர் கதிரண்ணத் துணிந்து
நத்த ஞதியர் தமைத்தியா னிப்பர்நன் ஞுவரோ"

"சருவ வுத்தம ஞகிய பரசிவன் றனக்கு
மருவு பல்பிறப் பிறப்படைந் துழிதரு மாயன்
பொருவு யர்ச்சியென் றுரைத்திடு மூத்தைவாய்ப் புலையர்
கருகி ருட்கொடு நரகிடைக் கவிழ்வரெக் காலும்"

"எண்ணில் பாதகம் பவந்தொறு மீட்டினேர்க் கிருளே
உண்ணி லாவநிற் பவர்க்குடற் கரியமா மாயன்
மண்ணி டைச்சரு வாதிக ஞய்வயங் கிடுவான்
தண்ணி லாமுடி யோன்பொரு ளாய்த்துயங் கிடானல்"

"முகுந்த னைச்சரு வாதிக னெனமொழி முனகன்
புகுந்து துன்புறு நரகிற்பல் பவங்கள்போக் கிடினும்
மிகுந்த மத்தனே யாம்பல கற்பம்வீ தரினும்
தகுந்தன் முத்தியை யடைதரா னெனமறை சாற்றும்"

"அம்பு யத்தின்மே லிருப்பவன் முதலிய வமரர்
நம்பு றுஞ்சரு வாதிக ரெனவுள நாட்டும்
வெம்பு வல்வினை யாளர்கள் விரிதலை கீழாய்ப்
பம்பு தீநர கழுந்தியெக் காலமும் பதைப்பார்"

"மாய ஞதிய ரிடத்துமுக் கண்ணுடை வள்ளல்
நேய மார்வியா பகனெனத் தெரிதரு நெறியோன்
பாய வாணவ முதலிய மலமறப் பாற்றி
மேய வின்பமா முத்தியை யடைவன்மே தகையீர்"

"சங்க மேந்துகைந் நாரணன் முதலியோர் தம்மைச்
சங்க ராசிவ சம்புவே சாம்பமா தேவ
எங்க ஞயக வெனத்துதித் தேத்திநும் பாசம்
எங்கு மாகிய தம்பிரா னருளிஞ லிரியும்"

" வாசு தேவனை முதலியோர் நாமத்தால் வண்டு
மூசு கொன்றையான் திருமுனர்த் தோத்திர மொழியின்
வீசு தீநர கத்திடை வீழ்வரால் விரைந்து
மாசில் வேந்தனைத் தாசனு மதிக்கில்வாழ் வுண்டோ "

" அரிய நாயக னாகிய முக்கணம் மானைக்
கரிய மான்முத லோர்களாப் பாவித்தல் கடனன்
றுரிய நற்றவத் துறுவிரா தலினுமா பதியே
பெரிய னன்னவன் றியானமே கொள்வர்பே ரறிஞர் "

" இரவணங் கரமுன் னான விழிந்தசெந் தூக்கனு மைவாய்
அரவரை யார்த்த பெம்மா னணையா லரவிற் றுஞ்சும்
பரவிய மலரின் மேவும் பைந்தரு நீழல் வைகும்
உரவுற வின்னும் வெவ்வே றுருகுமென் றுணர்ந்து கொள்வீர் "

" அம்பலத் தாடி பொற்றாட் கடியரு மனையர் பாத
வம்பலர்க் கடிமை யுற்ற மதியரு மெந்த ஞான்றும்
உம்பரும் புகழா நின்ற சுதந்திர முடைய ராகில்
எம்பிரான் சுதந்தி ரத்தை யிசைத்திட வேண்டுங் கொல்லோ "

" தூயவ னுய பெம்மான் சுதந்திர னுகை யாற்றான்
பாயபல் சுராரு முய்யப் பாற்கட லெழுந்த பொல்லாத்
தியவல் விடமு முண்டான் திருமறு மார்ப னின்றை
மேயவன் சிரந்த டிந்தான் வேறுபல் செய்தா னின்னும் "

"எம்பிரான் முதல்வனென யாமுரைக்க வேண்டியதின்
றென்று மந்தத்—தம்பிரான் மணிகண்டந் தானுரைக்குஞ்
சடைத்தலைமா லைகளுஞ் சொல்லும்—பம்பியநின் விழிவிழியி
னென்பதல்கோ டோடுரிகொள் பதுமப் பூந்தாள்—வெம்பலில்
கை விரலரைமார் போங்கு மெழிற் திருமேனி விளம்பு மன்றே"

" சாற்றிடு முறுப்பி யாவுந் தலைக்குமே லுயரா பாவங்
காற்றிடு நதிகள் யாவுங் கங்கைமே லுயரா வானம்
ஆற்றிடும் பலரைப் போற்றும் பலமெலா மடுத்தோர் சென்மம்
பாற்றிடுஞ் சிவனைப் போற்றும் பலத்தின்மே லுயரா வன்றே "

## காஞ்சிப்புராணம்.

திருநெறிக் காரைக்காட்டுப் படலம்-23-29-30.
சார்ந்தாசயப் படலம்-8-10-11-13 முதல் 23-வரை. 25-40-41-51.
தழுவக்குழைந்த படலம். 236-238.

"குறைவிலா மங்கல குணத்த னாதலின்
நிறைமல மாதியி னீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவனென வறிவின் மேலவர்
இறையவன் பெருமையை யாவர் கூறுவார்"

"அவனவ ளதுவெனு மவைமொ ரூன்றுமிச்
சிவன்லான் முத்தியிற் சேர்த்து வாரிலை
துவளரு மிம்முறை சுருதி கூறுமால்
இவனடி வழிபடின் முத்தி யெய்துவாய்"

"பன்னுவ தெவன்பல பரிந்து நெஞ்சினும்
அந்நியர் தமையொழித் தரனை யேத்துதி
இன்னதே வீட்டினுக் கேது வாமெனும்
பொன்னுரை மனக்கொடு புகனு வான்சிவி"

வியாசமுனிவரது பொய்யுரை.

"வண்ண மாமறை நாற்குமே னூலிலை மதியோர்
எண்ணு கேசவன் றனக்குமேற் றெய்வமு மில்லை
கண்ணு மெவ்வகை நூல்கட்குந் துணிவிது காண்மின்
உண்மை யுண்மையீ தெனக்கர மெடுத்துநின் றுரைத்தான்"

"வாத ராயண நீயிவண் மொழிதரு மாற்றம்
வேத நூற்பொரு ளுண்மையே யாமெனில் விசுவ
நாத னார்திரு முன்பெமக் குரையென நவின்றார்
ஓது வேனென மூர்க்கனு மெழுந்துசென் றுற்று"

"விச்சு வேசன்முன் னின்றிரு கரமிசை நிமிர்த்தாங்
கச்ச மின்றிமுன் புகன்றதே புகன்றன னந்தோ
விச்சை நூல்பல கற்பினுஞ் சிவனருள் விரவாக்
கொச்சை யோர்தமை விடுவதோ கொடுமலச் செருக்கு"

"நந்தி யெம்பிரான் வெகுண்டுநோன் மலர்க்கர மெடுத்த
அந்த வண்ணமே யசைவற நிற்குமா சபிப்ப

மந்த ளுயினு ளிமிர்த்தகை மடக்கவல் லாமை
நிந்தை யாற்சிலைத் தூணமொத் தசைவற நின்ருன்"

"தெற்றற் செஞ்சடை யெம்பிரான் றிருமுன்பு நாட்டும்
வெற்றித் தம்பமொத் திலகிவல் விடும்பைகூர் வியாதன்
பற்றிச் சிந்தையி னெடியமா லடியிணை பரவ
அற்றைப் போதுமுன் ரேன்றிநின் றச்சுத னறைவான்"

இதுமுதல் எட்டுச்செய்யுள், விஷ்ணுமூர்த்தியினது மெய்யுரை.

"என்ன காரியஞ் செய்தனை யென்னையுங் கெடுத்தாய்
பன்ம றைப்பரப் பியாவையும் பாற்படுத் தவற்றுட்
சொன்ன மெய்ப்பொரு ளுண்மையைத் துணிந்தநீ யந்தோ
கொன்னு மிம்மயக் கெவ்விடைப் பெற்றனை கூருய்"

"ஏனை யாரையு மறத்துறந் தியாவரு மென்றும்
பான்மை யிற்றியா னஞ்செயப் படுமொரு முதல்வன்
மேன்மை கூர்சிவ னெருவனே யெனவிரித் தன்றே
நான்ம றைத்தலை யாமதர் வச்சிகை நவிலும்"

"யாமெ லாமவ னிணையடித் தியானஞ்செய் பசுக்க
ளாமெ னத்தெளி யவனருள் சேர்தலிற் பசுவும்
பூமி சைத்தியா னப்பொரு ளாமெனப் புனைந்து
தோம றச்சில நூல்புக லுண்மையுந் துணியாய்"

"அறிஞர் கொண்டகோட் பாடிது வறிந்திலை யம்மா
பிறிவி லாணவச் செருக்கினின் மயங்கிய பேதாய்
வெறிய நீயினி யுய்வது வேட்டனை யாயிற்
குறிபி றழ்ந்திடா தென்னுரை மெய்யுறக் கோடி"

"மந்தி ரத்தமுன் மகத்தினுக் கிறையவன் மகவான்
சந்த மாமறைக் கிறையவன் ருமரைக் கிழவன்
இந்தி ராதியா முலகினுக் கிறையவன் யானே
மைந்த னேயெனக் கிறையவன் மணிமிடற் றிறையோன்"

"அகில நாயக னவற்குமே லிறையவ னில்லை
அகில லோகமு மவன்றிரு வாணையி னடக்கும்
அகில லோகமும் படைத்தளித் தழிப்பவ னவனே
அகில நூல்களு முரைத்திடுந் துணிபிது வாமால்"

"வான மேத்தயான் வைகுந்த வாழ்வுபெற் றதுவும்
ஞான நான்முகன் சத்திய வுலகுநண் ணியதும்
ஏனை விண்ணவர் தத்தம வாழ்க்கையெய் தியதும்
ஆனா யர்த்தவ னருட்குறி யருச்சனைப் பயனால்"

"அன்ன வன்றிரு வடிகளே சரணமென் றடைமோ
இன்ன தாயுநின் மயக்கினை விடுமதி யின்றேற்
பின்னல் வேணிநீ கெட்டனை பிறரையுங் கெடுக்க
உன்னு கின்றனை யெனவெகுண் டுரைத்தனன் திருமால்"

"வாயு றுத்திய கடுமொழி கேட்டனன் மற்றைத்
தூய வானவத் தொகையெலாந் துரும்பெனக்கழித்தான்
பாயு மால்விடைப் பரமனே பரமெனத் தெளிந்தான்
ஏயு மாறருள் கிடைத்துய ரிருந்தவத் தலைவன்"

"விச்சு வன்சிறைப் புள்ளர சுயர்த்தவன் விளம்பும்
விச்சு வாதிக னெறுழ்வலிச் சினவிடை யூர்தி
எச்ச மேசுரும் புளர்துழா யலங்கலா னென்ப
எச்ச நாயகன் பொலந்துண ரிதழிமா லிகையான்"

"கற்பங்க டோறுந் தோன்றுங் கணக்கிலாப் பிரமர் மாயர்
முற்பொன்று தலைகள்கோத்து நாற்றிய முளிபுன் மாலை
பொற்பொன்று நமது சென்னி புயமரை சரண மெங்கும்
சிற்பங்கள் விளங்கப்பூண்ட திறமிது நோக்கிக் காணாய்"

"மாண்டவின் னவர்க ளெற்பு மாலையும் பலவும் பூண்டேம்
ஈண்டிவை பூண்ட தெற்றுக் கென்றியே னின்போல் வார்க்குப்
பூண்டமா லொழிப்பா னன்னோர் பொன்றுறு மநித்த வாழ்வும்
காண்டகு மெமது நித்தத் தன்மையுங் காட்டக் கண்டாய்"

"முழுதுணர் கேள்வி சான்ற வியாதனே முறைமை மாறிப்
பழுதுபூண் டிவ்வா றெள்ளப் பட்டன னென்னி லன்னோ
வழுவறு நூலொன் றானு முள்ளவா றுணர மாட்டா [மை"
இழுதையோர் தெளிவர் கொல்லோ விருவருக் கரியானும்

"வையமிசைத் தோற்றமுதற் சாங்கா று மன்றவனைத்
தெய்வமெனப் பேணாத் திருவிலிக ளென்குலத்தில்
எய்தியொரு ஞான்றும் பிறவற்க வெய்துறினும்
வெய்தெனமற் றாங்கே விளிந்தொழிக வெம்மானே'

“ சிறந்துன்னைத் தெய்வமெனக் கொள்ளாத சித்தை
பிறந்த குலம்பிறவா நின்றகுலம் பீளின்
உறந்த குலத்து முமையொருபான் மேயாய்
மறந்தும் பிறவாத வாழ்வெனக்கு வேண்டுமால்”

## திருநாகைக் காரோணப் புராணம்.

புண்டரீக முனிவர் முதற்காட்சி யுரைத்தபடலம்-21-முதல்-34-வரை
மூன்றுங்காட்சி யுரைத்த படலம்-26.

“ அரியகட வுளராய வரிபிரமா தியர்க்கெல்லாம்
பெரியபிரான் சங்கரனே யென்றறிஞர் பேசிடுவார்
தெரியமுா சறைந்ததெனச் செகமுழுது மவாய்க்கேட்க
உரியமறை மாதேவ னெனுந்திருப்பே ரோதுதலால்”

“ பிரணவத்தி னுரியபொருள் பிறரென்று பேசிடுவார்
முரணவித்தற் காகமங்கள் முதலாய வேண்டுபவோ
கரணவிகற் பங்கடப்பாய் காவதமெண் ணிலகமழுந்
திரன்மிகுத்த செழுங்கொன்றை மாலிகைசேர் தரக்கண்டும்”

“ வேதகா யத்திரியின் பொருளாகும் வித்தகரார்
போதநா யகனுன பொங்கொளிச்சம் புவையன்றி
ஏதநீ வாதமரும் யாவரையு மியம்பிடலாம்
ஓதவாம் பற்கனெனு மொருமொழிகள் ளமையாதேல்”

“ மும்மறையு ணடுமறையின் முனிவிலெழு காண்டத்திற்
செம்மைதரு நடுக்காண்டஞ் சேர்ந்தவெழு சங்கிதையில்
அம்மநடுச் சங்கிதையி லாதியி ளெழுமித்து நடுப்
பொம்மலுற வமர்மனுவின் பொருளாவா னெவன்மைந்த”

“ திருத்தமிகு மறைமுடிபாய்த் திகழ்தருகா லாக்கினிசார்
உருத்திரப்பே ருபநிடத முதலாய வுரைப்பதெலாம்
வருத்தமற வுலகனைத்து மீளப்பொழித்து மாதேவன்
பொருத்தமுற மெய்ப்பூசு புண்ணியநீ றேபிறிதோ”

‘ பிரியமிக வனைத்தினுக்கும் பிரமாண மாயமறை
தெரியவெடுத் தினிதுரைத்தல் சிவலிங்கார்ச் சனையொன்றே
உரியவெனப் பிறர்வடிவ முரைத்ததுமற் றுண்டுகொலோ
அரியதவத் திருமைந்த வறைவதெவ னிதன்மேலும்”

" ஆதலினம் பரசிவனை யரிபிரமா தியர்பல்லோர்
காதலிற்பூ சனைபுரிந்து கருதியதெய் தினரின்னும்
ஏதமற யானைமுத லெறும்பீறு தியபலவுட்
போதமுறப் பூசித்துப் பொலிந்தவைக்கோ ரளவுண்டோ"

" இன்னுமுயர் பரசிவனை யிருதிணையி னுயிரனைத்தும்
மன்னும்வழி பாடியற்றி வயங்கியவைக் கறிகுறியா
மின்னுபல தலம்பொலியு மன்றிமிளி ரனையபிரான்
உன்னுமொரு வரைப்பூசை யுஞற்றியது முண்டுகொலோ"

" விச்சுவமென் றெடுத்தியம்ப விளங்குவா னொருமுகுந்தன்
விச்சுவத்திற் கதிகனென விளங்குவான் பரமசிவன்
எச்சமென யாவர்களு மியம்புவார் மாயவனை
எச்சவதி பதிசிவனே யெனப்புகலு மெம்மறையும்"

" பரசிவனே பிரமமெனப் பன்மறையு மெடுத்தோதும்
உரனிலா ரையும்பரமென் றோதிடுவ தென்னையெனில்
விரவுமுப சாரமே யன்றியுமே வுயிர்ப்பரப்பின்
தரமுணர்ந்தும் போலுமெனச் சாற்றுவார் சான்றோரே"

" படைத்தலொடு காத்தலுநம் பரமசிவன் புரிதொழிலே
படைத்தலயன் றொழிலென்னிற் பாறியவோர் தலையின்னும்
படைத்தறனக் கியற்றுகிலான் மால்காப்ப னெனப்பகரிற்
படைத்தமகா ருறுப்பழிவு முடம்பழிவும் பார்த்திருந்தான்"

" எம்பெருமா னித்தியமு மேனையோ ரநித்தியமும்
நம்பமைய மறையாதி யெடுத்துநவின் றிடவேண்டா
கம்பமுற வருகற்ப காலங்க டொறுங்கவர்ந்த
அம்பதுமன் முதலியர்தந் தலைத்தொடையே யறிவிக்கும்"

" ஆயமல ரவனாதி யமரரெல்லாம் பசுக்களே
மேயபசு பதிசிவனே விளம்புவதென் னின்னுங்கேள்
நேயமிகு மாதேவ நின்மலன்வான் பரவையிடை
மாயவனா தியரொருதி வலையாமென் றுணருதியால்"

" அந்தமா தேவனே யகிலகா ரணன்காண்டி
பந்தமுமற் றனைத்தொழியப் பற்றுமொரு பெருவீடும்
நந்தவவ னருளன்றி நண்ணார்நன் னுவர்நெடுவான்
உந்தவமை பசுந்தோலிற் சுருட்டும்வலி யுளராவார்"

" அதிசயம் பயக்கு நாரா யணவுப நிடதம் யாரை
மதியினிற் குறித்தி யாவர் வணங்கினு மவ்வ ணக்கந்
துதிகெழு நினவே யென்று சொனுமுனைக் குறித்து நாயேன்
விதியிற்செய் வணக்கம் வேறு மேவுமோ விமல வாழ்வே "

## காசிகாண்டம்.

வியாதன்கையும் நாவு மெழாது நின்ற அத்தியாயம்-8-முதல்-15-வரை-22.

" அருவுருவா யேகமா யாதியாய் நிறைந்தருளும்
பொருவரிய சிவனல்லாற் புண்டரிகக் கண்ணனே
பிரமமென மயக்குற்றுப் பிதற்றுகின்ற பிழையதனல்
உரைபயினுக் கையசையா தூமனென முனியிருந்தான் "

[விஷ்ணுமூர்த்தியினது மெய்யுரையும், சிவநாமோபதேசமும்.]

" அத்தலேயிற் பிழைகூறி யஞரெய்து முனிவரன்பால்
மைத்த செழும் புயலனைய மணிவண்ணன் கரந்தெய்திப்
பித்தரின்யா னிறையென்னப் பிதற்றியதென் மதியில்லோய்
எத்திறத்தா லெனையாளு மீசனை நீ மறந்தனையே "

" முக்கண்ணன் சேவடியில் விழிமுளரி பெய்தன்றோ
சக்கரமு மலர்மகளுந் தணப்பருஞ்செல் வமுமடைந்தேன்
அக்கடவு ளருள்சிறிது மடையாரேற் றம்பதத்தில்
எக்கடவுள் தேவென்றுங் கேமாப்புற் றிருக்குமால் "

" ஊனமுறு சடமொருவ னுனுற்றினன்றி யாடாதால்
யானுலக மளிப்பதுவு நான்முகத்தோ னியற்றுவதும்
ஆனிவருஞ் செஞ்சடையோ னுட்டுவித்த லாமதனல்
வானவர்தஞ் செயலெல்லா மரப்பாவைக் கூத்தாமால் "

" தண்ணிலவு மதிக்கண்ணி தாழ்சடையோன் றருள்போற்றும்
புண்ணியநற் சிவகணங்கள் பூங்கழலிற் கிடப்பதெல்லாம்
எண்ணிறந்த வரிபிரமர் தலையன்றோ வெனிற்சிறிதும்
நுண்ணறிவி லாயெனையேன் பிரமமென நுவல்கின்றாய் "

" நின்வயிற்சேர் கொடியபிழை மொழிசெவியி னேர்படினும்
என்வயிற்றி னெரிதவழ வுளம்வெருவி யீண்டடைந்தேன்
பொன்னசலச் சிலைகுனித்துப் புரமூன்று மழலூட்டும்
முன்னவனை யானறியா முழுமுதலைப் போற்றென்றான் "

" அன்னல்மால் விடையூர்ந்த வரும்பொருளைப் பழிச்சுதற்கு
மண்ணிடந்தோ யெனதுநா வழங்கவருள் வழங்கென்னக்
கண்ணினுன் முனியுரைப்பக் கண்ணுதல்பேர் செவியினிசைத்
தொண்ணிற நேமியங்கடவுள் விசும்பினெளித் தேகினனுல்"

" நீறணிந்த செம்மேனி நீலகண்ட னன்னுமம்
கூறியது செவிப்புலத்திற் குறுகுதனு மருடீர்ந்து
தேறிமுதுக் குறைவெய்திச் செழுமறைதேர் வியாதமுனி
ஆறணிந்த செஞ்சடையெம் மந்தணனை யேத்துவனுல்"

" என்று கூறி முனிவர னேத்தனும்
கொன்றை வேணிய னின்னருள் கூர்தரத்
துன்று பாவந் தொலைந்தவ னேங்குகை
மன்ற முன்னைய தாக வழங்கிற்றுல்"

## சிவரகசியம்.

### காயத்திரி வரம்பெற்ற சருக்கம்-8.

" அந்த மில்லதோர் பற்கர்தா நமக்கறி வருள்வார்
இந்து சூரியர்க் கொளிபுரிந் தியக்குவோ ரவரே
முந்து மப்பொரு ளன்றியோர் முதல்வரு மில்லை
சந்த வேதமெ லாஞ்சொல்வ தவர்பெருந் தகைமை"

## சேதுபுராணம்.

### சிவதீர்த்தச் சருக்கம்-55.

" ஆயும் வேதநூ லாதி யற்புதன்
தூய சோதியன் றுணைமை வேறிலான்
மேய பாருயிர் நடவும் விண்ணவன்
சேய மாண்முதல் சிவனென் றேதுமால்"

## மாயூரப்புராணம்.

### யாக சங்காரப் படலம்-18.

" மறைபல வற்றி னுக்கு மூலம்யான் வகுத்தல் கேட்டி
நிறைதரு மெனக்கு மற்றை நெடியவன் முதலா னோர்க்கும்
அறையுல கினுக்கும் யாக மனைத்திற்கு மிறைவ னுவான்
பிறைமுடி யவனே யென்று பிரணவம் பேசிற் றன்றே"

## பேரூர்ப்புராணம்.

கௌரிதவம்புரி படலம்-131.

"ஊழி வந்துழி யும்பரை நுதற்கணி னெரித்துப்
பாழி யென்புவெண் டலைபொடி பராபரன் றனது
வாழி நித்தியத் தியல்புமற் றவரநித் தியமுங்
கேழில் வையகந் தெரிந்துய்யக் கிளர்ந்துரு வணிந்தான்"

## திருநெல்வேலிப் புராணம்.

காமதகனச் சருக்கம்-30.

"வேதஞ்சொல் வியாதனும் விண்டுவலால்
நாதன்பொரு ளன்றெனு நாவுமெழா
தோதுந்திற லோங்கிய கையுமெழா
தேதம்பெற நின்றது மெண்ணிலையோ"

## திருக்குற்றாலப் புராணம்.

தக்கன் வேள்விச் சருக்கம்-106.

"கண்ணனென் பவனு மெங்கள் கடவுள்பாற் சத்தி மற்றை
விண்ணவர் பசுக்க ளன்றே வியன்பசு பதியை நீக்கிப்
பண்ணமை பசுப்ப டுத்துப் பயனுநீ யெய்து வாயேற்
பெண்ணொரு பெண்ணைக் கூடி மகவினைப் பெறலு மாமே"

## கடம்பவன புராணம்.

இலீலாசங்கிரக வத்தியாம்-137.

"இணையிலாச் சிவனுக் கிணைசொலி யிறக்குந் தேவரைப்
பரம்பொரு ளென்றோர், புணையிலாத் துன்பக் கட
லிடை யழுத்தும் புழுச்செறி வாய்ப்புற்று நோயர்"

## திருவிளையாடற் புராணம்.

நாட்டுப்படலம்-14. நகரப்படலம்-16. மண்சுமந்தபடலம்-71.

"மறைமுதற் கலைக ளெல்லா மணிமிடற் றவனே யெங்கும்
நிறைபர மென்றும் பூதி சாதன நெறிவீ டென்றும்

அறைகுவ தறிந்துந் தேறு ரறிவெனக் கலங்கி யந்த
முறையின்வீ டுணர்ந்தோர் போலத் தெளிந்தது மூரி வெள்ளம்"

"கண்ணி லாதவெங் கூற்றெனக் கராக்கிடங் தலைப்ப
மண்ணி னுமிரவ ரேனுமிம் மடுவிடை வீழ்ந்தோர்
தெண்ணி லாமதி மிலைந்தவர்க் கொப்பெனச் சிலரை
எண்ணி னாரிரு ணரகநீத் தேறினு மேறார்"

"பொய்ம்மைவா னவரி னீந்திப் போந்தது சிவன்பாற் பத்தி"

## திருவாரூர்ப் புராணம்.

பராசத்திச் சருக்கம்-20.

"அரியயன் முதலோர் யாரு மவிந்திடா தாலமுண்ட
ஒருவனே கடவுள்"

## திருவெற்றியூர்ப் புராணம்.

திருமால்வழிபடு படலம்-110.

"மேதகவி ளேங்கி விளங்கு நிகமாந்தந்
தீதியலாச் சுத்த சிவமே தியேயபதி
ஏதிலரெல் லாமவனை யெண்ணியின்பு மேம்பசுவென் றோதிய"

## வாயுசங்கிதை.

தேவிபுலியோடு மந்தரமடைந்த வத்தியாயம்-5.

"துன்னிய தாபரந் துலங்கு நின்னருண்—மன்னுமேற் பிரமனும்
பிரமன் மற்றதாய்—இன்னரு ளிலதெனி லெய்துவான்"

## சிவதத்துவ விவேகம்.

28-50-59.

"மலைமக ளுணவன் முக்கண னீல மணிமிடற் றவனென வானோர்—திலகனே யுன்னைத் தகரமாங் குகையுட் டியானஞ் செய் திடுமுறை செப்பி—அலரவன் முகுந்த னீசனோ டெவையு மையநின் விபூதியென் றுரைக்கும்—மலவிரு டுமித்துச் சிவச்சுடர் விளக்க வந்தகை வல்லிய மறையே"

"தேவர்மூ வருக்குந் தலைமையொப் புமைதான் செப்புக வன்றிமற் றிவருள்—மேவரு மேலோ னுருத்திர னெனத்தான் விளம்புக வெந்தவா றேனுங்—காவல நீயே யாவர்க்கு மேலாங் கடவுளென் பதுபெரு வழக்கே"

"வருந்திடா வகைவேட் டதனின்மேம் பட்ட பயன்பெற வுதவிட வற்றாந்—திருந்துநின் வழிபா டொரு தலையாகச் செய் யவேண் டிடுந்தகைத் தாயும்—பிரிந்தனை நீத்து வேறொரு தெய்வம் வழிபட நாடுவர் பேயோர்—அருந்தவப் பொருளே வெய்யவூழ்க் கொடுமை விலக்குவ தரிதரி தந்தோ"

## பாரதம்.

அருச்சுனன் றீர்த்த யாத்திரைச்சருக்கம்-18.

அருச்சுனன் றவநிலைச்சருக்கம்-87.

"இன்னம்பல பலயோனியி லெய்தாநெறி பெறவே
முன்னம்பல ரடிதேடவு முடிதேடவு மெட்டா
அன்னம்பல பயில்வார்புன லணிதில்லையு ளாடும்
பொன்னம்பல நாதன்கழல் பொற்போடு பணிந்தான்"

"ஏனங் தனைத்தேட வொளித்தருளு மிருபாதத் தொருவன்"

"சரிந்தவர் சரிவறத் தாங்கு நாயகன்
பரிந்திவை யுரைத்தலும் பாவை பங்கன்மேற்
புரிந்தில னின்னமும் பூசை யென்றனன்
வரிந்தவெஞ் சிலைக்குமண் மதித்த வீரனே"

## பிரபுலிங்கலீலை.

சூனிய சிங்காதனத்திலிருந்த கதி–62.

"உன்னரு ளுளதேற் கமலன்மா றெழினு
மொருசிறு துரும்புசெய் கிற்கும்"

## திருவருணைக்கலம்பகம்.

"சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாம் [வாய்மை"
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள்

## அருணகிரியந்தாதி.

"கூற்றிருக்கு முன்காலிற் கூறு புறங்காலில்
ஏற்றிருக்கு மாயவன்கண் ணெப்பொழுதுஞ்—சாற்றுகையில்
அம்புயத்தோன் கம்மிருக்கு மண்ணுமலை நாதர்
செம்புயத்திற் காரிணையாஞ் செப்பு"

"எல்லார் பிறப்பு மிறப்புமியற் பாவலர்தஞ்
சொல்லாற் றெளிந்தோநஞ் சோணேசன்—இல்லிற்
பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்துண்
டிறந்தகதை யுங்கேட்டி லேம்"

"பிறந்திறக்குந் தெய்வப் பிணங்களைக்கொண் டாடேன்
அறந்தழைக்குஞ் சோணகிரி யாரே—பிறந்திறவா
உம்மைப் புகழ்ந்தே யுமக்கடிமை யானபேர்
தம்மைப் புகழ்வதல்லாற் றான்"

## பட்டினத்தடிகள் பாடல்.

"நெடியோனும் வேதனுங் காணாத நித்த நிமலனருட்
குடிகாணு நாங்க ளவர்காணு மெங்கள் குலதெய்வமே"

## தாயுமானசுவாமி பாடல்.

"மறைமுழக் கொலிப்பத் தானே வரதமோ டபயக் கைகள்
முறைமையி னேங்க நாத முரசெனக் கறங்க வெங்கும்
குறைவிலா வணநி றைந்து கோதிலா நடனஞ் செய்வான்
இறையவ னெனலாம் யார்க்கு மிதயசம் மதமீ தல்லால்"

"அல்லலாந் தொழில்ப டைத்தே யடிக்கடி யுருவெ டுத்தே
மல்லன்மா ஞாலங் காக்க வருபவர் கடவு ளென்னிற்
றொல்லையாம் பிறவி வேலை தொலைந்திடா திருணீங் காது
நல்லது மாயை தானு நானென வந்து நிற்கும்"

"தெய்வம் வேறுள தென்பவர் சிந்தனை
நைவ ரென்பதும் நற்பர தற்பர
சைவ சிற்சிவ னேயுனைச் சார்ந்தவர்
உய்வ ரென்பதும் யானுணர்ந் தேனுற்றே"

## குமரகுருபர சுவாமி பிரபந்தத்திரட்டு.

### சிதம்பரச் செய்யுட்கோவை-13.

"ஆதி முதலுணர்ந்தியா மன்புசெயப் பெற்றவா
ஓஓ பெரிது மரிதே—யெளிதேயோ
வேதந் துறைசெய்தான் மெய்துணியான் கைதுணிந்தான்
பேதுற்றும் வெஃகேம் பிற"

## சிவப்பிரகாசசுவாமி பிரபந்தத்திரட்டு.

### சோணசைல மாலை-37.

"தெருமரும் பிறவி தமையகன் றிடாத தேவரைத் தேவரொன் றெண்ணி
அருமருந் தனைய நினையடை யாத வறிவிலார் பவப்பிணி யறுமோ"

## சிவஞானசுவாமி பிரபந்தத்திரட்டு.

### இளசைப்பதிற்றுப் பத்தந்தாதி-54.

### அமுதந்தாசாரிய சுலோக மொழிபெயர்ப்பகவல்-1.

"யாம்பரம் பரமென் றுன்னி யிருவரும் பொருத ஞான்றின்
மேம்படக் கிளைத்த செந்தீ வெற்பென வடிவங் காட்டிப்
பூம்பொழி லிளைசைக் கோமான் பொள்ளெனத் தோன்றிலா
நாம்பிற ரவரை யன்றோ தேவென நம்பு மாறே" [னேல்

"உயர்கா யத்திரிக் குரிப்பொரு ளாகலிற்
றசரதன் மதலை தாபித் தேத்தலிற்
கண்ணன் கயிலையி னண்ணிநின் றிரப்பப்
புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலிற்
றனது விழியுட னொராயிரங் கமலப்
புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலின்
ஆங்கவற் கிரங்கி யாழியீந் தருடலின்
ஐங்கணைக் கிழவனை யழல்விருந் தாக்கலின்
அமைப்பருங் கடுவிட மமுதுசெய் திடுதலிற்
றென்றிசைத் தலைவனைச் செகுத்துயிர் பருகலின்

அவுணர் முப்புர மழியவில் வாங்கலிற்
றக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலிற்
றனஞ்சயன் றனக்குத் தன்படை வழங்கலின்
மாநுட மடங்கலை வலிதபக் கோறலின்
மாயோன் மகடூஉ வாகிய காலைத்
தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின்
ஆழ்கடல் வரைப்பி னுன்றோ ரநேகர்
அன்புமீ தூர வருச்சனை யாற்றலின்
நான்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலின்
ஐயிரு பிறப்பினு மரியருச் சித்தலின்
இருவரு மன்னமு மேனமு மாகி
அடிமுடி தேட வழற்பிழம் பாகலிற்
பிறப்பிறப் பாதி யுயிர்க்குண மின்மையிற்
கங்கைசூழ் கிடந்த காசிமால் வரைப்பிற்
பொய்புகல் வியாதன் கைதம் பித்தலின்
முப்புர மிறுப்புழி முகுந்தப் புத்தேள்
மால்விடை யாகி ஞாலமொடு தாங்கலின்
அயன்சிர மாலை யளவில வணிதலின்
ஞானமும் வீடும் பேணினர்க் குதவலிற்
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவுள்
உம்பர்க ளெவர்க்கு முயர்ந்தோன்
என்பது தெளிக வியல்புணர்ந் தோரே"

## மார்க்கண்டேய ஸ்தோத்திரம்.

அவஸார சுலோகம்.

"ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் உத்ருத்ய புஜமுச்யதே
வேதசாஸ்த்ராத் பரம்நாஸ்தி நதைவம் சங்கராத்பரம்"

---

மேற் காட்டப்பட்ட பிரமாணங்களுட் கடாசியாயுள்ளது, ஸ்ரீமத் அரதத்தாசாரிய சுவாமிகள் புறச்சமயப் பல்லாயிரவர் ஸமூகமத்தியில் அக்கினியிற் பழுக்கக் காச்சிய இருப்புமுக்காலி

9

யின்மேலேறி யிருந்துகொண்டு இருபத்தொரு திருஷ்ட்டாந்தங் களுடன் சிவபரத்துவ நிரூபணஞ் சாதித்துக் கூறிய சமஸ்க் கிருத சுலோகத்துக்கு, சிவஞான சுவாமிகளால் மொழிபெயர்க் கப்பட்ட தமிழகவலாகும். மேற்கூறியவைகளிற் சத்திய புத்தி யும், சிவபரத்துவவுறுதியும் பூர்வ புண்ணிய புஷ்ட்டியுடை யார்க்கே சித்திக்கப் பெறுவதாகும்.

சிவபெருமானதியல்புகள், அவனருட் சிவபோதத்தால் அந நியமாய் நின்று கண்டாலன்றி, சீவபோதத்தால் அந்நியமாய் நின்று காண்டற்கும், சொல்லுதற்கும், எழுதிக்காட்டுதற்கும் எவர்க்குமொண்ணுதன வாகும். இதற்குப் பிரமாணம் :——

## சிவஞான சித்தியார்.

சுபக்கம்-ஆறஞ்சூத்திரம் 6, 7, 8.

"அறிபவ னருளினலே யநநியமாகக் காண்பன்"

"பாவனை யிறந்து நின்று பாவிக்கப் படுவதாகும்"

"தன்னறி வதனுற் காணுந் தகைமைய னல்ல னீசன்"

## நெஞ்சுவிடு தூது.

"காணக் கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்"

## விநாயக புராணம்.

தக்கன் பிணி நீங்குபடலம்-33.

"நாதநின் பெருமையை நவிலவல் லாரெவர்"

## கந்த புராணம்.

உபதேசப்படலம்-9. சூரனமைச்சியற்படலம்-126.

"முக்கணெந்தைதன் செய்கை முற்று மினையதென்றிசைக்கற் பாற்றே"

"அருவு மாகுவ னுருவமு மாகுவ னருவும்
உருவு மில்லதோர் தன்மையு மாகுவ னூழின்
கரும மாகுவ னிமித்தமு மாகுவன் கண்டாய்
பரம னுடலை யாவரே பகர்ந்திடற் பாலார்"

## கூர்ம புராணம்.

கண்ணன் சிவபூசை பண்ணினவத்தியாயம்-4.

"ஆதியு நடுவு மற்றை யந்தமு மின்றி யொன்றாய்ச்
சோதியாம் பிரமந் தானே தூமதிக் கண்ணி யெந்தை
வேதமு மவனே யின்னும் விளங்குற வறியா தென்றாற்
பேதைமை மனுட ரேயோ வவனிலை பேசவல்லார்"

## திருக்காளத்திப் புராணம்.

சிவமான்மிய முரைத்தவத்தியாயம்-50.

"மனமொழி யிகந்த வனையவன் சரிதம் வாய்மையிற் பற்பல
வகைய—இனையவென் றவற்றை யாவரே தெளிவா யீண்டவன்
பெருமையை யளந்து—நனிமிக வுரைக்க வல்லரு முளரோ"

## காஞ்சிப் புராணம்.

திருநெறிக் காரைக்காட்டுப் படலம்-23.

"இறையவன் பெருமையை யாவர் கூறுவார்"

## திருநாகைக் காரோணப் புராணம்.

புண்டரீகமுனிவர் முதற்காட்சி யுரைத்தபடலம்-16.

"புனையுருவெட் டொன்பதுமுற் புணர்ந்துமோ ருருவுமிலன்
வினையொருநான் கொன்றியற்றி மேவினுமோர் வினையுமிலன்
புனையிழையோர் பான்மருவப் பொருந்தினும்வி காரமிலன்
அனையபிரா னுண்மைநிலை யாரியம்ப வல்லாரே"

## வீரவனப்புராணம்.

### குபேரன் பூசைப்படலம்-15.

" இனைதலி லொன்பது மெட்டு மாறுமுற்
புனையுரு வமைந்துமோர் பூட்சி யும்மிலான்
வினைகளைந் தற்றுமோர் வினையு மில்லவன்
அனையவன் பெருமையா ரறைய வல்லரே"

## குமரகுருபரசுவாமி பிரபந்தத்திரட்டு.

### சிதம்பர மும்மணிக்கோவை-16.

" நின்பெருந் தன்மை நீயே யிரங்கி
உண்ணின் றுணர்த்தி னுணரி னல்லதை
நுண்ணூ லெண்ணி நுணங்க நாடிப்
பழுதின் றெண்ணிப் பகர்தும் யாமெனின்
முழுதும் யாரே முதுக்குறைந் தோரே"

## தாயுமானசுவாமி பாடல்.

### பராபரக்கண்ணி-113-114.

" பாரறியா தண்டப் பரப்பறியா துன்பெருமை
ஆரறிவார் நானோ வறிவேன் பராபரமே"

" அண்ட மனைத்தினுமா யப்பாலுக் கப்பாலுங்
கொண்டநின்னை யாரறிந்து கொள்வார் பராபரமே"

## தேவாரம்.

பல்லவனீச்சுரம் ஈரடி-7-திருவாரூர்த்தக்கேசி-1-கோகரணத்திருத்
தாண்டகம் 8-பொதுத்திருக்குறுந்தொகை-2-திரு வினுத்திருத்தாண்டகம்-10.

" பைங்கணேற்றினர் திங்கள்சூடுவர் பட்டினத்துறை பல்லவனீச்
தெங்குமா யிருப்பா ரிவர் தன்மை யறிவாரார்" [சரத்

" இன்ன தன்மைய னென்றறி வொண்ணு வெம்மானை"

" இன்னவுரு வென்றறிய வொண்ணு தான்காண்"

"அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரிய ரேறுகந் தேறுவர் கண்டமுங்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே"

"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னி னல்லால்
ஒப்புடைய னல்ல னொருவ னல்ல
னோரூர னல்லனோ ருவம னில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண் ணமு
மவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே"

---

இவ்வாறு ஸர்வ சாஸ்த்திரங்களும் * "யாவர்க்கு மேலா மள விலாச் சீருடையா" னாகிய சிவபெருமானது மகிமையை அறிந் துரைத் தெழுதிக் காட்ட முடியாதென்று ஆரவாரித்தலால், இதில், * "யாவர்க்குங் கீழாமடியேன்" தலையிட்டமை, மேருவைச் சிற்றெறும்பு தூக்கப் புகுந்ததனோடொக்கு மாதலால், இதனை இவ்வளவி னிறுத்திக்கொண்டு, சீவகோடிகளை யெல்லாம் பக்கு வப் படுத்திச் சிவத்திற் சேர்க்குஞ் சர்வலோக மாதாவாகிய பரா சத்தியின் மகிமை, அடுத்த சருக்கமாக வைத்துக் கூறப்படும். அதனையும் அன்பு றுத்திப் பார்வையிடக் கோருகின்றேன். சுபம்.

பரமசிவ மகிமைச் சருக்கம்
முற்றிற்று.



---

* * திருவாசகத் திருவெண்பா-8.

# பராசத்தி மகிமைச் சருக்கம்.

நாதனச்செய்யுள்.

பத்தி யோடு பணிபவர் தங்கட்குப்
புத்தி முத்தி யளிக்கும் புராதனி
நித்தன் வாழ்க்கைத் துணையாய் நிறைபரா
சத்தி யம்மை மகிமையைச் சாற்றுவாம்.

---

ஸ்ரீமத் அகண்டாகார ஜோதிர்மய அநாதிமலமுத்த சித்துருவாகிய பரமசிவம் அநாதிமலபெத்த சித்துருவாகிய ஆன்மாக்களெல்லாம் அநாதிமல பெந்த நீங்கி அத்துவிதாநந்த மடையவேண்டுமென அவர்கண்மீது கொண்ட அவ்வியாஜ கருணையே, பராசத்தி யெனப்படும்.

அக்கருணை—மரத்தில் வயிரம் போலவும், நீரிற் குளிர்ச்சி போலவும், அக்கினியிற் சூடுபோலவும், இரவியிற் கதிர்போலவும், மதியிற் கலைபோலவும், மணியிலொளிபோலவும், மலரின் மணம் போலவும், பாலிற் றேனிற்சுவை போலவும், பண்ணில் ஓசை போலவும், சிவத்தொடு குணகுணி ஸம்பந்தமாய்ப் பிரிக்க வொண்ணாது நிற்கும்; ஆதலாற் சிவத்தை யின்றிச் சத்தியில்லை, சத்தியை யின்றிச் சிவமில்லை; இவற்றிற்குப் பிரமாணம் :——

சிவஞானபோதம்.

ஐந்தாஞ் சூத்திரம்-4.

“அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
அருளு மவனன்றி யில்லை—யருளின்

றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமா னேய்ந்து"

## சிவஞானசித்தியார்.

சுபக்ஷம்-ஐந்தாஞ் சூத்திரம்-9. முதற்சூத்திரம்-67.

"அருளது சத்தி யாகு மரன்றனக் கருளை யின்றித்
தெருள்சிவ மில்லை யந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை
மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போல வீசன்"

"வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மாமுங் காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச் சிவத்தினோ டியைந்து நிற்கும்"

## சூதசங்கிதை.

திருமாலகம்பாவ நீங்கியானந்த நடந்தரிசித்த அத்தியாயம்-20.

"இரவியிற் கதிரு மதியினிற் கலையு மெழில்பெறு மணியினி லொளியும்—பரவிய மலரின் மணமுமொண் புனலிற் பகர்தரு தண்மையும் போல—விரவியெந் நாளும் பிரிதரா வியல்பு விளக்குவா னிடத்துமை யோடு—வரமுறு காட்சி தந்துமுன் னின்ற மறைமுத லடிகளே போற்றி"

## வாயுசங்கிதை.

சிவஞ்சத்தியுரு விபூதியுரைத்த வத்தியாயம்-5-7.

"விரிந்திடு மொளியை நீங்கியே மதியு ஞாயிறும் விளங்கிட மாட்டா
திருந்திய வொளியு மன்னவை தம்மை நீங்கியே சேர்ந்திடா ததுபோல்
இருந்தாம்மிறையு மிறைவியு மொன்ரு யுறைகுவ ரிறைவியா லிறைவன்
பொருந்திடப் போகமுத்தி நன்குதவிப் பொற்புறு சத்திமா னவான்"

"இறைவனோ டொன்ரு யுறைபரா சத்தி யெள்ளினி லெண்ணெய்போன் றுதல்போல்—நெறியினிற் சிருட்டி காலத்தில் வந்து தோன்றிடும்"

## விநாயக புராணம்.

கடவுள் வாழ்த்து-7.

"சீதளசந் திரகலையுந் தினகரன்வெம் மையுங்கனலிற் செறிந்த தேசும்—போதளவு நறுமணமும் போலிறைவன் குணமான புனிதை வேறாய்க்—கோதளவு முயிர்சிவத்தைக் காமுறவே சிவகாமங் கொண்டு நிற்குங்—காதளவுங் கருந்தடங்கட் சிவகாம சுந்தரியைக் கருத்துள் வைப்பாம்"

## திருவிளையாடற் புராணம்.

கடவுள் வாழ்த்து-5.

தடாதகைப் பிராட்டி திருவவதாரப் படலம்-42. திருமணப்படலம்-174.

"உண்மையறி வானந்த வுருவாகி யெவ்வுயிர்க்கு முயிராய் நீரின்
தன்மையனல் வெம்மையெனத் தனையகலா திருந்து சரா
பெண்மையுரு வாகியதன் னனந்தக் கொடி" [சரங்க ளீன்ற

"சாதமறை யாய்மறையின் பொருளாயப் பொருண்முடிவு தானாய்த் தேனின்—இரதமெனப் பூவின்மண மெனப்பரம னிடம்பிரியா வெம்பி ராட்டி"

"பண்ணுமின் னிசையு நீருந் தண்மையும் பாலும் பாலி
னண்ணுமின் சுவையும் பூவு நாற்றமு மணியு மங்கேழ்
வண்ணமும் வேறு வேறு வடிவுகொண் டிருந்தா லொத்த
தன்னனு முலக மீன்ற வம்மையு மிருந்த தம்மா"

## திருவாதவூரடிகள் புராணம்.

பாயிரம்-2.

"ஆடக சிதம்பர வணங்குமை யணங்கிலா
நாடக னனந்தசுக நன்குபுனை பங்கினள்
ஏடக மணம்பொருவ வெங்கணு மிசைந்துளாள்"

## அருணசல புராணம்.

திருக்கண்புதைத்த சருக்கம்-65.

"நித்தனை முதற்றருவை நித்தன திடத்தே
சத்தியென நீவருவை சத்திசிவ மென்றே
யித்தகைமை கொண்டுயிர்கள் யாவையு மளிப்பாய்
அத்துவித மாகுமுனை யாறிய வல்லார்"

---

பரமசிவத்தையுந் திருவருட்பராசத்தியையும் இரண்டற்ற பொருளெனக் கருதுவோர் மெய்ஞ்ஞானியா யின்பமடைவர், இரண்டாகக் கருதுவோர் அஞ்ஞானியாய்த் துன்பமடைவர்; இதற்குப் பிரமாணம்:——

## திருமந்திரம்-1240.

"நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப்
பிறிவது செய்யாது பிஞ்ஞக னேடுங்
குறியது கூடிக் குறிக்கொண்டு நோக்கும்
அறிவொடு மாங்கே யடங்கிட லாமே"

## சூதசங்கிதை.

பராபரை பூசா விதியையுரைத்த அத்தியாயம்-8.

பராசத்தி விசாரமுரைத்த அத்தியாயம்-6-7.

"காரணங் கடந்த பரனின்வே றல்லள் கருதுறு பரையுமற் றவளி
ஆரண முடியி னுறைபர மனும்வே றல்லனு னின்மலையடியிற் [ன்
சீரண வுறவிவ் வாறுநற் பூசை செய்தவர் திகழறி வுருவப் [நீழல்"
பூரணன் றனையும் பூசைசெய் தவராய்ப் பொருந்துவரவனடி

"தவிராதவ் வம்மூர்த்தங் களுக்குத் தக்க
சத்திகளாய் விளங்குமந்தச் சத்தி யின்றி
உவமானங் கடந்தொளிரும் பரசி வத்துக்
கொருதொழிலு மின்றாகு மாத லாலே
அவிர்தருமச் சிவமன்றிச் சத்தி யில்லை
யத்தகுசத் தியையன்றிச் சிவமு மில்லை
இவர்தருமன் போடிவ்வா றுணர்பவன்மெய்ஞ் ஞானி
யிரண்டாகக் கருதிடுவோ னிருணிரயம் புகுமே"

"அனைத்துயிர்க்கு மித்தகுசத் தியுஞ்சிவமுந் தாய்தந்தை யம்மா வன்பர்—வினைத்துயர்தீர்த் தருளுலக மாதாவாய் விளங் கிடுமெம் மெய்ம்மைச் சத்தி—தனைத்துணையா வன்பொடெவ ருபாசனைசெய் வாரனைய தன்மை யாளர்—தினைத்துணையுந் துயரின்றி யிட்டார்த்தம் பிரமவித்தை செறியப் பெற்றோர்"

---

பரமபதியாகிய சிவபெருமான் ஆன்மாக்களுக்குத் தநுகரண புவன போகங்களைத் தரும் பொருட்டுத் தனது கருணையையே பெண்ணுரு வாக்கித் தானே தனதரு கிருத்திக் கொண்டமையால் அப்பெருமானும் பராசத்தியும், பசுவர்க்கங்களாகிய ஏனைத்தேவர் மனிதராதியருட்போலச் சுவயபோக சுகாநுபவப் பொருட்டுக் குலமுறைமை காலம் நோக்கி ஊழும் உற்றார் பெற்றாரும் அந்தரங்க பெஹிரங்கத்திற் கூட்டக் கூடுற்று, அக்கூடுதலும் ஜநனங்கடோறும் வியவஸ்தை யின்றி மாறப்பெறு கின்ற ஆகந்துக அநித்தியத் தம்பதிகளல்லர்; அநாதி நித்தியத் தம்பதிகளேயாவர்; ஆதலாற் பராசத்தி நித்திய சுமங்கலியே யாவள், அவ்விருவர் கூட்டமும் ஞான மயமேயாம், அது, ஞானமயமா மென்பதனை "எந்தை பரமனு மென்னம்மை கூட்டமும்-முந்த வுரைத்து முறை சொல்லின் ஞானமாம்" எனக் கீழ்க்காட்டிய திருமந்திரத்தாலறியலாம். நித்திய சுமங்கலியாவதனை "சிவை" என்னும் அவளுடைய நாமத்தாலறிவதோடு, கீழ்க்காட்டிய சௌந்தரியலகரி பிரபு லிங்கலீலைச் செய்யுண் முதலியவைகளாலும் அறியலாம். இவற்றிற்குப் பிரமாணம் :—

கந்த புராணம்.

காமதகனப் படலம்-36. ததீசியுத்தரப்படலம்-378.

"மேனைகி லந்தர மெல்லியலா
வானவரு டன்னை யளித்தொருபாற்
றானக விருத்திய தற்பரனை
நானுமயல் செய்வது நன்றிதுவே"

"மாதுமை வசத்த னாகி மருவுவா னென்றி யன்னாள்
நாதன தருளே யெல்லா நண்ணுவித் தருளும் வண்ணம்
பேதக மாகித் தானோர் பெண்ணுருக் கொண்டு மேவும்"

## திருக்கூவப் புராணம்.

திரிபுரதகனச்சருக்கம்-72.

"உலகுயி ரின்பந் துய்ப்ப வுனதுபே ரருளே மாதென்
றிலகுற விடத்தி ருத்தி யிருந்திடுங் கருணை போற்றி"

## திருவாசகம்.

திருச்சாழல்-9.

"பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ"

## திருக்குற்றாலப் புராணம்.

தக்கன் வேள்விச்சருக்கம்-92.

"உலகமீன் றருளப் பெண்பா லுகந்தனன்"

## திருமந்திரம்-1770.

"எந்தை பரமனு மென்னம்மை கூட்டமும்
முந்த வுரைத்து முறைசொல்லின் ஞானமாம்"

## பிரபுலிங்கலீலை.

கைலாசகதி 21.

"ஓங்கு வாவுடை யும்ப னயனரி
தாங்கு மாவி தணந்தொழி நாளினும்
வாங்கு ருவெழின் மங்கல நாணொளி
தேங்கு பூணா சென்னச் சிறந்திட"

## சௌந்தரியலகரி-26.

"வேதரஞ்சகன் மால்புரந்தரன் வேகசண்டகு பேரனோ
டாதியெண்டிசை பாலர்பொன்றவு மாதியந்த மிலாததோர்
நாதர்பொன்றில ரேதுன்மங்கல நாணுறுந்திற மாதலால்
நீதழைந்தது யோகவம்பிகை நீலியென்பது பாவமே"

## திருநாகைக்காரோணப் புராணம்.

நாக நாதப்படலம்-49.

"கதுவெழிற் கண்டம் போற்றி கணவனஞ் சுருந்தி னுனுஞ்
சதுமுகன் முனோர்வீந் தானுந் தழையுமங் கலநாண் போற்றி"

## திருப்புத்தூர்ப் புராணம்.

கவுரிதாண்டவச் சருக்கம்-99.

"பூண்டவிட மொருங்கயின்றும் பூதேசன் மாதேவன் புரையின் ரேுங்கற்—கீண்டுநிப மாயோக ரூடியின்மங் கலநாம மியல்பிற் ருங்கி—மாண்டகுபல் லணிக்கரசாய் மலிதருண மங்கலநாண் வண்மை போற்றி"

## திருவாரூர்ப் புராணம்.

பராசத்திச்சருக்கம்-60.

"நாமநீர் வேலி வையகங் காக்கு நாரணக் கடவுளை முதலாம் —தாமவா னமரர் யாவரு மழியுங் கடவுளர் தடநெடுங் குடுமி— ஏமமால் வரைவிற் கடவுளே யழியாக் கடவுளென் றெவர்க்கு நன் குணர்த்தும்—காமர்மங் கலநாண் கருங்கமு கன்ன கதிர் மணிக் கழுத்தினிற் கவின"

---

பரமசிவ பராசத்தியின் கூட்டரவிலேயே அகிலமுந் தோன்றும்; தோன்றுமேனும் அவ்விருவருந் தோய்ந்துந் தோயாது நிற்றலாற் சேஷப்படார்; அதனால் அவ்விருவரும் பிரமசாரியும் கன்னிகையுமே யாவர்; பரமசிவனுக்கும் பராசத்திக்கும் உருக்கொண்டு கூடிச் செய்யும் பஞ்சகிர்த்தியம், திருவிளையாட்டேயாகும்; அவ்விருவருந் தோய்ந்துந் தோயாரென்பதனைக் கீழ்க் காட்டிய கூர்மபுராணச் செய்யுளாலும், சேஷப்படா ரென்பதனைக் கீழ்க்காட்டிய சௌந்தரிய லகரிச் செய்யுளாலும் அறியலாம். இதற்குப் பிரமாணம்:—

## சிவஞானசித்தியார்.

சுபக்கம் இரண்டாஞ்சூத்திரம்-77. முதற்சூத்திரம்-36.

" சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வருங்க லந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்
பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகுந்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் றெரியுமன்றே "

" சொன்னவித் தொழில்க ளென்ன காரணந் தோற்ற வென்னில்
முன்னவன் விளையாட் டென்று மொழிதலுமாம் "

## காஞ்சிப்புராணம்.

வீராட்டகாசப்படலம்-19.

" மெய்யுணர் வின்பச் சத்தியுஞ்சிவமும் விளக்குமிவ் விளைவுக
ளெல்லாம்—மையறத் தெளிந்தோர் திருவிளை யாட்டின்
வண்மையென் றியம்புவர் மன்னோ "

## வாயு சங்கிதை.

அத்துவாக்களி னியல்புரைத்த வத்தியாயம்-17-19.

" தாங்கிய சடைமுடி யிறைவன் றன்னிடப்
பாங்கினி னுறைதரு பனிமென் வார்குழல்
ஈங்கிவர் சந்ததி யாகு மேர்பெற
வீங்கிய பகுதியால் விரிந்த யாவுமே "

" உருவனா யிருஞ்சுட ரொளியும் போலவே
இருவரும் வைகுவா ரென்ப ராற்சிலர்
தெரியிலிவ் வகையினாற் சிவனுந் தேவியும்
பிரிவில ராகியே பிறங்கி வைகுவார் "

## திருவாசகம்.

திருவெம்பாவை-12.

" கூத்தனிவ் வானுங் குவலயமு மெல்லோமுங்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி "

## உபதேசகாண்டம்.

### சரியையாதி மான்மியச்சருக்கம்-45.

"விளம்பு மிந்தப் பசுக்கடமைப் பாசத்தாற் கட்டியருள்
விளையாட் டாடும்"

## கூர்மபுராணம்.

### வயிரவன் பலியேற்ற அத்தியாயம்-9.

"நாதன் பரையோ டிசைந்திடுதல்
துன்றுமாபோ லிருப்ப தல்லாற்றுயந் துந் தோயான் பரைகன்
குன்றவில்லி யெஞ்ஞான்றும் பிரமசாரி யெனக்குறிப்பார்" [னி

## அருணாசல புராணம்.

### திருக்கண்புதைத்த சருக்கம்-64.

"நின்னிலைமை கன்னியிறை நீள்பிரம சாரி
யென்னுமறை யன்றுமுத லின்றுவரை யெல்லாம்
உன்னிடை யுதித்திலகு யிர்த்தொகைக ளெல்லாம்
அன்னையெனு முன்பெருமை யாரறிய வல்லார்"

## திருக்குற்றாலப் புராணம்.

### பராசத்திபீடச் சருக்கம்-10.

"நிமலனும் பிரமசாரி நின்மலை யென்னுஞானக்
குமரிபா லகிலந் தோன்ற"

## பேரூர்ப் புராணம்.

### கௌரி தவம்புரி படலம்-72.

"மன்னு மக்களை வாய்ப்ப நல்கியுங்
கன்னி யென்னுமக் கவின்ப டைத்துளாள்
துன்னு வையக முழுதுந் தாடொழு
தன்னை யென்றுசொல் லருளி னெல்லையாள்"

## திருமந்திரம்.

492-1772-2062.

“ சத்தி சிவன்விளை யாட்டா லுயிராக்கி ”

“ சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவமாஞ் சிவஞ்சத் தியுமாகுஞ்
சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை
சத்திதா னென்றுஞ் சமைந்துரு வாகுமே ”

“ அத்த னருளின் விளையாட் டிடஞ்சடஞ்
சித்தொ டசித்தறத் தெளிவித்தச் சீவனைச்
சுத்தனு மாக்கித் துடைத்து மலத்தினைச்
சத்துட னங்கரு மத்திடுந் தன்மையே ”

## திருநெல்வேலிப் புராணம்.

தருமதேவதையிடபமான சருக்கம்-26.

“ முக்க ணிறைவ னருளாலம் மூவர் சகங்க ளுண்டாக்கித்
தக்க தமது முக்குணத்தாற் சகல வுயிரும் புரந்தனரால்
நக்கன் பரமன் வேணுவன நாத னமல னம்பனுக்கும்
மிக்க கவுரி தனக்குமிது விளையாட் டாகும் விருப்பிலையால் ”

## குமரகுருபரசுவாமி பிரபந்தத்திரட்டு.

சிதம்பரச் செய்யுட்கோவை-68.

“ எத்தொழிலுங் காணங்க ளிறந்தனினக் கிலையைந்து
மெய்த்தொழில்செய் வதுமடிகேள் விளையாட்டு நிமித்தமே ”

“ சீராட்டு நினக்கிலையச் சீராட்டுஞ் சிறுமருங்குற்
பேராட்டி விளையாட்டுன் பெயர்த்தாகி நடந்ததே ”

“ மெய்த்துயா முயிர்க்கெய்தும் விளையாட்டு முலகீன்ற
அத்திருவுக் கிலையதுவு மவர்பொருட்டே யாமன்றே ”

## சிவஞானசுவாமி பிரபந்தத்திரட்டு.

### கலைசைப்பதிற்றுப் பத்தந்தாதி-35.

"கன்ன கன்புவி காத்தழித் தருளுங் கடவு ளோர்தமைத் தந்தனை கலைசை—அன்ன லேயெலா முன்திரு விளையாட் டாகும்"

### சௌந்தரியலகரி-33.

"இருசுடர் மூலத்துணை சிவன்வடிவு நீயதனை
யானுநவ மாக நினைவேன்
உருவுநிறை தன்னிலள வொத்தபர மானந்த
முடையபர னொடுபரை யுமாய்
மருவுமினி தாமுங்கள் கூட்டமது சேடமு
மறுத்ததனை யுடைய துவுமாய்
அருகிலிரு வர்க்குமொரு பொதுவாகி நிற்குங்கொ
லழிவற்ற ஞான முதலே"

## தாயுமானசுவாமி பாடல்,

### மலைவளர்காதலி-5.

"ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ வகிலாண்ட கோடியீன்ற—அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசும் ஆனந்த ரூப மயிலே"

---

பரமசிவன் அசிந்திதனுயிருந்தும் சீவர்களுபாசித்துய்தற் பொருட்டுச் சிந்திதனுனவாறு போல, நாம ரூபரஹிதனு யிருந்தும் அச்சீவ பஞ்சகிர்த்தியப் பொருட்டுப் பலவித நாமரூபங்களைக் கொண்டு நிற்கும்போது, அவன் எத்திற நின்றுனே? அத்திறமே பலவித நாம ரூபங்களைக்கொண்டு பராசத்தி, தானும் நிற்பள். இதற்குப் பிரமாணம்:—

## சிவஞான சித்தியார்.

### சுபக்கம். இரண்டாம் சூத்திரம்-75-76.

"சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மணிதா னுகி
ஒத்துறு மகேசை யாகி யுமைதிரு வாணி யாகி
வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தி யாகும்
எத்திற நின்று னீச னத்திற மவளு நிற்பள்"

"சத்திதா னுத மாதி தானகுஞ் சிவமு மந்தச்
சத்திதா னுதி யாகுந் தரும்வடி வான வெல்லாஞ்
சத்தியுஞ் சிவமு மாகுஞ் சத்திதான் சத்த னுக்கோர்
சத்தியாஞ் சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்திதானே"

## விநாயக புராணம்.

### கடவுள் வாழ்த்து. 5.

"சத்தியாய் விந்து வாய்மனேன் மணியாய்த் தயங்கிய மகேசையா யுமையாய்—நித்தில வடந்தாழ் முகிழ்முலைத் திரு வாய் நெடும்புகழ் வாணியாய் வேருய்—எத்திற மிறைவ னின்றன னவனுக் கியைதர வத்திற நின்று—மெத்திய வுயிரின் மலவிருள் கெடுத்து விளங்குபூ ரணியையேத் தெடுப்பாம்"

## அருணுசல புராணம்.

### திருக்கண்புதைத்த சருக்கம்-66.

"மெய்ப்பொருண் மகேசனரன் வேதனரி யானல்
மைப்பரு மகேசியுமை வாணிதிரு வாவை
யிப்படியு மன்றியவ னெப்படி யெடுத்தான்
அப்படியு மாவையுமே யாரறிய வல்லார்"

## பேரூர்ப் புராணம்.

### கௌரி தவம்புரிபடலம்-65.

"என்ன வாறுநா மியைந்து நின்றனம்
அன்ன வாறெலா மமையு மாற்றலாள்"

## கரையேறவிட்ட நகர்ப்புராணம்.

### பாயிரம்-3.

"அங்கியிற் சூடே யெனமுதற் பொருளோ டார்ந்திச்சை யாதிய மூன்ருய்—பொங்கிமே லெழுந்திட் டொருசிவை யாகிப் பொருந்துமை வரைமுறை படைத்தே—இங்கித மாமற் றவரவ ருடனு மியைந்து வெவ்வேறுநா மத்திற்—றங்கிவாழ் பரையாஞ் சத்தியை யிதய சரோருகத் திருத்திவாழ்த் துவனே"

---

சர்வான்மாக்களும் உய்தற் பொருட்டு வேதசிவாகம புரா ணாதிகளில் விதித்த முப்பத்திரண்டு தருமங்களையுங் காஞ்சிமா நகரத்தில், தான் செய்து "அறப்பெருஞ்செல்வி" "தர்மஸம் வர்த்தனி" யெனப் பெயர் பெற்று விளங்குபவள் பராசத்தியே யாம். இதற்குப்பிரமாணம்:——

## பெரியபுராணம்.

### திருக்குறிப்புத் தொண்டநாயனர்-71-72.

"எண்ண ரும்பெரு வரங்கண்முன் பெற்றங் கெம்பி
ராட்டிதம் பிரான்மகிழ்ந் தருளப் **** புண்
ணியத்திருக் காமக்கோட் டத்துப் பொலிய
முப்பதோ டிரண்டறம் புரக்கும்"

"அலகி லீடறத் தறப்பெருஞ் செல்வி யண்ட மாம்பெரு
மனைக்கிடுந் தீபம்"

## திருவிளையாடற்புராணம்.

### பாயிரம்-19.

"அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணல்"

## கடம்பவன புராணம்.

### தேவியறம்வளர்த்த வத்தியாயம்-30.

"இல்ல மேமுத லியம்புமெண் ணான்கற மியற்றுவித் தருள்வாளை"

## கோயிற் புராணம்.

### திருவிழாச்சருக்கம்-22.

"அந்தஃதிலெண் ணான்கறமுந் திருக்கண் சாத்தி
யவற்றின்மிகத் தனித்தென்னை யாண்ட வன்னை"

## திருவாரூர்ப் புராணம்.

தலமகிமைச் சருக்கம்-10-69.

தன்மநிட்டை தீர்த்தச்சருக்கம் 34.

"அறங்களு முயிரின் றொகுதியு முலகு மளித்தரு ளல்லியங் கோதை"

"நல்லறம் வளர்க்கும் ஞான நாயகி நற்றவஞ்செய்
செல்வமார் திருவாரூர்"

"தேவாதி தேவன் றிருமேனி பாதிகொண்ட
மூவா முதல்வி யுலக முழுதீன்ற
பாவா யறமனைத்தும் பூத்த பசுங் கொடியே"

## திருநாகைக்காரோணப் புராணம்.

புண்டரீக முனிவர் முதற் காக்ஷியுரைத்தபடலம் 2.

"அறமனைத்துங் குடிகொளுங்கை யம்பிகை"

## பாரதம்.

அருச்சுனன்றீர்த்தயாத்திரைச் சருக்கம்-13.

"இச்சைப்படி தன்பேரற மெண்ணான்கும் வளர்க்கும்
பச்சைக்கொடி யிடையாளொரு பாகந்திறை கொண்டாள்"

## குமரகுருபரசுவாமி பிரபந்தத்திரட்டு.

திருவாரூர் நான்மணிமாலை 8.

"ஒருகா லத்தி லுருவமற் றொன்றே
யிடப்பான் முப்பத் திரண்டறம் வளர்ப்ப
வலப்பா லிரத்தன் மாநிலத் தின்றே"

## சிவஞானசுவாமி பிரபந்தத்திரட்டு.

கச்சியானந்தருத்திரேசர் பதிகம்-1.

"முந்தையா திரண்டு தன்ம முதல்விசெய் மூதூர்"

---

பரமசிவன், பிக்ஷாடன ரூபங்கொண்டு தாருகாவனத்திற் சென்று நாற்பத்தெண்ணுயிர முனிவர்கள்பால் அன்னப்பிக்ஷையையும் வயிரவரூபங்கொண்டு வைகுண்டாதி யுலகங்களிற் சென்று விட்டுணுவாதி தேவர்கள்பால் இரத்தப் பிக்ஷையையும் ஏற்பார்போன்றேற்ற செயலானது, ஆங்காங்கு அவ்வவர்க்குமுள்ள கர்மப்பிர்மவாத மீமாஞ்சக மதப்பிரவர்த்தியுஞ் செருக்கும் நீங்கக் கடாக்ஷித்த நிர்மோக நிரகங்காரத்தியாகச் செயலேயாமென்பதைக்,கோயிற்புராணம் வியாக்கிரபாதச் சருக்கம்-27-ல் "ஏரார் தருதாருவனத் திடையா றெண்ணு யிரமா முனிவர்க் கிறைவன்—ஓராதவர் மோக மொழித் தருளா லொருநா ணடமாடனுகந்தனன்" எனவும், காஞ்சிப்புராணம் வயிரவீசப்படலம் 27-ல் "வெறிம லர்த்துழாய்ப் பண்ணவன் முதலிய விண்ணவருலகெல்லாங்—குறுகி வார்கறைப் பிச்சையேற் றவர்மனக் கொடுஞ்செருக் கறமாற்றி" எனவும், ஷை படலம்-33-ல் "உலகமெங்கணுந் திரிந்து நெய்த் தோர்ப்பலி யேற்பவ னெனவொன்னுர்—வலமி சைந்தவேற் கடவுளர் தருக்கற வாங்கினன்" எனவும் வருபவைகளுணர்த்தி நிற்குமாறு போல, பராசத்தியாகிய சர்வைசுவரிய ஸம்பன்னையே வாழ்க்கைத்துணையாகவும் அநநியமாகவும் இடப்பாகத்திலிருந்து கொண்டு முப்பத்திரண்டு தருமங்களையும் அநவரதமும் அள்ளிப் பொழிந்து விளங்குதலாற் சிவபெருமானுக்கு, தியாகரென்னும் பெயரானது, ஏகதேசலீலையாற் சம்பவித்த பிக்ஷாடனப் பெயரை வியாப்பிய நாமமாக்கிவிட்டு, தான் வியாபக நாமமாய்ப் பிரகாசித்ததென்பதை, திருவாரூர் நான்மணிமாலை-14-ல் "சிரந்தந்த செங்கைக் கமலேசர் நாமந் தியாக ரென்ப—தரந்தந்த வாள்விழி யாடந்த தாங்கொ லறம் வளர்த்தே" என வருவது முணர்த்தி நிற்கும்;

## பராசத்தியம்மையார் செய்தருளிய 32-தருமங்கள்.

"தேவயாகஞ் செய்தல், பிதுர்யாகஞ் செய்தல், பூதயாகஞ் செய்தல், மாநுடயாகஞ் செய்தல், பிரமயாகஞ் செய்தல், மந்யு

சூக்தமந்திர மோதல், துறவறத்தார்க்கு மடங்கட்டியீதல், இல்லறத்தார்க்கு வீடுகட்டியீதல், இல்வாழ்க்கைக்குரிய பண்டமீதல், தண்ணீர்ப்பந்தல் வைத்தல், நிழற்சோலை வைத்தல், இரப்பவர்க்குப் பொருளீதல், குருடரைப்புரத்தல், திக்கற்றவர்களைப்புரத்தல், வியாதியாளர்கட்கு மருந்தீதல், குழந்தைகட்கு ஆவின்பாலீதல், சுண்ணந்தீட்டிய தாம்பூலமீதல், அப்பிஞ்ஞனத்திற்குரிய எண்ணெய் சீயக்காய் ஜலமீதல், பெண்ணலநுகர்தற்கேதுவாய மலரணையீதல், பூதானஞ் செய்தல், கோதானஞ் செய்தல், கந்நிகாதானஞ் செய்தல், கல்யாணஞ் செய்வித்தல், தீபங்கொடுத்தல், கடனைநிவர்த்தித்தல், சிவனடியார் விரும்பியவற்றைக் கொடுத்தல், விபூதி யீதல், உருத்திராக்கமீதல், சிவபூஜோபகரணமீதல், வேதசிவாகமாதி புத்தகங்களீதல், சிவோபாசநாமார்க்க நூல்களைப் போதித்தல், சரியாதி சதுர்விதமார்க்கப் பிரவர்த்தகர்களுக் கிடையூறகற்றி அபயமீந்து நிற்றல்" என்பவைகளாம்; இதற்குப் பிரமாணம்:—

## காஞ்சிப் புராணம்.

தழுவக்குழைந்த படலம்-137-முதல்-141-வரை.

"மாங்குயிற் கிளவி நங்கை யறமெலாம் வளர்க்கலுற்றாள்"

"தெய்வந்தென் புலத்தார் பூத மானுடம் பிரம மென்றோர்
ஐவகை யெச்சஞ் சூக்தந் துறந்தவர் மடங்க ளன்பு
செய்யுமில் வாழ்வார்க் கில்ல மனைக்குப கரணந் தேம்பூப்
பெய்தமை தண்ணீர்ப் பந்த ரெங்கணும் பிறங்கு சாலை"

"இரப்பவர் குருட ரெவ்வ முற்றவர்ப் புரத்தல் வெந்நோய்
துரக்குநன் மருந்து தூவாய் மகவினை யோம்பல் சுண்ணம்
பரித்தபா கடையே யெண்ணெய் பைம்புனல் குளிப்பவேண்டும்
மருக்கிளர்துவர்க ளாதி மலரணை நிலனான் கன்னி"

"கடிமணம் விளக்கு மாறுக் கடனொழித் திடுத லீசன்
அடியவர் விழைவ வீகை யக்கமா மணிவெண் ணீறு
படியிலாக் கடவுட் பூசை யுபகர ணங்கள் பாசந்
தடிதரு வேத வாய்மைச் சைவநூல் புராண நல்கல்"

" சிவபிரா னடிக்கீழ்ப் பத்தி செவியறி வுறுத்த லோடும்
உவகையி னபயம் யார்க்கும் வழங்குத லுள்ளிட் டோதும்
நவையிரி யறமெண் ணான்கு நாடொறு நிகழ்ச்சி மாணப்
பவநெறி தூரக்கும் ஞானப் பைந்தொடி நிறுவிப் பின்னர் "

---

மேற் கூறப்பட்ட முப்பத்திரண்டு தருமங்கட்கு விவரம், கடம்பவன புராணம் தேவி யறம் வளர்த்த வத்தியாயம் 22-23-24 ஆம் செய்யுட்களினும், அருணகிரிபுராணம் அருந்தவச்சருக்கம்-52-53-54-55-ஆம் செய்யுட்களினுங் கூறப்பட்டிருக்கின்றன; அவற்றிற்கும், காஞ்சிப் புராணத்துட் கூறப்பட்டிருப்பதற்கும் சில தர்மபேத முண்டு; அவைகளை அவ்வப்புராணங்களுட் கண்டறிக.

இனி, அரிபிரமேந்திராதி சமஸ்தர்களுக்கும் பரதாரகமநாதி மஹாபாதகங்களை அணுகவொட்டாமற் றொலைத்து அவர்களை இல்வரம்பு கடவாமற் செந்நெறிக்கட் புகுத்திப் பாதுகாத்து நிற்கின்ற இல்லறதர்ம ரக்ஷாபந்தனமாயுள்ளது, பராசத்தியம்மையாரது நிர்மால்ய தாரணமேயாகும்; இவ்வாறு இவரது மஹத்வப்ரஸாதமானது ப்ராகிருதர்களது வரம்புகடந்த கழிபெருங் காமநோய்க்கு மருந்தாதலை நோக்கும் போது, இப்பராசத்தி யம்மையார் ஞானஸொரூபிணியென்பது நன்குவிளங்கும்; இவரது ப்ரஸாதம் அம்மருந்தானமைக்குச் சரித்திரமுண்டோ? எனில், உண்டு; பற்பல புராணங்களிற் பரக்கக் காணலாமேனும் விரிவஞ்சி அதனை இங்கே சுருக்கமாகக் கூறுதும்;

முன்னொரு காலத்தில் விஷ்ணுமூர்த்தியானவர், ஜலந்தராசுரனது மனைவியாகிய பொற்பினுங் கற்பினுஞ் சிறந்த விருந்தையை யிச்சித்துப் போய்க் கூடி, அவளிறந்தவுடன் காமமீதூர

மயங்கி அவளது சரீரதஹந பஸ்மத்திற் கிடந்து * புரண்டனர்; அதனைக் கண்ட பிரமேந்திராதி தேவர்களனைவருங் கூடித் திருக் கைலாஸ மலையிற் சென்று ஆங்குச் சக்தி ஸமேதரா யெழுந் தருளி யிருந்த சிவபெருமானிடத்திற் பாதஸேவை செய்து அந்த விஷ்ட்ணு மூர்த்தியி னிலைமையைத் தெரிவித்தனர்; அரு கிருந்த அம்மையார், அதனைத் தேர்ந்து கருணைகூர்ந்து தமது திருமேனியிற் றிமிர்ந்த கலவைச் சந்தனக் கழிவைத் திரட்டி அத்தேவர்கள்பாற் கொடுத்து, நீங்கள் இதனைக் கொண்டுபோய் விருந்தாசரீர தஹந பஸ்மத்தில் விதைப்பீர்களாயின் இதினின்று திக்குந் துளசி, நெல்லி, அகத்தி யென்னு மூன்றனுள், துளசி யைத் தரித்து மாயவன் மயக்கநீங்குவ னென்று திருவாய் மலர்ந் தனுப்பினர்; அதனையேற்ற பிரமேந்திராதி தேவர்களனைவரும் அவ்வாறு செய்தவளவில் அம்மூன்று முண்டாக, அவற்றுட் டுளசியைத் தரித்து விஷ்ட்ணுமூர்த்தியானவர் அம்மயக்கநீங்கிப் போய் வைகுண்டத்தில் லக்ஷ்மிதேவி ஸமேதராய் வாழ்ந்திருந் தனர்; அதுமுதல் மேற்கண்ட மூன்று மூலிகையையுங் கொண்டு துவாதசியிற் றம்மை வழிபடுவார்க்கு, விஷ்ட்ணுமூர்த்தி அநுக் ரஹிப்பாருமாயினர்; இதற்குப் பிரமாணம்:—

## காஞ்சிப் புராணம்.

சலந்தரீசப்படலம்-18-முதல்-22-வரை.

“இமையவர் பலரு மாலை யெங்கணுந் தேடிக் காணர்
சிமையநீள் கயிலை நண்ணித் திருவடி வணங்கிக் கூற
அமையெனத் திரண்டு நீண்டு பசந்தணி யிலங்கு பொற்றோள்
உமையொரு பாகத் தெங்கோ னவன்றிற முணர்ந்து சொல்லும்”

---

* புரண்டமையையும் கூடினமையையும்; “இகோட்டுண் மாதரெ லும்பிற் புரண்மால்” எனவரும் நால்வர் நான்மணிமாலைச் செய்யுளாலும் “பொன்னைப் பிறரைப் புணர்வுற்றிடுவோன்—என்னத் தனைவென் றிசை தொண் டிலனே” எனவருங் கந்தபுராணச் செய்யுளாலும், அறியலாம்.

"சொற்பயில் கமலை கேள்வன் சலந்தரன் துணைவி யாய
கற்பினிற் சிறந்த காமர் விருந்தையைக் காமுற் றன்னாள்
பொற்புரு விழந்த வீமப் பொடியிடைக் கிடக்கின் றானல்
விற்பொலி விசும்பின் வாழ்க்கை விண்ணவர் கேண்மினென்னா"

"பாயபல் லுலகு மீன்ற பனிவரைப் பிராட்டி மேனிச்
சேயொளிக் கலவைச் சாந்தி னழுக்கினைத் திரட்டி நல்கி
நீயிரிங் கிதனை யந்த நீற்றிடை வித்து வீரேல்
மாயவன் மயக்கந் தீர்க்கு மரங்கண்மூன் றுளவா மென்றான்"

"விண்ணவ ரதனை யேற்று விடைகொடு வணங்கிப் போந்து
தண்ணகை விருந்தை வீந்த சாம்பரின் வித்த லோடும்
அண்ணலந் துளவ மங்கேழ் நெல்லிநீ ளகத்தி மூன்றும் [டான்"
கண்ணெதிர் தோன்றக் கண்டான் கரியவன் மகிழ்ச்சி கொண்

"மென்றுணர்த் துளவந் தன்னை விருந்தையாத் துணிந்து புல்லிக்
குன்றருங் கழும னீங்கிக் குலவுதன் னிருக்கை சார்ந்தான்
துன்றுபூந் துழாய்முன் மூன்றுந் துவாதசி வழுத்தப் பெற்றோர்க்
கன்றினர்க் கடந்த மாயோ னருள் சுரக்கு மன்றே"

## கந்தபுராணம்.

ததீசியுத்தரப்படலம் -292 முதல் 296 வரை.

"அக்குறு சுடலைநீ றாடி வாடினன்
மைக்கடன் மேனியன் மாலின் மூழ்கியே"

"அத்துணை தன்னில் வானோ ரம்புயன் கயிலை யேகி
நித்தனை யிறைஞ்சி மாயோ னிலைமையை யுணர்த்தும் போதிற்
சத்தியங் கதனைத் தேர்ந்து தலையளி செய்து தானோர்
வித்தினை யுதவி யீது விண்டுமுன் னிடுதி ரென்றாள்"

"ஈதனு மதனை வேதா விருகையா லேந்திச் சென்னி
மீதுறக் கொண்டு போந்து விருந்தைதன் னீமந் தன்னிற்
றாதுறு பலியின் வித்தித் தடங்கட லமுதம் பெய்ய
மாதவன் முன்ன மாங்கோர் துளவமாய் மலிந்த தன்றே"

"தண்டுள வான தாங்கோர் தையலாய் நின்ற காலைக்
கண்டனன் திருவின் கேள்வன் கனலிடைப் புகுந்தான் மீது

கொண்டிடு காத னீங்கி யவள்வயிற் கூட்டம் வெஃக
அண்டரு மயனு மாலுக் கருங்கடி யியற்றி யீந்தார்''

"முடியுறு சூட்டு மாக முடித்தனன் முளரிக் கண்ணன்''

---

சிவமும் சத்தியும் பஞ்சகிர்த்திய நிமித்தமாய்த் தனித்தனி கொண்ட ரூபாவசரத்திலும் பிரியாதிருப்பின் உலகம் நடை பெறுதலும், பிரியின் நடைபெறாமையும், சத்தி, பர்வதராஜன் தவத்திற் கிரங்கிக் குமாரியாதற் பொருட்டுப் பிரிந்து கூடின காலத்திற் காணப்படுதலால், உலக காரணராயுள்ளவர் அவ்விருவருமேயாம். இதற்குப் பிரமாணம்:—

## கந்தபுராணம்.

மேருப்படலம்-18-67. திருக்கல்யாணப் படலம்-96.

"ஆரணன் றனது மைந்தர்க் கரும்பெறன் ஞான போதம்
ஓரிறை காட்டு முன்ன ருலகெலா மொருப்பா டொன்றி
ஈருடன் முயங்கு மார்வ மின்றியே யிருந்த யார்க்குங்
காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற் பாற்றோ''

"அன்னை தன்னை யகன்றரன் யோகிபோல்
என்ன துஞ்செய லின்றி யிருத்தலால்
முன்னை யாண்பெண் முயக்கம தின்மையாய்
மன்னு யிர்த்தொகை மல்கலின் றுயதே''

"அன்பினர்க் கெளிவந் துள்ள வாதியம் பரமன் மாது
தன்புடை யாகச் சீயத் தவிசின்வீற் றிருத்த லோடுந்
துன்பகன் றிருபா லாகித் துவன்றிய வுயிர்க ளெல்லாம்
இன்பொடு போக மாற்றி யினிதமர் வுற்ற வன்றே''

## திருக்குற்றாலப் புராணம்.

திருமணச்சருக்கம்-150.

"கயிலைமால் வரையின் மேய கண்ணுதற் கருணை மேகம்
சயிலமின் னொருபான் மேவித் தண்ணளி பொழித லாலே

பயில்வன வூர்வ நிற்ப பறப்பன நடப்ப வாதி
உயிரெலாம் பயிரா யீரே மூலகமுந் தழைத்த மாதோ "

## திருநெல்வேலிப் புராணம்.

இமையபருப்பதச்சருக்கம்-51-52-53. காமதகனச் சருக்கம்-60.

" ஆனகா லையிலென் னைய னமலையைப் பிரித லாலே
வானவ ரயன்மான் மற்றோர் மனைவியர் தம்மைப் பாரார்
பானலார் விழியார் தாமும் பரிவொடு பதியைப் பாரார்
கானுறு மரும்பி லாமற் கரும்பெடான் காம வேளே "

" சாலியே முதலா யுள்ள தரையிடை யசர மெல்லாம்
பாலொடு குருத்து வாங்கி நின்றன பழுப்பக் காயா
ஏனுறு சரமு மவ்வா றியங்கிடா திருந்த வென்றால்
ஆலம துண்ட தேவ னன்றியார் தெய்வ மாவார் "

" அராவணி சடையி னானை யம்பிகை பிரிந்த போது
சராசரத் தானும் பெண்ணுந் தயவுறு காம மின்றி
நிராசையா யிருந்த தாலே நிமலனே யெவர்க்கு மேலோன்
பராபர வத்து வென்று பகர்ந்தன மறைக ளெல்லாம் "

" புண்ணியன் கயிலை வாசன் பூவையைப் பிரித லாலே
எண்ணில்பல் கோடி யண்டத் திடைசரா சரங்க ளெல்லாம்
உண்ணிறை விருப்பமின்றி யூடல்கூ டலுமே யின்றி நண்ணியது "

---

ஒரு திருவருட்பராசத்தியே சிவ நவ வடிவத்திலும் பல திறப்பட்டுத் தோன்றியும், தோற்று வித்தும், உடனிகழ்ந்தும் நிற்குங் கிரமவகையாற் சிவபெருமானுக்குத் தாரமாயும், தாயாயும், தங்கையாயும், தனையையாயும் சொல்லப்படுவள்; இதற்குப் பிரமாணம் :—

## திருமந்திரம்-1178.

" வாயு மனமுங் கடந்த மனோன்மணி
பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயு மறிவுங் கடந்த வரனுக்குத்
தாயு மகளுநற் றாரமு மாமே "

## தேவாரம்.

### பொது.

"வாயி லானை மனோன்மணி யைப்பெற்ற
தாயி லானைத் தழுவுமென் னாவியே"

## திருவாசகம்.

### திருப்பொற்சுண்ணம்-13.

"எம்பெரு மானிம வான்மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன்றகப்பன்
றமையனெம் மையன் றாள்கள்பாடிப்
பொன்னுடைப் பூண்முலை மங்கைநல்லீர்
பொற்றிருச் சுண்ண மிடித்து நாமே"

## திருக்கோவையார்-112.

"தவளத்த நீறணி யுந்தடந் தோளண்ண றன்னொருபா
லவளத் தனும் மகனும்"

## திருநாகைக்காரோணப் புராணம்.

### நாகநாதப்படலம்-62.

"பிறைமுடி யவன்றா யானாய் பின்பிறந் தவளு மானாய்
முறைமையின் மகளு மானாய் முயங்கிடு மனையு மானாய்
மறைமுத லனைத்துந் தேறு வளங்கெழு செல்வி போற்றி
கறைதபு திருக்கா ரோணக் கருந்தடங் கண்ணாய் போற்றி"

## சிதம்பரச்செய்யுட்கோவை-33.

"கனகமார் கவின்செய் மன்றில்
அனகநா டகற்கெ மன்னை
மனைவிதாய் தங்கை மகள்"

## மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.

### அம்மானைப்பருவம்-9.

"அம்மனை யாயவர் தம்மனை யானவ ளாடுக வம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி யாடுக வம்மனையே"

---

பரமசிவனுக்கு நாமரூப பஞ்சகிர்த்தி யாதிகளனைத்தும் திருவருட் பராசத்தியின் சேர்க்கையால் நிகழ்வன; அவள் பிரிந்தவழி அவை முழுதுமில்லை; அவள் சொரூபத்திற் பிரிவது மில்லை; பஞ்ச மூர்த்திகளைப் பெற்றவளும் அவளே; அவர்களது வடிவங்கட்குக் காரணமாயிருப்பவளும் அவளே; அவர்கள் தொழில்செய்யக் கடைக்கண் பாலிப்பவளும் அவளே; இவ்வாறு அவளைத் தியானிப்போர் தீமையிலரா யுலகாதிபதியாவர். இவற்றிற்குப் பிரமாணம்:—

### சௌந்தரியலகரி-1.

"சிவமெ னும்பொருளு மாதி சத்தியொடு சேரி னெப்பொருளும் வல்லதாம்—இவள்பி ரிந்திடி னியங்கு தற்குமரி தரிதெனுமறை யிரைக்கு மால்—நவபெ ரும்புவன மெவ்வ கைத்தொழி னடத்தி யாவரும் வழுத்து தாள்—அவனி யின்கணொரு தவமி லார்பணிய லாவதோ பரவ லாவதோ"

### திருமந்திரம்.

1181, 1182, 1073, 1081, 1047, 1077, 1208, 1087.

"சூரியல் கண்ணி குலாய புருவத்தள்
சீரிய ளாயுல கேழுந் திகழ்ந்தவள்
ஆரிய நங்கை யமுத பயோதரி
பேருயி ராளி பிறிவறுத் தாளே"

"பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை"

"ஓங்காரி யென்பா ளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்
ஆங்காரி யாகியே யைவரைப் பெற்றிட்டு
ரீங்காரத் துள்ளே யினிதிருந் தாளே"

"மாலங் கயனறி யாத வடிவிற்கு
மேலங்க மாய்நின்ற மெல்லிய லாளே"

"தானவ மைந்தவம் முப்புரந் தன்னிடை
தானான மூவுரு வோருருத் தன்மையள்"

"ஆகின்ற மூவரு மங்கே யடங்குவர்"

"ஆமயன் மாலர னீசன் சதாசிவன்
றூமடி சூடிநின் றெய்தினர் தம்பதம்"

"காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு
பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்
பேணுஞ் சிவனும் பிரமனு மாயனுங்
காணுந் தலைவிநற் காரணி காணே"

## திருவாசகம்.

### திருவெம்பாவை-16.

"நந்தம்மை யாளுடையாள்
தன்னிற் பிரிவிலா வெங்கோமா னன்பர்க்கு
முன்னி யவணமக்கு முன்சுரக்கு மின்னருளே
யென்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்"

## காஞ்சிப் புராணம்.

### சிவபுண்ணியப்படலம்-19. வீராட்டகாசப்படலம்-38.

"உமையுந் தானும் வேறன்மை யுருவி னிடத்துந் தெளிப்பான் போல்—இமைய மயிலை யொருபாதி வடிவி னிருவி"

"அன்னவே றுகைக்கு மயனரி யீச னுயமுத் தேவரைப் பகரு—மின்னவர் தம்மை யுகந்தொறுங் கோடி முறை யெழில் விழிகளிற் படைத்தாள்—மின்னிடைப் பிராட்டி"

## விநாயக புராணம்.

### கடவுள்வாழ்த்து-9.

"ஆரணனு நாரணனு மாரணத்துக் கெட்டாத வரனு மென்னுங்—காரணர்கண் மூவரையுந் தரித்துயிர்த்த வடையாளங் காட்டு மாபோல்—சீரணவுந் திருவயிற்றின் மூவரைவார்ந் தழகெறிக்குஞ் செல்வத் தாயைப்—பேரணவுஞ் சென்னைநகர்ப் பிரமராம்பிகை மயிலைப் பேசி வாழ்வாம்"

## கடம்பவன புராணம்.

மகாகைலை மான்மிய முரைத்த அத்தியாயம்-45.

“கடைக்கணரு ளாற்படைப்பன் கமலன் கண்ணன்
காப்பனுலக னைத்துமுருத் திரனந் தத்திற்
றுடைப்பனிவள் பெருமையெவ ருரைப்பார் மூன்று
தொழிற்குமுதற் காரணிமா மாயா சத்தி
உடைப்பொருளீங் கிவளெனவோர் கணப்போ தேனு
முள்ளத்திற் பாவனைசெய் திருக்கிற் றீமை
இடைப்படியார் திரைக்கடல்சூ ழுலகுக் கெல்லா
மிவர்தாமே யதிபதியா யிருப்ப ரென்றும்”

## திருக்குற்றாலப் புராணம்.

பராசத்தி பீடச்சருக்கம்-5.

“நங்கைபா லாதி யிச்சை ஞானநற் கிரியை யென்னப்
புங்கவ னருளா னுன்கு சத்திகள் பொலிந்து தோன்ற
அங்கவர் தம்மா லெம்மா னியற்றுவ னதிகா ரங்கள்
இங்கிவ ருருவ மெம்மா லியம்பரிது”

## மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.

வருகைப்பருவம்-10.

“மும்முதற்கும் வித்தே வருக வித்தின்றி விளைக்கும்
பரமானந்தத்தின் விளைவே வருக”

## திருப்புகழ்.

குன்றுதோறாடல்-129.

“ஆதி மறையவனு மாலு முயர்சுடலை யாடு மரனுமிவ ரொன்றதான—ஆயி யமலைகிரி சூலி குமரிமக மாயிகவுரியுமை தந்த வாழ்வே”

---

சர்வான்மாக்களும் அடைய விரும்பும் சுகம், போகமெனவும் மோக்ஷமெனவும் இரண்டு வகைப்படும்; இவை, புத்தி முத்தியெனவும், பிரவர்த்தி நிவர்த்தி எனவும், பந்தம் வீடு எனவும்,

சிற்றின்பம் பேரின்பம் எனவும் முறையே கூறப்படும்; இவ்விரண்டுள், முன்னையது நச்வரமாயும், பின்னையது சாச்வதமாயுமிருக்கும்; இவ்விரண்டற்கும் விளையுந்தானமாயும், இவ்விரண்டனையும் ஆன்மாக்கள் பக்குவத்திற்கேற்றவாறு பெறக்கொடுக்கின்ற நாயகியாயும், ஆன்மாக்கள் சரியாதி மார்க்கத்தாற் செய்யும் சிவோபாசனைக்கு மனவாக்குக் காயங்களென்னும் முக்கரண ஆற்றலையுந் தந்து அவர்கட்கு உடனிகழ்ச்சித்துணையாயு மிருப்பதோடு, சிவஜோதியை விளக்கி ஆநந்தபவநம் புகுத்தி இரக்ஷிப்பவளும் திருவருட் பராசத்தியேயாம்; இவற்றிற்குப் பிரமாணம் :—

## திருமந்திரம்.

1047, 1199, 1229, 1064, 1101, 1103, 1074.

"தானான பொன்செம்மை வெண்ணிறத் தாள்கல்வி
தானான போகமு முத்தியு நல்குமே"

"சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி யென்ப தறிகிலர்
பத்தியைப் பாழி லுகுத்தவப் பாவிகள்
கத்திய நாய்போற் கதறுகின் றாரே"

"சன்மார்க்க மாகச் சமைதரு மார்க்கமுந்
துன்மார்க்க மானவை யெல்லாந் துரந்திடும்
நன்மார்க்கத் தேவரு நன்னெறி யாவதுஞ்
சன்மார்க்கத் தேவியுஞ் சத்தி யென்பாளே"

"அளியொத்த பெண்பிள்ளை யானந்த சுந்தரி
புளியுறு புன்பழம் போலுள்ள நோக்கித்
தெளியுறு சித்துச் சிவகதி காட்டி
ஒளியுற வைத்தென்னை யுய்யவுண் டாளே"

"வெளிப்படு வித்து விளைவறி வித்துத்
தெளிப்படு வித்தென் சிந்தையி னுள்ளே
களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதியை
ஒளிப்படு வித்தென்னை யுய்யக்கொண் டாளே"

" தையனல் லாளைத் தலத்திற் றலைவியை
மையலை நோக்கு மனோன்மணி மங்கையைப்
பையநின் றேத்திப் பணிமின் பணிந்தபின்
வெய்ய பவமினி மேவகி லாவே "

" தானே தலைவி யெனநின்ற தற்பரை
தானே யுயிர்வித்தாய்த் தந்த பதினொலும்
வானோர் தலமும் மனமுநற் புத்தியுந்
தானே சிவகதித் தன்மையு மாமே"

## சிவஞானசித்தியார்.

சுபக்கம் மூநற்சூத்திரம்-69.

" சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா வாணும் பெண்ணு முயர்குண குணியு மாகி
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கையெல்லாம்
இத்தைய முணரார் பீட லிங்கத்தி னியல்பு மோரார் "

## விநாயக புராணம்.

அரசியற்கைப்படலம்-7. சேசானனர்திருவவதாரப் படலம்-144.
கிப்பிரப் பிரசாதனன் வரம்பெறுபடலம்-11.

" பெத்த முத்தியும் பரப்புபெண்ணரசியைப் பிறழு முக்கண்
ணளை "

" பூரணி புவனமீன்ற புராதனி பெத்தமுத்திக்
காரணி கடுக்கைவேணிக் கண்ணுதற் பெருமான்பாகத் தாரணி"

" மாயை வென்றவர் மனத்திடை மாறியே நடிக்கும்
வேயை வென்றதோட் குவிமுலை விமலை "

## திருவிளையாடற் புராணம்.

தடாதகைப்பிராட்டி திருவவதாரப்படலம்-20-70. திருமணப்படலம்-154.

" அறந்தழுவு நெறிநின்றோர்க் கிகபோகம் வீடளிக்கு
மம்மை யம்மா "

" எம்மை யாரையும் யாவையு மீன்றவங் கயற்கண்
அம்மை யாவரே யாயினு மன்பினு தரிப்போர்

இம்மை யாகிய போகம்வீ டெண்ணியாங் கெய்தச்
செம்மை யாகிய வின்னருள் செய்துவீற் றிருக்கும்"

"மாசறுத் தெமையா னந்த வாரிநீ ராட்டிப் பண்டைத்
தேசுரு விளக்க வல்ல சிவபரம் பரை"

## திருவாரூர்ப் புராணம்.

### பராசத்திச் சருக்கம்-36.

"பத்தியாலெதிர் பரவுவார் பவமுழு தகற்றிப்
புத்தி யோடுயர் முத்திநல் கியபழம் பொருளே"

## காஞ்சிப் புராணம்.

### திருவேகம்பப்படலம்-10. வீராட்டகாசப்படலம்-36-37.

"எண்க ணாளனை யெழில்வலக் கண்ணினும் பதும
வண்க ணாளனை மற்றிடக் கண்ணினு நுதன்மேல்
ஒண்க ணாளனை நள்ளுடைக் கண்ணினு முலவாப்
பெண்க ணாயகி யீன்றனண் முத்தொழில் பிறங்க"

"கருப்பு—வில்லியை விளையாட்டியற்கையிற் கோடிகாமரா விழித்
துணைக் கடையால்—அல்லியங்கோதை யாங்களித்திடலால்"

"உற்றவர் தமக்கு வீடுபே றளிக்கு முண்மையி னுமப்
பெயராற்—சொற்றிடப் படுமானுலகெலா மீன்று ளமர்ந்தருள்
சுடரொளி விமானம்"

## திருக்குற்றாலப் புராணம்.

### பராசத்திபீடச்சருக்கம்-2.

"அன்னதா நாதந் தன்னி லாகிய விந்து சத்தி
தன்னிடை யுதித்துப் போகந் தழைத்தெழு தானமாகி
நின்மலப் பரையாஞ் சத்தி"

## திருப்பெருந்துரைப் புராணம்.

### யோகபீடச் சிறப்புரைத்த படலம்-2, 4.

"தோற்றுமதி யுங்கலையு மலருநறு மணமுமொன்றாய்த்
தோன்று மாபோல்—தேற்றுதிரு வருளான்ம நாதரியற் குண
மாகிச் செல்வ மாகிச்—சாற்றிலய போகவதி காரமெலாஞ்
செய்யுமொரு சத்தி யாகிப்—போற்றுமறை யாகமபு ராணவிதி
காசமுதற் பொருளு லாகி"

"என்னுக்கு னெய்யிருக்கு மியல்பேபோ லெங்குநிறைந் திருந்து போகங்—கொள்ளுமுயிர்க் குறிப்பனைத்து முணர்ந்து சுவர்க் காதிபலங் கொடுத்துப் பின்பு—மெள்ளமெள்ள வபுத்தி புத்தி பொதுமூன்றிற் சிவதருமமிகுவித் தன்மை—தெள்ளுசிவ தருமமுதற் புண்ணியத்தா லனைத்துயிருஞ் சிவத்திற்சேர்த்து"

## திருநாகைக்காரோணப் புராணம்.

### கடவுள் வாழ்த்து-8.

"பெற்றதாய் தன்பதியைக் காதலிக்கக் காதலிக்கும் பெட் பிற் காட்ட—லுற்றபோ தேகாணு மிளமழவென் பதுதனக்கே யுண்மை யாகச்—சொற்றமா தேவையுயிர் காதலித்து நோக்க நடந் தொலையா மன்றில்—அற்றமே வாதவைநன் ருற்றிநிற்கும் பராபரைதா ளடுத்து வாழ்வாம்"

## சூதசங்கிதை.

### பாயிரம்-2.

"பரம்பொருளிற் பிரியாத தன்னியல்பை யுருவிடத்தும் பயிலத் தோற்றி—நிரம்புறுமன் படைப்பாதி யைந்தொழிலு மியற்றிவினை நிகளஞ் சித்திட்—டரம்பெறுசன் மார்க்கநிலை யளித்துயிர்கட் கொழிப்பில்சுக முறுத்த நாளும்—வரம்பிலருட் டாயாகி யெடுத்தணைக்கும் பராபரையை வாழ்த்தி வாழ்வாம்"

## கோயிற்புராணம்.

### இரணியவன்மச்சருக்கம்-33.

"அத்தனுட னுருயிர்கள் கூடவணை விக்குஞ் சத்தி"

## பட்டினத்தடிகள் பாடல்.

### திருவேகம்ப மாலை-10.

"மாயநட் போரையு மாயா மலமெனு மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் றாதையைக் கூடிப்பின் றாயைமறந்
தேயுமதே நிட்டை யென்றா னெழிற்கச்சி யேகம்பனே"

## தாயுமானசுவாமிபாடல்.

### மலைவளர் காதலி-1.

"பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கண் மித்திரர்கள் பக்கமுண் டெக்காலமும்—பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயமபட

ரெனுந்திமிர மனுகா—கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு காயசித் திகளு முண்டு—கறையுண்ட கண்டர்பா லம்மை நின் ருளிற் கருத்தொன்று முண்டாகுமேல்"

### சிவஞானசுவாமி பிரபந்தத்திரட்டு.

திருமுல்லை வாயிலந்தாதி-36.

"தேவி சரணப் பதுமத் தகம்வைப்பார்க் கறுப்பது நாலிரண்டும் முப்பதும்"

### தேவாரம்.

பொதுத்திருவினுத் திருத்தாண்டகம்-10.

"அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணுகக் காணி னல்லால்—இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே"

### திருவாசகம்.

சிவபுராணவகவல்-1. கண்டபத்து-3.

"அவனரு ளாலே யவன்றுள் வணங்கி"
"கருத்திருத்தி யூன்புக்குக் கருணையினு லாண்டு கொண்ட"

### திருவிசைப்பா.

வேணாட்டடிகள்-3.

"திசைநோக்கிப் பேழ்கணித்துச் சிவபெருமா னேவெனினும்
இசையானு லென்றிறத்து மெனையுடையா ளுரையாடாள்"

### சிவதத்துவவிவேகம்-6.

"உன்திரு வடிக்கீ ழுறுதியா மன்பு முன்றிரு வருளினுற் கிடைப்ப—தன்றிநூல் பலவு மாய்ந்ததா லுரைசெய் யளப்பருந் திறமையான் மதியான்—மன்றவே கிடைப்பதன்று"

———

ஆன்மாக்க டோறும் அந்தர்யாமியாய் நின்று அவர்களை அறம்பொருளின்பமீட்டுதற்குரிய பெத்த தசையில் அதற்கு வேண்டிய ஆற்றல் பெறச் சத்துவ ராஜஸ தாமஸமென்னும் முக்குணமயத்தர்களாக்கியும், சிவாநுபவம் பெறுதற்குரிய முத்தித்தசையில் அதற்கு வேண்டிய ஆற்றல்பெறச் சுவதந்திரத்துவாதி

யெண்குண மயத்தர்களாக்கியும் நிற்பவள் திருவருட் பராசத்தியேயாம்; சத்துவாதி முக்குணங்களையும் முறையே வெண்மை, செம்மை, கருமை யென்னும் மூந்நிறத்தனவாக உபசரிப்பது நூல் வழக்காகும்; இவற்றிற்குப் பிரமாணம்:—

## திருப்பெருந்துறைப் புராணம்.

சனகராசன் முத்தி பெற்ற படலம்-21.

"வெள்ளியது பெருங்கருணை மேவியது சத்துவமே
ஒள்ளியசெம் மையதார வாரமுள திராசதமே
நள்ளியகார் நிறமவித்தை நயந்ததுதா மதணுகுமே"

## திருநாகைக்காரோணப் புராணம்.

நாகநாதப் படலம்-60.

"பொருள்பெறக் கருது வார்தம் புந்தியிற் சிவந்தாய் கல்வி
யருள்பெறச் சிந்திப் பார்தம் மகத்துற விளர்த்தாய் தெவ்வர்
இருடப முயலு வார்தம் மிதயத்துக் கறுத்தாய் மூல
மருடபுங் காரோ ணத்து வயங்குமா தேவி போற்றி"

## திருமந்திரம்-1205.

"கருத்துறு காலங் கருது மளவுந்
திருத்தி யிருந்தவை சேரு நிலத்து
ஒருத்தியை யுன்னி யுணர்ந்திடு மண்மேல்
இருத்திடு மெண்குண மெய்தலு மாமே"

## திருவாசகம்.

திருக்கழுக் குன்றப்பதிகம்-7.

"இயக்கி மாரறு பத்துநால்வரை யெண்குணஞ்செய்தவீசனே"

---

சேதநாசேதனப் பிரபஞ்ச முழுதும் திருவருட் பராசத்திமயமேயாம்; சச்சிதாநந்த சொரூபியும் அவளேயாம்; அவளைத் தியானிக்காத தேவர்களுமில்லை; அவளையன்றிச் செய்யுந் தவமுமில்லை; அவளையன்றிப் பஞ்சமூர்த்திகளா லாகுங் காரியமொன்றுமில்லை; அவளையன்றிமோக்ஷவுலகம் புகும் வழியையும் அறிய

முடியாது; அவளது உண்மை மகத்துவத்தை யுணர்ந்தவர் மும்மலங்களையும் வெல்லுவர்; தெய்வ சிகாமணியாயுள்ளவளும் திருவருட் பராசத்தியேயாம். இவற்றிற்குப் பிரமாணம்:—

### திருமந்திரம்.

1210, 1054, 1053, 1232, 1767.

"அண்ட முதலா வவனி பரியந்தங்
கண்டதொன் றில்லை கனங்குழை யல்லது
கண்டனுங் கண்டியு மாகிய காரணங்
குண்டிகை கோளிகை கண்டத னாலே"

"அறிவார் பராசத்தி யானந்த மென்பார்
அறிவா ரறிவுரு வாமவ ளென்பார்
அறிவார் கரும மவளிச்சை யென்பார்
அறிவார் பரனு மவளிடந் தானே"

"அவளை யறியா வமரரு மில்லை
அவளன்றிச் செய்யு மருந்தவ மில்லை
அவளன்றி யைவரா லாவதொன் றில்லை
அவளன்றி யூர்புகு மாறறி யேனே"

"வென்றிட லாகும் விதிவழி தன்னையும்
வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை
வென்றிட லாகும் விழைபுலன் றன்னையும்
வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே"

"ஆதி பரதெய்வ மண்டத்து நற்றெய்வஞ்
சோதி யடியார் தொடரும் பெருந்தெய்வம்
நீதியுண் மாதெய்வ நின்மல னெம்மிறை
பாதியுண் மன்னும் பராசத்தி யாமே"

---

**போ**கம் மோக்ஷ மென்னும் இரண்டும் பரமசிவத்தோடு திருவருட் பராசத்தியைப் பிரிப்பின்றிச் சேர்த்து உபாசிப்பவர்களுக்கே சித்திக்கும்; அவளை விலக்கி யுபாசிப்பவர்களுக்குச் சித்திக்கமாட்டா; இவற்றிற்குச் சரித்திரப்பிரமாணமுண்டோவெனில்? உண்டு; மோக்ஷாபேக்ஷகராய்ப் பிருங்க மென்னும்

வண்டு வடிவங்கொண்டு சத்தியை விலக்கிச் சிவோபாசனை செய்த வைராக்ய சொரூப நிர்வாண யோகநாம ப்ருங்கிமஹா ரிஷியானவர் தமக்குச் சத்தி கடாக்ஷமின்மையால் நிற்கவுஞ் சத்தி யற்ற தளர்ச்சி வந்தும் அப்போது தாங்கொண்ட பிடிவாதத் தினாற் சிவபெருமானைத் துதிக்க, அப்பெருமான் அவருக்கு ஏற் கனவே பூருவத்திலுள்ள இரண்டு காலோடு நிற்றற் காதாரமாய் வியனாக ஒருகாலைக் கொடுத்து நிறுவினர்; அம்மஹாரிஷிக்கு முயற்சியும் அசாத்திய மாயிற்று; திரிபாதம் பெற்ற காரணத் தால் அதுமுதல் திரிபாதமஹாரிஷி என்னும் பெயரும் அவருக் கேற்பட்டது; எந்தவுலகத்திலுள்ள எத்தகைப் பெரியோரா யிருந்த போதிலும், எம்பெருமாட்டியை விலக்கினோரை முக் காற்பேறு பெற்றாரென்று கேட்டோமே தவிர, முழுப்பேறு பெற்றாரென்ற சரித்திரத்தைக்கேட்டோமில்லை; இதற்குப் பிர மாணம்:——

## கந்தபுராணம்.

கந்தவிரதப்படலம்-80.

"ஆன்ற வைம்புல னொருவழிப் படுத்தி யார்வம் வேரறுத்
 தையமொன் றின்றி
ஊன்றி ரிந்திடி னுங்நிலை திரியா வுண்மை யேபிடித்
 துலகங்கள் முழுதும்
ஈன்ற வெம்பெரு மாட்டியை நீக்கி யெம்பி ரானையே
 வழிபடு மியற்கை
மூன்று தாளுடை யொருவனுக் கல்லா லேனை யோர்களான்
 முடியுமோ முடியா"

## கரையேறவிட்டநகர்ப் புராணம்.

வண்டுநகர்ப்படலம்-5, 6.

"ஈசனார் குறிப்புந் தான்முன் னிசைத்ததுங் குறித்து நோக்கி
மாசதா மெனவி ரத்த மாமிச முதறிப் போட்டார்
பேசவா ரென்புந் தோலும் பிறங்கநின் றயர்ந்தார் யோகர்
தேசனா ரதுபோ தன்பாற் றிரிபாத முதவி னாரே"

"சேர்ந்திட மூன்றும் பாதந் திரிபாத முனிவ ராகி'

---

அதுநிற்க, இனி, போகம் சித்திக்காமைக்குச் சரித்திரங் கூறுதும், லோக ரக்ஷகராகிய விட்டுணு மூர்த்தியானவர் போகாபேக்ஷகராய்ப் புத்திரப்பேறு கருதித் தேவதாருவனத்தைச் சார்ந்து சிவபெருமானை நோக்கி நெடுங்காலம் தவஞ்செய்தனர், சிவபெருமான் விருஷப வாகனத்திற் பார்வதிசமேதராய்க் காக்ஷிகொடுத்து நீ வேண்டிய வர மென்னை யென்று கேட்க, அப்போது அருகிருந்த சர்வலோக மாதாவாகிய பார்வதி தேவியாரை நினையாமலும் துதிக்காமலும் தொழாமலும் விட்டுச் சிவபெருமானை மட்டும் தொழுது துதித்து, அடியேனுக்கு நீடித்த ஆயுளும் லோகரக்ஷகத்தொழிலும் இலக்குமியோடுறையுஞ் செல்வமும் தந்திருக்கின்றீர்; புத்திரனில்லாக்குறை யொன்றுளது; அதனைத் தந்தருளுமென்றனர்; கேட்ட சிவபெருமான் கொடுத்தோமென்றனர்; உடனே பார்வதிதேவியார் விட்டுணு மூர்த்தியைப் பார்த்து, நீ என்னைத் தொழாமல் அவமதித்தபடியால் சிவபெருமானுக் கன்பனுமாகாய், நீ பெறப்போகிற மன்மதனென்னுங் குமாரனும் சிவகோபத்தா லிறக்கக் கடவனென்று சபித்துச் சிவபெருமானோடு மறைந்தனர்; அதைக் கேட்ட விட்டுணுமூர்த்தியானவர் மனம் பதைத்து நடுங்கித் துன்புற்று, இது அம்மையை வழிபடாமையால் வந்த இடையூறென்று மதித்துப், பின்பு பரமசிவனோடு பார்வதி தேவியாரையுங் கந்தஸ்வாமியையுஞ் சேர்த்துச் சோமாஸ்கந்த மூர்த்தியாக அமைத்து, அன்போடு பூசித்துத் தவஞ்செய்தனர்; அப்போது சிவபெருமான் ஸ்கந்த மத்ய உமா ஸமேத விருஷபா ரூடராய்க் காக்ஷிகொடுத்தனர்; அந்தப் புத்திர களத்திர ஸமேத சிவக் காக்ஷியைக் கண்டவுடன் விட்டுணுமூர்த்தியானவர் ஆநந்த பரவசராய் முன்னர்ப் பார்ப்பதி தேவியாரை வணங்கிப் பின்னர்க் கந்தசுவாமியை வணங்கி அதன் பின்னர்ச் சிவபெருமானை வணங்கி மூவரையுந் தோத்திரம் பண்ணினர்; சிவபெருமான்

பார்வதி தேவியாரைப் பார்த்து, நீ அநுக்ரஹஞ் செய்யென்று சொல்ல, அத்தேவியார் விட்டுணுவைப் பார்த்துப் பரமசிவன் கொடுத்த வரமும் நான் கொடுத்த சாபமும் ஒருவராலும் மாற்ற முடியா வாகையால், உனக்குப் பிறக்கும் மன்மதகுமாரன் சிவ பெருமானது நெற்றிக்கண்ணெருப்பாலிறந்து பின்பு தோன்றி அருவும் உருவுமுடையனாய் வளத்தோடு நிலைபெறக்கடவ னென்று அநுக்ரஹிக்கச், சிவபெருமானும் அவ்வாறே யாகுக வென்று வரங்கொடுத்தருளினர்; இச்சரித்திரத்தைப் புராண வாயிலாக வறிவதோடு இவ்வுலகத்தில் ஊரூர்கடோறும் வருஷப் பிரதி வருஷமும் காமுண்டித்திருவிழா என நடைபெற்று வரும் காக்ஷிப் பிரமாணத்தாலும் அறியலாம்; விட்டுணுவினாற் பூசிக்கப் பெற்ற சோமாஸ்கந்த மூர்த்திதான், திருவாரூரில் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ வீதிவிடங்கத் தியாகராஜமூர்த்தி யென்பது, புராணப்ரசித்தமும் லோகப்ரசித்தமுமாம்; ஆதலாற் றிருவருட் பராசத்தி யுபாசனையை யின்றிப் போகத்தைப் பெறவு முடியாது; ஆகவே, போக மோக்ஷம் என்னு மிரண்டற் கும் அவள் துணையே வேண்டு மென்பது சத்தியம். இதற்குப் பிரமாணம் :——

## கந்தபுராணம்.

கந்தவிரதப்படலம்-73-முதல்-93-வரை.

"உந்தியா லுலகைத் தந்த வொருதனி முதல்வன் முன்னம்
மைந்தர்தா மின்மை யாலே மன்னுயிர்த் தொகுதிக் கெல்லாந்
தந்தையா யிருந்த தங்கோன் சரணமே யரண மென்னாச்
சிந்தைசெய் தாழி காலஞ் செய்தவ மியற்றி யிட்டான்"

"தவமுழந் திருந்த காலைச் சாரதப் புணரி சுற்றக்
கவுரியுந் தானு மையன் கருணையால் வந்து தோன்றப்
புவிதனை யளந்த மாயோன் பொள்ளென வெழுந்துபோற்றிச்
சிவனடி வணக்கஞ் செய்து செங்கையாற் றொழுது நின்றான்"

" மாதொரு பாகன் மகிழ்ந்தருள் செய்து
நீதவ மாற்றி நெடும்பக னின்றாய்
ஏதிவண் வேண்டு மியம்புதி யென்னச்
சீதர னின்னன செப்புத லுற்றான் "

" அந்தமி லாயுவு மாருயிர் காப்புஞ்
செந்திரு வோடுறை செல்வமு மீந்தாய்
மைந்த னிலாமல் வருந்தின னெந்தாய்
தந்தரு ளாய்தமி யேற்கினி யென்றான் "

" குன்றினை யாற்றிடு கோனிவை செப்ப
நன்றென வேநகை யாநவை யில்லா
வொன்றொரு செம்ம லுனக்குத வுற்றும்
என்றருள் செய்தனன் யாரினு மேலோன் "

" கழையிசை போற்று கருங்கடல் வண்ணன்
முழுதுல கீன்றிடு முற்றிழை பாதந்
தொழுதில னின்று துதித்தில னன்பால்
வழிபடு நீரின் வணங்கிலன் மாதோ "

" முறையி னுற்றனக் கிளையவ ளென்றே முன்னி னன்கொலோ
மூலமு நடுவும்
இறுதி யும்மிலாப் பரமனுக் கெம்போ லிவளு மோர்சத்தி
யெனநினைந் தனனோ
மறுவி லாமலை மகளென வுளத்தே மதித்த னன்கொலோ
மாயவன் கருத்தை
அறிகி லேமுமை யம்மைபாற் சிறிது மன்பு செய்திலன்
முன்புசெய் வினையால் "

" அன்ன காலையி லெம்பெரு மாட்டி யாழி யம்படை
யண்ணலை நோக்கி
என்னை நீயிவ னவமதித் தனையா லெம்பி ராற்குநீ
யன்புள னன்றால்
முன்ன நீபெறு மதலையு மையன் முனிவி னெல்லையின்
முடிந்திட வென்னாப்
பன்ன ருங்கொடு மொழிதனை யியம்பிப் பராப ரன்றனை
நோக்கியே பகர்வாள் "

" ஆன தோர்பரப் பிரமும் யானே யல்ல தில்லையென்
றறிவிலாப் பேதை
மானு டப்பெரும் பசுக்களை யெல்லா மருட்டி யேதிரி
வஞ்சகன் முன்னம்

ஞான னீரிரு ளறிவின லன்றி நனுகு ருதனீ
யனுகிநிற் பதுவோ
ஊனு லாவிய வுயிரினுக் குயிரா மொருவ செல்லுதும்
வருகென வுரைத்தாள்"

"இன்ன வாறுரைத் தெம்பெரு மாட்டி யெம்பிரான்றனைக்
கொண்டுபோ மளவில்
அன்ன தன்மைகண் டச்சுதக் கடவு ளலக்க ணெய்தியே
யச்சமுற் றயர்ந்து
தன்னு ளந்தடு மாறிமெய் பனித்துத் தளர்ந்து நேமியந்
தண்கரைக் கணித்தாய்
மன்னு பல்பொருட் கலந்தனைக் கவிழ்த்த வணிக னுமென
வருந்தினன் மாதோ"

"அம்மை தன்பொருட் டாலிடை யூறிங் கடைந்த தென்றுமா
லகந்தனி லுன்னி
எம்மை யாளுடை யிறையவன் றனையு மிறைவி தன்னையு
மிளங்கும ரனையும்
மெய்ம்மை சேர்வடி வாகவாங் கமைத்து வேத வாகம
விதிமுறை வழாமற்
பொய்ம்மை தீர்ந்திடு மன்பினுற் பூசை புரிந்து பின்னரும்
வருந்தியே நோற்றான்"

"அனைய தன்மையா லாண்டுபல் லாயிர கோடி
புனித னாகியே நோற்றன னதுகண்டு புழுங்கி
முனிவ ராயுளோ ரின்னமும் வருகிலன் முதல்வன்
இனிய ருந்தவஞ் செய்பவ ரில்லையா லென்றார்"

"அந்த வெல்லையிற் சத்தியுஞ் சிவமுமா யனைத்தும்
வந்தி டும்பரி சளித்தவ ரிருவரும் வரலும்
சிந்தை யின்மகிழ் வெய்தியே யம்மைசே வடியின்
முந்தி யோடியே வணங்கினன் முழுதொருங்குணர்ந்தோன்"

"இறைவி தாண்மலர் பணிந்தபின் னெம்பிரான் பதமும்
முறையி னுற்பணிந் திருவர்தஞ் சீர்த்திகண் முழுதும்
மறையின் வாய்மையாற் பன்முறை யால்வழுத் துதலும்
நிறையு நல்லருள் புரிந்தனன் றனக்குநே ரிலாதான்"

"மாது நீயிவற் கருள்புரி யென்னவம் மாது
சீத ரன்றனை நோக்கியே நம்பெருந் தேவன்
ஓதும் வாய்மையும் யான்முனிந் துரைத்திடு முரையும்
பேதி யாவினி யாவரே யன்னவை பெயர்ப்பார்"

"எங்க ணாயகன் விழிபொழி யங்கியா லிறந்து
தூங்க மேன்மைபோய்ப் பின்முறை முன்புபோற் றோன்றி
உங்குன் மாமக னிருக்கவென் றுரைத்தன ளுமையாள்
அங்க தாகவென் றருளியே மறைந்தன னையன்"

"அம்மை தன்னுட னெம்பிரான் மறைதலு மண்ணல்
விம்மி தத்தொடு தன்பதி புகுந்துவீற் றிருப்ப
மைம்ம லிந்திடு மெய்யுடைக் காமவேள் வாரா
இம்மெ னக்கடி துதித்தன னவன்மனத் திடையே"

"வந்திடுங் காமவேள் வடிவுடைக் காளையாய்க்
கந்தமார் பூங்கணை கன்னல்விற் கைகொடே
மைந்தரா னோர்களு மாதருங் காமமேற்
புந்திவைத் திடும்வகை போர்புரிந் துலவினன்"

"தண்ணிழற் குடையெனச் சசிபடைத் துடையவன்
எண்ணமற் றொருபகல் யார்க்குமே யாகிய
கண்ணுதற் பகவன்மேற் கணைமலர் சிதறியே
துண்ணெனத் துகளதாய்த் தொலைதலுற் றனரோ"

"பூழியாய் மாண்டுளான் பொருவிலா நல்லரு
ளாழியா னணையா லருவொடே யுருவமாய்
வாழிசேர் தொல்லைநாள் வளனொடு மன்னினன்
சூழிமால் கிரிதருந் தோகைசொற் றவறுமோ"

## திருவாரூர்ப் புராணம்.

**தியாகராசச்சருக்கம்-41-முதல் 56-வரை.**

"மாதவ மாற்றி வருந்துபு பன்னாள்
மாதவ னின்றுழி வானதி வேய்ந்தோன்
மாதடிந் தானொடு மால்விடை யேறி
மாதவ டன்னொடுந் தோன்றினன் மாதோ"

"தோற்று மெல்லையிற் றுண்ணெ னுவெரீஇத்
தோற்றம் பத்துடைத் தோன்ற ருழ்ந்தெழீஇத்
தோற்று முப்புரந் தொலைய வென்றதோர்
தோற்ற மீறிலாச் சுடரைப் போற்றினன்"

"ஆதி யீசனைப் போற்றி னனவன்
பாதி மேனியைப் பகிர்ந்து கொண்டதோர்

மாது சேவடி வணங்கல் செய்திலன்
சீத ரன்முனஞ் செய்த தீமையால்"

"போற்றி நின்றதோர் பூவை வண்ணனை
ஏற்றி னன்றெரிந் தென்கொல் வேண்டிய
சாற்று கென்றனன் ருழ்ந்து நேமியான்
மாற்ற மின்னணம் வருந்துக் கூறுவான்"

"எந்தை யீறிலாத் திருவு மின்பமும்
முந்தை மாநில முழுதுங் காப்பதோர்
அந்த மெய்திடா வரசு மாழியும்
நந்த லில்லதோர் பதமும் நல்கினுய்"

"சிறுவ னில்லதோர் சிறுமை யன்றியே
சிறுமை வேறிலை செங்கை வேலுடைச்
சிறிய பேரெழிற் சேயை நல்கிய
சிறிய வெண்பிறைத் திங்கள் வேணியாய்"

"என்று நாரண னிசைத்து மகப்பே றீங்க ளித்தரு
ளெனத்தொழு தேத்தி
நின்று வேண்டதனு மவ்வர மீந்தா னிலவு லாவுசடை
நின்மல னுங்கு
மன்றல்வேமுனிவு கொண்டெனை யென்னு வலிய தோர்வினையின்
மாயநின் மைந்தன்
பொன்றி யாவிமுடி வெய்துக வென்னுப் புவன மீன்றவள்
புகன்றன ளன்றே"

"புகன்று தன்கண வனைக்கொடு வல்லே போயி னுளுலகு
பூத்தருள் செய்த
வகிர்ந்த திங்கள்புரை வாணுதல் வஞ்சி மருங்கு னங்கைகயி
லாய மருங்கிற்
றிகழ்ந்த பொற்றிகிரி வெள்வளை யேந்துஞ் செங்கை யானரிது
தேடிய செல்வம்
அகன்ற தோர்வறிய னென்ன வெதும்பி யார ஞர்க்கடலி
லாழ்ந்தன னம்மா"

"ஆர ஞர்க்கடலி லாழ்ந்தயர் வெய்தி யச்சு தக்கடவு
ளம்பிகை பொற்ருள்
வாரி சத்துணை வணங்கி வழுத்த மறந்த னம்பழைய
வல்வினை தன்னுற்
பார்மு தற்புவனம் யாவு மளித்த பரம நாயகி
பகர்ந்ததோர் சாபம்

யாரி னிப்பிரிவு செய்பவ ரந்தோ யாது செய்வதென
வெண்ணி யினைந்தான்"

"யாதி மைப்பதினி யென்றுத னுள்ளத் தெண்ணி மற்றவ
ணிலங்குமொர் செம்பொன்
ஆத னத்தினுமை கந்தனொ டெங்க ளாதி நாயகனை
நான்முறை தாபித்
தோது தற்கரிய காதல் விருப்பி னுள்ள நெக்குருகி
யொப்பில் சிறப்பிற்
சீத ரக்கடவு ளெல்லையில் காலந் திருந்து பூசைமுறை
செய்தனன் மாதோ"

"திருந்து பூசனை சிறப்பொடு செய்தே தேவ தாருவன
மேவிய செங்கைப்
பொருந்து நேமிநெடி யோனெதிர் ஞானப் பூவை கந்தனொடு
கூவிளை மத்தை
காந்தை நொச்சியறு கார்சிறு பூளை கடுக்கை வன்னிமதி
கங்கை புனைந்த
விரிந்த வேணிமுடி விண்ணவர் கோமான் வெள்ளி வெள்விடை
யின் மீமிசை வந்தான்"

"வந்ததொர் காலையின் மாமலை வல்லி மலர்ப்பாதம்
முந்து வணங்கி வழுத்தியொ ராறு முகங்கொண்ட
கந்தனை வந்தனை செய்து கனிந்த கருத்தோடு
நந்தி யடித்துணை தாழ்ந்து துதித்தன னந்தன்றான்"

"தாழ்ந்து துதித்ததொர் சங்கரி சங்கரி தனைநோக்கி
ஆழ்ந்த கடற்புவி யன்னை யறத்தி னருட்செல்வி
சூழ்ந்து வழுத்திய யோகர் மனத்திடை தொல்லூழி
வாழ்ந்த விளக்கொளி யென்று பழிச்சி வகுக்கின்றான்."

"வண்ண வருக்க னனற்கதிர் மாமலர் வாசம்போல்
அண்ணனு நீயு மமர்ந்ததொர் தன்மையி னையன்றாள்
உண்ணிறை யன்பின் வணங்கிய தன்றி யுளத்துன்னை
எண்ணில னாகி யிகழ்ந்தில னேமூல கின்றுள்ளாய்"

"தந்தருள் செய்ததொர் சந்ததி யூறு தணந்தாவி
உய்ந்திட நீயருள் செய்தி யெனத்தொழு தோராழி
நந்துட னேந்திய நாரணன் வேண்டலு ஞாலத்தோ
டந்தமில் பேரற முந்தருள் செய்தவ ளருள்செய்வாள்"

"யானு ரைத்ததொர் சாபம தீறுரு"
தானி டத்திலந் தாடுமெம் மண்ணறன்

தீறு தற்கட் படையினின் செம்மருன்
ஊன முற்றுயி ருய்குவ னுண்மையால்'

---

மஹான்களெல்லாம் திருவருட் பராசத்தியை முன்னிட்டே சிவோபாசனை செய்து மிருக்கின்றார்கள்; அவ்வாறு உபாசிக்கு முபாசனையே தங்கட்குக் கைவரவேண்டுமெனப் பிரார்த்தித்து மிருக்கின்றார்கள் ; இதற்குப்பிரமாணம் :—

## திருவாசகம்.

திருக்கோத்தும்பி-18. கோயின் மூத்ததிருப்பதிகம்-1.

"தோலுந் துகிலுங் குழையுஞ் சுருடோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைஞ்கிளியுஞ்
சூலமுந் தொக்க வளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"

"உடையா ளுன்ற னடுவிருக்கு முடையா ணடுவு ணீயிருத்தி
அடியே னடுவு ளிருவீரு மிருப்ப தானா லடியேனுன்
அடியார் நடுவு ளிருக்குமரு ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ண முன்னின்றே"

## பிரபுலிங்கலீலை.

கதலிவனகதி-20.

"இனைய வாழையங் காடுகண் டெங்கண்மா தேவி
முனிவர் வானவர் யாவரு முறைமுறை போற்றத்
தனிய ளாயொரு புறம்பசந் துளசுவை தருசெங்
கனிய வாவிய வுளமொடு மிருந்தனள் களித்து"

## சோணசைலமாலை.

10-55-72.

"கண்புன றுளிப்ப வழற்படு மிழுதிற் கரைந்துகு நெஞ்சினின் றனையே—பெண்பயி லுருவ மொடுநினைந் தெனது பெண்மைய லகற்றுநா ளுளதோ"

"நீலியோ டுனோ டொறுமருச் சித்து நின்றெழில் புரிந்திட வுடற்குக், கூலியோ தனமென்றளிப்பவர்க் கன்றிக் கூற்றினைக் கடக்குமா றெளிதோ"

"அந்தரி குமரி யஞ்சலி கௌரி யம்பிகை மனோன்மணி மதங்கி, சுந்தரி யுமையுண் ணாமுலை யெனநின் றுணைவியை வாழ்த்துமா றருளாய்"

---

இனி, "அண்ட முதலா வவனி பரியந்தங்-கண்டதொன் றில்லை கனங்குழை யல்லது"

எனவருந் திருமந்திர சுருதியை, போக யோக வழியிரண்டினும் பிரவர்த்தித்த இருதிணைப்பகுதியவாய வுயிர்களினுள்ளும் உணவு செய லியக்க முதலியவற்றில் வல்லாரைச் "சக்தர்" எனவும், அல்லாரை "அசக்தர்" எனவு மிவ்வுலகத்திற் கூறுதன் மூலம் அநுபவத்திற் காண்கின்றோ மாதலால், அகண்ட வியாபக சர்வலோக மாதாவாய் நின்று எவரையு மெவற்றையு மியக்குபவள், திருவருட் பராசத்தியேயாம்; அப்பராசத்தியாரது அபாரமகிமையை வரைதல் தேவர் முதலிய எவர்க்கும் அரிதாதலால் இம்மட்டினிறுத்திக்கொண்டு, இனி ஸ்ரீ விநாயகப்பெருமானது மகிமையிற் சிறிது அடியேன் சிற்றறிவிற் கெட்டின வளவில் வரையத் தொடங்குகின்றே னாதலால், அதனையும் அன்புவைத்துப் பார்வையிடக் கோருகின்றேன்; சுபம்.

பராசத்திமகிமைச்சருக்கம்

முற்றிற்று.



# விநாயகமகிமைச் சருக்கம்.

## நூதனச்செய்யுள்.

"அநாதிநித் தியவொளி யாய்விளங் குந்தனை
விநாவொரு நாயக னிலையெனு மெய்ம்மையைத்
தனுதுயோ கப்பெய ராலுணர் தரவொளிர்
விநாயகன் மகிமையை விளம்புது நாமரோ"

திருக்கைலாஸ மலையின்கண்ணே பரமகருணா நிதியாகிய சிவபெருமான் எவ்வுலகத்தினுமுள்ள எவ்வகைப்பட்ட ஆன்ம கோடிகளும் உபாசித்து எவ்வகைப்பட்ட காரியங்களுஞ் சித்திக்கப் பெறும் பொருட்டு ஓர் மூர்த்தி விசேஷத்தைத்தரத் திருவுளங்கொண்டு, பார்ப்பதி தேவியாரோடு சோலைகள் சூழ்ந்த விசித்திர மண்டபத்திற் சென்றுலாவிய பொழுது, அம்மண்டபப் பித்தியிற் பேரழகெறித்திடப் பொறித்திருந்த சித்திர யானைக் கலவியை நோக்கித் தாம் ஆண்யானை வடிவங்கொண்டு நின்று "எத்திற நின்றா னீச னத்திற மவளு நிற்பள்" என்ற சிவஞான சித்தித் திருவிருத்தத்தின் படிக்கும் "எத்திற மிறைவனின்றன னவனுக் கியைதர வத்திற நின்று-மெத்திய வுயிரின் மலவிருள் கெடுத்து விளங்கு பூரணி" என்ற விநாயக புராணத்தின்படிக்கும் ஆங்குத் தங்கருத்தறிந்து பெண்யானை வடிவங்கொண்டு நின்ற எம்பெருமாட்டியோடுங் கூடி, ஸ்ரீ விநாயகப் பெருமானைக் கோடிசூரியப் பிரகாசமாகத் தோற்றுவித்தருளினர்.

இவ்வாறு குணகுணிசம்பந்த சத்தி சிவமயமாய்த் தோன்றியருளிய விநாயகப் பெருமான் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" "தந்தைதாய் பேண்" எனத் தன்பாலன்பினைப் பின்பார்ந்தின்புறும் ஔவைப் பிராட்டி கூறுந் திருவாக்கை உலகவர் துணிந் தொழுகுமாறு ஈன்ற இருமுது குரவரையும் பணிந்து நிற்க, அவர்களும் எடுத்தணைத் துச்சிமோந்து மடித்தலத்திருத்தி மகிழ்ந்தபின் சிவபெருமான் விநாயகரைப் பார்த்து, "நம்மினின்று வேற்றுமையு மடையாமல் நமது குமாரனுயிருக்கும் நின்னை யாவரும் எந்தக் காரியாரம்பத்திலும் வணங்கக் கடவர்; யாவர் வணங்குகின்றார்களோ? அவர்களுக்கு விக்கினங்களை நீக்கி மனோபீஷ்டத்தைக் கொடுப்பாயாக; வணங்காதார்க்கு விக்கினங்களை ஆக்கி மனோபீஷ்டத்தைக் கெடுப்பாயாக; கணங்களுக் கெல்லாம் பதியாய்க் கருணைசெய் தமர்வாயாக; அக்காரணத்தாற் கணபதியென நினக்குப் பெயர் யாவராலு மியம்பப்படுக" வெனத் திருவாய் மலர்ந்தனர். இவற்றிற்குப் பிரமாணம்:—

## தேவாரம்.

### திருவலிவலப்பதிகம்-5.

"பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே"

## விநாயகபுராணம்.

### கணபதி திருவவதாரப்படலம்-35-முதல்-41-வரை.
### திரிபுரதகனப்படலம்-38.

"பித்தி தன்னிடைப் பேரழ கெறித்திடப் பொறித்த
சத்த கோடிமந் திரமவை தமக்கெலா முன்னர்
வைத்த மாமனுப் பிரணவ நோக்கின ளதனில்
அத்தி பெண்ணொடா ண்டோன்றிநின் றாற்றின கலவி"

"எம்பி ரானிது வென்னென வினவின ளிறைவி
தம்பி ரான்கலி யாணினின் சம்பந்த மாகி
நம்பு வையகந் தனக்குப கார மாய் நண்ணும்
பம்பு கின்றதன் கருணையென் றறியெனப் பகர்ந்து"

"கடிவி ராவிய மதம்பொழி களிற்றினை யந்த
அடிக ளேக்கினின் றனருளத் தார்வமோ டம்மை
பிடியை நோக்கினின் றனளவை பேணிய கலவி
முடிவின் மேதகத் தோன்றினர் மெய்விநா யகரே"

"ஊழி யாகிய காலத்தி லுதித்திடு மொற்றை
ஆழி யாதவர் கோடியோர் குழுவிய தனைய
வாழி தேசுரு வயங்கவந் தருள்விநா யகர்தாம்
வீழி வாயுமை யாளொடும் விமலரைப் பணிந்தார்"

"அந்தி வான்மதி மிலைத்தரு ளமலனு மடுக்கல்
வந்த தேவியு முச்சிமோந் தெடுத்தொரு மகனைச்
சந்த வான்மடித் தலத்திடை யிருத்தினர் பின்னர்
எந்தை நாயகர் விநாயகர்க் கிதுமொழி குவரால்"

"என்னின் வேறுமா காமலென் பிள்ளையா யிருக்கும்
நின்னை யாவர்க ணினைந்தடி வணங்குகின் றார்கள்
அன்னர் பாலிடை யூறுக ளனைத்தையு மறுத்து
மன்னு காமங்க ளனைத்தையும் வழங்குக விரைவின்"

"கணங்களுக் கெல்லா முதன்மையாம் பதியாய்க்
கருணைசெய் திடுகவெம் மருளால்
இணங்குமிச் செயலாற் கணபதி யென்ன
யாவரு மியம்புக நின்னை
அணங்கற வெவரு மெந்தக்கா ரியத்து
மன்புடன் முன்னுற நாளும்
வணங்குக யாவ ராயினு நின்னை
வணங்குறார்க் கிடர்களே புரிக"

"யாவ ராயினு நினையிறைஞ் சாதுசெய் கருமம்
யாவ தாயினும் பயமின்றி யிறுகவான் சைவம்
ஓவி லாவயி ணவமிவை யுற்றவர் தாமும்
பாவ காரிக ளாகுக நினைப்பணி யாரேல்"

## கந்தபுராணம்.

கயமுகனுற்பத்திப்படலம்-131-141-முதல்-153-வரை.

“ஆயது கேட்டன னகிலம் யாவையுந்
தாயென வருளுமத் தையல் தன்னொடும்
சேயுயர் விசும்பினைச் செறிதண் சோலையிற்
போயினன் மறைக்கெலாம் பொருள தாயினான்”

“எண்டகு பெருநசை யெய்தி யைம்புலன்
விண்டிட லின்றியே விழியின் பாற்படக்
கண்டனள் கவுரியக் கடிகொண் மண்டபங்
கொண்டிடு மோவியக் கோலம் யாவுமே”

“பாங்கரில் வருவதோர் பரம னாணையால்
ஆங்கத னடுவணி லாதி யாகியே
ஓங்கிய தனியெழுத் தொன்றி ரண்டதாய்த்
தூங்குகைம் மலைகளிற் றோன்றிற் றென்பவே”

“அன்னவை யுமையவள் காண வாங்கவை
முன்னுறு புணர்ச்சியின் முயற்சி செய்தலும்
என்னைகொ லிதுவென வெண்ணித் தன்னொடு
மன்னிய முதல்வனை வணங்கிக் கூறுவாள்”

“மூலமா மெழுத்திவை முயங்கி மால்கரிக்
கோலமாய்ப் புணர்வதென் கூறு கென்றலும்
ஏலவார் கருங்குழ லிறைவி கேளென
ஆலமார் களத்தின னருள்செய் கின்றனன்”

“முன்புநீ காண்டலின் மூலமா யுடையதோர்
மன்பெருந் தொல்பொறி மருவியீ ருருவுநீஇ
அன்பினு லானைபோற் புணருமா லாகையால்
நின்பெருந் தகவினை நினைகிலாய் நீயுமே”

“காட்சியா லிதுசெயுங் காரணம் பெற்றநின்
மாட்சிதான் யாமலான் மற்றியா ருணர்குவார்
ஆட்சியா யுற்றதொல் லருமறைக் காயினுஞ்
சேட்செலா நிற்குநின் றிருவருட் செய்கையே”

“என்னவே முகமனு லெம்பிரா னம்பிகை
தன்னொடே மொழியவத் தந்தியும் பிடியுமாய்த்

துன்னியே புணர்வுறுந் தூயசெய் தொழில்விடா
முன்னமே போன்றதான் முடிவிலாக் குடிலையே "

" அக்கணத் தாயிடை யைங்கரத் தவனருண்
முக்கணுல் வாயினுன் மும்மதத் தாறுபாய்
மைக்கருங் களிறெனு மாமுகத் தவன்மதிச்
செக்கர்வார் சடையினோர் சிறுவன்வந் தருளினுன் "

" ஒருமையா னுணருவோ ருணர்வினுக் குணர்வதாம்
பெருமையா னெங்கணும் பிரிவரும் பெற்றியான்
அருமையா னேவரு மடிதொழுந் தன்மையான்
இருமையா மீசனே யென்னநின் றருளுவான் "

" மருளறப் புகலுநான் மறைகளிற் றிகழுமெய்ப்
பொருளெனப் படுமவன் புவனமுற் றவர்கடம்
இருளறுத் தவர்மனத் திடர்தவிர்த் தருளவோர்
அருளுருத் தனையெடுத் தவ்தரித் துளனவன் "

" வந்துமுன் னிருவர்தம் மலரடித் தலமிசைச்
சிந்தையார் வத்தொடுஞ் சென்னிதாழ்ந் திடுதலும்
தந்தையுந் தாயுமுன் றழுவிமார் புறவணைத்
தந்தமில் கருணைசெய் தருளின ரவ்வழி "

" என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதன்
முன்னரே யுனதுதான் முடியுறப் பணிவரேல்
அன்னர்தஞ் சிந்தைபோ லாக்குதி யலதுனே
உன்னலார் செய்கையை யூறுசெய் திடுதிநீ "

" சேயநன் மலர்மிசைத் திசைமுகன் மான்முத
லாயபண் ணவர்தமக் காருயிர்த் தொகையினுக்
கேயபல் கணவருக் கெத்திறத் தோர்க்குநீ
நாயகம் புரிதியா னல்லருட் டன்மையால் "

## காஞ்சிப் புராணம்.

வலம்புரி விநாயகப்படலம்-6-7-9-10-13-14-15-40.

அநேகதங்காவதப் படலம்-5-6-7-8.

"கொம்மைவெள் விடையினன் சித்திரச் சாலையைக்குறுகி யங்கட்
செம்மைசால் சித்திரம் யாவையு நோக்கினன் றேவி யோடும் "

“ஆனவெல் லாமுமைக் கெம்பிரான் காட்டுபோதவற் றுளாதித்
தானமா றிருவகைப் பிரணவ மனுக்களைத் தையல் கண்டாள்”

“மும்மறை முதலெலா மீன்றிடு மிருமுது குரவரான
இம்மனுக் கரியொடும் பிடியெனத் தோன்றலி னிவைகளாகி
அம்மநாம் புணர்துமென் றவ்வுருக் கொண்டன ராடுகாலைச்
சும்மைமீ ருலகெலா முய்யவந் துதித்தனன் றோன்றலன்றே”

“கயமுகப் பிள்ளையை யிருவருங் காதலா னெடுத்தணைத்து
வயமுற மடித்தலத் திருத்திமெய்க் கலன்பல வணிந்துவாழ்த்த
இயல்புடைப் புதல்வனு முவகையா னெழுந்தெதிர் நடித்தல்
[செய்தான்
நயனமாக் களிகொள நோக்கினு ளுலகெலா மீன்ற நங்கை”

“சிவபிரான் றிருவடி டேகமீ ராட்டினன் மகுடஞ் சேர்த்தான்”

“பிரமனை மாயனைத் தேவரை முனிவரைப் பெட்பினோக்கி
உரனுடை யுமக்கெலா நாயக னிவனிடை யூற்றினுக்கும்
கரவிலா நாயக னாகநாம் வைத்தனங் கண்டுகொண்மின்”

“தீயவத் தானவர்க் கூறிழைப் பானிவ னென்றுசெப்புந்
தூயவன் வாய்மொழி தலைமிசைக் கொண்டனர் துதித்திறைஞ்சி
மாயவன் முதலியோர் கணேசனை வணங்கினர்”

“நல்லோர்க்கும் வானோர்க்கு நண்ணு மிடையூற்றுக்
கில்லாமை நல்க வவதரித்த வெம்மானே
வல்லார் முலையுமையா ளீன்ற மழகளிறே
பொல்லார்க்குந் தானவர்க்கு மூறிழைக்கும் புத்தேளே”

“சுருதி நூன்முறை நிறுவவுந் தூயவர் தொடங்குங்
கரும மூறுதீர்த் தளிப்பவுந் தயித்தியர் கயமைத்
திருவி லார்க்கிடை யூற்றினைச் செய்யவு மிவணீ
வருதல் வேட்டெமை முன்னரே வழுத்தினர் வானோர்”

“ஆத லாற்புறச் சமயநூ லரட்டருக் கென்றுந்
தீது சாலிடை யூற்றினை விளைமதி சிவநூல்
வேத நன்னெறி யொழுகுநர்க் கூறுகள் விரவா
தேத நீத்தருள் புரிதியெம் மாணையின் வலியால்”

“உலகெ லாமுனை வழுத்துக வழிபடா தொழியிற்
கலிகொள் வேதிய ரும்பரா யினுமவர் கருமம்

நிலமி சைப்பய னெய்துரு தழிகநின் னிணைத்தாள்
மலர்வ ழூத்தினோர் பெரும்பய னெய்துக மாதோ"

"மங்க லங்களு மமங்கல மாமுனே வழுத்தார்
தங்க ளுக்கிவை வரமுனக் கருளினந் தக்கோய்"

## திருக்கூவப் புராணம்.

### திரிபுரதகனச் சருக்கம்-109.

"மலைமகளீன்றருள் யானைக்கன்றை வந்தனை செய்கிலார்
முஃபறருங் கருமம் பொன்றிடும்"

## கடம்பவன புராணம்.

### மகா கைலைமான்மியமுரைத்த வத்தியாம்-67.

"பூணிக்கு மாசையின்மாப் பிடியைத் தந்தி
பொருந் துதல்கண் டவ்விறைவ னிறைவி யோடும்
பாணிக்கு மவ்வுருவாய்க் கூடி வேழப்
பனைக்கைமுக விநாயகனை நல்கினனே"

## திருவேற்காட்டுப் புராணம்.

### வலம்புரிச்சருக்கம்-29-30-31.

"இனைய தன்மையா யிருவரும் புணர்ந்தினி திருப்பேம்
வனைம லர்க்குழால் வருதியென் றும்பன்மா முகத்த
தனைநி கர்ப்பரு பிரணவ வுருவமாய்ச் சமைந்தே
அனைய காலையிற் சம்பவித் திருந்தன னதனால்"

"அண்ணல் யானைமா முகத்துட னொருசுத னகிலம்
விண்ணம் பாதலந் துதித்திட வுதித்தனன் விழைந்து
நண்ணு மைந்தனைக் காண்டலு நளினவாண் முகத்து
வண்ண வார்குழ லெடுத்தணி மடியின்மேல் வைத்தாள்"

"குழவி வெண்மதி தவழ்தருங் கொன்றையார் வேணி
அழக னுச்சிமோந் தவிரொளி நவமணி யழுத்தி
எழுதி மேய்ந்தொளிர் பீடிகை மீதில்வைத் தினிதாய்த்
தழுவி யைய்யன்மெய் யெழிலெலாம் பார்த்துளந் தழைத்
[தான்"

சிவபெருமான் றிருவாய் மலர்ந்தபடி, விநாயகக் கடவுளை யுபாசித்தோர் நிர்விக்கினத்தாற் காரியசித்திபெற் றின்புற்றமை யையும், உபாசியாதோர் விக்கினத்தாற் காரியச்சிதைவு பெற்றுத் துன்புற்றமையையும் விநாயக புராண முதலிய புராணசரித்திரங் களா லறியலாம்; ஈண்டு விரிப்பிற் பெருகும்.

எல்லா வுயிர்கட்கும் கடவுளுபாசனையே அறமாதி நாற் பொருளையுந் தருதலால், உபாசித்த பொழுது தவப்பொழுதும், ஒழிந்த பொழுது அவப்பொழுதுமாய் முடியும்; இதனை "பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" எனவருந் தேவாரத்தாலும், "தவமே புரிந்திலன் றண் மல ரிட்டுமுட் டாதிறைஞ்சேன்—அவமே பிறந்த வருவினை யேனுனக் கன்பருள்ளாஞ்—சிவமே பெறுந்திரு வெய்திற்றி லேனின் றிருவடிக்காம்—பவமே யருளுகண் டாயடி யேற்கெம் பரம்பரனே" எனவருந் திருவாசகத்தாலும், "தவஞ் செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்—அவஞ்செய்வா ராசையுட் பட்டு" எனவருந் திருக்குறளாலும் அறியலாம்.

அக்கடவுள், திருக்குறள்-4-ல் "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்—கியாண்டு மிடும்பை யில" எனவும், திரு வாவடுதுறைத் தேவாரம்-9-ல் "வேண்டாமை வேண்டுவது மில்லான் றன்னை விசயனைமுன் னசைவித்த வேடன் றன்னை" எனவும், விநாயகபுராணம் அரசியற்கைப்படலம்-11-ல் "விருப் பொடு வெறுப்பிலாத மிக்க வெண்குணத்தோ டொன்று மிருப் பவன்" எனவும், வாயுசங்கிதை நிட்களசகள சொரூபமுரைத்த வத்தியாயம்-3-ல் "பகையுந் திருத்து முறவு மிலவாகும் * * * * சிவனுக்கு" எனவுங் கூறப்படுதலால் (ராகத்வேஷம்) என்கின்ற விருப்பு வெறுப்புக்களைத் தம்பொருட் டில்லாதவரே யாவர்;

ஆதலால், உபாசித் தோர்க்கு நிர்விக்கினத்தையும், உபாசியா தோர்க்கு விக்கினத்தையும் புரிதல் விருப்பு வெறுப்புப் பற்றி யன்று; வேறென்னை? எனில், உபாசனை யுடைமையாற் காரிய சித்தி பெற்றோர் அதனுயர்வு கண்டு நிஷ்காமியம் பற்றியு முபா சித்து மேற்பதவியை யடைவாராதலால் அவர்க்குச் செய்யும் அவிக்கினத்துவமும், அஃதின்மையாற் காரியச் சிதைவு பெற் றோர் அதனிழிவுகண்டு சித்திபெறு நிமித்த முபாசிக்கத் தொ டங்கி உபாசனைப் பழக்க மேறப்பெறுவ ராதலால் அவர்க்குச் செய்யும் விக்கினத்துவமும் முறையே அறக்கருணை யெனவும் மறக்கருணை யெனவுஞ் சொல்லப்பட்டு இரண்டும், சீவர்களைத் தம்வழிப் படுத்தக் கடவுள் கொண்ட உபாயமயக் கருணைக ளாகவே முடியும்; பஞ்சகிர்த்திய மடங்கலும் அருண்மயமாகும்; உயிர்கட்கு அபகாரச் செயலை யிமைப்பொழுதேனுங் கடவுள் மேற்கொள்ளார். இவற்றிற்குப் பிரமாணம் :—

## விநாயகபுராணம்.

### கடவுள்வாழ்த்து-1.

"புகரில்பொரு ளுன்கினையு மிடர்தீர்ந் தெய்தப்
போற்றுநருக் கறக்கருணை புரிந்தல் லார்க்கு
நிகரின்மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்"

## கந்தபுராணம்.

### மேருப்படலம்-44.

"படர்மதி மிலைச்சுஞ் சென்னிப் பகவனு ருயிர்களெல்லாம்
அடுவது வருத்தந் தீர்க்கு மாரரு ளான வாபோற்
கொடியவெஞ் சூரன்றன்னைக் கொண்டெமக் கலக்கண்செய்கை
விடலரும் பவப்பே ருர்த்தி வீடருள் கருணை யன்றே"

## சிவஞானசித்தியார்.

சுபக்கம்-முதற் சூத்திரம்-37.

"அழிப்பிளைப் பாற்ற லாக்க மவ்வவர் கன்ம மெல்லாங்
கழித்திட னுகரச் செய்தல் காப்பது கன்ம வொப்பிற்
றெழித்திடன் மலங்க ளெல்லாமறைப்பருள் செய்தி தானும்
பழிப்பொழி பந்தம் வீடு பார்த்திடி னருளே யெல்லாம்"

## தாயுமானசுவாமிபாடல்.

ஆகாரபுவனம்-5.

"இமையளவு முபகார மல்லால் வேறொன்
றியக்காநிர்க் குணக்கடலா யிருந்த வொன்றே"

---

கடவுள், தம்மை யுபாசிப்பவர்களுள், பிறர்க்கஹிதமுறுப் பாலதாய வரங்கேட்போர்க்கு அவரது அவாவினளவுகடந்து தவுதலையும், அஃதுறற் பாலதாய வரங்கேட்போர்க்குக் கால வரையறையையும் அவ்வஹிதபரிகாரத்தையு முள்ளீடாயமைத்து அளவோடுதவுதலையும் மேற்கொண்டதானது, பல்லுயிர்கண் மாட்டுவைத்த பெருங்கருணைத் திறத்தாலேயாம்; மேற்கண்ட படி கடவுள் இருவகையா யுதவின ரென்பதைக் கந்தபுராணம் மார்க்கண்டேயப் படலம்-257-ல் "அந்த மில்லதோ ராயுணிற் கியாந்தந்து நல்கினும்" எனவருதலாலும், வரம்பெறு படலம்-27-ல் "மூவராகி மொழிந்திடு நுங்களைத்—தாவிலாதநஞ் சத்தி யொன் றேயலால்—ஏவர் வெல்பவ ரென்று விளம்பிமேல்" என வருதலாலும், தக்கன் றவஞ் செய்படலம்-15-ல் "என்று தக்க னியம்பலு மிங்கிது—நன்று னக்கது நல்கினம் நன்னெறி--நின்றி யென்னில், நிலைக்குமிச் சீரெனு—மன்றுளாடிய வானவன் போயி னுன்" என வருதலாலும், விநாயக புராணம் திரிபுரன்வரம் பெறுபடலம்-22-ல் "கடுக்கைச் சடையா னெருகணையால்—அனைத்து மழிக்கு மஞ்ஞான்றே யழியா முத்தி யுறுவையென—

16

எனைத்துமருளி யேரம்ப னிம்மென் ருங்கு மறைந்தனனால்" என வருதலானும், இராவணன் பூசித்தபடலம்-6-ல் "நெறியிடை வைப்பி னிந்த நின்மலக் குறிபின் வாரா தறியெனவருளி" என வருதலானும், பகோற்கடர் திருவவதாரப்படலம்-27-ல் "வெறிவளர் கொன்றை வேய்ந்த விமலனு ரவரை நோக்கி—நெறியருள் கணேசர் கையா லல்லது நீயி ரென்றும்—மறிவது பெறுத லில்லை மற்றைய வாமுந் தந்தாம்" என வருதலானும், உடுண்டிவிநாயகர் திருவவதாரப்படலம்-27-ல் "பொத்துதே சொளியதாகிப் போகமொடு வரவில்லாநம்—சத்தியே கவுரி பாங்கர் விநாயக ரென்னச் சார்ந்து—வைத்துநின் சிரத்திற் றுளை யடக்குதல் வாய்மை யேனைக்—கொத்துறு வரங்க ளெல்லாங் கொடுத்தனங் கோடி யென்றார்" என வருதலானும், பிந்திய மயூரேசர் திருவவதாரப்படம்-39-ல் "அகிலகா ரணரான விநாயகர்வந் தவதரித்தா லன்றி யுன்னை—இகலினு லுயிர்மடிப்பாரிலையியம்பும் வரங்களெலா மீந்தாம்" என வருதலானும், உபதேசகாண்டம் வாணசுரன் பூசனைச் சருக்கம்-180-ல் "செந்தழற்கணிரு தன்செரு வடக்குவை யெனு—முந்தைநாணிருதனோடிவை மொழிந்த னமியாம்" எனவருதலானும் அறியலாம்.

கடவுள், கடுந்தவஞ் செய்தார்மாட்டுத் தாம் பிரசந்நராகி வரங்கொடுத்த சமயத்தில், அவர்களது அகிர்த்தியப் பிரவர்த்திக்குத் தடைவைத்தன்றிக் கொடுப்பின் அது, உலகத்திலுள்ள பல்லுயிர்கட்கும் பின்பு கேடுவிளைக்க முடிவிற் றமது பஞ்சகிர்த்ய ராஜ்யாதிபத்ய காரியச் சிதைவுமா மென்றெண்ணி, கருமஞ் சிதையாமற்படிக்கு அளவோடு கண்ணோடியிருத்தலை ஈண்டு நோக்கும் போது "கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்—குரிமை யுடைத்திவ் வுலகு" என்னும் அருமைத் திருக்குறள் சிந்திக்கற்பாலதாகும்; "கண்ணோட்டம்" என்பதற்கு, தன்

ளொடு பயின்றார் கூறியனவற்றை மறுக்கமாட்டாமையாகிய தாக்ஷிண்யம் என்பது பொருள்.

விநாயகப்பெருமான், துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனத்தின் பொருட்டாகப் பன்னிரண்டு திருவவதாரங்கொண்டு செய்தருளிய லீலாவைபவங்களும், மற்றைச் சரித்திரங்களும் அநந்தமுள்ளன; அவைகள் ஈண்டுரைப்பிற் பெருகும்; விநாயகபுராணம், விநாயககீதை, கூர்மபுராணம், கந்தபுராணம், காஞ்சிப்புராணம், காசிகாண்டம் முதலிய நூல்களெல்லாமுமே முழங்குமாதலால் அவைகளுட் கண்டறிக.

விநாயகப் பெருமானது திருவுருவ வுண்மைநிலை, பரம ரஹஸியமாயுள்ளதாகும்; அந்த ரஹஸிய தெரிசனம், பன்னூற் பயிற்சிமட்டோ டமைவதன்று; உபாசனை மிகுதியாற் திருவருள் காட்டக் காண்பதாகும்; விநாயக சகஸ்ரநாமத்து ளொன்றாகிய "த்வைமாத்ரே நமஃ" என்பதன் பொருளுணர்ந்தார்க்கு ஒருவாறு தூலமாய் விளங்கும்.

ஸர்வ லோகாதிபதியாய்ச் சிவலோகத்தி லெழுந்தருளியிருக்கும் ஈசுவரனே, எல்லாவுயிர்கட்கும் மும்மைப் பயன்களையும் எளிதிற் றரும்பொருட்டு அக்ரபூசனைக் குரியராய் விநாயகன் என்னும் பெயர்கொண்டவதரித்தனன்; ஆதலால், அந்த ஈசுவரத் திருமேனியின்கண்ணும் இந்த விநாயகத் திருமேனியின்கண்ணும் தங்கிய வஸ்து ஒன்றேயாகும்; அவ்விருமேனியும் சற்று வேறுவதன்றி, ஐந்துமுகம் பத்துக்கை பதினைந்துவிழிகளையுடைமை, சந்திரன் கங்கை பாம்பு வன்னிகொன்றை அறுகு முதலியன சடாபாரத் தணிதல், முத்தொழிற்கு மிறைவனாதல், பூதப்படையோ டுறைதலாதி யெல்லாவற்றாலும் ஒத்து விளங்கும்; "விநாயகன்" என்னுஞ் சொல்லுக்கு, தன்க்கு

மேலொரு தலைவனின்றித் தானே யாவர்க்குந் தலைவனாய்நிற்கும் விசேஷமுடையான் என்பதே பொருளாகும். இவற்றிற்குப் பிரமாணம் :—

## விநாயகபுராணம்.

சிந்தாமணி விநாயகர் திருவவதாரப்படலம்-187.
மகோற்கடர்திருவவதாரப்படலம்-810-முதல்-816-வரை.

"மாகரு மறியா வீசர் விநாயகர் வடிவாய் வந்தார்"

"வென்றியஞ் சிவலோ கத்தின் விளங்குமீச் சுரனே வையத்
தொன்றுமுத் தொழிற்கு மூவ ராகியே யுற்றாற் போல"

"விக்கின முழுது நீக்கி வேண்டிய வரங்க ணல்கி
மக்கள்விண் ணவர்கள் யாரும் வழிபடு தெய்வ மாகி
யெக்கட வுளர்க்கு முன்னர்ப் பூசனை யேற்பா ராகி
மிக்கவ ரின்மை தோன்ற விநாயக ரெனும்பேர் தாங்கி"

"இம்மையு மறுமை வீடு மெளிதினி லருள வேறே
யிம்மொளி யுருவங் கொண்டான் வியாசனே விளம்பு மீசன்
என்னுமத் திருமே னிக்கும் விநாயக னென்ன யாரும்
பன்னுமித் திருமே னிக்கும் பார்த்திடிற் சற்றே வேறு"

"திருவுரு விரண்டன் மாட்டுஞ் சிவணிய வத்து வொன்றே
உருவவை யிரண்டுஞ் சால வொத்தவை யுரைப்பக் கேளாய்
அருள்பொழி வதன மைந்து மையிரு கரமு மூவைங்
திருளறு விழியுந் திங்க ளிலங்குவார் சடையும் பாம்பும்"

"ஆக்குத லளித்தல் போக்க லானமுத் தொழிலு நாளுந்
தாக்கமர் புரிய வல்ல சாரதப் படையு மொய்த்து
மாக்குல முரலுங் கொன்றை வன்னிபா சறுகு மற்றுந்
தேக்கொளி வேணிச் சென்னி சிறப்புற வணியுஞ் சீரும்"

"ஒத்தன கண்டா யந்த வுரு விரண் டினுக்கு மன்ற
வத்துவொன் றாத லாலே மருவிவா ழுலகு மொன்றே
அத்தகு முலகந் தானே யாநந்த பவன மென்றும்
பத்தியி னுணர்ந்தோ ரெல்லாம் பகர்நிச லோக மென்றும்"

"வளர்சிவ லோக மென்றும் வழங்கிய ததனுன் முத்தி
வளமருள் கணேசர் வைகும் வைப்புமவ் வுலகே யாகும்

தளர்வற வவர்பா லன்பு தழைத்தமெய் யடியார் தாமும்
உளமகிழ் சிறப்ப வெய்து முலகமு மதுவே யாமால்"

---

அகரவுயிரே, ஆகார வுயிராய் நீண்டு வஸ்து வேற்றுமை யின்றி எல்லாவகையாலும் பெரும்பாலு மொத்து வரிவடிவு ஒலிவடி வின்மட்டும் சற்று வேற்றுமை காட்டி நின்றாற்போல, பராசக்திஸஹிதசிவமே, விநாயகப்பெருமானாய்க் காக்ஷிதந்து வஸ்து வேற்றுமை யின்றி எல்லாவகை யாலும் பெரும்பாலு மொத்து நாமரூபத்தின் மட்டும் சற்று வேற்றுமை காட்டி நிற்கின்ற படியாலும், மூலமாகிய சத்திசிவ வஸ்துவின் மகிமையே இவ்விநாயகப் பெருமானுக்குஞ் சாரத்தக்கனவாய் அபாரமாதலாலும் விநாயக மஹிமையை இவ்வளவினிறுத்துகின்றேன்.

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

இனி, இத்தேவிகோட்டையின்கண் ணுள்ள நமது-தி—வகைப்பிள்ளையார்கோயில் வரலாற்றை அடுத்த சருக்கமாக வைத்துக் கூறுகின்றே னாதலால், அதனைத் தயவுசெய்து பார்வையிடக் கோருகின்றேன். சுபம்.

விநாயகமகிமைச்சருக்கம்

முற்றிற்று.



தேவகோட்டையின் கண்ணுள்ள

# தி-வகைப்பிள்ளையார் கோயில்

## வரலாற்றுச் சருக்கம்.

நூதனச்செய்யுள்.

* சுகப்பிள்ளை பயில்சோலை சூழ்தேவை நகரத்தார்
உகப்புள்ள மணமாதிக் கநுஞ்ஞைபெற வுபயவகை
நகைப்பிள்ளைக் கிட்டுவந்து நனிவணங்கு † தளிதிரு
வகைப்பிள்ளை யார்கோயில் வரலாற்றை மகிழ்ந்துரைப்பாம்.

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

திருவுங் கல்வியுஞ் சிருந்தழைத்தோங்கும் பாண்டிவள நாட்டின் கண்ணே, தேவகோட்டை மாநகரத்திலே, நாட்டுக் கோட்டையா ரென்னுந் தநவைசியர் குலத்திலே, ஒன்பான் கோயிலுன் முன்பாகச் சொலும் இளையாற்றக் குடிக்கோயிற் பெருமரபூர் வகுப்பிலே, உத்தேசம் கலியுகாதி வருஷம் (சதுளா அ௰அ)ல் தேனப்ப செட்டியா ரென்பவ ரொருவ ரிருந்தனர்.

அவருக்குப் பூருவ புண்ணிய விசேஷத்தால் ஒருபுத்திரர் பிறந்தனர்; அச் செட்டியார், தாம்பெற்ற அப்புத்திரருக்குச் சிவபக்த வாஞ்சையினுல் அறுபத்து மூவருள் ளொருவ ரென்னுங் கண்ணப்ப நாயனருடைய பூர்வயோக நாம மாகிய "திண்ணனர்" என்ற பெயரையே பெயராக வைத்தழைத்து வளர்த்து வந்தனர்.

---

* சுகப்பிள்ளை—கிளிப்பிள்ளை. உகப்பு—விருப்பம். உபயவகைநகை—சுவர்நாபரணமும் ரத்நாபரணமுமென்க. † தளி—கோயில்.

சிவபத்தியடியார் பத்திகளிற் சிறந்துள்ளோர், சிவபெருமான் பெயரையும் அடியவர் பெயரையும் தமது புத்திரர்களுக்கு வைத்தழைப்பது வழக்கமாம்; வழக்கமாதலே, கிருஷ்ட்ண பகவான் தமது புத்திரருக்குச் "சாம்பன்" என்னுஞ் சிவநாமத்தை வைத்தழைத்தமையாலும், அப்பூதியடிகணாயனர் தமது புத்திரர்களுக்குத் "திருநாவுக்கரசு" என்னும் பக்தநாமத்தை வைத்தழைத்தமையாலும் அறியலாம்; இவற்றிற்குப் பிரமாணம்:—

## வாயுசங்கிதை.

கண்ணன் சிவதீக்ஷைபெற்றவத்தியாயம்-12-13.

"பொன்னணி மணிப்பூண் மாயன் புதல்வனை மகிழ்ந்து நோக்கி
மின்னொளிர் மணியும் பொன்னும் வேதியர் வெறுப்ப வீந்தான்"

"அம்பையோ டுறைவோன் றந்த புதல்வனங் காத லாலே
தும்பற வுணர்ந்து சாம்ப னெனப்பெயர் துலங்கக் கூறி
வம்புலாங் கூந்தற்சாம்ப வதியெனு மாதி னோடும்
உம்பரு முவப்ப நாளு முண்மகிழ்ந் துறைந்தா னன்றே"

## திருநெல்வேலிப்புராணம்.

கிருட்டினனுக்குப் புத்திரனுதவிய சருக்கம்-31.

"ஈன்றவப் புதல்வன் பேருஞ் சாம்பனென் றெவருஞ் சொல்ல
ஆன்றதன் றாதைபோல வறிவுறு பெருமை பெற்றான்"

## திருவெற்றியூர்ப்புராணம்.

திருமால்வழிபடுபடலம்-207.

"துனைவிற்று வரைப்பதி துன்னுபுமால்
இனைவற்றன னீன்ற மகாருளொரு
தனையற்குரி மைப்பெயர் சாம்பனெனப்
புனைவித்து நிவந்து பொலிந்தனனே"

## பெரியபுராணம்.

அப்பூதியடிகணாயனர்-2.

"வளமிகு மனையின் வாழ்க்கை நிலையினார் மனைப்பாலுள்ள
அளவைக ணிறைகோன்மக்க ளாவொடு மேதி மற்றும்
உளவெலா மரசினாமஞ் சாற்றுமவ் வொழுக லாற்றார்"

---

கண்ணப்ப நாயனருக்கு அவரது தந்தையார், இளமைப்பருவத்திற் றின்னென் றிருந்த காரணம் பற்றித் திண்ணனென்ற பெயர்வைத் தழைத்துள்ளார்; அதனை, பெரியபுராணம் கண்ணப்பநாயனர்-17-ல் "அண்ணலைக்கையி லேந்தற் கருமையா லுரிமைப் பேருந்—திண்ணனென் றியம்பு மென்னத் திண்சிலை வேடரார்த்தார்" எனவும், 29-ல் "வேடர்தங் கோமா னுகன் வென்றிவே ளருளாற்பெற்ற—சேடரின் மிக்க செய்கைத் திண்ணன்" எனவும், 46-ல் "மெய்த்த விறற் றிண்ணனை" எனவும், 54-ல் "சிந்தைபரங் கொள நின்ற திண்ணனர்" எனவும், 56-ல் "செங்கண்வயக் கோளரியே றன்ன திண்மைத் திண்ணனர்" எனவும், முந்திய திருக்காளத்திப் புராணம் கண்ணப்பச்சருக்கம், 24-ல் "வாங்கு சிலை மறவர்கோன் மணிமகனைத் தடக்கையாற்—றூங்குபுதின் னென்றிருந்த தன்மையாற் றிண்ணனெனத் தேங்கியபே ருவகையொடுந் திருநாமஞ் சாத்தினன்" எனவும், பிந்திய திருக்காளத்திப்புராணம் கண்ணப்பர் சிவகோசரியார் முத்தியடைந்த வத்தியாயம், 9-ல் "திண்ணனென் றினிய நாமஞ் சிறுவனுக் களித்து" எனவும் வருவனவற்றாலறியலாம்.

தந்தையாராகிய தேனப்ப செட்டியார், தமது மைந்தராகிய திண்ணப்ப செட்டியாருக்கு அவ்வவற்றிற்குரிய பருவகாலத்திலே கல்வி பயிற்றுவித்தும் விவாகமியற்றுவித்தும் உடைமையுரிமைகளைக் கொடுத்துஞ் சிவபத மடைந்தனர்.

மைந்தராகிய திண்ணப்ப செட்டியாரும், இல்லறத்திருந்து உயிர்கண்மாட் டிரக்கமும் ஈகையும் அமையப்பெற்றுப் பெருங் கீர்த்தி யுடையவராய் விளங்கிவந்தனர்; அவ்வாறு விளங்கி வந்தன ரென்பதனை, தங்குலத்திற் பின்சந்ததியாய் வந்து பிறந்தோரனைவரையும் "திண்ணப்ப செட்டியார் வகையார்" "தி-வகையார்" என்று தம்முடைய பெயரால்

நாட்டார் நகரத்தா ரனைவரும் இற்றைக்குங் கூறிவரப்பெறும் நிகழ்ச்சியா லறியலாம்; தங்குலத்தவ ரனைவரையுந் தம்பெயரா லுலகவர் வழங்கத்தாம் குலமுதல்வராய் வழங்கப்பட்டு வருதல் அவர் தமக்கோர் பெருங்கீர்த்தி யென்பதனை, சந்திர வம்சத் திற் றோன்றிய குருச்சக்ர வர்த்தியானவர் அவரது குலத்திற் றோன்றிய சந்தனு வீடுமர் பாண்டவர் துரியோதநாதி நூற்றுவர் முதலிய ராஜாக்க ளனைவரையும் குருகுலத்தவ ரென்று சொல் லும்படி பெருங் கீர்த்தி பெற்றன ரென்னும் பொருளமையப் பாரதம் குருகுலச்சருக்கம், 32-ல் " வருகு லத்தவ ரெவரையும் வரிசையா லின்றுங்—குருகு லத்தவ ரெனும்படி பேரிசை கொண்டோன் " எனக்கூறப்படு மாற்றாலறியலாம்.

இத் திண்ணப்ப செட்டியார் இல்லறத்தி லிருந்துவருங் காலத்தில் இந்நாட்டிற் சிலநாள் அநாவிருஷ்டியாற் பஞ்சம் ஏற்பட்டு உணவின் குறைவா லுயிர்கள் சோர்ந்தன; அச் சோர் வையறிந்து தமது மனைத்தொழில் புரிவோர் உலரப்பரப்பியிரு ந்த தம்முடைய "செம்பொன் வண்ணப் புழுக்கல்" * நெல்லைப் பல நாட்டுச் சனங்களையும் உண்ண மொண்டு போம்படி கை காட்டியுதவினர்; உதவவே, அதனைக் கொண்டுபோ யுண்டு பசி யாறி அச்சனங்கள் திருப்தியுற்றன; இந்நன்றி, சிறிதாயிருப் பினும் காரணமின்றிக் காலத்தினாற் பயன்றூக்காது செய்தமை யாற் பெரிதாயிற்று; பெரிதாயிற் றென்பதனை, திருக்குறள்-101, 102, 103-ல் "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்—வானகமு மாற்றலரிது" எனவும், "காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு—ஞாலத்தின் மாணப் பெரிது" எனவும், "பயன் றூக்கார் செய்தவுதவி நயன்றூக்கி—னன்மை கடலிற் பெரிது" எனவும் கூறப்படுமாற்றா லறியலாம்;

நமது நாட்டா ரனைவரும் கர்ண பரம்பரையிற் றேர்ந்து இன்றைக்கும் இந்நன்றியை மறவாது பாராட்டி வருகின்றனர்;

* திருவிளையாடற்புராணம் நாட்டுப்படலம்-32.

பாராட்டி வருதலால், மேற்கூறிய நமது நாட்டாரனைவரும், செய்ந்நன்றி மறவாதாரும் பயன்றெரிவாரு மாயினர்; நன்றி மறவாமையும் பயன்றெரிதலும் தக்கார்க்கு முக்கிய மென்பதனை, ஆத்திசூடியில் "நன்றி மறவேல்" எனவும், திருக்குறள் 104-ல் "தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்—கொள்வர் பயன்றெரி வார்" எனவுங் கூறப்படுமாற்று லறியலாம்;

இனி, அன்னத்திற்கு நெல் உபாதான காரணமாதலாற் காரணகாரிய ஒற்றுமை பற்றி, செட்டியார் கொடுத்த நெற்கொடையும் அன்னக்கொடை யென்றே கொள்ளப்படும்; தானியத்துக்கு "ஜீவஸாதநம்" என்னும் பெயருமுண்டு; பலவகைப்பட்ட தானங்களெல்லாமும், அந்நதானத்துக்குச் சமமாகா; எல்லாவற்றுள்ளும் அந்நதானமே உயர்ந்த தென்பதைக் கீழ்க்காட்டுதும்;

உலகத்தில் ஆன்மாக்களெல்லாம் ஆநந்தமயகோசம், விக்ஞாநமயகோசம், மநோமயகோசம், பிராணமயகோசம், அந்நமயகோசம் என்று சொல்லப்படுகின்ற பஞ்சகோசங்களால் வசிப்புண்டு நிற்பனவாகும்; அவ்வாறு நிற்பதில், ஏனைய நான்கும் சூக்கும முறையிற் பிற்பட அந்நமயத்தை முற்பற்றிச் செல்லுதலால், ஆன்மாக்கட்கு முக்கிய பதார்த்தம் அன்னமேயாம்; கோசமைந்தனுள், அந்நமயத்தை ஆன்மா முற்பற்றிச் செல்லுமென்பதற்குப் பிரமாணம் :——

## சிவஞானசித்தியார்.

### சுபக்கம்-நான்காஞ்சூத்திரம்-23.

"மருவா னந்தம் விஞ்ஞான மனோபி ராண னன்னமயம்
உருவாந் தன்மை யுண்டாய்மு னொன்றுக் கொன்று சூக்குமமாய்

வருமா மன்ன மயம்பற்றி மாயை முதற்கா ரணமாகும் [மாம்"
அருவா யான்மா வைங்கோசத் தார்ப்புண் டவற்றி னகம்புற

———

இனி, சைசவ பால்ய யவ்வந கௌமார விர்த்தாப்ய பருவ மாநுடரனைவர்க்கும் தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீ ரென்னும் ஸப்த தாதுக்களை விர்த்தி பண்ணிச் சரீரதிடத்தைக் கொடுத்து உயிர்வாழச் செய்வது அன்னமாதலால், அன்னதானஞ் செய்தோரே ஜீவதானஞ் செய்தவராவர்; பசித்தார்க்குப் பசியைப் போக்கித் திருப்தி செய்ய வேண்டுமானால் அந்தக் க்ரியம், அன்னத்தினாலாகுமே யன்றி மண்பெண்பொன்னாதி யேனைய பதார்த்தங்களான் முடிவடைய மாட்டாது; அன்னத்தால் வளர்ந்த சரீரத்திற் றங்கி அனைவரும் தர்மார்த்தகாம்யமோக்ஷங்களை ஆர்ச்சித்தலால், அச் சதுர் வித புருஷார்த்தங்களையுந்தருவோர் அந்நதாதாக்களே யாவர்; அருந்தவர்க் கன்னமருத்தினோர் அவரது தபோபலத் திற் பாதிபெறுவர்; அந்நதானஞ் செய்தவர் இம்மைமறுமை வீடென்னுமும்மைப் பலன்களையும் மடைவர்; அவருடைய கீர்த்தி திரிலோகங்களிலும் பரவிநிற்கும்; பஞ்சயக்ஞங்களுக்கும் இன்றியமையாதது அன்னமேயாம்; பிரம விஷ்ட்ணு ருத்ரமயம் அன்னமென்று வேதங்கள் கூறுகின்றன; ஸ்தல வாஸபலம், மூர்த்தி தரிசநபலம், தீர்த்த ஸ்நாநபலம், வேதாகம படநபலம், யாகபலம், பூஜாபலம், த்யாந நிஷ்டாபலம், சரியாபலம், கிரியா பலம், யோகபலம், ஞாநபலமாதி ஸமஸ்த பலங்களும் அந்நதானத்தாற் சித்திக்கும்; கோடிக்கணக்கான கோதானம், பூதானம், கெஜதானம், துரகதானம், சுவர்நதானம், ரஜிததானம், கந்நிகாதானமாதிகளும் அந்நதானத்துக்கு ஸமமாகமாட்டா; அந்நதானத்துக்குச் சமானமான தானம் முன்னு மில்லைப் பின்னுமில்லை; ஆதலால் எல்லாத்தானங்க ளுள்ளும் அந்நதானமே உயர்ந்ததாகும். இவற்றிற்குப் பிரமாணம்:——

## அந்நதாந மகிமை

## பாரதம்.

அந்நதாநப்ரசம்ஸாசுலோகம்.

"அந்நேந ஸந்ததிஸ்ஸந்தாநம் நபூதம் நபவிஷ்யதி ।
தஸ்மாதந்நம் விசேஷேண தாதுமிச்சந்தி மாநவா: ॥

"யோதத்யாத பரிக்லிஷ்ட மந்நமத்வநி வர்த்ததே ।
ச்ராந்தாயா த்ருஷ்டபூர்வாய ஸமஹத்தர்ம மாப்நுயாத் ॥

"பித்ரூந்தேவாந் ரிஷீநாப்ராநதிதீம்ச்ச ஜநாதிப ।
யோநரஃ ப்ரீணயத்யந்நை: தஸ்யபுண்ய பலம்மஹத் ॥

"தத்தாந்நம் நரேணலோகே யதாஸ்நாந நந்தரம் ।
நித்யம் சிஷ்டாந்நதாயீ ச ஸ்வர்கே வஸதி ஸத்க்ருத: ॥

"அந்நதஸ்ய தந்துஷ்டஸ்ய வர்த்ததே ஜ: யசாம்ஸி ச ।
கீர்த்திஸ்ச வர்த்ததே சஸ்வத் ஸ்ரேஷ்டலோகேஷு வாயிச ॥

"அந்நம் ஹி தத்வா விதயே ப்ராஹ்மணாய யதாவிதி ।
ப்ரதாதா ஸர்வகாமாநவாப்நோதி தைவதைஸ்சாபி பூஜ்யதே ॥

"அந்நமேவ ப்ரசம்ஸந்தி தேவா ரிஷிகணாஸ்ததா ।
லோகதந்த்ரம் ஹி ஸஞ்ஜ்ஞாஸ்ச ஸர்வமந்நே ப்ரதிஷ்டிதம் ॥

[தமிழில்]

" அந்நேந ஸதிருசந்தாநம் நபூதம் நபவிஷ்யதி ।
தஸ்மாதந்நம் விசேஷேண தாதுமிச்சந்தி மாநவா: ॥

" யோதத்யாத பரிக்லிஷ்ட மந்நமத்வநி வர்த்ததே ।
ச்ராந்தாயா த்ருஷ்டபூர்வாய ஸமஹத்தர்ம மாப்நுயாத் ॥

" பித்ரூந்தேவாந் ரிஷீநாப்ரா நதிதீம்ச்ச ஜநாதிப
யோநரஃ ப்ரீணயத்யந்நை: தஸ்யபுண்ய பலம்மஹத் ॥

" தத்வாத்வந்நம் நரோலோகே யதாஸ்தாந மநுத்தமம் ।
நித்யமிஷ்டாந்ந தாயீது ஸ்வர்க்கேவஸதிஸத்க்ருதஃ ॥

" அந்நதஸ்ய மநுஷ்யஸ்ய பலமோஜஃ யசாம்ஸிச ।
கீர்த்திச்ச வர்த்ததேசச்வத் த்ரிஷுலோகேஷு பார்த்திவ ॥

" அந்நம்ஹி தத்வாதிதயே ப்ராம்ஹணாய யதாவிதி ।
ப்ரதாதா சுகமாப்நோதி தைவதைச்சாபி பூஜ்யதே ॥

" அந்நமேவ ப்ரசம்ஸந்தி தேவாரிஷி கணாஸ்ததா ।
லோகதந்த்ரம்ஹி ஸம்ஞாச்ச ஸர்வமந்நே ப்ரதிஷ்டிதம் ॥

## நீதிசாஸ்திர சுலோகம்.

𑌗𑌜𑌤𑍁𑌰𑌗 𑌸𑌹𑌸𑍍𑌰𑌂 𑌗𑍋𑌕𑍁𑌲𑌂 𑌕𑍋𑌟𑌿𑌦𑌾𑌨𑌂
𑌕𑌨𑌕𑌰𑌜𑌿𑌤 𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌮𑍇𑌦𑌿𑌨𑍀 𑌸𑌾𑌗𑌰𑌾𑌨𑍍𑌤𑌂 ।
𑌉𑌭𑌯𑌕𑍁𑌲 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌕𑍋𑌟𑌿𑌕𑌨𑍍𑌯𑌾 𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑌂
𑌨𑌹𑌿𑌨𑌹𑌿 𑌬𑌹𑍁𑌦𑌾𑌨𑌂 𑌅𑌨𑍍𑌨𑌦𑌾𑌨 𑌸𑌮𑌾𑌨𑌃 ॥

[தமிழில்]

" கெஜதுரக ஸகஸ்ரங் கோகுலங் கோடிதாநம்
கநகரஜித பாத்ரம் மேதிநீ ஸாகராந்தம்
உபயகுல விசுத்தங் கோடிகந்யா ப்ரதாநம்
நஹிநஹி பெகுதாநம் அந்நதாநஸ் ஸமாநஃ ॥ "

## சிவதருமோத்தரம்.

சுவர்க்க நாகவியல்-26-முதல்-33-வரை.

" அன்ன தான மறைந்தவற்று ளதிக பலமே யருந்தினனுக்
கின்னல் கெடுக்கு மப்பொழுதே யின்பந்தனையு மிசைவிக்கும்
மன்னு முடலுள் வலியதனுன் மாறில் பொருளே யஃததனல்
என்னிலுவமை யிதற்கில்லை மண்ணின் கண்ணே வெவ்விடத்தும்"

" அன்ன மதனி லாமுதிர மதனாற் றசையா மதனலே
மன்னு மலின சுக்கிலமு மலின மதனாற் கருவாகும்

அன்ன மின்றே ளுயிர்வாழு மாக்கை யகல விரைந்தகலும்
அன்ன மதுவே யுடறன்னை யாக்கு நிறுத்து மழித்திடுமே"

"உற்ருன் பசியைக் கனகத்தா லொளிசேர் மணியா லொன் டொடியால்—மற்று முளநல் வளனு மாற்ற வலனே வலன் வயினுட்—கெர்ப்பந் தனக்கும் பாலனுக்குங் கிளர்ந்த தருணன் றனக்குமுடல்—ஒற்க முடைய விருத்தனுக்கு முண்டோ நிலை யோதனமொழித்தே"

"தேவர் முனிவர் தானவருங் கிளைப்ப ருணவைத் திதிவிரும்பி
யாவ ருணவை விரும்பாதா ரிடர்சே ருடலுண் முந்நூற்றெட் [க்
டோவா நோயுண் டவற்றுள்ளும் பசிநோய் கொடிய தாறினதனு
காவா வென்றே யருளாள னருத்து மருந்தோ தனமன்றே"

"உற்ற பசிநோய்க் கனமருந்தை யுதவு வாரு மிலராகில்
அற்ற துயிரு மவ்வுடலுக் கன்ன மளிப்பா ரவருண்டேற்
பெற்ற துயிரு மவ்வுடலம் பெறுமவ் வுயிருந் தருமாதி
சொற்றை யிவாணுயிரீவாற் றரும முதலுந் துயக்கறவே"

"பொன்னை மணியைப் புனையிழையை மற்றும் விரும்பும் பொருளினையும்—அன்ன மளிப்பா ரீங்கடைவ ரங்குந் தாம் வேண் டியவடைவர்—அன்ன மதனை யருந்தவரை யருத்தி ஞர்க ளவர்பலத்திற்—றுன்னு வார்க ளொருபாதி யவர்தா மொருபாற் றுன்னுவரே"

"அன்ன மாக்கை தனையாக்கு மதனு லறமுன் னுளவாகும்
அன்ன மதனு லனைத்தினுக்கு மதிக கரண மதனலே
அன்ன மதனுக் கொப்பான கரண மில்லை யாயுங்கால்
அன்னை யான காரணமும் புதல்வர்க் குளதோ வகலிடத்தே"

"அன்ன மதனை யுலகனைத்து மாக்கு மயனென் றறையுமறை
மன்னு முலகந் தனைக்காக்கு மாய னெனவு மதித்துரைக்கும்
சொன்ன வுலக மனைத்தினையுந் துடைக்குமரனு மெனச்சொல்லும்
இன்ன முறையா லெவற்றினுக்கு மிஃதே முதலென் றெண்ணு
[கவே"

## திருக்காளத்திப் புராணம்.

தானமகிமையுரைத்தவத்தியாயம்-15.

"தானமிங் கெவற்றுளு மன்ன தானமே
மேன்மைய ததனையீண் டிழைத்த வித்தகன்

வானவர் வளநகர் வாழ்வெஞ் ஞான்றினும்
ஆனவ னவன்பெறு மின்ப மார்சொல்வார் "

## கடம்பவன புராணம்.

துன்மநன்முதலான வேடர்முத்தியடைந்தவத்தியாயம்-22-23.

"அன்னதா னத்தை நிகரென வியம்ப வரும்பெருந் தானமு மில்லை—அன்னதா னத்துக் கிணையதாய்ப் புகல வரியமா தவங் களு மில்லை—அன்னதா னத்தை யொப்புற வுரைக்க வரியதாந் தருமமு மில்லை—அன்னதா னம்போ லறம்பொரு ளின்பம் வீடிவை யுதவுவ தியாதே"

"அன்னதா னந்தீர்த் தந்தல மூர்த்தி யருமறை வேள்வியா கமங்கள்—அன்னதா னம்பூ சனைசெபந் தியான நிட்டையட் டாங்கமா யோகம்—அன்னதா னந்தின் சரியைநற் கிரியை யோகமெய்ஞ் ஞானமுமாகும்—அன்னதா னத்தி னன்றியீங் குரைத்த யாவையும் பயன்படா வன்றே"

## திருவிளையாடற்புராணம்.

மூர்த்தி விசேடப்படலம்-8.

"அருட்படு தானந்தம்முள் விழுமிதா மன்ன தானம்"

---

இவ்வித அன்னதானுதியாலான பிரபலத்துடனும் விளங்கி வந்த திண்ணப்பசெட்டியா ரென்பவர், ஸ்ரீ விநாயகப் பெருமா னுடைய மகிமையை, அவனது சகஸ்ர நாமத்து ளொன்றாகிய "பகவத்பத்தி சொலபன்" என்னும் பெயர்ப் பொருளாலும், விநாயக புராணம் வியாச ருபதேசம் பெற்ற படலம்-10-ல் "கண பதி பூசை யாற்றுங் காதலர் தம்மைக் கண்டோர்—குணமெடுத் துரைப்போர் பண்பிற் கூடுவோ ருவப்போ ரெல்லாம்—அணவுறு மும்மைப் பேறு மடைகுவர்" எனவருமாற்றாலு முணர்ந்தவ ராதலால் இத்தேவகோட்டையின் கண்ணே தீர்த்த தடாகமுந் தொட்டு அதனருகே அப்பெருமானுக்கு ஆலயமொன் றியற்றி அதிற் பிரதிஷ்டை செய்து ஆராதித்து வரச் செய்வதில் அதி விருப்ப முடையவராய்த் திருப்பணி செய்யத் தொடங்கினர்; எவரும் எக்காரியாரம்பத்திலும் வழிபடத்தக்க விநாயகப்

பெருமானைத் தாமும் எடுத்த திருப்பணி யினிது முடித்தற் பொருட்டுத் தச்சுச் செய்யுங் காலத்தில் வழிபட்டார்; வழிபடப் புகுந்தவர், நாளிகேராதி இதர நைவேதனங்களுடன் விநாயகர் விளாம்பழத்திற் பிரிய ரென்பதைக் கீழ்க்காட்டும் பிரமாணங்களாலுணர்ந்து விளாம் பழங்களைச் சும்மை சும்மையாக நிரம்பக் கொண்டுவரச் செய்து நிவேதிப்பித்துப் பிரார்த்தித்துக் கொண்டு பணியை ஆரம்பித்தனர். விநாயகர் விளாம்பழப்பிரிய ரென்பதற்குப் பிரமாணம் :——

### விநாயகஸ்தோத்திரசுலோகம்.

"𑌗𑌜𑌾𑌨𑌨𑌂 𑌭𑍂𑌤 𑌗𑌣𑌾𑌦𑌿 𑌸𑍇𑌵𑌿𑌤𑌂
𑌕𑌪𑌿𑌤𑍍𑌥 𑌜𑌂𑌬𑍂 𑌫𑌲𑌸𑌾𑌰 𑌭𑌕𑍍𑌷𑌿𑌤𑌂
𑌉𑌮𑌾𑌸𑍁𑌤𑌂 𑌶𑍋𑌕 𑌵𑌿𑌨𑌾𑌶 𑌕𑌾𑌰𑌣𑌂
𑌨𑌮𑌾𑌮𑌿 𑌵𑌿𑌘𑍍𑌨𑍇𑌶𑍍𑌵𑌰 𑌪𑌾𑌦 𑌪𑌂𑌕𑌜𑌂 ।"

[தமிழில்]

"கெஜாநநம் பூத கணாதி ஸேவிதம்
கபித்த ஜம்பூ பலஸார பக்ஷிதம்
உமாசுதம் சோக விநாச காரணம்
நமாமி விக்நேச்வர பாத பங்கஜம்"

### விநாயகப்ரதிஷ்டாவிதி சுலோகம்.

𑌕𑌪𑌿𑌤𑍍𑌥 𑌕𑌦𑌲𑍀𑌚𑍂𑌤 𑌪𑌨𑌸𑍇𑌕𑍍𑌷𑍁𑌕 𑌮𑍋𑌦𑌕𑌂
𑌬𑌾𑌲𑌸𑍂𑌰𑍍𑌯 𑌪𑍍𑌰𑌭𑌾𑌕𑌾𑌰𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌬𑌾𑌲𑌗𑌣𑌾𑌧𑌿𑌪𑌂 ।

[தமிழில்]

"கபித்த கதளீசூத பநஸேக்ஷுக மோதகம்
பாலசூர்ய ப்ரபாகாரம் வந்தே பாலகணாதிபம்"

விநாயகருக்குப் பிரியபதார்த்தம் விளாம் பழமென்பதை யுணர்ந்த பலரும், செட்டியார் செய்கையை வியந்தனர்; அதனை யுணராத சிலர், அக்காலத்தில் இந்நாட்டில் தேங்காயதிகமாய்

விளைவில்லைபோலுமென வுரைப்பாராயினர்; இவ்வாறுரைப்போர் இவ்வுரையால் இந்நாட்டிற்கு, திருக்குறள்-732-ல் "பெரும் பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா—லாற்ற விளைவது நாடு" எனவும், 739-ல் "நாடென்ப நாடா வளத்தன நாடல்ல—நாட வளந்தரு நாடு" எனவும் வருமாற்றால் விதித்த நாட்டின் பொது விலக்கணக் குறைவு நேர்வதோடு, தென்னஞ்சோலைகளின் மிகுதியாலுந் தென்னாடெனப்பெயர்பெற்ற திந்நாடென்னும் பொருளமையத் திருவெற்றியூர்ப்புராணம் நாட்டுப்படலம் 92-ல் "அவாசிமா கிரத்தின் கண்ண தழகிது தெங்கின் மல்லற்—றுவாமதி மருமா னுய வுசிதனுக் குரிமைத் தென்னுந்—தவா தவிப் பொருளனைத்துந் தகவொரு நாமஞ் சான்றோர்—சிவாகர மாமி தற்குத் தென்னாடென் றிட்டார் போலும்" எனக் கூறியுள்ள சிறப்பிலக்கணக்குறைவு நேர்வதனையும் உய்த்துணர்ந்திலர்போலும்; தென்னாடு என்பதற்குத் தென்னஞ் சோலைகளின் வளப்பத்தையுடைய நாடென்பது மொருபொருளாதலை, மேற்காட்டிய செய்யுளில் "தெங்கின்மல்லற்று" எனவருமாற்றா லறியலாம்.

திண்ணப்ப செட்டியார் தாம் தொடங்கிய தடாகத்தோடு ஆலயத்திருப்பணியும் முற்றுப் பெற்றவுடன் அவ்வாலயத்தில் விநாயகப் பெருமானை "ஸ்ரீகைலாஸ விநாயகர்" என்னுந் திருநாமம் வைத்துப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகமும் நடத்தி ஆதிசைவ சிவாசாரிய ரென்னுங் குருக்கண் மாரிடம் தினமொருகாலம் அன்னங் கொண்டுவந்து நைவேதனஞ் செய்து பூசித்துப் போம்படி சொல்லி, அதற்கு நெல் திட்டம் ஏற்படுத்தி வருஷப்பிரதி வருஷமும் குருக்கண்மாரிடங் கொடுத்து, நித்திய பூசையை நடத்திவந்தனர்; அதுபோல் தினமொரு கால பூசையாக வெகுகாலம் நடந்துவந்தது.

திண்ணப்ப செட்டியார் தாம் பிரதிஷ்டை செய்த விநாயகப் பெருமானுக்குக் கைலாஸ நாமத்தை முற் பொருத்திக் கைலாஸ விநாயகனெனப் பெயரிட்டதானது, வெண்ணீறணிந்த அழகாற் கைலாஸ மலைபோலுந் திருமேனிப் பொலிவை யுடையானிவ் விநாயக னெனக் கருதியோ? திருவிளையாடற் புராணம் திருக்கைலாஸ வருணனைப் படலம்-2-ல், "புரந்த ராதிவா னவர்பதம் போதுறை புத்தேள்—பரந்த வான்பதஞ் சக்கரப் படையுடைப் பகவன்—வரந்த வாதுவாழ் பதமெலா நிலைகெட வருநாள்—உரந்த வாதுநின் றாழிதோ றோங்குமவ் வோங்கல்" எனக் கூறியபடி, எப்பத மழியினுந் தானழியா வியல்பினதாகிய அக்கைலாஸ பருவதம் போலவே, எத்தேவ ரழியினும் தானழியா வியல்பினையுடையா னிவ்விநாயகனெனக் கருதியோ? தந்தையுடைமைக்கு மைந்தனே யுரியனென்ப துலக வழக்கமாதலாற் பரமசிவ வாஸஸ்தானமாகிய கைலாஸ மலைக்கு இருத்தலீதன் முதலிய வெல்லாவற்றுனு முரியவன் அப்பரமசிவஜேஷ்ட குமாரனாகிய இவ்விநாயகனெனக் கருதியோ? யாமறிந்திலம்; மேற்காட்டப்பட்ட பெயர்ப்பொருணிதானத்தைப் பெயரிட்ட செட்டியாரே யறிவர்.

மேற்கூறிய கைலாஸ விநாயகனென்னும் தொடர்மொழிக்குரைத்த பொருள் மூன்றனுள், முதலாவது உருவுவமைத் தொகையாகவும், இரண்டாவது வினையுவமைத் தொகையாகவும், மூன்றாவது நான்காம் வேற்றுமையுருபுந் தகுதியுடைப் பொருளு முடன்றொக்க தொகையாகவும் இலக்கணவிதிகொண்டு பொருளுரைக்கப் பட்டதென அறிக.

இந்தக் கைலாஸ விநாயகப் பெருமான், "மூத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" எனவரும் மதுரைத் தேவா

ரத்தின்படிக்குத் தேவகோட்டையின்க ணுள்ள இதர ஆலய மூர்த்திகட்கெல்லா முன்னரே ஆதியிற் றோன்றிய காரணத்தால் "ஆதிவிநாயகர்" எனவும், தேவகோட்டையிலுள்ளா ரனைவரும் கல்யாணாதி சுபகாரியங்களைத் தொடங்கும்போது இவ்வாலயத்திற்கு வந்து தெரிசித்து அநுக்ஞை பெற்றுப்போய்ப் பின்பு நடத்திவருகிற காரணத்தாற் "கல்யாண விநாயகர்" எனவும் வழங்கிவரப்படுகின்றனர்.

மேற்கூறிய தின்னப்ப செட்டியாருக்கு உத்தேசம் கலியுகாதி வருஷம் (சகூஅ௱உ௰)ல் இரண்டு புத்திரர் பிறந்தனர்; அப்புத்திர ரிருவருள், மூத்தவருக்கு வெள்ளையப்ப செட்டியார் எனவும், இளையவருக்கு இராமநாதன் செட்டியார் எனவும் பெயர் வைத்து அவ்வவற்றிற் குரியபருவகாலத்திலே கல்வி பயிற்றுவித்தும்,விவாகம் செய்வித்தும்,உடைமையுரிமைகளைக் கொடுத்தும், நீடித்து வாழ்ந்திருந்து அச்செட்டியார் சிவபதமடைந்தனர்.

மேற்கூறிய தின்னப்ப செட்டியாரது புத்திரர்களிருவருள் மூத்த குமாரராகிய - தி-வெள்ளையப்ப செட்டியா ரென்பவர், தேவகோட்டைக்குத் தென்மேற்றிசையில்-3-மயிலளவிலுள்ள தேவார வைப்புஸ்தல மாகிய கோட்டூர் என்னுஞ் சிவஸ்தலத்தை யடுத்து ஸ்ரீ அகத்தீசப் பெருமானை யுபாஸித்து வந்தனர்.

இளைய குமாரராகிய-தி-இராம நாதன் செட்டியா ரென்பவர், தேவகோட்டைக்கு வடமேற்றிசையில்-15-மயிலளவிலுள்ள குன்றக்குடியென்னுஞ் சுப்பிரமணியஸ்தலத்தை யடுத்து ஸ்ரீ சுப்பிரமணியப்பெருமானை யுபாஸித்து வந்ததுடன், தேவகோட்டையில் அப்பெருமானது ஆறு படைவீட்டு ளொன்றாகிய திருவாவினன்குடியாலயத்தை யநுஸந்தானித்துள்ள பச்சிமத்துவா

ரத்துடன் "பழனியாண்டவர்சுவாமி வீடு" என ஒருவீடமைத்து அதிற் றினந்தோறும் நெய்த்தீபம் ஏற்றிவைத்துத் தியானித்தும், நைமித்திகமாய்ப் பழனியாண்டவர் பூசையிட் டுபாஸித்தும் வந்தனர்; நைமித்திகம் என்பதற்கு, நிமித்தத்தாற் செய்யப்படுவதென்பது பொருளாம். இந்த இராமநாதஞ் செட்டியார் தீபமுன்னிலையிற் கடவுளுபாஸனை செய்து வந்திருத்தலை நோக்கும் போது, கடவுள் ஞானப்ரகாச தீபவடிவின ரென்கின்ற ரஹஸியத்தைப் பன்னூலா ராய்ச்சியாற் றேர்ந்துள்ளாரிவரென நன்கறியலாம்;

## கடவுள் ஞானப்ரகாச தீபவடிவின ரென்பதற்குப் பிரமாணம்.

### திருமந்திரம்.

**1139-1818-2446-2816-2963.**

"தேறி யிருந்துநற் றீபத் தொளியுடன்
ஊறி யிருந்தன னுள்ளுடை யார்க்கே"

"விளக்கினை யேற்றி வெளியை யறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடையார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே"

"கன்று நினைந்தெழு தாயென வந்தபின்
குன்று நிறைந்த குணவிளக் காகுமே"

"விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே"

"சந்திரன் பாம்பொடு சூடுஞ் சடாதரன்
வந்தென்னை யாண்ட மணிவிளக் கானவன்"

## தேவாரம்.

ஸ்ரீகயிலாயப்பதிகம்-10. கோயிற்பதிகம்-5.
திருவையாற்றுப்பதிகம்-7. திருவீழிமிழலைப்பதிகம்-11.

"நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி"

"நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்"

"ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே"

"வெயிலாய சோதிவிளக் கானார் போலும்"

## திருவாசகம்.

அருட்பத்து-1.

"சோதியே சுடரே சூழொளி விளக்கே"

## திருவிசைப்பா.

திருமாளிகைத்தேவர்-2, சேந்தனார்-2.

"சுடர்மணி விளக்கி னுள்ளொளி விளங்குந் தூயநற்சோதியுட் சோதி"

"மதிப்பவர் மனமணி விளக்கை"

## திருவாரூர்ப் புராணம்.

தியாகராஜச் சருக்கம்-53.

"யோகர் மனத்திடை தொல்லூழி வாழ்ந்த விளக்கொளி"

## வீரவன புராணம்.

சோழன் மகப்பெற்று முத்தியடைந்த படலம்-16.
உமையாண்டாள் மகிமைப்படலம்-26.

"உருகு மெய்யடியா ருள்ளத் தொளிவளர் விளக்கே"

"மெய்ஞ்ஞான நீதியா ருளத்தளி விளக்கே"

## குமரகுருபரசுவாமி பிரபந்தத்திரட்டு.

கந்தர்கலிவெண்பா-1.

மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் வருகைப்பருவம்-9.

"அன்பாகத் தாமரையின் மீதிருக்குந் தெய்வ விளக்கொளியே"

"அகந்தைக் கிழங்கை யகழ்ந்தெடுக்குந் தொழும்ப
ருளக்கோயிற் கேற்றும் விளக்கே"

## தாயுமானசுவாமி பாடல்.

ஆசையெனும்-39. ஆரணம்-4. பராபரக்கண்ணி-259.

"நாட்டமூன் றுடையசெந்நிற மணியே நடுவுறு நாயக விளக்கே"

"வெள்ளமே பொழியுங்கருணைவான்முகிலே
வெப்பிலாத் தண்ணருள் விளக்கே"

"மின்னுமா நந்த விளக்கே பராபரமே"

## பழனி திருப்புகழ்.

"தீப மங்கள ஜோதீ நமோநம"

## லளிதாஸகஸ்ரநாமம்.

"அவ்யாஜ கருணாமூர்த்தி ரக்ஞாநத் வாந்ததீபிகா"

---

இவ்விருவர்களது மேற்கண்ட உபாஸநாமஹிமையால் இருவருள், மூத்தவராகிய-தி-வெள்ளையப்ப செட்டியாருக்கு, உத்தேசம் கலியுகாதி வருஷம்(௪௯௭௬)ல் ஒருபுத்திரர் பிறந்தனர்; மேற்படி-தி-வெள்ளையப்ப செட்டியார், பிறந்த அப்புத்திரருக்கு ஸ்ரீ அகத்தீசப்பெருமான் திருவருளுணர்த்தியபடி "மாயாண்டி செட்டியார்" எனப்பெயர்வைத்தழைத்தனர்; திருவருளுணர்த்தினமையையும் பெயர்க்காரணத்தையும் அவர்

பொருட்டு இனிவெளிவருங் குடும்பஞானிகள் புராணத்திற் காண லாம்; இப்புத்திரரை "ஆண்டியப்ப செட்டியார்" எனச் சுற் றத்தார் கூறுவதுமுண்டு; மேற்கூறப்பட்ட இளையவராகிய-தி-ராமநாதஞ் செட்டியாருக்கு, இரண்டு புத்திரர் பிறந்தனர்; தி-இராமநாதஞ் செட்டியார், தமக்குப் பிறந்த அப்புத்திர ரிருவ ருள் மூத்தவருக்குப் "பழனியப்ப செட்டியார்" எனவும் இளை யவருக்குத் "தின்னப்ப செட்டியார்" எனவும் பெயர் வைத்த ழைத்தனர்; அப்பால் மேற்கூறிய பிதாமார்களிருவரும் அவ் வவற்றிற்குரிய பருவகாலத்திலே கல்வி பயிற்றுவித்தும், விவாக மியற்றுவித்தும், அவரவர் புத்திரருக்கு அவரவாதுடைமை யுரி மைகளைக் கொடுத்தும், நீடித்து வாழ்ந்திருந்து சிவபதமடைந் தார்கள்.

மேற்கூறிய-தி-வெ-மாயாண்டி செட்டியார், தமது பிதா வினு லுபாசித்து வரப்பெற்ற ஸ்ரீ அகத்தீசப் பெருமானுக்கும் சௌந்தர நாயகியம்மையாருக்கும் பரிவார தேவர்கட்கும் கோட்டூரென்னும் ஸ்தலத்தில்விமானம், கெர்ப்பக்ரஹம், அர்த்த மண்டபம், மஹாமண்டபம், த்வஜஸ்தம்ப மண்டபம், ப்ராகார மண்டபம், யாகசாலை, மடைப்பள்ளி, பள்ளியறை, பரிவாரநிலை யம், மதில், கோபுராதி யமைத்துப் பூரணாங் காலயத்திருப்பணி செய்தும், நித்திய நைமித்திக பூசைகளை நடாத்தியும், அவை கட்கு வேண்டும் பூஸ்திதிகளை வாங்கிவிட்டும், பெரிய புராணத் தில் "ஆறணிந்த சடைமுடியார்க் காதிரைநா டொறுமென்றும் —வேறுநிறை வழிபாடு விளங்கியபூ சனைமேவி" எனவரு மாற் றால் அறுபத்து மூவருள் ளொருவராகிய மன்னர்பெருமான் நரசிங்க முனையரைய நாயனார் செய்துய்ந்த தொண்டிது வெனக் கண்டுபிடித்துத் தாமும், அவ்வாறே சிவநக்ஷத்திரமென்னும் மாத த்திருவாதிரை நக்ஷத்திரந்தோறும் விசேஷப்படியான அபிஷேக நைவேத்தி யார்ச்சனைகளுட னாராதித்தும் வந்தனர்; இவ்வாறு

செய்து வந்தமையாற் புகழுடம்பு ஆக்கமாதற் கேதுவாகிய பொருட்செலவுடையவராய் நிலையாதனவற்றால் நிலையினவெய்தும் வித்தகருமாயினர்; பொய்ப்பொருளை நல்லவழியிற் செலவிட்டு மெய்ப்பொருளை யடைந்தோர் வித்தகராவா ரென்பதனை, திருக்குறள் 235-ல் "நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்—வித்தகர்க் கல்லா லரிது" எனவும், விநாயகபுராணம் திருநாட்டுப்படலம்-15-ல் "மாயை காரியப் பொருள்களை யடியர்பால் வழங்கித்—தூய வான்பொரு ளெளிதுறுஞ் சுகுணரே போல" எனவும் வருவனவற்றா லறியலாம்; மேலும், இந்தத்-தி-வெ-மாயாண்டி செட்டியார், இந்நூலிற் பரமசிவ மகிமைச் சருக்கத்திற் காட்டப்பட்டிருக்கிற சிவபரத்துவ நிரூபணப் பாக்களை முற்றவுணர்ந்தவராதலால் "சென்று நாஞ் சிறுதெய்வஞ் சேர்வோமல்லோஞ் சிவபெருமான் றிருவடியே சேரப் பெற்றோம்" என அப்பர்சுவாமிகள் தேவாரத்தில் உலகமுய்ய அறிவுறுத்தியபடி சிறு தெய்வங்களைக் கனவிலும் நினையாதவராய்ச் சிவமே பரம்பொருளெனத்துணிந்த ஏகாக்ர சித்தமுடையவராய்க் கோட்டூர் அகத்தீசப்பெருமானையே வழிபட்டுச் சிவத்யாந பராயணராய் விளங்கி வந்தனர்.

இந்தத்-தி-வெ-மாயாண்டி செட்டியார் சிவத்திருப்பணிச் சரியையும், சிவாராதனைக் கிரியையும், சிவத்தியாநயோகமும் சோபாநக்ரமமாய் முதிரப் பெற்றுத் தாம் குடும்பத்திலிருந்தும் சிவபதஹேதுவாகிய தத்துவஞானத்தை யடைந்து விளங்கினர்; குடும்பத்திலிருந்து கொண்டே தத்துவஞானத்தை யடையுஞ் சூரர்களு முண்டு; உண்டென்பதனை, அவிரோத வுந்தியார்-18-ல் "கற்றழீஇ முந்நீர் கடந்தோரு முண்மையா—னிற்றழீஇ மெய்யுணர் வுந்தீபற—ஏய்ந்தோரு மில்லெனா ருந்தீபற" எனவும், பாரதம் அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கம்-15-ல் "மிக்

யோரிகழ் பற்றென்றினு முண்மை—கற்றூர் தொழுமருணசல மன்போடுகை தொழுதான்" எனவுங் கூறுமாற்றாலறியலாம்.

இந்தத் - தி - வெ - மாயாண்டி செட்டியார், குடும்பத்தி லிருந்தும் தாமரையிலையிற் றேய்ந்துந் தோயாதுநிற்கும் நீரை யும், புளியம்பழத்திற் சார்ந்துஞ்சாராது நிற்குந் தோட்டையும் போல உள்ளம் வேருய் ஈஷணத்திரய மொழிந்து சிவஞான மடைந்து விளங்கிவந்த ஞானியாதலால் இச்செட்டியாரை, குடும் பஞானி" என உலகத்தில் ஆன்றோர் கூறுவர்; கோட்டூர்ச் சிவா லயத் திருப்பணி செய்தமையாற் "கோட்டூர் - மாயாண்டி செட்டியார்" என நாட்டார் நகரத்தாரனைவருங் கூறுவர்.

சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கும் முறை யே ஒன்றன் முதிர்ச்சியின் மற்றொன்ருகச் சித்திக்கும். அவற் றுட் சிவபத மடைதற்கேது, ஞானமேயாம். சிவனருட் செயலி னின்றோர் தங்கும் இல்லறமும், துறவறம் போன்ற மேன்மைத் தாம்; அவர் எந்த ஆச்சிரமத்திற் றங்கினும் மனம் வேறுபடார்; அவர் உலகினர் போலப் பலதொழில் செய்யினும் அநவரதமும் மனத்தைச் சிவத்தின்கட்பதிப்பர். இவற்றிற்குப் பிர மாணம்:——

## சிவஞானியின்மகிமை.

### தாயுமானசுவாமி பாடல்.

பராபரக்கண்ணி-157. ஆசையெனும்-3.

"விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே"

"சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம்
ஆட்டுவா னிறையென வறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறந் துறவற மிரண்டும் மேன்மையே"

## பட்டினத்தடிகள் பாடல்.

### திருவிடைமருதூர்-1.

" நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே "

## பிரபுலிங்கலீலை.

### சித்தராமையர்கதி-69. முனிவர்கதி-17.

" உரைசெயிற் பரமஞான மொன்றுமே முத்திக்கேது
சரியைநற் கிரியையோகந் தாமொரு மூன்றும்ஞான
மருவுதற் கேதுவென்று மறைபுகன் றுரைக்கும் "

" ஞானங் கொண்டு நணுகுஞ் சிவபதம் "

## சிவஞானசித்தியார்.

### சுபக்கம்-எட்டாஞ்சூத்திரம்-27.

" ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம் நல்லவா
கமஞ்சொல்ல அல்லவா மென்னும்—ஊனத்தா ரென்கடவர் "

## கந்தபுராணம்.

### மார்க்கண்டேயப்படலம்-45.

" துயக்குறு பவத்திடை தொடர்ச்சியறு தூயோர்
நயப்பொடு வெறுப்பகலி னுஞமட மானுர்
முயக்குறினு மாதவ முயன்றிடினு மன்னோர்
வியத்தகு மனத்துணர்வு வேறுபடு மோதான் "

## தணிகைப்புராணம்.

### அகத்தியனருள் பெறுபடலம்-311.

" முப்பொரு ளியல்பு முள்ளவா றுணர்ந்து முழுத்தபே ரறிவினுள் விழித்தோர்—இப்புவி யவர்போல் வினைபல குயிற்றி யிருப்பினும் வினைப்பய னெய்தார்—கைப்பட மனையைப் புதல்வியைத் தழூஉங்காற் கருத்துவேற் றுமையுங்கை வருடச்—செப்பிள முலையார் மகன்பதிக் களிக்கும் பயத்தின்வேற் றுமையுநேர் தெரிதி "

## சிவதருமோத்தரம்.

சனனமாணவியல்-35-36.

"மனத்துமைய னுற்றனனே மனைவிதனைத் தழுவியவன்
தனக்குமக டனைத்தழுவித் தங்கினனே யங்குமயன்
முனைப்பயனை யருந்திடினுந் தெருண்டார்கண் மோகமிலை
வினைப்பயனை வியர்தருந்தி மற்றையரே வினைவிளைப்பார்"

"குழவிபயக் தவள்குயத்தை வருடுதலுங் குழைந்துமனம்
ஒழுகுமுலைப் பாலூட்டி யொருவாத பரிவினளே
கொழுநனவன் குயம்வருட வவன்புயத்தைக் கூடுதற்கு
விழைவினளே யித்தகையார் வினைகெடுப்பார் வினைவிளைப்பார்"

## அவிரோதவுந்தியார்-34.

"நீங்கா தெவற்றோடு நின்றாலு நெஞ்சிடைத்
தாங்கான்மெய்ஞ் ஞானியென் றுந்தீபற
சலமரை யாதியொத் துந்தீபற"

## சிவரகசியம்.

வசிட்டருத்தரச் சருக்கம்-29.

"ஆயிழையா ருடனிருந்து மறிஞர் மோகத் தழுந்திலார் தா
மரையி னிலையிற் றெண்ணீர்—சேயபுளி யம்பழத்தின் றோடும்
போலச் செறிந்திலார் சிவனடியே சிந்திப் பாரே"

## திருமந்திரம்-1064.

"புளியுறு புன்பழம் போலுள்ள நோக்கித்
தெளியுறு சித்துச் சிவகதி காட்டி"

## திருநாகைக்காரோணப் புராணம்.

நைமிசப் படலம்-20.

"பந்த மேவிய வுயிர்களின் றன்மையும் பந்தம்
நந்த மேவிய வுயிர்களின் றன்மையு நயந்து
முந்த மேவிய யாவருந் தெரிதர முகிழ்த்த
சிந்த மேவிய காய்களாற் பழங்களாற் றெரிக்கும்"

### நல்வழி.

"நல்லா ரறிந் திருப்பா ராதலினு லாங்கமல நீர்போற்
பிறிந் திருப்பார் பேசார் பிறர்க்கு"

### ஆன்றோர் வாக்கு.

"எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே — வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமன நீர்க்குடத்தே தான்"

---

மேற்கூறியவாறு குடும்ப ஞானியாய் விளங்கிவந்த-தி-வெ-மாயாண்டி செட்டியார், தம்மாற் றிருப்பணி செய்யப்பெற்ற கோட்டூர்ச் சிவாலயத்தில், தமதிளைய பிதாவின் குமாரர்களாகிய தம்பிமாரிருவருள், மூத்தவரை விநாயக ராலயத் திருப்பணி செய்யும்படிக்கும், இளையவரைச் சுப்பிரமணிய ராலயத்திருப்பணி செய்யும்படிக்கும் பணித்தனர்; இப்பணிப்பால் இச்செட்டியார், நாமடைந்த பதிதருமப் பேற்றைச் சார்ந்தாருமடைய வேண்டுமெனக் கருதிய தகுதியுடையோரு மாயினர்; தக்க பெரியோர்கள்தான் இவ்வாறு கருதுவார்கள்; பெரியோரே கருதுவரென்பதற்குப் பிரமாணம்:—

### பிரபுலிங்கலீலை.

கோக்கிதேவர்கதி-28.

"தக்க பெரியோர் தமக்கியல்பு தாம்பெற் றுள்ள பேறெல்லாம்
மிக்க வுலகம் பெறுகவென வேண்டிக் கோடல்"

### திருமந்திரம் - 95.

"நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லுவன்
ஊன்பற்றி நின்ற வுணர்வுறு மந்திரந்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே"

## திருநாகைக்காரோணப் புராணம்.

சுந்தரவிடங்கப்படலம்-103.

"நல்லார்க டாம்பெற்ற நாடரிய பெரும்பேற்றை
யெல்லாரும் பெறவேண்டு மெனக்கருதி முயன்றிடுவார்
அல்லார்மற் றதுகுறியா ரகனிலத்தென் பதையுணர்ந்தாம்
வல்லாரிவ் விருவருமிவ் வரம்பெற்ற திறங்கொண்டே"

---

குடும்ப ஞானியாகிய - தி - வெ-மாயாண்டி செட்டியார் பணித்தமையை அன்புடன் அங்கீகரித்து அவரது சிறிய பிதாவின் குமாரரிருவர்களுள் மூத்தவராகிய-தி - ராம - பழனியப்ப செட்டியார் கோட்டூர்ச் சிவாலயத்துள் விநாயக ராலயப் பணியையும், இளையவராகிய-தி-ராம-திண்ணப்ப செட்டியார் சுப்பிரமணிய ராலயப்பணியையும் செய்தார்கள்; குடும்பஞானியாந் தமயனது இனத்தூய்மையை வாய்க்கப்பெற்ற தம்பிமாரிருவரும், பணியை, அங்கீகரித்தமையால் மனத்தூய்மையும், செய்தமையால் வினைத்தூய்மையு முடையவர்களாய் விளங்கினார்கள்; இனத்தூய்மை வாய்த்தால், அதனாலே, மனத்தூய்மையும் செய்வினைத்தூய்மையுமாகிய இரண்டும் வாய்க்கும்; வாய்க்கு மென்பதற்குப் பிரமாணம்:——

## திருக்குறள்-455.

"மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்"

---

இனி, மேற்கூறப்பட்ட-தி-வகைமூல புருஷருடைய புத்திரரிருவரின் வழித்தோன்றிய பௌத்திர ரென்னும் பேரர் மூவரில், முதற்பேர ராகிய குடும்பஞானி-தி-வெ-மாயாண்டி செட்டியாருக்கு, நாகப்ப செட்டியார்-1-வெள்ளையப்ப செட்டி

யார்-2-அருணசலஞ் செட்டியார்-3-தின்னப்ப செட்டியார்-4-பழனியப்ப செட்டியார்-5-ஐந்துபுத்திரர்கள் பிறந்தார்கள்; இந்த ஐவர்களுக்குள் பிரபிதா மகரின் பெயர்பூண்ட நான்காம் புத்திராகிய வெ-ஆ-தின்னப்ப செட்டியார் பிறந்த தினம் கலியுகாதி வருஷம் (௪௲௯௱௨௰௧) ல் நிகழ்ந்த விக்கிரமஞு தைமீ ௰௨ ஆதித்தவார மாகும்; மேற்கண்ட இந்த ஐவர்களும் இவர்களின் பின் சந்ததியார்களும்-தி-வகைப் பிராஞ்சு-மா-வகையாரென்று சொல்லப்படுகின்றனர்.

தி-வகை மூல புருஷரின் இரண்டாம் பேராகிய-தி-ராம பழனியப்ப செட்டியாருக்கு, சுப்பிரமணியஞ் செட்டியார்-1, இராமநாதஞ் செட்டியார்-2 - அண்ணாமலை செட்டியார்-3, தின்னப்ப செட்டியார்-4, வெள்ளையப்ப செட்டியார்-5, பழனியப்ப செட்டியார்-6, ஆறு புத்திரர்கள் பிறந்தார்கள்; மேற்கண்ட இந்த அறுவர்களும் இவர்களின் பின்சந்ததியார்களும்-தி-வகைப்பிராஞ்சு-பழ-வகையாரென்று சொல்லப்படுகின்றனர்.

தி-வகை மூலபுருஷரின் மூன்றும்பேராகிய-தி-ராம-தின்னப்ப செட்டியாருக்கு, சுப்பிரமணியஞ் செட்டியார்-1, இராமநாதஞ் செட்டியார்-2, அண்ணாமலை செட்டியார்-3, பழனியப்ப செட்டியார்-4, நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள்; இந்த நால்வர்களும் இவர்களின் பின்சந்ததியார்களும்-தி-வகைப் பிராஞ்சு தி-வகையாரென்று சொல்லப்படுகின்றனர்.

ஆகவே, தி-வகையின் மூலபுருஷராகிய ஆதித் தின்னப்ப செட்டியாருக்குப் புத்திரர் இருவரும், அவ்விருவர் வழித் தோன்றிய பௌத்திர ரென்னும் பேர்மூவரும் அம்மூவர் வழித்தோன்றிய பிரபௌத்திரரென்னுங் கொட்பேரர் பதினை வருமாமென வறிக; பதினைவரின் சந்ததியாய்ப் பின்றோன்றி

னோர்களை யெல்லா மெழுதப்புகின் விரியும்; கேள்வியாலுங் காக்ஷியாலு மறியலாம்.

ஸ்ரீகைலாஸ விநாயகப் பெருமான் திருவருளால் -தி-வகை மூலபுருஷரான ஆதித் தின்னப்ப செட்டியாருக்கு இங்ஙனம் சந்ததி பல்கினமையால் அச்சம்பந்தம் பற்றி இச்சருக்கத்தில் அவரது வம்ஸாவளியுஞ் சேர்த்து விளக்கப் பெற்றது.

தி-வகை மூல புருஷரின் இரண்டாம்பேரராகிய - தி-ராம பழனியப்ப செட்டியாருக்குப் பிறந்த ஆறுபுத்திரருள் முதற் புத்திரர் சுப்பிரமணியஞ் செட்டியரென்று மேற்கூறினேனல்லவா? அவருக்கு நாகப்ப செட்டியார் எனவும், அருணாசலஞ் செட்டியா ரெனவும் இரண்டு புத்திரர் பிறந்தனர்; இவர்களைத் தொண்டிச் செட்டியாரெனக் கூறுவது முண்டு; இவ்விருவருள், மூத்தவராகிய-பழ-சு-நா. நாகப்ப செட்டியார் என்பவர், சச்சங்க சகவாசமும் ஈசுவர கைங்கரியத்திற் சித்த விர்த்தியு முள்ளவர்;

அவருக்கு இளையவராகிய பழ-சு- அரு- அருணாசலஞ் செட்டியாரென்பவர், கல்வியும் அன்பும் அருளும் ஒழுக்கமும் வாய்ந்தவர்; சிவபூசை சிவநாமசங்கீர்த்தனம் சைவசாஸ்திர புராண சிரவணமு முடையவராய் அடியார்க்கன்னம் பொருளளித்தலாதி சற்காரியங்களிலே தமது வாழ்நாண்முழுதும் போக்கினவர்; திருக்குறள்-432-ல் "இவறலு மாண்பிறந்தமானமு மாணா—வுவகையு மேத மிறைக்கு" எனவருமாற்றை யுணர்ந்து, மாண் பிறந்த மானத்தைக் கைக் கொள்ளாதவராய்ச் சிவாலயத்திற் சென்று சந்நிதியில் நிர்த்தனத்தோடு தரிசித்துச் சித்தமடங்கச் சிவாநந்த மேலிடப் பெற்றவர்; சிவபூசை செய்தோரும் திருக்

கோயிலிற் சிவசந்நிதியில் நிர்த்தனஞ் செய்தோரும் அடையும் பலனை, சிவபுண்ணியத்தெளிவு-49-ல்-116-ல் "நிலத்திற் றிகழ்ந்த நறுமலரு நீருற் பவித்த போதெவையும்—புலத்தி னமூந்தா வன்பினெடும் போதாகந்தன் கழற்கணிந்தோர்—மலத்தினநாதி முத்தன்மல வயிரி யுறையுஞ் சிவலோக—தலத்திற் புகுந்து நலத் தகைய தலைவராகி நிலவுவரால்" எனவும், "நிருத்த மெந்தைமுன் யாவர் நிகழ்த்தினும்-விரித்த பாநு வயுதம் விரிகதிர்-பொருத்து தேரிற் புலவ ராம்பையர்-கருத்தினுடகங் காண்பர் சிவபுரி" எனவும் வருமாற்றுலறியலாம்; இவர், அறியாமையால் அசாஸ்திரிகமான அக்ரமச் செய்கைகளிற் பிரவேசிப்பாரையும், அவர்மாட்டுற்ற அன்பினல் அவற்றிற் குடன்படுவார்களையும் அவர்களது உயிர்க்குறுதி கருதி ஆவனகூறித் தடுத்துச் செந்நெறியிற் புகுத்தும் புரையில்லாத வுள்ளமுடையவர்; அவர்கள் திரும்புதற்கு ஞாபகவேதுவாம்படி ஞாதியர் கிருகங்களில் சுபாசுப காரியநிகழ்ச்சியிற் கூடும் போதெல்லாம் "மதத்தா லழிந்ததடா மன்னவனுர் கோட்டையெல்லாம்" "இடிம்பாலழிந்ததடா விந்திரனுர் கோட்டை யெல்லாம்" என ஆரவாரிப்பர்; "தன்தார தார் பிறதார புத்திரனே யுயர்ந்தோ" னென்பர்; அதற் கடுத்தபடியாய் "பிறர்மனை யவரைப் பெற்றதா யெனவும் பிறர்பொருளோட்டியே யெனவும்—பிறர்பிழை யுரைத்தல் பெருமையன்றெனவும் பிறர்துய ரென்றுய ரெனவும்—இறுதியே வரினு மென்மனக் கிடக்கை யெம்பிரா னிவையென வுரைத்தான்—மறலியு மடியுமாறுமல்லியற்கை வலிமை கூர் வாயுவின் மைந்தன்" என்னும் மஹாபாரதச் செய்யுளைக் கூறுவர்; "தென்றிசைக் கடவுள் வந்துவிடுவான்" "அன்றறிவா மென்னு தறஞ் செய்மின்" என்பர்; "எல்லாஞ் சிவாக்ஞை" "சிவசிதம்பர மென்று சொல்லுகிறேம்" என்று அடிக்கடி முழங்குவர்; இவரைப்பார்த்த கற்றோர்கட்

கெல்லாம் "இருக்கினு நிற்கும்போது மிரவுகண் டுயிலும் போதும்—பொருக்கென நடக்கும் போதும் பொருந்தியூண்டு ய்க்கும் போதும்—முருக்கிதழ்க் கனிவா யாரை முயங்கிநெஞ் சழியும்போதுந்—திருக்களாவுடைய நம்பா சிந்தையுன் பால தாமே" என்னுந் திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதிச் செய்யுள் நினைவிலெழும். இவர் இவ்வாறு நெடுங் காலம் வாழ்ந் திருந்து அந்தத்திற்முயத்தார் சுற்றத்தார் அனைவரிடத்திலும் "நாம் கைலாஸம் போகின்றோம் திரும்போம்" எனக்கெம் பீரத்துடன் பிரயாணஞ் சொல்லிக்கொண்டுபோய் மதுரையிற் சிவபதமடைந்தனர்.

தி-வகை மூலபுருஷரின் முதற்பேராகிய - தி - வெ-மாயாண்டி செட்டியாருக்குப் பிறந்த ஐந்து புத்திரர்களுள் முதற் புத்திரர் நாகப்ப செட்டியாரென்று மேற்கூறினேனல்லவா? அவருக்கு நான்கு புத்திரர் பிறந்தனர்; அவர்களுள் இரண்டாம் புத்திரருக்கு வெ-ஆ-நா-சித=சிதம்பரஞ் செட்டியார் என்று பெயர்; இவர் ஒழுக்கத்திலும் ஈசுவரபக்தியினுஞ் சிறந்தவர்; இவர், பிரபிதாமகர் காலந்தொடுத்துப் பரம்பரையிற் றிருப்பணி செய்துபாசித்து வருவதான கோட்டூர்ச் சிவாலய விசாரணை பார்த்துவருங் காலத்தில் அவ்வாலயத்துக்குள்ளிருந்த மும்மூர்த்தி சொரூபமான அரச விருக்ஷத்தை ஆலயத்திருப்பணிக்கிடையூறுயிருந்தமை கண்டும் களைதற்கஞ்சி, கல்வியறி வொழுக்கச் சிவ புண்ணியத்துடன் மீனுக்ஷி சுந்தரேசுவர வரப்ரஸாதிகளாய் விளங்கிய அமராபதிபுதூர் - வயி-நாக-ராம-நாகப்பஐயா, வெங்கடாசலஐயா, அவர்களிருவரையும் அழைத்துவந்து காட்டிக் கேட்டு நூல் விதிப்படிக் கவர்கள் சொற்றவாறு செய்து பணியியற்றினவர்; இவர், சிவாலய காரியங்களைக் கற்றோர்பாற் கேட்டன்றித் தம் மனம் போனவாறு செய்யின் அபசாரமாய் முடியு

மெனத் தேர்ந்த நுண்ணறி வுடையவரென்பதை, மேற் கூறிய செய்கையாலறியலாம்; வில்வமரம் மூவகைச் சிவசத்தி சொரூப மாகவும், அரசமரம் திரிமூர்த்தி சொரூபமாகவும் சொல்லப் படும்; சொல்லப்படுதலே, திருவிளையாடற் புராணம் இந்திரன் முடிமேல் வளை யெறிந்த படலம்-17-ல் "புரகா னிச்சா ஞானக் கிரியையாய்ப் போந்த வில்வமரம்" எனவும், வரகுணனுக்குச் சிவலோகங் காட்டியபடலம்-7-ல் "மூவராந் தாருவேந்தைச் சுற் றியும்" என்வும் வருமாற்றாலறியலாம்; சிவகாரிய நிமித்தம் அம்மரங்களைச் சேதித்தவன் பாபியாவா னென்பதை, சிவதரு மோத்தரம் சுவர்க்க நரகவியல்-189-ல் "அண்டர்த மாலயு மாமரமற்று மறுத்திரே" எனவருமாற்று லறியலாம்; மேற் பிர மாணங்காட்டிய சிவதருமோத்தரச் செய்யுளில், "மாமரம்" என்றது ஆம்பிர விருக்ஷத்தை யன்று; மஹா மர மென்னும் வட மொழிப் பதங்கள், ஈண்டு மாமரமென வந்திருக்கின்றபடியால் அந்த மகத் சப்த அடைமொழி விசேஷத்தால் அம்மொழிக்கு, வில்வமு மரசு மெனப்பொருள் கொள்ளப்படும்.

தி—வகை மூலபுருஷரின் மூன்றும் பேராகிய தி-ராம திண்ணப்ப செட்டியாருக்குப் பிறந்த நான்கு புத்திரர்களுள் இரண்டாம்புத்திரர் இராமநாதம் செட்டியா ரென்று மேற் கூறி னேனல்லவா? அவருக்கு மூன்று புத்திரர் பிறந்தனர்; அம்மூவ ருள் நடுப்பிறந்தவருக்கு "தி-ராம-சு-சுப்பிரமணியஞ் செட்டி யார்" என்று பெயர்; இவர் ஈசுவரபக்தியிலும் உதாரகுணத்தி லுஞ் சிறந்தவர்; தமது நண்பர்களாயும் ஸ்ரீமந் நடராஜ குஞ்சித சரணாரவிந்த பக்திமான்களாயும் விளங்கிவந்த கானாடுகாத்தான்-சா-ராம-மு-முத்தையா செட்டியார், சா-ராம-சித-சிதம்பரஞ் செட்டியா ரென்னு மிருவரும் உத்தமோத்தம மாகிய சிதம்பர

க்ஷேத்திரத்திற் செய்துள்ள "முழுதும் வானுல கத்துள தே வர்க—டொழுதும் போற்றியுந் தூயசெம் பொன்னிறு—லெழுதி மேய்ந்த சிற்றம்பல*" த்திருப்பணியினுள், கும்பாபிடேக டயத் துக்குட் டங்கவோடு போட்டு முற்றவேண்டிய தாயிருந்த இன்றியமையாக் கநகசபைப்பணியை, அந்நண்பரிருவர்களது உரிமைச் சொற்கிணங்கி அத்தலத்திற் போயிருந்து கெவுரவத் தலைமையை வஹித்துத் துரிதத்திற் பூர்த்தி செய்துவந்த ஆற்ற லும், சிவ கைங்கரியப்பேறு முடையவர்; இதுநிற்க, தமது நண் பராயும், ஸ்ரீ காளீசுவர பாதஸேவிதராயும், அதிஸாமர்த்யாக்ர கண்ய ராஜரீக வியாபகராயும் விளங்கிவந்த தேவகோட்டை ஜமீந்தார்-அள-அரு-இராமசாமி செட்டியாரோடு தாமுஞ் சேர்ந்து, பெரும் பொருள் கொடுத்துப் பாண்டி பதினான்கனுள் ளொன்றாகிய காளையார் கோயிற் றலத்தில் ஸ்ரீ சுவர்நவல்லியம்பா ஸமேத காளீசுவர சுவாமியாலயத் திருப்பணி செய்துள்ளவர்; இதுவும் நிற்க, நடுவு நிலைமையில் மிகச்சிறந்தவர்; உள்ளூர் வெளியூர் நகரத்தார்களுள், தாவரஜங்கமப் பொருள் காரணமா கத் தம்முண் மாறுபட்ட வழக்கிற்கு, இவரைப் பஞ்சாயத்தாகக் கோரிவந்து, இதரவழியிற் பொருட்செலவுடன் மேல்நடத்திப் பெறக்கூடிய நியாயத் தீர்ப்பை, அஃதின்றிப் பெற்றுய்ந்தவ ரநேகர்; இவர், பாரபக்ஷமின்றிப் பேசுங் கெம்பீர வசனத்தைக் கேட்டவுடன், வழக்குக் கோரிவந்தவருள், வாதியாயுள்ளோர் பிராதிற் குறித்துவந்த பிரார்த்தனை அயிட்டம் பலவற்றுள்ளும், பிரதிவாதியாயுள்ளோர் ஸ்டேட்டுமெண்டிற் குறித்துவந்த பரி கார அயிட்டம் பலவற்றுள்ளும், பயினுக் கெடுபடாத் தாத்தன வற்றைத் தாந்தாமே மெல்லமெல்ல நழுவி வனுவிற் குறைத் தெழுதிக் கொடுத்து விடுவார்கள்; இதனாலேயே இந்நடுவரது

---

* கோயிற் றேவாரம்-திருக்குறுந்தொகை-8.

செப்பம், சொல்லாமலே விளங்காநிற்கும்; நடுவுநிலை யென்பது தாங்கற் கரிய சுமை; அதனை வஹிப்பார் அரியர்; அது, தன்னை யுடையார்க்கு இம்மையில் அழகாய் விளங்குவதோடு, மறுமை யிற் பவர்க்கத்தை நீக்கிச் சுவர்க்கத்தைக் கொடுக்கும்; திரி மூர்த்திகளும் பிரவர்த்திப்பது நடுவு நிலைமையேயாம்; இவற் றிற்குப் பிரமாணம்:—

## நடுவு நிலைமையின் உயர்வு.

### திருமந்திரம்.

**320, 321, 322, 323.**

"நடுவுநின் றார்க்கன்றி ஞானமு மில்லை
நடுவுநின் றார்க்கு நரகமு மில்லை
நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்
நடுவுநின் றார்வழி நானுநின் றேனே"

"நடுவுநின் றானல்ல கார்முகில் வண்ணன்
நடுவுநின் றானல்ல நான்மறை யோதி
நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவோர்
நடுவுநின் றார்நல்ல நம்பனு மாமே"

"நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் றார்சிலர் தேவரு மாவர்
நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் றாரொடு நானுநின் றேனே"

"தோன்றிய வெல்லாந் துடைப்ப னவனன்றி
ஏன்றுநின் றாரென்று மீச னிணையடி
மூன்றுநின் றார்முதல் வன்திரு நாமத்தை
நான்றுநின் றார்நடு வாகிநின் றாரே"

### திருக்குறள் - 118.

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி"

---

மேற்காட்டிய நால்வரும் இங்கே எதற்காகக் கூறப்பட் டன ரென்னில்? பழ-சு-நா-நாகப்ப செட்டியாரும், வெ-ஆ-நா-

சித-சிதம்பரஞ் செட்டியாரும், தி-ராம-சு-சுப்பிரமணியஞ் செட்டியாரும், பின்னே விசுவநாதர் கோயில் வரலாற்றுச் சருக்கத்தில் எடுத்தாளவேண்டிய நிமித்தங் கூறப்பட்டனர்; மற்றொருவராகிய-பள-சு- அரு- அருணாசலம் செட்டியார், வைதிகமார்க்கப் பிரவர்த்தகரை வைதிகத்துழிதரு வோரிவரெனக் கைகொட்டிச் சிரித்திகழும் டாம்பிகர் நிறைந்துள்ள இக்கலியுகத்தில், சிவபூஜாதி நன்மைகணிறைந்ததோடு, சிவாபராத காரிய போதக சுரோதாக்களை நேரிற்கண்டிக்கு மாற்றலையுமுடைய ஒருவரை இக்கலியுகத்திற் காண்டலரிதாதலால், இவர்மாட்டு அடியேனுக்குற்ற அன்புபற்றிக் கூறப்பட்டனர்; சிவபூஜாதி நன்மைகணிறைந்த வொருவரை இக்கலியிற் காண்டலரிதென்பதற்குப் பிரமாணம்:——

### திருவாரூர்ப் புராணம்.

கலியுகச்சருக்கம்-45.

" அருளறி வொழுக்க மான மாசாரம் பொறைசீ ரன்பு
தருமநன் னெறிநற் றூனஞ் சத்தியந் தவத்தோ டாண்மை
விரதகோன் பிரக்க மீசன் மெய்யருட் பத்தி யுள்ளோர்
ஒருவரை யுலகிற் காண்ப தரிதுகா ணுயர்த வத்தீர் "

---

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

இனி, இந்தப் பிள்ளையார்கோயிலுக்குள் விசுவநாதப் பிரதிஷ்டை செய்தோர், முன்னர்ச் சிவலிங்கமகிமையைத் தெரிந்தே செய்தனராதலால், விசுவநாதர் கோயில் வரலாற்றுச் சருக்கங் கூறுதற்கு முன்னரே, சிவலிங்க மகிமைச் சருக்க மெனவும், வாணலிங்க மகிமைச்சருக்க மெனவும் இரண்டு சருக்கம் சிறியேனுடைய சிற்றறிவிற் கெட்டின மட்டிற் கூறப்படும்; அவைகளைப் பார்வையிட்டுத் தயவுடன் அங்கீகரிக்கக் கோருகின்றேன். சுபம்.

தி—வகைப்பிள்ளையார்கோயில் வரலாற்றுச்சருக்கம்
முற்றிற்று.

---

# சிவலிங்க மகிமைச் சருக்கம்.

## நூதனச்செய்யுள்.

மண்ணுறு நரர்க்கு மேனை வானுறு சுரர்க்கும் யார்க்கும்
திண்ணிய வன்பிற் பூசை செய்யினுந் தெரிசித் தாலும்
எண்ணிய வெண்ணி யாங்கே யெய்திட வருள்சு ரக்கும்
புண்ணியச் சிவலிங் கத்தின் மகிமையைப் புகலு வாமால்.

---

சிவலிங்கம் என்பதற்குப்பொருள், மங்களத்தை யுண்டு பண்ணுபவ ளுகிய சிவபெருமானது அடையாள மென்பதாம்; சிவம்-மங்களம்; சிவன் மங்களத்தையுண்டு பண்ணுகிறவன்; இப் பெயர்க்கு இதுவே பொருளென்பதை, வீரவனப்புராணம் குபே ரன் பூசைப்படலம்-6-ல் "திருத்துறு மங்களஞ் செய்த லாற் சிவன்" எனவருமாற்றாலறியலாம்; லிங்கம்-அடையாளம்; லிங்க பதத்திற்கு அடையாள மென்னும் பொருளமைதியை, வட மொழியிற் புல்லிங்கம், ஸத்ரீலிங்கம், நபும்ஸகலிங்கம் எனவரும் பதங்களி லுள்ள லிங்கபதப் பொருள் கோளாலறியலாம்; இனி, லிங்கமென்பதற்கு சிருஷ்டியாதி கிர்த்யத்தால் உலகைச் சித்தி ரிப்ப தெனவும், தோன்றும் பொருளை யெல்லாம் லயிக்கச் செய்வ தெனவுங் கொள்ளத்தக்க இரண்டர்த்தமும் தத்துவார்த்தமாத லால், அது, சித்திரித்தும் லயிப்பித்தும் நிற்குஞ் சிவனைக்குறித் தும் நிற்பதோடு, அவன் சாந்நித்தியமாகுஞ் சைலாதி யடையா ளங்களைக் குறித்தும் நிற்பதாம்; சீவர்களுபாசனை, வடிவ றுதியிற் பற்றமாட்டாமை கருதித் திருவருளால் நிட்கள சிவங்கொண்ட சகளநிட்கள வடிவம், இச்சிவ லிங்கமேயாம்; போகவடிவாயும் யோகவடிவாயும் வேகவடிவாயு முள்ள மாஹேச்வர பஞ்சவிம் ஸதி சகளவடி வங்களுந் தோற்றுதற்கு வித்தாயுள்ளதும் இச்

சிவலிங்கமேயாம்; இதனைச் சூழ்ந்த ஆவுடையாளென்னும் பீடமானது, விட்டகலாத அருட்சத்தியாகும்; பெரும்பாலும் உருவொத்துக்குணங்குறிகளொவ்வாத ஆண்பெண் ணென்னு மிரு பகுப்புயிர்களனைத்திற்கும் அவ்விருபகுப் பங்கத்தோடுற்ற இதுவே, ஆதாரமுந் தெய்வமுமா மென்னுந் துணிவு பிறக்கும் படி அருட்சத்திமயமாகிய பீடத்தோடு கூடிவிளங்குவதும் இச் சிவலிங்கமேயாம்; உருவெனவும் அருவெனவும் உபயமெனவும் நிற்றலால் நவவடிவ வழிபாட்டின் பலனைத் தரத்தக்கதும் இச் சிவலிங்கமேயாம்; இச்சிவலிங்கமகிமையை, கீழ்க்காட்டப்பட்ட லிங்காஷ்டக சுலோகங்களாலும் அறியலாம்; இவற்றிற்குப் பிரமாணம்:—

## திருக்காளத்திப் புராணம்.

### சிவலிங்கத் தோற்றமுரைத்த வத்தியாயம்-38-39.

"சாற்றுறு மூலகைத் தன்னுளே கரந்து சந்தந்தான் விளங் குற்றுப்—பாற்பட வெமது வாழ்வினுக் கெல்லாம் பதிவுறு மொருநிலை மைத்தாய்—ஏற்றுள விதுதா னிலிங்கமென் றுருகு டெமதொளிக் கேலவு முரித்தாய்ப்—போற்றுநங் குறியை யுள்ளதா யிலய வுற்பவங் கட்கொரு பொருட்டாய்"

"இருத்தலி னிலிங்க மெனப்பெயர் பெற்றது"

## கடம்பவனபுராணம்.

### இலீலாசங்கிரக வத்தியாயம்-348.

"இலிங்கவுற் பவமு மிலக்கண விதியு மியம்புது மின்னமுங்கேண்
துலங்குறத் தோன்று மவைலயிக் கையினு லிலிங்கமாம்" [மின்

## சிவஞானசித்தியார்.

### சுபக்கம் - முதற் சூத்திரம்-69.

"சத்தியுஞ் சிவமு மாய தன்மையிவ் வுலக மெல்லாம்
ஒத்தொவ்வா வாணும் பெண்ணுமுணர்குண குணியு மாகி
வைத்தன னவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்
இத்தையு மறியார் பீட லிங்கத்தி னியல்பு மோரார்"

## உபதேசகாண்டம்.

### மூர்த்தி விசேடச் சருக்கம் - 4 - 5.

" முக்கணு ளிலிங்கமா மூர்த்தி யாதலின்
அக்குறி யுயிர்த்தொகை யனைத்து மெய்தின
ஒக்கநோக் காவுடை யாளை யொண்டொடி
மைக்குழன் மடந்தையர் வதியப் பெற்றனர் "

" ஆதலா லுயிர்த்தொகைக் கருளு மத்தனுந்
தீதறு மன்னையுஞ் சிவனுந் தேவியும்
மாதல முயிர்த்தொகை வகுக்க வேண்டியே
ஓதரு மிலிங்கத்தி னுருவ மாயினான் "

## வாயுசங்கிதை.

### இலிங்கோற்பத்தியுரைத்த வத்தியாயம்-4-5.

" உதித்திடு சகந்தான் றிதிலவ்வியத்தத் தொடுங் கலாலதனை
யிலிங்கமென் றேதெரிந் துரைப்பார் "

" இலிங்கமே யிறைவ னுவுடையாளே யிறைவி நன்கேத்தி
நாண்மலர் தூய்—வலங்கொடு பணியின் மனமகிழ்ந்தாங்கே
மாசிலா வருள்புரி குவரால் "

## காஞ்சிப் புராணம்.

### ஒழுக்கப்படலம்-57.

" படைத்தளித் தழித்து நோக்கும் பரம்பொருள் சிவனேயென்
உடற்றுநர்க் கரிய வேத வுள்ளுறை யாவ தென்னத் [றல்
தொடக்கமீ றெழுவா யான விலிங்கத்தாற் றுணிதல்கேள்வி "

## திருப்பேரூர்ப் புராணம்.

### காலவன் வழிபடுபடலம்-24.

" மொழிந்த நாலிரு மூவர்க்கு மூலமாய்
ஒழிந்தி டாவுரு வோடுரு வாய்மயல்
அழிந்த வாணொடு பெண்ணுரு வாகியும்
எழுந்த தாகு மிலிங்கநன் மூர்த்தியே "

## திருநாகைக்காரோணப் புராணம்.

### கடவுள் வாழ்த்து-4.

" அருவமுத லொருமூன்றுட் கட்புலனு வனவிரண்டா
லவற்று ளெல்லா—வுரு வமுமுண் டாக்கிடுவித் துபயமே"

## பெரியபுராணம்.

### சாக்கிய நாயனர்-8.

" காணுத வருவினுக்கு முருவினுக்குங் காரணமாய்
நீணுக மணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்"

## திருமந்திரம்—1776.

" மலர்ந்த வயன்மா லுருத்திரன் மகேசன்
பலந்தரு மைம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே"

## சூரைமாநகர்ப் புராணம்.

### திருப்பணிப் படலம்-23.

" காணப்படாத வருவினுக்குங் காணப் பட்ட வுருவினுக்கும்
மாணப் பெருங்கா ரணமாகி வயங்கா நின்ற சிவலிங்கம்"

## சைவசமய நெறி—549-434.

" நிட்களன்று னன்பா னினைந்தருச்சிக் கச்சகள
நிட்களனு ணிமல னே"

" இருப்பர் மகேசரிரு பத்தைவ ருள்ளும்
அருச்சனைசெய் யும்போதன் பால்"

## தேவாரம்.

### இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை-11.

" செங்க ணனும் பிரமனுந் தம்முளே
யெங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற் றேனென் றிலிங்கத்தே தோன்றினன்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே"

## லிங்காஷ்டகம்.

'ப்ரஹ்மமுராரிஸுரார்சிதலிங்கம் நிர்மலபாஸித சோபிதலிங்கம்
ஜந்மஜதுக்க விநாசகலிங்கம் தத்ப்ரணமாமி ஸதாசிவலிங்கம்"

"தேவமுநிப்ரவ ரார்சிதலிங்கம் காமதஹநங்கரு ணாகரலிங்கம்
ராவணதர்பவி நாசகலிங்கம் தத்ப்ரணமாமி ஸதாசிவலிங்கம்"

"ஸர்வஸுகந்தி ஸுலேபிதலிங்கம் புத்திவிவர்த்தநகாரணலிங்கம்
ஸித்த ஸுராஸுர வந்தித லிங்கம் தத்ப்ரணமாமிஸதாசிவலிங்
[கம்"

"தக்ஷஸுயக்ஞ விநாசகலிங்கம் கநகமஹாமணி பூஷித்லிங்கம்
பணிபதிவேஷ்டந சோபித லிங்கம் தத்ப்ரணமாமிஸதாசிவ
[லிங்கம்"

"குங்குமசந்தந லேபிதலிங்கம் பங்கஜஹார ஸுசோபிதலிங்கம்
ஸஞ்சிதபாப விநாசகலிங்கம் தத்ப்ரணமாமி ஸதாசிவலிங்கம்"

"தேவகணார்சித ஸேவிதலிங்கம் பாவைர்பக்திபி ரேவசலிங்கம்
திநகரகோடி ப்ரபாகர லிங்கம் தத்ப்ரணமாமி ஸதாசிவ லிங்கம்"

"அஷ்டதளோபரி வேஷ்டித லிங்கம் ஸர்வ ஸமுத்பவ காரணலி
அஷ்டதரித்ர விநாசகலிங்கம் தத்ப்ரணமாமி ஸதாசிவ [ங்கம்
[லிங்கம்"

"ஸுரகுரு ஸுரவர பூஜித லிங்கம் ஸுரவந புஷ்ப ஸதார்சித
பராத்பரம்பர மாத்மகலிங்கம் தத்ப்ரணமாமி ஸதா [லிங்கம்
[சிவலிங்கம்"

---

இவ்வித மகிமை வாய்ந்த சிவலிங்கத்தைத் திருக்கோயிலிற் சென்று தெரிசித்தவரும், துதித்தவரும், தாம் பூருவத்திற் செய்த பாவமுழுதும் ஒழியப்பெற்று இம்மையிலே சதகோடி கநகதாந கந்நிகாதாந கோதாந பலனையும் பலபோகங்களையும், செல்வங்களையும், மங்களங்களையும் அடைந்து அந்தத்திலே சிவலோகத்தைப் பெறுவார்கள்; இதற்குப்பிரமாணம் :—

## சிவபுண்ணியத்தெளிவு-47-62.

"தங்கங் கநக மேருவரை தானங் கொடுத்தல் சதகோடி
மங்கு லளகக் கன்னியரை வளத்தி னளித்த லொருகோடி.
துங்கந் தருகோ டைத்தீம்பாற் சுரபிவழங்க றுலங்குசிவ
லிங்கந் தனையே தரிசித்தோர்க் கெய்தும் பலத்துக் கிணையாமா
[ல்"

"அற்பமகத் துவம்வறியோ ரதிகதன முடையோ
ரளித்தவர்க்குப் பலஞ்சமமா மாதலினுல் விதாந
கற்புடைய விதியினரா யொருபொழுதா லயத்திற்
கண்ணுதறன் றிருமுன்னர்க் களிப்புடனேத் தினர்தாம்
பொற்புடைய பலபோகஞ் செல்வங்க ளவையும்
பொருந்தியிக லோகத்திற் போதகமுற் றிருந்தே
அற்புதமெய் யந்தத்தி லடைவர்முத்தி யெனவே
யநாதிமுத்தன் மலவயிரி யறைந்தனனு கமத்தே"

## சிவரகசியம்.

### புலோமைச்சருக்கம்-16-21-25.

"இலிங்கதரி சனத்தினிக பரத்தின் மேன்மை
யெய்திடல்போ லொருகருமத் தெய்தி டாதால்"

"ஐயவிவன் புரிந்தபா வந்த னக்கே
யளவில்லை யானுலு மிலிங்க நாதன்
செய்யதெரி சனத்தினற் புனித னுகித்
திருக்கயிலா யச்சிலம்பிற் செல்கின் றுனற்
றுய்யசிவ லிங்கதெரி சனத்தின் மேன்மை
சுரர்முனிவர் தங்களா லியற்ற லாமோ
தையலுமை சங்கரன்க ணேசன் செவ்வேள்
சதுர்வேதந் தாமுமறிந் துரைக்க லாமோ"

"ஆனதால் வில்வவன பால கேளா
யருளிலிங்க தெரிசனத்தி னதிச யம்போல்
மாநலஞ்சேர் தருமங்க ளொன்று மில்லை
மற்றதுவே சகலமங்க ளங்க ணல்கும்
தேனலர்கூ விளத்தினிளந் தளிர்க டாங்குஞ்
சிரலிங்க மாமிதனைத் தெரிசித் தோர்க்கும்
ஈனமிலாக் கல்யாண சுகங்க ளெய்து
மிதனிலொரு சந்தேக மில்லை யன்றே"

## காஞ்சிப் புராணம்.

### சிவபுண்ணியபடலம்-6.

"இம்முறையிற் ருபித்த சிவலிங்க மிறைஞ்சுநரும் விமான மேல்கொன்—டம்மலர்ப்பூங் குழற்பணைத்தோ ளரம்பையர்சா மரையிரட்ட வமரர்போற்ற—எம்மருங்கு மிசைமுழங்கப் பெருந் தேவ ரழுக்கறுப்ப வினிதி னேகிச்—செம்மலருட் சிவலோகத் தானந்தந் திளைத்துறைவார் பிறவுங் கேண்மோ"

---

சிவலிங்கப் பிரதிஷ்டையும் சிவபூசையுமே, எல்லாவற் றுள்ளுஞ் சிறந்தன; இவற்றிற்கிணையாவன, வேறில்லை; ஏனைய வுருப்பிரதிஷ்டை பூசைகளைப் பார்க்கினும், இவற்றிற் சிவபெரு மானுக்கதிக விருப்பமாம்; சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தவர் கள், தீவினைக்கட்டையும் ஜநநமரண துக்கத்தையு மொழிந்து மோக்ஷமடைதல் நிச்சயம்; தீர்த்தஸ்நானம், விரதம், தானம், யாகம், தவம் முதலியவைகளா லடையக்கூடிய பலன்களெல் லாம், சிவலிங்கப் பிரதிஷ்டைப்பலனிற் கோடியிலொரு பங்கை யொவ்வா; சிவலிங்கப் பிரதிஷ்டையாலடையும் பலனை, வேறு உபாயத்தாலடைய முடியாது; சிவலிங்க ஸ்தாபநஞ் செய்வதா னது, மூன்று புவனங்களையும் ஸ்தாபித்தலோ டொக்கும்; பாம்பு, துஷ்டமிருகம், பைசாசம், அக்கினி, பிணி, நவக்கிரகம், கள்வர், கொடியோர், மன்னர் முதலியோர்களா லேற்படுந் துன்பங்கள், சிவபூஜகரையடையமாட்டா; இயமனும் அவரைக்குறுக அஞ்சு வான்; அன்றி அடிமையுமாவான்; பகை பாவம் அச்சம் பழி முதலிய அரிஷ்டங்க ளெல்லாமும் சிவபூசையினுலே நிவர்த்தி யாகும்; கல்வி செல்வம் மனைவி மக்கள் சேனை வெற்றி பிரதாபம் கீர்த்தி தேவபதவி அஷ்டமாசித்தி பதமுத்தி பரமுத்தி இவைக ளுள் விரும்பியவற்றை விரும்பியவாறு சிவபூஜகரே யடைவர்;

விட்டுணு பிரமா இந்திரன் சந்திரன் சூரியன் முதலியதேவர் முனிவர் சித்தரனைவரும் சிவலிங்க பூசையினாலேயே வேண்டும் பதவிகளை யடைந்தார்கள்; அறிவினாலாவது மயக்கத்தினாலாவது வஞ்சனையினாலாவது பொருளிச்சையினாலாவது விளையாட்டினாலாவது சிவலிங்க பூசையைச் செய்தோர், சுவர்க்கமடைவது திண்ணம்; சிவலிங்க பூஜாபலத்தால், இந்திராணி 'இந்திரன் மடித்தலத்தின்கண்ணும், சரஸ்வதி பிரமனாவின்கண்ணும், இலக்குமி விட்டுணுமார்பின் கண்ணும் வசிக்கப் பெற்றார்கள்; எவர்கள் எவற்றை யிச்சித்தாலும் சிவலிங்கபூசை செய்வராயின் அவர்கள் அனைத்தையு மடையலாம்; வேதத்தில் உத்தமமென்றெடுத்துக்கூறி விதிக்கப்பட்டது, சிவலிங்கார்ச்சனை யொன்றேயாம்; இவற்றிற்குப் பிரமாணம்:—

## காஞ்சிப் புராணம்.

சத்ததானப் படலம்-8. சிவபுண்ணியப் படலம்-3-4-5.
மகாலிங்கப் படலம்-22-23.

"சிவலிங்கப் பதிட்டை செய்த லெவற்றினுஞ் சிறந்த தாகும்"

"கயக்கமுறு மறக்கடையின் சிமிழ்ப்பறுத்துப் பிரமாண்டக் கனத்தை நூறி—மயக்கமிகும் வினைப்பகையும் பெரும் பிறவிப் பழம்பகையு மறுக மாட்டி—வயக்கமுறு சிவபதத்தி லுய்க்கு மிலங் கயில்வாளாய் மாறா வாழ்வு—பயக்குநுதல் விழிக்கடவு ணயக்குமருட் சிவலிங்கப் பதிட்டை யம்மா"

"விரைமலரோன் மணிவண்ணன் முகிலூர்தி முனிவர்சித்தர் விண்ணோர் யாரும்—வரைகளினும் வனங்களினும் வார்ந்தநதிப் புடைகளினு மணிநீர் வேலைக்—கரைகளினு மெங்கெங்குங் கண்ணுதலோன் சிவலிங்கப் பதிட்டை யொன்றே—உரைவிளங்கச் செய்தமைத்தா ரன்றிவே றெவன்செய்தா ருணர்வான் மிக்கீர்"

"மேதகைய தவந்தீர்த்தங் கொடைவேள்வி துறவுநிலை விரதம் யாவும்—ஓதுசிவக் குறிநிறுவும் பயன்கோடி படுங்கூற்றி னொன்றுக் கொவ்வா—ஆதலினச் சிவலிங்கம் வேதிகையி

ணுடுஞ் சிலையா னமைப்போர் யாரும்—ஏதமறுத் தவ்வுடம்பின் வீடெய்தப் பெறுவரிதற் கையுறேன்மின்"

"நியதிமகந் தவந்தானம் விரதநிலை பிறவற்றி னிகழ்த்தும் பூசைப்—பயனெவையு மிலிங்கபூ சனைகோடி கூற்றிஞெரு பயனுக் கொவ்வா—வியனுலகை முய்யுமுறை யிவ்வாறு நமதாணை விதித்தேம்"

"விரிநீர் வைப்பில், நீப்பரிய சிவலிங்க வழி
பாட்டின் பேறெவரே நிகழ்த்த வல்லார்"

## சிவரகசியம்.

வருணச் சருக்கம்-53-54-94. மன்மதவதைச் சருக்கம்-37.

"பத்தியொன்று மின்றியே யிலிங்க பூசை
பாவித்தாற் பாவங்க ளெல்லாம் போமென்
றுத்தமர்கள் சொல்கின்ற ராகையால்யா
னுறும்பூசை புரிகின்றே னுள்ளங் கையில்
வைத்த செந்தீச் சுடாமலொழிந் திடுவதின்றே
வள்ளலார் பூசையுமப் படிதான் பாவம்
அத்தனையும் போக்கிநெற்றிக் கண்ண னுர்தம்
மரியவுருப் பெறவளிக்கு மரச ரேறே"

"ஈசனு ரிலிங்கபூசைக் கிணைதவந் தருமமில்லை"

"பொருள்பல நாடிக் கொண்டு புனிதனு லயத்துட் சென்றே
அருள்புரி யிலிங்க பூசை யுபசாரத் தாற்று வீரால்
மருள்புரி சோம்ப லின்றி வருங்காலந் தப்பா வண்ணம்
ஒருமையாற் பணியிற் பாவ மொழிந்தின்பம் பெறலா மன்றே"

## திருக்காளத்திப் புராணம்.

தானமகிமையுரைத்த வத்தியாயம்-50-51-52-53.

தாருகாவன விகாரமுணர்த்திய வத்தியாயம்-78-89.

"அறிவ ருஞ்சிவ லிங்கபூ சனைக்கிணை யாகப்
பிறிது பூசையு மில்லைகாண் பெட்புற விழைத்த
எறிசு டர்ச்சிவ லிங்கநற் பதிட்டையோ டிணையா
அறைய வல்லதோர் பதிட்டையும் வேறிலை யணங்கே"

"உள்ள மெண்ணிய தெவ்வுரு வவ்வுரு வுனுற்றித்
தெள்ளி திற்புரி பூசனை யினுஞ்சிவ லிங்கத்
தெள்ள லின்றிய பூசனை யேயெமக் கினிது
தள்ள ருஞ்சிவ லிங்கபூ சனைதரு பயனே"

"பிறிது மோருபா யத்தினுற் பெறுவதிங் கரிதால்
நறைது ளித்ததண் மலரய னூரணன் மகவான்
எறிசு டர்க்கதிர் வெண்மதி யிவர்முத லாய
மறுவில் வானவர்க் கதிபரு மற்றையர் யாரும்"

"சாற்ற ருஞ்சிவ லிங்கபூ சனையினுற் ருமே
ஆற்றல் சான்றுள வழிவிலாப் பதவிக ளடைந்தார்
தேற்று மன்புடன் சிவலிங்க தாபநஞ் செய்யின்
ஏற்ற முப்புவ னங்களுந் தாபித்த தெனலாம்"

"புகல ருஞ்சிவக் குறியினி லருச்சனை புரிதல்
பகர்வு திற்பதி னுயிர மடங்குள பயனும்
நிகரி னும்முளம் விழைவன முழுவது நீவிர்
தகுதி யிற்பெற வணங்குமின் சிவக்குறி தன்னில்"

"மறைந்த பின்றையம் மாதவர் மன்றலங் கமலத்
துறைந்த பண்ணவர்க் குறுகிநம் மாகம முணர்ந்தாங்
கறைந்த வவ்வழி யடங்கிய வுளத்தொடு மழகு
சிறந்த நங்குறிப் பதிட்டையும் பூசையுஞ் செய்தார்"

## உபதேசகாண்டம்.

### சிவார்ச்சனை மான்மியச்சருக்கம்-16.

"எண்ணு செய்யுமொத் தெங்கணு நிறைந்தரு ளிவனைத்
திண்ணெ டும்புவி யிலிங்கத்தி னருச்சனை செய்வோர்
நண்ண ருங்கதி நண்ணுவர் சத்திய நவின்றேம்
ஒண்ணெ டுஞ்சடை முனிவிர்கா ளுண்மையீ துண்மை"

## திருவதிகைப் புராணம்.

### திரிபுராதிகளூற்பத்திப் படலம்-12-13.

"இலிங்க பூசையே யறங்களு மளித்திடு மினிய
இலிங்க பூசையே யாக்கமு மளித்திடு மிருளே
இலிங்க பூசையே நீக்கிநல் லின்பமு மீயும்
இலிங்க பூசையே முத்தியை யீந்திடு மின்னும்"

“ஏது வேண்டினு மெய்ச்சிவ பூசைசெய் திட்டாற்
கோதுறுதுதல் விரைவினி லளித்திடுங் குன்ற
மாது கேள்வனு மென்பது சத்திய மலர்ந்தத்
நீதி லாச்சிவ பூசையின் திறமதைச் செப்பில்”

## திருக்கூவப் புராணம்.

### திரிபுரதகனச் சருக்கம்-11-12-43-44.

“செல்வமும் பதாதியுஞ் செறுநர் தங்களை
வெல்வதும் வீரமும் புகழு மேன்மையும்
கல்வியும் புதல்வருங் கதியும் வேண்டுநர்
எல்வரு மிலிங்கபூ சனையி யற்றுவார்”

“அல்லலும் பழிகளும் பகையு மச்சமும்
செல்லலும் பிணிகளுஞ் செயிரு நிந்தைகள்
சொல்லலு மிடியும்வெஞ் சோக மோகங்கள்
புல்லலு மிலிங்கபூ சனையிற் போகுமால்”

“பன்ன கத்தினு லடுஞ்சின விலங்கினுற் பசாசால்
துன்ன வக்கிர கங்களாற் பிணிகளின் றொடர்பால்
மன்ன ராற்கொடி யோர்களாற் கரவரன் மருவும்
இன்னன் மெய்ச்சிவ லிங்கபூ சனையினோர்க் கியையா”

“பாவ கோடிகள் பயின்றிடு பதகரே யெனினுந்
தேவ தேவனைச் சிவலிங்கத் தருச்சனை செய்வோர்
தாவின் மாதவப் புண்ணிய ரேயவர் தம்பால்
மேவு வானல னந்தகன் றனதுளம் வெருவி”

## விருத்தாசல புராணம்.

### சிவபூஜாவிதிச் சருக்கம்-7-8-9-10-11.

‘சிவலிங்கத் தொருகை பூநீர்ச் செலுத்திடில் விருத்த வெற்பிற்
கவனமின் மருது மேரு காசிசா கரத்திற் கங்கை
யிவர்பிர யாகை கேகை யிமகிரி யாதி தன்னிற்
றவநெடுங் காலஞ் செய்து தருமமுஞ் செய்தா லொக்கும்”

“வெகுவித விரதஞ் சாந்தி மெய்ப்பரி மேதங் கோடி
தருபல னொருநாட் பூசை தனைச்செயின் மரண துக்க
இகலிலை மகவான்செல்வ மிவன்கொடுத் தவர்க்கே யுண்டாம்
மகபதி செல்வந் தானு மற்றவன் கொடுத்தா லுண்டாம்”

"எந்தெந்தப் பதமிச் சித்தா னேனுகா மியமிச் சித்தான்
அந்தந்தச் செல்வ முண்டா மட்டமா சித்தி வித்தை
நிந்தையி றேவ ராஜ நித்யகல் யாணங் கீர்த்தி
சிந்தையாற் சலம்பூக் கொண்டு சிவனையர்ச் சித்தா லுண்டாம்"

"வாசவன் மலரோன் மாயன் மகிழ்சிவ பூசை செய்து
தேசுடைக் கடவு ளானார் திருவாணி யிந்தி ராணி
ஈசுரன் பூசை யாலே யிருங்கவான் முகத்தின் மார்பிற்
பாசமின் மூவர் தம்பாற் பரிவிடம் பெற்றா ரன்றே"

"ஆரிடங் தேவ லிங்க மிராக்கதம் படிகந் தீர்த்தம்
சார்புடைச் சுயம்பு வெற்புத் தாபித்த தியற்றிற் பூசை
ஏருடைமறலி தானு மிவர்தமக் கடிமை யாவன்
சேர்வர்சா ரூபந் தேவர்க் கிறைபதி னுல்வர் காலம்"

## திருவான்மியூர்ப் புராணம்.

### வான்மீகர் பூசித்த படலம்-83.

"சிவலிங்க பூசை யொன்றே யிம்மைக்கு மறுமைக்குஞ் சீர்த்தி
யாகும்"

## கடம்பவன புராணம்.

### இலீலாசங்கிரக வத்தியாயம்-336-340.

"ஆதிநாயகன் படிவமா மிலிங்கத்தி னருச்சனை செயவேண்டும்"

"சிவனை யன்றியே மற்றொரு தேவிலை சிவார்ச்சனை யன்றியேவேறு
பவமகற்றுமோர் நோன்பிலைச் சிவபத மன்றியோர் பதமில்லை"

## கூர்ம புராணம்.

### சிவபூசைப்பலனுரைத்த வத்தியாயம்-13-14.

"என்றனு மறையோனுளமகிழ்ந் தினிதி னேந்திழை கேட்டியாரேனும்—மன்றநல் லிலிங்கத் தொருசரு கிடினு மணிமுடியவர் தலைக் கணியாம்"

"அறிவினு லேனு மருளினுலேனு மருவிளை யாட்டினுலேனும்—கிறியினு லேனும் வஞ்சகத் தேனுங் கிளர்பொரு ணசையினுலேனும்—இறைவனல் லிலிங்க பூசனைசெய்தோ ரெந்தைதன் பெயரினை நவின்றோர்—குறைவறு துறக்க மடைவது திண்ணங் கொன்றைவே ணியன்திரு வாணை"

## சூதசங்கிதை.

### சிவபூஜாவிதியுஞ் செய்தோர்பெருமையுமுரைத்த வத்தியாயம்-2-3-4-5-6.

" மருக்கிளர்மலர்க ளுட்டா மரைமல ருயர்ந்தாற் போலும்
விருக்கமுள் ளவற்றுட் டெய்வமிளிர்தரு வுயர்ந்தாற் போலும்
உருக்கொள்பன் மனுக்களுள்ளு மைந்தெழுத் துயர்ந்தாற் போ
தருக்குபல் பூசை யுள்ளுந் தம்பிரான் பூசை யேற்றம்" [லும்

" சாற்றிடு முறுப்பி யாவுந் தலைக்குமே லுயரா பாவங்
காற்றிடு நதிகள் யாவுங் கங்கைமே லுயரா வானம்
ஆற்றிடும் பலரைப் போற்றும் பலமெலா மடுத்தோர்சென்மம்
பாற்றிடுஞ் சிவனைப் போற்றும் பலத்தின்மே லுயரா வன்றே "

" மலர்ந்தமண் புரக்க வேண்டின் வானகங் காக்க வேண்டின்
அலர்ந்தபூ விருக்கை வேண்டி னவிர்கடற் கிடக்கை வேண்டின்
நலந்தரு மின்ப முத்தி நண்ணிட வேண்டிற் கூற்றின்
வலந்தரு முயிர்கு டித்த மலரடிப் பூசை செய்வார் "

" திருவமிக் கடைய வேண்டிற் செம்மகப் பேறு வேண்டின்
மருவலர்ச் செருக்க வேண்டின் மாண்பொருட் கல்வி வேண்டின்
வருபெரும் புகழ்ச்சி வேண்டின் வான்முத லெவ்வி டத்தும்
பொருவிலி பூசை யன்றி மற்றெவற் றாலும் பூவா "

" வானவ ரியக்கர் சித்தர் கருடர்கிந் நரர்மா நாகர்
தானவர் நிருதர் விச்சா தரர்முனி வரர்கண் மற்றை
மானவ ரிவருள் யாரே மதிமுடிப் பெருமான் பாதத்
தானவர்ச் சனைசெ யாதா ரச்சிறப் புரைப்பி னீளும் "

## திருவிளையாடற் புராணம்.

### இசைவாதுவென்ற படலம்-33.

" குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும்பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி "

## திருநாகைக்காரோணப் புராணம்.

### புண்டரீகமுனிவர் முதற்காட்சியுரைத்த படலம்-26.

" பிரியமிக வனைத்தினுக்கும் பிரமான மாயமறை
தெரியவெடுத் தினிதுரைத்தல் சிவலிங்கார்ச் சனையொன்றே
உரியவெனப் பிறர்வடிவ முரைத்ததுமற் றுண்டுகொலோ
அரியதவத் திருமைந்த வறைவதெவ னிதன்மேலும் "

---

தினந்தோறும் நியமமாக ஆன்மார்த்த பூசை செய்து வருபவர்கள், யாதானுமோரிடையூற்றால் அதனைச் செய்ய வியலாமை நேர்ந்தபொழுது, திருக்கோயிலிற் சென்று பரார்த்த சிவலிங்கப் பெருமானைத் தெரிசித்துப் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்வாராயின், அது செய்த பலனையு மடைகிறார்கள்; திருக்கோயிலின்கண் ணுள்ள பரார்த்த லிங்கமானது, தன்னைத் தெரிசிக்குஞ் சகலஜனங்களுக்கும் பலனைத் தருவதே யாயினும், ஆன்மார்த்த பூஜகர்கள் அப்பூசை செய்ய முட்டுற்ற பொழுது தெரிசிப்பின் ஆன்மார்த்த பூஜாநஷ்ட நிவிர்த்தியோடு பலனைத் தருதலால், ஆன்மார்த்த பூசைத்துறைப் புகுந்தார்க்கு மிக்க ஸாதகத்ததாகும்; இதற்குப் பிரமாணம் :—

## விருத்தாசல புராணம்.

### சிவபூசாவிதிச் சருக்கம்-31.

"பூசையை யிழந்த நாளில்—அண்ணலைக் கோயில் சூழ்ந்து பணியிலர்ச் சனைய தாகும்—உண்மையாங் குருவாற் பெற்றவுபதேசங் கொண்டே செய்வான்"

## திருநெல்வேலிப் புராணம்.

### சிவபூஜாமகிமைச் சருக்கம்-82.

"சிவனையர்ச் சனைசெய் வோர்கள் செய்திடா நாளிற் சென்று
பவமறக் கோயில் சூழ்ந்து பணியிலர்ச் சனைய தாகும்"

---

மதுரா நகரத்தை யாண்ட மன்னர் பெருமான் வரகுண பாண்டியர், சிவலிங்கவுருப் போன்ற வுருவாய்க்கப் பெற்ற வேப்பம் பழங்கள் கீழே விழலாகாதெனப் பேரன்பினாற் கருதி, அப்பழங்களை யுதிர்க்கும் வேப்பமரங்கட் கெல்லாம் விதானமமைத்தனரென் றறியும்படி, திருவிடைமருதூர் மும்மணிக் கோவை-28-ல் "காம்பவிழ்த் ததிர்ந்த கனியுருக் கண்டு—வேம்புகட் கெல்லாம் விதான மமைத்தும்—புரிகுழற் றேவியைப் பரி

வுடன் கொடுத்த—பெரிய வன்பின் வரகுண தேவர்" எனக் கூறிய பட்டினத்தடிகள் திருவாக்கு, அவ்வரசரது அன்பின் முதிர்ச்சியோடு சிவலிங்க மகிமையையும் விளக்காநிற்கும்.

சிவலிங்கமானது, மூர்த்திகட் கெல்லாம் மூலவித்தாயும் லோகோற்பவலய காரணமாயும் விளங்குவதாதலால் அதனது மகிமை எவராலும் அளவிட்டுரைக்க முடியாத அபரிமிதமாம்.

## கனம்பொருந்திய, இ-வலகையார்களே!

இனி, சிவலிங்கப் பகுப்புளொன்றாயுயர்ந்த வாணலிங்க மகிமை, மேற் பிரஸ்தாபித்தபடி அடுத்தசருக்கத்திற் கூறுகின் றேன்; அதனையும் தயவுசெய்து பார்வையிடக் கோருகின்றேன். சுபம்.

சிவலிங்க மகிமைச் சருக்கம் முற்றிற்று.



## வாணலிங்க மகிமைச் சருக்கம்.

நூதனச்செய்யுள்.

வான னொளொன் றுக் காயிர மண்ணினுற்
றூனு வின்னுருக் கண்டு சபரியை *
பேணி நின்மதைப் பெய்யச் சுயம்புவாம்
வான லிங்க மகிமைய்யக் கூறுவாம்.

---

திருக்கோயிலிற் சென்று வழிபடும் ஆன்மாக்களுக்குச் சிவ பெருமான் சாந்நித்தியரா யிருந்து அநுக்ரஹிப்பன, பரார்த்த லிங்கங்களாகும்; அவை, சுயம்புலிங்க மெனவும், காணலிங்க மெனவும், தைவிகலிங்க மெனவும், ஆரிடலிங்க மெனவும்,

* சபரியை—பூசை.

மாநுட லிங்க மெனவும் ஐந்து வகைப்படும்; அவற்றின் றேற்ற மும் இலக்கணங்களும் இங்கே எழுதப்புகின் விரியும்; வாயு சங் கிதை, கடம்பவனபுராணம், விருத்தாசல புராணம், காஞ்சிப் புராணம், சைவசமயநெறி, சைவவினுவிடை முதலிய நூல்க ளுட் காண்க.

வாணலிங்கம் என்பது, சிவபக்த சிகாமணியாகிய ஆயிரங் கைகளையுடைய வாணுசுரனென்பவன், தினமொன்றுக்கு ஆயிரம் மூர்த்தி வீதம் வரன்முறையாகத் தன்னுயுள்காறும் மண் ணெடுத்து இலிங்கமாக வாணித்துப் பூசித்து நருமதாநதியி லிட்டுவந்து அந்தத்திற் சிவபெருமானிடத்தில் இவ்விலிங்கங்க ளெல்லாம் தன் பெயரால் உலகில் என்றென்றைக்கும் வழங் கிவரல் வேண்டு மெனவும் இவற்றை யெடுத்துப் பூசித்தோ ரெல்லாரும் சிவபத மடைய வேண்டு மெனவும் வரங்கேட்டுக் கொள்ள, அவ்வாறே சிவபெருமானும் அநுக்ரஹித்த காரணத் தால், இன்றைக்கும் சிவசாந்நித்யாதிக முடைய விடங்க மூர்த் திகளாய் அவன் பெயரால் வழங்கப் பட்டு வருவதாகும்; வாணித்தலால் வாணுசுரனென்னும் பெயர் அவனுக்கு வந்தது; வாணித்த லென்னுஞ் சொல்லுக்கு, செய்த லென்பது பொரு ளாம்; அச்சொல், வடமொழியில் "வணநம்" எனப்படும்;

விட்டுணுப் பிரமேந்திராதி தேவர் முனிவர் அசுரர் முதலி யோர்களி லநேகர் தத்தமதிஷ்ட சித்திகளைப் பெறும் பொருட் டால் இவ்வாணலிங்கங்களை யெடுத்துப் பூசித்து அவ்வாறு பெற்ற பின்பு மறுபடியும் நருமதை, கங்கை, யமுனை என்னும் நதிகளிலிட்டமையால் அம்மூன்று நதிகளிலும் அவைகள் இக் காலத் தெடுக்கப்படும்; அவர்களா லெடுத்துப் பூசித்து மறுபடி யும் நதிகளில் விடுக்கப்பட்ட வாணலிங்கங்களில் அவரவர்களது ஆயுதச்சிந்நங்கள் பொருந்தி யிருக்கும்; அந்தப் புநராவர்த் தந நதிபதந லிங்கங்களை, அந்த ஆயுதச் சிந்நங்களாலறியலாம்;

வான லிங்கங்கள்; திருக்கோயிலிற் பரார்த்தமாக வைத்துப் பூசித்தற்கும் பூசைப்பேடகத்தில் ஒவ்வொருவருந் தனித்தனி ஆன்மார்த்தமாக வைத்துப் பூசித்தற்கும் தக்க மகிமையையுடையனவாகும்; நருமதாவான லிங்கத்துக்குச் சமானம் எவ்வுலகத்திலுமில்லை; வாணலிங்கத்திற் சிவபெருமான் க்ஷணப்பொழுதுமகலாமல் அநவரத சாந்நித்தியராயிருந்து உளம்பூரிப்பராதலால், மாணிக்க லிங்கம் முதலிய எவ்வகைபட்ட லிங்கங்களும், இவ்வாண லிங்கத்துக்கிணையாக மாட்டா; இவ்வாணலிங்கத்திற் செய்யப்படும் பூசையானது, ஒன்று அநந்த கோடியாகும்; இவ்வாணலிங்கத்தில் நாகப்பூண்டரித்திருத்தல் வேண்டுமெனவும், சிவசாந்நித்யாதிகமுறல்வேண்டு மெனவும் நருமதாநதிதேவி வரங்கேட்ட பொழுதும் அவ்வாறேயாகுகவெனச் சிவபெருமான் அநுக்ரஹித் திருக்கின்றார்; ஆதலால் நாகப்பூண்டரித்து விளங்கு மிலிங்கங்களும் அநேகமுண்டு; இவ்வாண லிங்கங்களுக்குள், வெண்மை, செம்மை, பொன்மை, கருமை யென்னும் நான்கு நிறத்தனவுள; அவற்றுள், வெண்ணிற லிங்கங்களுயர்ந்தனவாகும்; இவ்வாணலிங்கங்களுக்குள், நீர்க்குமிழி போன்ற வடிவத்தன உத்தமமும், முட்டைபோன்ற வடிவத்தன மத்திமமும், இடபத்திமில் போன்ற வடிவத்தன அதமமுமாகும்;

வாணலிங்கமென்பதற்குப் பரீக்ஷை யாதென்னில், லிங்கத்தை, தராசிலிட்டு மூன்றுமுறை நிறுத்துப் பார்த்தால், ஒரு முறையிலிருந்த நிறை மற்றொரு முறையிலிராமற் பேதித்திருத்தலாம்; பேதித்திருத்த லெப்படி யென்னில்? முதற்றடவை நிறுத்தபோது முப்பது ரூபா யெடையாக நின்ற லிங்கமே, மறுதடவை நிறுக்கும்போதும், மூன்றாந்தடவை நிறுக்கும்போதும், ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து ரூபாய் முதலாக ஏற்றபெற்றி கூடியேனுங் குறைந்தேனுங் காட்டிநின்று ஒருதடவை

யிலிருந்த எடை மற்றொருதடவையி லிராமற் பேதப்படுதலாம் ; எடை வித்யாசம், லிங்காகிருதிக்குத் தக்கபடி காணப்படும் ; கீழ்க்காட்டப்பட்ட சுருதிப்பிரமாண மொருவாறிருக்க, அச்சமும் உறுதியும் அன்பும் சாமானியர்கட்கு முண்டாகும்படி தெய்வத்தன்மையை எடைவித்தியாசத்தாற் காட்டுங் காக்ஷிப் பிரமாணத்தாலும் அநவரத சிவசாந்நித்ய வாணலிங்கமகிமையானது, நன்கு விளங்கும்; வாணலிங்கம் மும்முறையினும் எடை பேதித்தமையை, சாதுக்கள் சார்பிலிருந்து அடியேனும் பார்த்திருக்கின்றேன் ; பார்க்கும்போது மயிர்க்கூச்சலிடும் ;

வாணலிங்கம், சிறிதாயிருப்பினும் பெரிதாயிருப்பினும் பூசைக் குபயோகமாகும் ; பூசிப்பார்க்கு முத்தியுஞ் சித்திக்கும்; வாணலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தவர்களும், பூசித்தவர்களும், தெரிசித்தவர்களும் இம்மையிலே அறம்பொருளின் பங்களைப் பெற்றுவாழ்ந்து முடிவிற் சிவஸாயுச்சியமாகிய நித்யாநந்தபவனத்தையடைவார்கள் ; இவற்றிற்குப் பிரமாணம் :—

## உபதேச காண்டம்.

வாணசுரன் பூசனைச் சருக்கம்-19-20-232-233,

" மண்ணெடுத்துவா ணித்தலான் மதுநுக ரியற்கையால்
வயிரத் தோங்குந்—திண்ணெடும்புயத் தசுரன்வாணசுர
னென்னும்பெயர் சிறப்புற்றான் "

" ஆடி ருங்கொடிச் சோணித மாநக ரந்நகர்க் கருகாகி
ஓடு மாநதி நருமதை யந்நதி மருங்கிருந் துமையாட்கு [ன்
மாடு வந்தரு ளெம்பிரா னருச்சனை வரன்முறை வகுத்தன்னே
நீடு வைகலொன் றுயிர மிலிங்கமந் நீணதித்துறை வீழ்ப்பான்"

" கருணை பெற்றுநின் கணத்துளே ருகவுங் கருத்திற்
பெருகு மன்பொடு நின்னடி யருச்சனை பேணி
நரும தைப்பெரு நதியிடைப் படுத்திய விலிங்கம்
இருநி லப்புறத் தென்பெய ராக்கவு மியைந்தேன் "

"அந்த மாநதி யிலிங்கமற் றருச்சனை யயர்ந்தார்
எந்தை நின்னடி பெறவருளீகுதி யென்றான்
அந்த நல்வரம் யாவையு மளித்தன னமலன்
புந்தி கூர்ந்தவன் றன்னொடுங் கயிலைபோய்ப் புகுந்தான்"

## சைவசமயநெறி.

82-முதல்-90-வரை, 93-114-123.

"நன்மதை கங்கை யமுனை யெனநதிலும்
இன்னவித நன்னதியி லேய்ந்து"

"அயனரியு மண்டரு மற்றசுரர் தாமும்
பயனடையப் பூசைபணி னர்"

"சிவலிங்கந் தன்னிலவர் சிந்தமுறு மந்தச்
சிவலிங்கந் தன்னிலது தேர்"

"வாண னெனுமசுர னர்ச்சித்தான் மந்திரத்தால்
வாணலிங்க மாகுமது மன்"

"துலையினிறுத் தான்முக்காற் பேதித்துத் தோன்றின்
இலையையம் வாணலிங்க மென்"

"உத்தமமே நீர்க்குமிழிக் கொத்தெழுந்த வாணலிங்கம்
மத்திமமண் டத்தினையா வந்து"

"ஏற்றின்குட் டேற்றேற் கனிட்ட மிடையெழுவாய்
ஏற்றங் கனிட்டமிழுக் கிங்கு"

"வெண்மை சிவப்பு விளங்கியிடும் பொன்கருமை
என்னுமிவை யந்தணர்முன் னெண்"

"அரிதேற்பொன் னந்த மனைவர்க்கு மாகும்
கரியசிவ லிங்கமெனக் காண்"

"நீங்காதே வாணலிங்கந் தன்னினுறு நின்மலன்றான்
பாங்காகப் பூசையினைப் பண்"

"முடிதூல மாமுக முந்நதமாஞ் சூக்கம்
அடிவாண லிங்கத்தென் றார்"

"வாணலிங்க மற்றுஞ் சலாசலமே மண்டலமுங்
காணினசலசலங் காண்"

## கடம்பவன புராணம்.

இலீலாசங்கிரக வத்தியாயம்-343, 344.

"பகிரதி யுயர்கா ளிந்திசா ரதியா திக்கனு ழியின்பரிந் திமையோர்—நிகர்தவர் பூசித் திட்டன வனந்த நிகழ்ந்திடுந் தேவ மாரிடமாம்—வகிர்பிறை யெயிற்ற வவுணர்கோன் வாணன் வழுத்தின வாணலிங் கமதாம்—நிகரறு படிவ மெவரருச் சித்தா ரவர்சிந்த நிறைந்துறு மவற்றில்"

"நிறுத்திடின் முக்கா லந்நிறை யொவ்வா தெனினது நிகழ்த்துவா ணமதாம்—பிறித்திடும் வெண்மை செம்மையே பொன்மை பிறங்கிய கருமையிந் நான்கும்—குறித்திடு நான்கு வருணத்திற் குரிய கூறுமிம் முறைகிடைப் பரிதேற்—கறுத் தமை யார்க்கு மாகும்வா ணத்தெங் கடவுள்விட் டகன்றுவே றுறையான்"

## சிவரகசியம்.

அபுத்தி பூருவபுண்ணியச்சருக்கம்-18-19. பாக்கியதேவதைச் சருக்கம்-14 சிலாதரன்சமகவாங்கேட்ட சருக்கம்-34. நதிகள்வரம் பெற்ற சருக்கம்-13-14-15. ஞானவாலன் வயிராக்கியச் சருக்கம் 40-41-43. ஞானவாலன் கலியாணச் சருக்கம்-58.

"ஆவனுட னமதுபத்தன் பதிட்டை செய்த
வரியநரு மதையிலிங்க மதனைக் காணப்
போவதுநா மென்றதனின் மேன்மை யெல்லாம்
பூவைமொழி யாளுமைக்குப் புகலு கின்றான்"

"மங்களமே ணருமதையி லிங்க மாகும்
வாணலிங்கந் தனக்கிணையா வண்ட மீதில்
எங்குமிலை மாணிக்க லிங்கந் தானு
மிதற்கிணையோ மன்மகிழ்ந்தே யெந்த நாளும்
தங்கியக லாதிருப்போ மிதனைப் பூசை
தான்புரிவோ ரிகபரமுந் தழைந்து வாழ்வார்
அங்கதனைக் காணநமக் குளம்பூ ரிக்கு
மம்பிகையே யெனவவண்வந் தடைந்தா னன்றே"

"காமனைக்கண் ணுற்குமா கண்டன் றன்னைக்
காலினு லடர்த்தருளுங் கால கால

நாமனைப்பூ சனைபுரிய நினைதி யாயி
　　னருமதைம காவிலிங்க நாத ருகுஞ்
சோமனைச்சென் னியில்வைத்தான் றனையர்ச் சித்தாற்
　　சொலும்பூசை யொன்றநந்த கோடி யாகும்
நீயனத்தி னினைந்தவெலாம் பெறுதி யின்னு
　　நிகழ்த்துதும்யா நிமலனரும் பூசை தானே"

"முத்திசித்தி தருந்தலங்க டம்மிற் காசி
　　முதற்றலமத் தலத்திலிங்க முள்ள வெல்லாம்
உத்தமமெய்க் கதிகளுமே யுதவு மேன்மை
　　யுடையநரு மதையிலிங்க மேன்மை யொன்றே
மெய்த்தவத்தின் பயன்க டரும்"

"எனதிடத்திற் சிவலிங்க வடிவாகித் தேவரீ ரெந்த நாளும்—தனதிடமா விருந்தருள வேண்டுமிவை யறிந்தருச்சித் தார்கட் கெல்லாம்—மனதிலிட்டம் யாவுமளித் திடல்வேண்டு முனிவ ரொடுவானோர் தங்கள்—நினைவிலமை யிலிங்கங்கட் கிவைகோடி மடங்கதிக நிகழ வேண்டும்"

"தேவவுன்ற னுமைத்தாற் புனிதரா மதுபோலென் றீர்த்தந் தோய்ந்து—மேவுமருத் துறப்பெற்றோர் முத்தரா யிடவேண்டு மிக்க காசித்—தாவிலெழி லிலிங்கமொடு தனியிரச மாணிக்க விலிங்கந் தம்மில்—ஓவிலா யெப்போது மிவ்விலிங்கத் தமிமா னித் துறவே வேண்டும்"

"என்னுடைச்சோ மேசகுண்டத் திலிங்கதரி சனம்புரிந்தோ ரிறவா முத்தி—தன்னிடைச் சேர்ந்திடவேண்டு மவ்விலிங்க நாகப்பூண்டரித்தல் வேண்டும்—மன்னுமதி லதிகசாந் நித்திய நீருறல்வேண்டும் வாய்த்த லிங்கம்—பன்னுமது சிறிதுபெரி தேனும்பூ சிக்கின் முத்தி பலித்தல் வேண்டும்"

"பத்தியுட னதனைநரு மதையிலிங்கந் தனிற்சாத்திப் பணிந்தி லேனல்—முத்திநரு மதையிலிங்க முடிச்சாத்திப் பார்த்துமுடி
[சாய்த்தி லேனே"
"காணுற்ற வாணலிங்க பூசைசெய்து சந்நிதியிற் கண்ணீர்வார —ஏனுற்று வீழ்ந்திறைஞ்சி யினியவங்கப் பிதக்கணங்களியற்றி
[லேனே"
"மனோகாமா நருமதா லிங்கந் தன்னைப்-பன்னரிய பூசைசெய்து பரிசித்துத் தரிசியேன். பாவி பாவி—துன்னியகை யாற்றமு
[வேன்"

"வாய்த்தநரு மதையிலிங்க பூசை செய்வோர் பெருமைபுக லரி திகத்தி லின்ப மெல்லாம் பெற்றழியா முத்தியுமே பெறுவர்"

### காசிகாண்டம்.

நருமதேசன்வரலாறுரைத்த அத்தியாயம்-11

"நின்னிடத்துறு சிலையெலா மிலிங்கமாய் நிகழ்க
அன்ன லிங்கமு நருமதேச் சுரப்பெய ராக
சொன்ன லிங்கமேத் தூர்தமை மறலியுந் தொழுக
என்ன நல்வர மளித்தனன் மறைந்தன னென்னு"

---

இவ்வாறு ப்ரத்யக்ஷ தெய்வத்தன்மைவாய்ந்த வாணலிங்கங்கள், ஸ்வயம்புலிங்கங்களைப் போன்ற தகுதியுடையனவாதலின், முத்தித்தலங்களிற் றுனேதோன்றின ஸ்வயம்புலிங்கங்கட்கு யந்திரப் ரதிஷ்டை அநாவசியமாதல் போலவே இவ்வாணலிங்கங்கட்கும் யந்திரப்ரதிஷ்டை அநாவசியமாம்; சிவபெருமானுலே பூர்வத்திற் றூய்மை செய்யப்பெற்றதனுல் இவ்வாணலிங்கங்கள், தாபித்தும், தாபியாமலும் பூசித்தற் கருகமாம்; மேற்சருக்கத்திற் கூறிய மகிமைகளோடு ஈண்டுக்கூறிய உப மகிமைகளையுமுடைமையால் வாணலிங்கமே, மூர்த்திகளுக்குள் உத்தமோத்தமமென அறிக ; இவற்றிற்குப் பிரமாணம்:——

### சிவரகசியம்.

சிலாதரன் சமகவரங்கேட்ட சருக்கம்-33.

"போற்றுசைவ னுமிலிங்கத் துடனே வேதம்—புகலுநருமதை யிலிங்கஞ் சுயம்பு வாகும்—ஆற்றல்பெறு மவ்விலிங்கத்துடனே முத்தி—யருடலத்திற் குறியுமே பதிட்டை வேண்டா"

### வாயுசங்கிதை.

சிவலிங்கவியல்பும் பூசாவியல்பு முரைத்த அத்தியாயம்-20.

"தூய்மையற்ற காலத்திற் கலசநீ ராட்டியே துணர்த்தவாச-வாய் விரியு மலர்தூவிப் பூசிக்க வேண்டுமால் வாண லிங்கம்—காயு

ம்மூ வாளண்ணன் முனந் தூய்மை செய்ததனுற்கனிந்தவன்பால்
—"எய்வுறவே தாபித்துந் தாபியா மனும்பூசை யியற்றலாமால்"

---

# கனம்பொருந்திய, தி-வகையார்களே!

மேற்பிரமாணங் காட்டியவாறு இவ்வாணலிங்கத்தைப் பற்றி, வேதம்புகலு நருமதை யிலிங்க மெனவும், சுயம்புவாகு மாற்றல் பெறுமெனவும், பதிட்டைவேண்டா வெனவும், இதற் கிணையில்லை யிதனைவிட்டகலோம் இதனைக்காணக்காண நமக்கு ளம்பூரிக்கு மென்று அம்பிகைக்குச் சிவபெருமான்கூறித் தம் பதியாயுற்றவ ரெனவுஞ் சைவத் தலைமைநூலாகிய சிவரகசிய மே கூறுமானல், இதன்மகிமையை அளவிட்டுரைக்க யாவரான் முடியும்? எவர்க்கும் அசாத்திய மாதலால் இவ்வளவி னிறுத் திக்கொண்டு, இனி, இம்மகிமைத் தேர்ச்சி வாயிலாக, நமது-தி-வகைப்பிள்ளையார்கோயிலுக்குட் பிரதிஷ்டையான, விசுவநாத நாம உத்தம சுவேதவர்ந வாணலிங்க மூர்த்தியின் வரலாறு தெரியும்படி, விசுவநாதர் கோயில் வரலாற்றுச் சருக்க மென்ற பெயருடன் அடுத்த சருக்கங் கூறப்படும்; அதனையும் தயவு செய்து பார்வையிடக் கோருகின்றேன். சுபம்.

வாணலிங்க மகிமைச் சருக்கம்

முற்றிற்று.



ஸ்ரீ-வகைப் பிள்ளையார்கோயிற்கண்ணுள்ள

# விசுவநாதர் கோயில்

# வரலாற்றுச் சருக்கம்.

---

நூதனச்செய்யுள்.

"மாதர் மைந்தர் தம்பதியாய் வந்து செந்தா மரைநிகர்தம் [பிர
பாதம் பணிவார்க் கறம்பொருளின் பம்வீ டவற்றுள் வேட்ட
சாதம் புரிந்து விசாலாட்சி சமேத ராகி யொளிர்விசுவ
நாதர் கோயில் வரலாற்றை நாக்கா துவப்ப நவில்கிற்பாம்"

---

## குணம்பொருந்திய, தி-வகையார்களே!

தேவகோட்டையிலே, (தி) - வகைப்பிராஞ்சு - (மா) - வகையிலே, (வெ - ஆ - திண்ணப்ப செட்டியார்) என்பவ ரொருவ ரிருந்தனர்.

இவர், கைலாஸ விநாயகராலயப் பிரதிஷ்டாபகரான - தி-வகையின் மூலபுருஷர் (திண்ணப்ப செட்டியா) ரென்பவருக்குக் கொட்பேரருள் ளொருவரென்பதும், கோட்டூர்ச்சிவாலயப் பிரதிஷ்டாபகரான - (தி - வெ - ஆண்டியப்ப செட்டியா) ரென்னுங் குடும்பஞானி (மாயாண்டி செட்டியா) ரென்பவருக்கு நான்காவது புத்திரரென்பதும், இவர்பிறந்த தினம் கலியுகாதிவருஷம் (சதுகூாஉ௰௧)ல் நிகழ்ந்த விக்கிரமஞு தைமீ" ௩௨ ஆதித்தவாரமென்பதும் முன்னர்ப் பிள்ளையார்கோயில் வரலாற்றுச் சருக்கத்திற் கூறியதனாற்றெரியவரும்; இவர், அடியேனுக்குப் பிதாமகரென்பது, யாவரும் அறிந்த விஷயமாகும்.

மேற்கூறப்பட்ட - (வெ - ஆ - திண்ணப்ப செட்டியா) ரென்னும் இவர், கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்தவர்; சைவ

சமயத்தில் உறுதிகொண்டொழுகுபவர்; விபூதி உருத்திராக்ஷ மாலையை இடைவிடாது தரித்துப் பஞ்சாக்ஷரஞ் செபிப்பவர்; தில்லைக் கநகஸபையிற் பஞ்சகிர்த்ய தாண்டவம் புரியும் பரமகருணாநிதியாகிய ஸ்ரீமந் நடராஜப் பெருமானைத் தமது உபாஸநாமூர்த்தியாகக் கொண்டவர்; அதனால் அநவரதமும் ("பொன்னம்பலம் பொன்னம்பலம்" "அம்பலவாணா அம்பலவாணா") என்று உச்சரித்துக் கொண்டிருப்பாருமாயினர்; இப்பழக்கம், ஜந்மசாபல்யத்துக் கேதுவாகும்.

எவ்வாறாலெனில்? எச்சமயத்துள்ளும் சைவசமயமே உயர்ந்ததாகும்; விபூதியும் உருத்திராக்க மாலையும் சிவனடியார்க்குரிய அடையாளங்களாகும்; அவைகள், தரிப்போர்க்குப் பகைபாவமச்சம்பழிகளைக் கெடுத்துப் போகமோக்ஷங்களைக் கொடுத்து இரக்ஷிக்கு மிரக்ஷையாகும்; உருத்திராக்க மாலையைத் தரிக்காதபடி பூசைபுரிவோர் அப்பூஜாபலனை யிழப்பர்; அம்மாலையை யணியவெட்கப் படுகிற அற்பர்களைப் பார்ப்பதற்குங்கூடச் சிவபெருமான் அருவருப்பர்; அம்மாலையைக் காண்டல் பரிசித்தல் தரித்தல் செபத்திலுபயோகித்தல் செய்யின் முறையே அவற்றொன்றற்கொன்று பலனதிகமாம்; பஞ்சாக்ஷரஞ் செபிப்பவர் சிவமயமாவர்; அவரைக் காணினும் அவரது நிழற்படினும் பஞ்சபாதகர்களின் பாவமுந் தூரத்தோடிவிடும்; பஞ்சாக்ஷரமே வேதஸாரமும், சிவவடிவமும், மந்திரங்கட்கெல்லாம் அரசுமாம்; அவற்றின் பெருமை நூறுகோடிவருஷமிருந்து கூறினும் முடிவடைய மாட்டாது; அவற்றுள் ஒரெழுத்தின் பலனளவையைப் பிரமவிட்டுணுக்களும் அறியார்கள்; பஞ்சாக்ஷரத்தைப் பிரணவத்தோடு சேர்த்துச் செபிக்கிற் செபித்த பஞ்சபாதகரும் ஈசுவரனென்று சொல்லப்படுவார்கள்; விபூதிருத்ராக்ஷதாரண பஞ்சாக்ஷர ஜபமுடையார்பாற் பேய்பூதம் பழவினைகளும் யமவாதையும் அணுகா; அவர்களைப் பார்வதி ஸமேதராய்ச் சிவபெருமான் விட்டகலார்; அவர்கட்கு மோக்ஷலக்ஷ்மி வசமாவாள்; "பொன்

னம்பலம்" என்று ஒருமுறை யுச்சரித்தால் அவ்வுச்சரிப்பானது, பஞ்சாக்ஷர மிருபத்தோராயிரத் தறுநூறு செபித்தபலனைத் தருவதாகும்; இவற்றிற்குப் பிரமாணம்:—

## விபூதி ருத்திராக்ஷ பஞ்சாக்ஷர பொன்னம்பல நாம மகிமை.

### தாயுமானசுவாமிபாடல்.

காடுங்கரையும்-2.

"சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி காட்டு மிந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே"

### திருமந்திரம். 1666.

"கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகிற்
றங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான சிவனடி சேர்வரே"

### உபதேசகாண்டம்.

விபூதிமான்மியச் சருக்கம்-5-8. உருத்திராக்கமான்மியச் சருக்கம்-36.
பஞ்சாக்கரமான்மியச் சருக்கம்-5.

"உரக னுச்சியி னெடுநிலத் துயிர்ப்பொறைக் கெல்லாம்
புரவ ளிப்பதுந் தனிக்கதி யளிப்பதும் பூதி"

"நீறு ளப்பட நினைப்பினு நீறுமெய்ஞ் ஞானத்
தூறு சிந்தையிற் றரிப்பினு மன்னவர்க் கொருங்கே
ஏறு நல்வினை யாவையுந் தீவினை யிலவாம்
கூற ருந்திரு நீறுநாற் பொருளையுங் கொடுக்கும்"

"உருத்தி ரற்கிரு கண்ணெனு முருத்திர வக்கம்
தரிப்பதுண் டெனி லெவ்வுல கும்பெறத் தகுமால்"

"அஞ்செ ழுத்தெனு மருமறை மந்திர மீதனை
நெஞ்ச ழுத்துவர் முழுமுதற் றேவனை நிகர்ப்பார்
பஞ்சபாதகர் மீதுமற் றவர்நிழற் படினும்
செஞ்செ வேயவர்க் காணினும் பவந்தொலை செல்லும்"

சைவசமயநெறி—162-131-132.

"பரம சிவனமலன் பத்தர்க்குச் சின்னம்
உருவுடலிற் கண்டியுமீ றும்"

"பூணுமற் கண்டிசிவ பூசைபுரி வார்பலத்தைக்
காணார்பூ ணுய்கண்டி கை"

"பூண்பதற்குக் கண்டியினைக் கூசியிடும் புல்லியரைக்
காண்பதற்குக் கூசுமரன் கைத்து"

வாயுசங்கிதை.

பாசுபதவிரதமுரைத்த வத்தியாயம்-32-33-35.
பஞ்சாக்ஷரமான்மியமுரைத்த வத்தியாயம்-2-3.

"இலங்குவெண் ணீற்றினை மெய்யிற்—பூசுவோரி யாவ முழுவதுந் தணப்பப் பொருவறு முத்திவீ டடைவார்"

"சிவாக்கினி தனக்கு வீரிய மாகுந் திகழும்வெண்ணீறு வெண் ணீற்றை—உவாக்கடல் விருப்பி னணிபவர் தம்மை யுற் றிடு பேய்பல பூதங்—தவாத்திறல் கெட்டு நலிந்திடா தகனுஞ் சடை முடி புனைந்திடு சிவனை—அவாக்கெடத்தோற்று வித்தலா லதனைப் பசித மென் றறைவரா லறிந்தோர்"

"மாறிய தொல்லை வல்வினை யாவு மாய்ந்துகெட்டழிந்திட வெள்ளை—நீறெடுத் தணிந்தே யுயர்ந்தனன் யார்க்கு நிகழ்த்துய மன்னியு வென்யான்"

"உரைத்தவஞ் செழுத்தின் வீறிங் கொருநூறு கோடியாண்டு
விரிக்கினும் விரிக்க லாகாது"

"ஓதுமந் திரங்கட் கெல்லா முயர்ந்திடு முயர்ந்து நின்ற
நீதினன் மறையின் சார மாகுமாற் சிவன்ற னன்பர்
ஏதமின் முத்தி வீட்டை யெய்திடக் கொடுக்கு மென்றும்
ஆதியா யுறை மீச னுருவமா யமரு மன்றே"

## திருக்காளத்திப் புராணம்.

கன்னியர்சருக்கம்-56-57-58.

"சந்திர மௌலியை யழைத்துத் தந்தருள்
ளந்திரு வஞ்செழுத் தறையு மெங்கள்வாய்"

"நாயகன் விழிமணி யொன்றோர் நாளுடன்
மீயணிந் திடில்வினை யாவும் வீயுமே"

"புழுகுசெஞ் சாந்திவை புனைந்து புன்மலம்
ஒழுகுமொன் பான்றுளை யுடம்பை யென்றுநீ
அழகுசெய் திடின்மல மகலு மோபரன்
முழுகுவெண் ணீறிடின் முற்று மாயுமே"

## விருத்தாசல புராணம்.

விபூதிச்சருக்கம்-11-12-13.

"புண்டரமு மக்கமு மகிழ்ந்துபுனை வார்பாற்
பெண்டுணை யுடன்பரமர் பின்றிரிவ ரன்றே"

"முத்தியெனு மங்கையை முயன்றுவச மாக்க
ஒத்தமணி மந்திர மருந்துகளு முண்டாம்
அத்தகை தனைப்பகர்வ மஞ்சுபத நீறு
சத்தரணி கண்டிகை தரிக்கில்வச மாவாள்"

"நீற்றினொடு கண்டிகை நினைந்துபுனை வார்தம்
பேற்றினள வென்னவர் பிறந்ததுவே சென்மம்
போற்றியவ ருக்குதவு பூசையது பூசை
ஆற்றலுள நற்கொடையு மேகொடைய தாமால்"

## கடம்பவன புராணம்.

இலீலாசங்கிரக அத்தியாயம்-156-226-240.

"பல்லுயிர்க்கெலாம் புரந்துகாப்பதும் பரகதியளிப்பதும்பூதி"

"காணினுமக் கண்டிகையின் பயனிலக்கம் பரிசிக்கிற்கோடி கண்டு—பூணினுமா யிரங்கோடி செபத்தநந்தம் பயனிமையோர் பூசைக் கேற்ற—தானுவைப்போலுவர்பகைக்குந் தாழ்ந்தடங்

கார் கணந்தரிக்கிற் கணங்கற் கேனும்—மானுறுநற் கதிகொடுக்கும் புகழ்ந்தணிந்த மானுடர்க்கென் புகல்வ தம்மா"

"அஞ்செ ழுத்தினு ளோரெழுத் தின்பய னளவை
கஞ்ச நான்மலர்க் கண்ணனுங் கண்ணனுங் காணர்
செஞ்செ வேபிர ணவத்தொடுஞ் சேர்த்தியுச் சரிக்கிற்
பஞ்ச பாதக ராயினும் பரனெனப் படுவார்"

## தேவாரம்.

### பஞ்சாக்கரத் திருப்பதிகம்-4.

"நல்லவர் தீய ரெனாது நச்சினர்
செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ
கொல்ல நமன்றமர் கொண்டு போமிடத்
தல்லல் கெடுப்பன வஞ்செ ழுத்துமே"

## திருவிளையாடற் புராணம்.

### மூர்த்திவிசேடப் படலம்-9.

"புனித மந்திரங்கடம்முட் போதவைந் தெழுத்து மேலாம்"

## பெரிய புராணம்.

### திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்-698.

"ஆதி மந்திர மஞ்செழுத் தோதுவார் நோக்கும்
மாதி ரத்தினு மற்றைமந் திரவிதி வருமே"

## நல்வழி.

"சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை"

## திருவாதவூரடிகள் புராணம்.

### புத்தரை வாதில்வென்ற சருக்கம்-13.

"தேக்குஞ் சடில முடிக்கடவு ளிருதாள் கருதாத் தீமனமும்
வாக்குஞ்செயலுங்கொடியோருமொருகாற் பொன்னம்பலமென்
ஆக்கந் தருமஞ் செழுத்திருபத் தோரா யிரத்தோ டறு நூறு[னில்
நாக்கொண்டுரைக்கு மதற்குநிக ரென்றுன் குன்று நற்புகழான்"

---

இவ்வித ஒழுக்கம் வாய்ந்த (வெ-ஆ-திண்ணப்ப செட்டியா) ருக்கு, கலியுகாதி௵ (௪௲௯௱௪௰௯)-ல் நிகழ்ந்த விசுவாவசு௵ புரட்டாசிமீ ௩௰௨ மங்களவாரத்தில் ஒருபுத்திரர் பிறந்தனர்; அப்புத்திரருக்கு மேற்படி செட்டியார், தமது பிதாவின் பெயர் வைத்தழைத்தமையால் மேற்படி புத்திரர், (வெ-ஆ-தி-மாயா ண்டி செட்டியா) ரென்னும் பெயருடையவராய்ச் சைவவொழுக் கத்திலும், நல்லாரிணக்கத்திலும், கேள்வியிலும், ஈசுவரபக்தி யிலும், விநாயக கவசம் திருமுருகாற்றுப்படைகளை நித்ய பாரா யணஞ் செய்துவரு நியமத்திலும், திராவிடவேத சிரவணத்தி லும், சிதம்பர தெரிசனத்திலும் சிறந்தவராய் விளங்கி வந்தனர்; இவர் அடியேனுக்குப் பிதாவென்பது, யாவரும் அறிந்த விஷய மாகும்;

மேற்கூறிய (வெ - ஆ - திண்ணப்ப செட்டியார்) இதற்கு முந்திய சருக்கங்களிற் கூறப்பட்ட சிவலிங்க வாணலிங்க மகி மைத் தேர்ச்சியால் நருமதாவாணலிங்கப் பிரதிஷ்டை செய்ய வேண்டு மென்னும் விருப்பமுடையவரா யிருந்தனர், அவ்வாறி ருக்கும்போது சிவலிங்க தெரிசனஞ் செய்தலை நித்தியநியம மாகக் கொண்ட தேவகோட்டை நகரத்தாருட்சிலர், இக்கை லாஸ விநாயகராலயத்திற் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்வித்தால், அது, அனைவர்க்கும் மிக்க ஸாதகமா மென்று (இத்திண்ணப்ப செட்டி)யாரிடந் தெரிவித்து வந்தனர்; அம்மகிமைத் தேர்ச்சியும் இத்தெரிவிப்புந் தம்மையூக்க மேற்படி (திண்ணப்பசெட்டியார்) நருமதா வாணலிங்கப் பிரதிஷ்டா ராதனையில் அதிவாஞ்சையுட னிருந்து வருங்காலத்தில், சிவாகமமாராய்ச்சி நிரம்பப்பெற்றுக் காசிமுதலிய தலயாத்திரைபோய்வந்த திருப்புனவாயிற் புநித சிவாசாரியரொருவர் உத்தம சுவேதவர்ண நருமதாவாணலிங்க மொன்றைக் கொண்டு வந்து, பரீக்ஷித்தெடுக்கப்பெற்ற இதனைப் பிரதிஷ்டித் தாராதித்துவரும்படி செய்யுமெனக் கூறிக் கொடுத் தனர்; செட்டியாரும் அன்புடன் வணங்கித் தமதிருகைகளாலும்

ஏற்று மகிழ்ந்தனர்; செட்டியார் கருதியபொருள், கருதிய காலத்திலே வறுவிலே உத்தம சிவாசாரிய முகமாய்க் கைகூடுதலால், இது, கடவுட்செயலென்றே துணியப்படும்; அவ்வாறு துணியவே "வாயானை மனத்தானை மனத்து ணின்ற கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னை" எனவருந் திருவாலயவாய்த் தேவாரம் ஈண்டுச் சிந்திக்கற் பாலதாம்; குடும்பஞானியாகிய (கோட்டூர் மாயாண்டி செட்டியாரது) சிவாராதந வாஞ்சாகுணமானது, அவரது மைந்தராகிய (இத்திண்ணப்ப செட்டியாருக்கு) வந்தமையால், இவ்வாறு வந்ததானது, தந்தைகுணம் மைந்தர்க்குளதா மென்ற சுருதிக்கநுபவமாயிற்று; பெரும்பாலும் தந்தைகுணம் மைந்தர்கட் குளதாகும்; இதற்குப் பிரமாணம்:——

## நாலடியார்—367.

"செந்நெலா லாய செழுமுளை மற்றுமச்
செந்நெல்லே யாகி விளைதலால்—அந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவய லூர
மகனறிவு தந்தை யறிவு"

## காஞ்சிப் புராணம்.

திருநாட்டு படலம்-94.

"ஈன்றெடுத்தோர் குணமகவுக் கியையுமுறைப் படிவித்திற்
றோன்றுமுளை முன்விளர்த்துப் பின்பசந்த தொடர்பினால்
ஆன்றசெழுங் கதிர்களுமுன் றாவெள்ளை யாயெழுந்து
மான்றுமர கதமேனி வாய்த்துமடல் கிழித்தெழுமால்"

---

மேற்கூறிய (வெ-ஆ-திண்ணப்ப செட்டியார்) சிவாசாரியரிடம் பெற்ற சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்யக் கருதி, அப்போதிருந்த (தி - வகைப் பொதுவா) ரனைவரிடமும் தெரிவித்ததாவது, உத்தமமான நருமதா வாணலிங்கமொன்று கிடைத்திருக்கின்றது அதனை அம்பாளுடன் நமது பிள்ளையார்

கோயிலில் கைலாஸவிநாயகருக்கு உத்தரபாகத்தில் ஆலயநிருமித்துப் பிரதிஷ்டை செய்தால், அது, அனைவர்க்கும் உபகாரமும் நன்மையுமாம்; நமது வகைப்பொதுவிற் செய்தாலும் சரி; அல்லது என்னைத் தனதிற் செய்யும்படி சொன்னாலும்சரி யென்றனர்; (இச்செட்டியார்,) (தி-வகைப்பொதுவாரிடம்) தொடக்கத்திலேயே இருவிதத்தையும் வகுத்தமைத்துத் தெரிவித்தமையை ஆராய்ந்தறிவோர்க்கு "ஆர்இட்டியும் அரிசிவெளுத்தாற் சரி" என்கின்ற பழமொழி சிந்திக்கத்தக்கதாகும்;

மேற்படி (வெ - ஆ - திண்ணப்ப செட்டியார்) தெரிவித்தமையைக் கேட்ட (தி - வகைப் பொதுவாரனைவரும்,) ஈது உத்தமமான விஷயந்தானென் றங்கீகரித்து, வகையிலுள்ள ஒவ்வொருவருக்கும் முதலீவில் வரிநிதானித்து ஏற்படுத்திப் பணமெடுத்துப் பொதுவிற் செய்கிறதென்று தீர்மானித்தார்கள் ; முன்னர்ப் பிள்ளையார்கோயில் வரலாற்றுச் சருக்கத்தி லெடுத்துக்கூறப்பட்ட (வெ-ஆ-நா-சித-சிதம்பரஞ் செட்டியார் - 1) (தி-ராம-சு-சுப்பிரமணியஞ் செட்டியார்-2) இருவரும் இந்த விஷயத்தில் அதிவிருப்பமுடையவர்களாயும் வியாபகர்களாயுமிருந்தபடியால் முன்னின்று முயற்சித்து வரிநிதானித்து, நிதானித்தபடி ஒவ்வொருவரிடமும் உண்டியல்வாங்கிவரச் செய்தார்கள் ; உண்டியல்களும் சேகரமாயின ; இவ்வாறு உண்டியல் வாங்கிவருங் காலத்தில் (தி-வகைப்பிராஞ்சு மூன்றிலும் ஐந்துபேர் வழிகண்) மட்டும், தத்தமக்கு விதித்தவரி, மிமிட்டுக்கதிக மென்னுங் காரணத்தைச் சொல்லிமறுத்து உண்டியல்தர வுடன்படாராயினர் ; பின்பு உண்டியல் கொடுத்துள்ள ஏனையோரனைவருங் கூடி யோசித்து, பொருள் கொடுத்தார்க்குப் புண்ணியமுண்டென்பது நிச்சயமாதலால், உடன்படாதாரை விலக்கி விட்டு, உடன்பட்டுத் தந்தோர்களுடைய உண்டியற் பணத்தைக் கொண்டு செய்கிறதென்று ஐவரை யொழித்தொழிந்த பொதுவார்,

தீர்மானித்தார்கள்; நமது (தி-வகையில் ஐவரையொழித்தொழிந்த பொதுவார்,) "பொருள் கொடுத்தார்க்குப் புண்ணியமுண்டென" அப்போது துணிந்த துணிவானது, திருவாதவூரடிகள் புராணம் மண்சுமந்தசருக்கம் 13-ல் "பாம்பணி செய்ய வேணிப் பரம்பா னடியார் கையில்—ஆம்பொரு ளமதேயானு லறம்பிறர்க் காவதுண்டோ?" என்றபடி அரிமர்த்தன பாண்டியராஜன் மேனுட்டுணிந்த துணிவுபோல்வ தாகும்;

(ஐவரையொழித் தொழிந்த-தி-வகைப் பொதுவார்,) தங்களுக்குச் செய்து கொண்ட பிந்தியதீர்மானப்படிக்கு, தந்தோர் பணத்தைக்கொண்டு செய்கிற தென்ற வுத்தேசத்துடன் விசுவநாதராலய வேலையைச்செய்யத் தொடங்கினர்கள்; தொடங்கவே, வரிசாஸ்த்தி யென்று உண்டியல் தாராதோரைவரும், வேலைத்தலத்துள் வந்து, பாத்தியமுள்ள வெங்களைத் தள்ளிவிட்டு இங்கே யாரடா வேலைசெய்யச் சொன்னது? செய்யாதே யென்று தடுத்தும், வேலைக்காறர்களுக்குப் 'பிரஹாரங் கொடுத்தும், டங்கக்ராஹ்யஞ் செய்தும் கலகஞ் செய்தனர்; உடனே, "சட்டிசுட்டதுங் கைவிட்டதும்" என்கின்ற பழமொழிப்படிக்கு வேலையும் நின்று விட்டது; "மல்லுக்குப் பங்கு மாகாணி" என்கின்ற பழமொழியும், யாவருஞ் சிந்திக்குமாறு பிரகாசித்தது; தம் பொருள் பற்றியும் பாத்திய வளவிற் றம்மைத் தழுவிச் செய்யட்டுமெனக் கருதியும் ஆலயத்துக் கடியிடும்பொழுதே கலாய்த்தவர்களான இந்த ஐவர், பின்னுக்கு, ஆலயப்ரதிஷ்டாராதநாதி செய்ய இடங் கொடுத்து நீண்டநா ளநுபவமு மானபிறகு வன்மையாற் றன் மனம்போனவாறு ஆலயாங்கஹீநாதி சிவாபசாரஞ் செய்யப் புகுவாரைப் போன்ற புரையின ராகார்; மேலே "ப்ரஹாரம்" என்ற சொல்லுக்கு அடித்த லென்பதும், "டங்கக்ராஹ்யம்" என்ற சொல்லுக்கு உளியைப் பறித்த லென்பதும் பொருள்; இவை வடமொழிப் பதங்கள்.

## கனம்பொருந்திய, தி-வகையார்களே !

அப்பால் நடந்த விஷயமென்னே யெனில்? கலாய்த்த ஐவர்களின்மீது மற்றையவர்களாகிய பொதுவார், திருவாடானே மேஸ்திரட்டுக் கோர்ட்டில் அக்ரமப் பிரவேசக்குற்ற மென்னும் பிராது சாட்டத் தயாராயினர்; தயாராயிருக்கும்போது, தலைமையை வஹித்த இருவருள், (தி-ராம-சு-சுப்பிரமணியஞ்செட்டியார்,) நாமெல்லாருஞ் சேர்ந்து பிராது சாட்டினும், எதிரிகள், அவர்கட்கும் பாத்தியமாயுள்ள அவிபக்தஸ்தானத்திற் றடை செய்யப் புகுந்தமையால் இது அக்ரமம் பிரவேசக்குற்ற மாகாதென நியாயாதிபதி கேசைத் தள்ளிப்போடக் கூடுமென்றனர்; மற்றொருவராகிய (வெ-ஆ-நா-சித-சிதம்பரஞ் செட்டியார்,) நமது தாயாதிகளுக்குள் ஒருவரையொருவர் கிரிமினற்பிராது போட்டுக்கொண்டு கோர்ட்டிற்போய் நிற்பது கெவுரவக்குறைவாதலால் என்புத்தி இதிற் சென்றிலதென்றனர்; தலைமையை வஹித்த அவ்விருவரும் இவ்வாறு சொல்லவே, கேசிற்பிரவேசம் நின்றுவிட்டது; இவ்வாறு சொன்ன அவ்விருவரையும் பார்த்து, ஏனையோரெல்லாரும், எடுத்த காரிய முற்றுப்பெறுவதற்குப் போகும்வழி யென்ன? என்று கேட்க, அவர்கள், அப்போது உபயதறப்பினுமிருந்த வேறுவழிக்கிணங்கா, நிலைமையை ஆழ்ந்து யோசித்து பதிற் சொன்னதாவது, இவ்விஷயமாக வாங்கிய உண்டியல்களை அவரவரிடம் வாபீசு செய்துவிடுகிறதென்றும், ஆதியிலேயே தனதிற் செய்வதற்கு முடன்பாடு தெரிவித்த (வெ-ஆ-திண்ணப்ப செட்டியாரை) அவ்வாறே தனதிற் செய்துகொள்ளும்படி சொல்லுகிற தென்றும் சொன்னர்கள்; ஏனைப் பொதுவாரும் சரியென்றார்கள்; சரியென்றவுடனே வாங்கப்பட்ட உண்டியல்களெல்லாமும் திருப்பி வாபீசுகொடுக்கப்பட்டன; இவ்வாறு நடந்த சந்தியிலே - 673-ல் “ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்,—செல்லும்வாய் நோக்கிச்செ

யல்" எனவும், 770-ல் "நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை—தலைமக்க ளில்வழி யில்" எனவுந் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் வாய்மலர்ந்த அருமைத் திருக்குறள்கள் சிந்திக் கற் பாலனவாம்;

அப்பால் நடந்த விஷய மென்னை யெனில்? ஐவரை யொழிந்த பொதுவாரெல்லாருமாக இருந்து (வெ-ஆ-தின்ணப்ப செட்டியாரை) யழைத்து, எங்களுக்குட் பொதுவிற் செய்ய ஒத்துக்கொள்ளாமையால் உண்டியல்களும் வாபீசாய் விட்டன; பொதுவாரனைவர்க்கும் உங்களைத் தனதிற் செய்து கொள்ளச் சொல்லச் சம்மதம் என்றார்கள்; அதைக்கேட்ட (வெ-ஆ-தின்ணப்ப செட்டியார்,) உண்டியல் கொடாமலுந் தடுத்து முள்ள (ஐந்து பேர்வழிகளிடமும்) போய் இன்சொற் கூறிக்கேட்டமையால் அவர்களும், உங்கள் தனதிற் செய்து கொள்ள விடுதற் காக்ஷேபணையில்லை யென்றார்கள்; அப்பால் உபயதறப் பார்களையும் ஒக்கவைதது (வெ-ஆ-தின்ணப் செட்டியார்) கேட்டதாவது, நான் தனதில் ஆலயநிருமாணஞ் செய்து சிவலிங்கப் பிரதிஷ்டை செய்யவா? அது விஷயத்திற் பொதுவா ரெல்லாருக்குஞ் சம்மதந்தானா? அநுகூல பதிலைக் கேட்க அபே க்ஷையுடையேன் என்றனர்; (முழுப்பொதுவாரும்) ஒருங்கிருந்து, உங்கள் தனதிற் செய்துகொள்ளுங்கள்; அதற்காக்ஷேபணை யில்லை; என்று பூரண அநுமதி செய்தார்கள்.

மேற்கண்ட அநுமதியைப் பெற்றுக்கொண்டு (வெ-ஆ-தின்ணப்ப செட்டியார்) தனதில் ஆலயாரம்பஞ் செய்ய எத்த னித்தனர்; எத்தனிக்கும்போது, முன்னர்ப் பிள்ளையார்கோயில் வரலாற்றுச் சருக்கத்திலெடுத்துக் கூறப்பட்ட (பழ-சு-நா-நாகப்ப செட்டியார்) என்பவர் இவருக்குச் சிநேகராதலாலும், இவ்விஷ யத்தில் அதிவிருப்பமுடையவ ராதலாலும், (வெ-ஆ-தின்ணப்ப

செட்டியா) ரைப்பார்த்து, நான்பாதியும் நீங்கள் பாதியுமாகப் பணமெடுத்து இருவருஞ்சேர்ந்துசெய்வோமென்றனர்; (வெ-ஆ-தின்னப்ப செட்டியாரும்) அச்சிநேகருரைக் குடன்பட்டனர்; அப்பால் (வெ-ஆ - தின்னப்ப செட்டியர்ரும்) பழ - சு - நா - நாகப்ப செட்டியாரும்) சேர்ந்து பேர்பாதியாகப் பணமெடுத்துச் சிவாலயத் திருப்பணியை ஆரம்பிவித்தார்கள்; இவ்விருவருக்கும், சிவலிங்கப் பெருமானோடும் அம்மை கணேச ஸ்கந்த சண்ட ரென்னும் நால்வரையுஞ் சேர்த்துப் பஞ்சமூர்த்திகளாகப் பிரதிஷ்டை செய்தலே இல்லறத்தார்க்கு உத்தமமெனத் தோன்றினபடியால் அந்தவிக்கிரகங்களையும் ஆவிடையாரையும் தரும நந்தி பெலிபீடத்தையும் சிற்பவிதிப்படி செய்வித்துவாங்கினர்; அப்பால், நருமதாவாண சிவலிங்கப் பெருமானுக்கும் அம்மையாருக்கும் பூர்வாபிமுகமாகக் கெர்ப்பக்கிரகம் அர்த்தமண்டபம் என்னும் இரண்டங்கத்துடன் ஆலயத்தையமைத்தும் தாருசுரூபமான மஹாமண்டபமும் மடைப்பள்ளியும் கிணறும் சரக்கறையும் அமைத்தும் திருப்பணியைப் பூர்த்திசெய்தார்கள்; பூர்த்தியானவுடன் கலியுகாதி (சதுசூாஎயகூ)ல் நிகழ்ந்த ஆங்கீரசவருஷத்திற் சுபதினத்தில் நருமதா வாணலிங்கப் பெருமானுக்கு ("விசுவநர்தர்") என்னுந் திருநாமமும் அம்மையாருக்கு ("விசாலாக்ஷி") என்னுந் திருநாமமும் தரித்து அவ்விருவரோடு மேற்சொன்ன மூவரையுஞ் சேர்த்துப் பஞ்சமூர்த்திகளாக ஆதிசைவ சிவாசாரியர்களாற் ருபித்து அஷ்டபந்தந மஹாகும்பாபிஷேகஞ் செய்தார்கள்; "விசுவநாதர்" என்னும் பெயருக்கு, சர்வலோகாதிபதி யென்பது பொருளாம்; "விசாலாக்ஷி" என்னும் பெயருக்கு, கருணையாற் பரந்த கண்ணையுடையவ ளென்பது பொருளாம் ;

இவ்வாறு கும்பாபிஷேகமான பின்பு (கிரமேண) ஒழுங்காய் மண்டலாபிஷேகமுஞ் செய்து, அத்தினமுதற்கொண்டு சிவாசாரியர்,பரிசாரகர், திருமாலைகட்டி, பாத்திரந்துலக்குவோர்,

காப்போர் முதலிய "* அங்கணர் கோயிலுள்ளா வகம்படித் தொண்டுசெய்வார்" களையும் ஏற்படுத்தித் திருக்கோயிலிலேயே அன்ன நைவேதனம் அமைப்பித்துக் காலைமாலை யென்னு மிரண்டு கால நித்தியபூசையும், விசேஷ தினங்களில் நைமித்திக பூசையும் நடாத்தி வந்தார்கள்;

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

மேற்கண்ட (வெ-ஆ-தின்னப்ப செட்டியார், பழ-சு-நா-நாகப்பசெட்டியா) ரென்ற இருவரும், நமது (தி -வகைப் பொதுவார்) செய்த பூரண அநுமதிப்படி கைலாஸ விநாயகராலயத்தில் அவ்விநாயகருக்கு வடவருகில் விசுவநாதருக்கும் விசாலாக்ஷியம்மையாருக்குங் கட்டிமுடித்துக் கும்பாபிஷேகஞ் செய்யப்பெற்றதும், இப்போது பிரத்யக்ஷத்திலிருந்து வருவதுமான அர்த்தமண்டபத்தோடுள்ள புராதநாலயப்பிளானை, திருப்பணி முயற்சி வர்த்தமானச்சருக்கத்திற் பின்காட்டப் போகிறதும் (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால்) போடப்பட்டதுமான அர்த்தமண்டப ஹீந நூதநாலயப்பிளானோ டொக்க வைத்துப்பார்த்து யாவர்களும் என்றென்றைக்குந் தாரதம்மியந் தெரிந்துகொள்ள வேண்டிய தேவை நிமித்தமாக, இதனடியிற் காட்டியிருக்கின்றேன்; விசாலாக்ஷி ஸமேத விசுவநாத புராதநாலயம், இப்போது காக்ஷிமுகத்தாற் காணப்படினும், தயவுசெய்து, இதனடியிற் காட்டிய அச்சுமுகத்தானும் பார்வையிடக் கோருகின்றேன்;

---

* இது-பெரிய புராணத்திலுள்ளது.

எற்கனவேயுள்ள

# புராதநாலயப் பிளான்.




கோபுரவாயில். சன்னல். சன்னல்.

கிழக்கு.

மேற்கண்டவாறு ஆலய நிருமாணம் செய்து பூசையும் நடாத்திவந்த இருவருள், (வெ-ஆ-தின்னப்ப செட்டியா) ரென்பவர் மேற்கண்ட கும்பாபிஷேகநடந்த வருஷமாகிய கலியுகாதி (௪௲௯௱௭௰௩)-ல் நிகழ்ந்த ஆங்கிரச ௵ பங்குனிமீ ௯௨ குரு வாரத்தில், தமது புத்திரராகிய (வெ-ஆ-தி-மாயாண்டி செட்டியா) ரைத் தமது முன்னிலையிலழைத்து "சிவாலய கைங்கரியத்தை வழுவாது நடத்திவா, இப்போது உன்வீட்டிற் கருப்பத்திலிருப்பது அனுக்கத்தில் ஆண்குழந்தையாய்ப் பிறக்கும்; எனது நியேயபதியினது வாஸஸ்தானம் ஞாநாகாச மெனப்படுஞ் சிதம்பர மாதலால், அக்குழந்தைக்குச் ("சிதம்பரம்") எனப்பெயர் வைத்தழை" யெனச்சொல்லிவிட்டு ஸ்ரீ குஞ்சிதசரணாரவிந்த த்யாநபராயணராய்ச் சிவபதமடைந்தனர்;

அப்பால் (வெ-ஆ-தி-மாயாண்டி செட்டியா) ரென்னும் எனதுபிதா, அவர் பிதாக் கூறியபடியே, பிதாச் சிவபதமடைந்த தினத்திற் காருந்தினமாகிய கலியுகாதி (௪௲௯௱௭௰௩)-ல் நிகழ்ந்த ஆங்கிரச௵ பங்குனிமீ ௰௪௨ மங்களவாரத்திற் பிறந்த அடியேனுக்கு அப்பெயர் வைத்தும், சிவாலய கைங்கரிய காரியத்தை, (தாமும்-பழ-சு-நா-நாகப்ப செட்டியாருமாக) வருஷத்திற் கொருவராய்ப் பார்த்தும் வந்தனர்; மேற்படி (நாகப்ப செட்டியார்) சிவபதமடைந்த பின்பு அவருடைய புத்திரராகிய (பழ-சு-நா-சுப்பிரமணியஞ் செட்டியா) ரோடும் பார்த்து வந்தனர்; விசுவநாதர் விசாலாக்ஷி பிரதிஷ்டையானது முதல் (௯) ஒன்பது வருஷகாலம் இவ்வாறு நடந்து வந்தன;

அப்பால் (தி-)வகைப் பொதுவார், கலியுகாதி (௪௲௯௱௮௰௩)ல் நிகழ்ந்த சித்ரபாநு ௵த்தில் கைலாஸ விநாயகருக்குக் குருக்கண்மார் மூலமாக எற்கனவே நெற்கொடுத்து நடத்திவந்த ஒருகால பூசையை மாற்றி, விசுவநாதருக்கு நடத்திவரு

வது போல இரண்டு காலபூசையாக அதனோடு சேர்த்து நடத்தி வரும்படிக்கும், இரண்டையுஞ் சேர்த்து நடத்துவதிற் கூடுதலாகுஞ் செலவில் ஒருபங்கு கைலாஸ விநாயகருக்கும், ஒண்ணேயரைக்காற் பங்கு விசுவநாதருக்குமாகப்போட்டுக் கொள்ளுகிறதென்றும், அதற்கேற்கப் படித்தரத்திட்ட ஜாப்தா ஏற்படுத்தியும், வருஷப்பிரதிவருஷமும் ஆடிக்கானி வருஷமுடிவில் விசாரணைக் கணக்கைப் பொதுவாரிடங் கொடுத்துக் கைலாஸ விநாயகரின் ஒருபங்குக்குள்ள செலவை வாங்கிக் கொள்ளும்படிக்குஞ் சொன்னார்கள் ;

(தி-வகைப் பொதுவார்) சொன்னபடிக்கு மேற்கண்ட (வெ-ஆ-தி-மாயாண்டி செட்டியாரும்,) (பழ-சு-நா-சுப்பிரமணியஞ் செட்டியாரும்,) கைலாஸவிநாயகராலயத்தையும் விசுவநாதராலயத்தையுஞ் சேர்த்து மேற்படி சித்திரபானுவூ ஆடிமாதமுதல் இரண்டுகால நித்திய பூசை நடத்தியும், அவ்விசாரணைச் செலவு துறைக் கணக்குக்குப் பிள்ளையார் விசுவநாதரென் றிரண்டுஞ் சேர்ந்த முறையால் (பி-வி-) என்ற விலாசம் ஏற்படுத்தியும், அவரவரும் பார்த்த வருஷத்துச் செலவு கூடுதற் றொகையில் கைலாஸ விநாயகரின் ஒருபங்குக்குள்ள ஈவுத்தொகையை -தி-வகைப்பொதுவாரிடங் கணக்குக்கொடுத்து வாங்கிக்கொண்டும், விசவநாதரின் ஒண்ணேயரைக்காற் பங்குக்குள்ள ஈவுத்தொகையைத் தாங்களிருவரும் பேர்பாதியாகக் கொடுத்தும், வருஷத்துக்கொருவராய் டிறன் மாறிமாறி விசாரணைபார்த்துவந்தார்கள்; (பழ-சு-நா-சுப்பிரமணியஞ் செட்டியாரு) க்குப் பின்பு அவரது வருஷவிசாரணையை அவருடைய புத்திரராகிய (பழ-சு-நா-சு-ராமநாதஞ் செட்டியார்) பார்த்துவந்தனர்;

இவ்வாறு பார்த்து வருங்காலத்தில்-(வெ-ஆ-தி-மாயாண்டி செட்டியார்) விசுவநாதர்விசாலாக்ஷி கோயிற் பூசைப்படித்தரத்

துக் காகவும், பின்னீடு திருப்பணி செய்வதற்காகவும், பாலபி ஷேகக்கட்டளைக் காகவும் மூலதனம் ஏற்படுத்திவைக்கக் கருதிக் கலியுகாதி வருஷம் (சதுசுளாசுமிசு)-ல் நிகழ்ந்த நந்தனவூ சித் திரைமீ கஉயில் தமது பாதிக்குத் தமது குடும்பத்தில் (தாம்) முதலெடுத்து வைத்ததோடு, (பழ-சு-நா-சு-ராமநாதஞ் செட் டியாரை)அவரது பாதிக்கு அவரது குடும்பத்தில் அவரை முத லெடுத்து வைக்கும்படிக்குஞ் செய்தனர்; அவரும் அவ்வாறே எடுத்து வைத்தனர்; அவரவரா லெடுத்து வைக்கப்பட்ட மூல தனம் அவரவர் மாறலில் வட்டிவிர்த்தியம்ஸத்துக் கிருந்துவந் தன; எடுத்துவைக்கப்பட்ட தேதிக்குப்பின், அவரவரின் விசா ரணையிலேற்பட்ட விசுவநாதர் சம்பந்தமான செலவுஈவுத்தொ கை, மூலதனவட்டிவரும்படியிலிருந்தும் அவரவராற் கொடுக்கப் பட்டு வந்தன;

மேற்கண்ட இருவர்களது விசாரணைகாலத்திற் பிள்ளையா ருக்கும் விசுவநாதர் விசாலாக்ஷிக்கும் அஷ்டபந்தன மருந்தெடு பட் டிருந்தமை கண்டு அது சாத்திக் கும்பாபிஷேகஞ் செய்ய வேண்டுமென்று சிவாசாரியர், இவ்விசாரணைதாரிருவர்களிட மும் பொதுவார்களிடமும் தெரிவித்தனர்; எல்லாரும் செய்ய வேண்டியது முக்கியமென் றங்கீகரித்தார்கள்; அப்போது - தி - வகைப்பிராஞ்சு - தி - வகையிலுள்ள (தி-ராம-தி - சுப்பிரமணி யஞ் செட்டியார்) சொன்னதாவது, பிள்ளையாருக்கொருபங்கும் விசுவநாதர் விசாலாக்ஷிக் கொண்ணேயரைக்காற் பங்குமாக அல் லவா? நித்தியபூசைப் படித்தரச் செலவு கொடுக்கப்பட்டுவரு கிறது; இப்போது செய்யப்போகிற கும்பாபிஷேகச் செலவை, அந்தமாதிரி ஒன்றும் ஒன்னேயரைக்காலுமாகப் போட்டுக் கொள்ளமுடியாது, பிள்ளையாருக்கு ஒருபங்கும் விசுவநாதர் விசா லாக்ஷிக்கு ஒன்னரைப்பங்குமாகப் போட்டுக்கொள்ள வேண்டு

மென்றனர்; அவ்வாறே பிள்ளையாருக்கு பொதுவிலிருந்து ஒரு பங்குச் செலவும், விசுவநாதர் விசாலாக்ஷிக்கு (வெ-ஆ-தி-பழ-சு-நா), இடமிருந்து ஒன்னரைப் பங்குச் செலவுமாக ஈவித்துப் பணமெடுத்துக் கொடுக்கப்பட்டுக் கலியுகாதி (சதுகஅகூ௯கூ)-ல் நிகழ்ந்த விளம்பிஷூ ஐப்பசிமீ" கூஉ சோமவார சுபதினத்தில் அஷ்டபந்தன மருந்துசாத்திக் கும்பாபிஷேகம் நடந்தது;

அப்பால், எனதுபிதா (வெ-ஆ-தி-மாயாண்டி செட்டியார்) கலியுகாதி (ருதுக)-ல் நிகழ்ந்த சார்வரிஷூ மாசிமீ" உ௰சுகூடஸ்திர வாரத்திற் சிவபதமடைந்தார்கள்; அதற்குப் பின்பு (அடியேனும் பழ-சு-நா-சு-ராமநாதஞ் செட்டியாருமாக) வருஷத்துக்கொருவராய் டிறன் மாறிமாறிப் பிள்ளையார் விசுவநாதர் கோயில் விசாரணையைப் பார்த்துவந்தோம்;

மேற்கண்டபடி நாங்களிருவரும் விசாரணை பார்த்துவரும் போது சிலகாலஞ் சென்ற பின்பு, பொதுவான பிள்ளையார் கோயிலையும், அதனோடு, (வெ-ஆ-தி, பழ-சு-நா,) என்ற இருவர்க்கும் பாத்தியமான விசுவநாதர் விசாலாக்ஷி கோயிலையும், அவ்விருவர்களின் பொஸெஷனிலுள்ள விசாரணை முதலிய அனைத்தையுஞ் சேர்த்து அத்தறுதியாய்த்தங்களிடம் விட்டுவிட வேண்டுமென்று கனம்பொருந்திய (தி) வகைப்பொதுவாரனைவரும், அபேக்ஷித்து, அப்பிராகிருதவிஜாரணைதார்களான அடியேங்களிருவரையும் ஸமூகத்திலழைப்பித்துச் செய்தவருதிப்படி (ஸர்வதேவ) மேற்கண்ட எல்லாமுமே, அப்பொதுவார்களிடம் ஒப்புவிக்கப்பட்டன; அந்த விபரத்தை விளக்கும் நிமித்தமாக, இச்சருக்கத்தை யிவ்வளவினிறுத்திக்கொண்டு, அடுத்தசருக்கத்தை "உபயாலயச் சேர்க்கைச் சருக்கம்" என்னும் பெயராலமைத்து அடியேன் கூறுகின்றேன்; அதனையும் தயவுசெய்து பார்வையிட வேண்டுமென்று நமது (தி) வகைப் பொதுவார்களனைவரையும்

மிகவும் வணக்கத்துடன் வேண்டிக் கொள்ளுகின்றேன்; அடுத்த சருக்கத்திற் கமைத்த பெயரில், உபயம் என்பது இரண்டென வும், ஆலயம் என்பது கோயிலெனவும், சேர்க்கை என்பது இரண்டறக்கலத்தலெனவும் பொருள் கொள்ளப்படும்; சுபம்.

விசுவநாதர்கோயில் வரலாற்றுச் சருக்கம்
முற்றிற்று.



## உபயாலயச் சேர்க்கைச் சருக்கம்.



நூதனச்செய்யுள்.

“மீக்கிளருங் கயிலாய விநாயகரா லயத்தோடும்
ஆக்கமிகும் விசாலாக்ஷி விசுவேச ராலயங்கள்
நீக்கமிலாச் சுத்தாத்து விதசைவ நீர்மையைப்போற்
சேர்க்கையுற்று விளங்கிவருஞ் செயலையினிச் செப்புதுமால்”

---

# கனம்பொருந்திய, தி-வகையார்களே!

பிள்ளையார் விசுவநாதர்கோயில் விசாரணையை (அடியே னும் பழ-சு-நா - ராமநாதஞ் செட்டியாருமாக) வருஷத்துக் கொருவராய் டிறன் மாறிமாறிப் பார்த்துவருங் காலத்தில், நை மித்திக விசேஷத்தில் நவராத்திரி நாளொன்பதிலும், அக்கினி நக்ஷத்திரம் நாட்பதினன்கிலும் அபிஷேக நைவேத்தியார்ச்சனை ரொக்கச்செலவனைத்திற்குமாக நாளொன்றுக்கு ரூ. 1-10-0 ஒன் ணரையே யரைக்கால் ரூபாய் வீதம் ஒருநாட்கொருவராய் நமது

(தி-வகையார்களுள்) 23 பேர்கள் மேற்கூறிய 23 நாட்களிலும் கட்டளையாய் வைத்து வருடந்தோறும் ஏற்கனவே கொடுக்கப் பட்டு நடந்துவந்த வழக்கப்படிக்கு, நாங்களிருவரும் அதுபோல் வாங்கி நடத்தினதில், அபிஷேகதிரவியலோப முதலிய குற்றஞ் செய்ததுபோலவும், அது வன்றி, நித்தியபூசை நடத்திவருவதிற் சரியாய் நடைபெறுமை போலவும் எம்மிருவர் மீதும் நமது வகையினருள்ளிருவர் " அவலை நினைத்து உரலை யிடித்தீரே " என்னும் குறிப்புரை ஞாபகமாம்படி துயர்ந்து குறைகூறி வந்தனர்; பணத்திட்டம், சரக்குத்திட்டம் என்னு மிருவகையினுள் ஒன்றைமற்றொன்றாகக் கொள்ளிற் கால அநுவிலைக்கேற்கத் தாரதம்மியப்படுமென்பதனை அன்னோருணர்ந்திலர்; உணர்ந்திருப்பராயின் இவ்வாறு குறைகூறார்; அவ்விருவர் கூறினும், ஒண்ணரையேயரைக்கால் ரூபாய்க்குள்ளே அபிஷேகம், வர்க்கான்ன மாஷாபூப பாயசாதி நைவேத்தியம், அர்ச்சனை, ரொக்கச் செலவனைத்திற்கும் பங்கீடுபண்ணவேண்டிய திருந்தபடியாற் றிரவிய லோபவகையில் என்னமாக் கடுசு பண்ணினபோதிலும் மீந்தாற் பைசாக்கணக்காய் அற்பம் மீருமேயன்றிப் பணக்கணக்காய் அதிகம் மீருவதற்கான ஏது வில்லையே யென்கின்ற ஸமாதானத்தை யாராவது எடுத்துக் கூறுவரேயானால், அவர்க்கெதிரே (“காணிக் கத்ததுதான் கோடிக்கும்”) என்கின்ற உலகப் பழமொழியைச் சொல்லி எதிர்மறுப்பாரும் பலருளராவர்; இதனை, அக்காலத்திலேயே வெளிப்படுத்தலாகாதோ? வெனில், அவ்விருவருங் கூறியகுறை இம்மைப் பயனைக் குறித்ததும், நாங்களிருவரும் பொறுத்த பொறை மறுமைப்பயனைக் குறித்தது மாய் இரண்டும் ரஹஸியமாதலாலும் அப்பவே வெளியாக்கின் இருபாலாரும் அவரவர் குறித்ததை அவரவரடைய இயலாதாகையாலும், வெளியாக்கவில்லை யென்பதே, அக்கேள்விக்கு விடையாகும்; ஒன்றைமற்றொன்றாகக் கருதும் விபரீதமின்றி அவ் விருவராற் குறை கூறப்பட்டதெனின், அவர்கூற்று மெய்ம்மை

யாயிற் செய்த எம்மையும், அசூயையாற் கூறிய பொய்ம்மை யாயிற் கூறிய அவரையும், சிவதிரவிய* ஸஹஸ்ராயுத லெக்ஷகணி தாபகாரிகண்மாட் டொறுத்தல் போலாது இதற்குத்தகக் கூற் ஞெறுத்தலும் மறுமைக்கண்ண தாகலான், அதனை ஈண்டு விரிப் பது அநாவசியமாகும்; மேற்கண்ட இருவர்களாற் கூறப்பட்டதிர வியலோப மென்பதில், திரவியம், லோபித்தோருடையதன்றிக் கட்டளைதாரான பிறருடையதாதலால், ஈண்டு லோபம் என்ற அவர்களது சொல், அபகாரமென்னும் பொருளைக் குறிப்பா லுணர்த்தி நிற்பதாகும்; அதுநிற்க, அவர்களது இச்சொல்லா னது, மெய்ம்மை பொய்ம்மையென்னும் இரண்டினொருபால தாகி, செய்தோர், செய்யாதோர்மீதேற்றியுரைத்தோ ரென்னு மிருபாலாருள் ளொருவர்க்குப் பயனைப் பின்னே தருமென்கிற விஷயமொருவாறிருக்க, அச்சொல்லையே ஒருவர்மீதுஞ் சார்த் தாமற் பொதுவகையாய் வைத்துப் பார்க்கும்போது, சிவதிரவி யாபகாரம் நிகிருஷ்டமென்னும் நீதிநூற் சட்டத்தை விளக்குத லால், அதுவே,அறிவுடையோர் அன்புமச்சமுமுடையோர்க்குப் போதிக்குமுபதேசம் போல்வதுமாகும்; அதனல், இச்சொல் அந்தமட்டிற் பாராட்டவும்படும்; சிவதிரவியத்தைக் கவர்ந்தோ ரும், கவாமுயற்சித்தோரும், நினைந்தோரும், இவர்களோடு நட்புற்றோரும், நட்டோரை நட்டோரும் குல மழிந்து நரக மடைதல் சத்தியமென்பது நீதிநூற்சட்டமாகும்; இதற்குப் பிரமாணம்:——

## கடம்பவன புராணம்.

### இலீலாசங்கிரகவத்தியாயம்-314-315.

"விழுங்கலாஞ் செந்நெருப்பைக் கடிக்கலாந் தின்சிலையை விடத்தை யாவி—அழுங்குறு வகையிழைத்துக் குடிக்கலா மவுட தத்தா லானுர் செம்பொன்—பழங்கணுற் கவர்ந்துபுசித் திடின்

* ஸஹஸ்ரம்-ஆயிரம். அயுதம்-பதினுயிரம். லக்ஷம்-நூறுயிரம்.

மிடற்றி லேபிடிக்கும் பயனில் யாக்கை—புழுங்கவே கனலுமுயி ரொறுக்குமந்த விடந்திர்வு புகலொ ணுதால்"

"கங்கைவே ணியன்பொருளைக் கவர்ந்தீம்ப ரிருக்கவது கவர் தற் குள்ளந்—தங்கிமுயன் றவர்நினைந்தோ ரக்கணத்தி லழிவர வர் தாமு நிற்க—அங்கவர்தீ நட்புறுவோ ரவரொடுகேட் பினர் குலம்வே ரறவே மாய்வர்—வெங்கொடுந்தீ நரகடைவர் சத்தி யஞ்சத் தியமாணை விளம்பி னேமால்"

---

மேற்கண்டபடி நம்மவருள் இருவர் நாளடைவிற் கூறி வந்த குறை செவிக்கேறுதலாற்ருனே? வேறு யாதுகாரணத் தாலோ? அறியேன்; மேல்விளைந்த விளைவைக் கூறுகின்றேன்; (தி-வகைப்பொதுவாரனைவருங்) கூடியிருந்துகொண்டு (அடியே னையும், -பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியாரையும்) அழைப்பித் துச் சொன்னதாவது, நீங்களிருவரும் இதுவரையில் விசாரணை பார்த்து வந்ததுசரி, பிள்ளையாருக்கு வேருயும், விசுவநாதர் விசாலாக்ஷிக்கு வேருயும், நடத்துகிறதென்ருல் மடைப்பள்ளி சரக்கறை விறகறை முதலியன தனித்தனியே இரண்டிரண்டு கட்டவேண்டும், அதற்கு ஆலய இடவிசாலம் போதாது, ஆத லாற் பிள்ளையார் கோயிலுடன் விசுவநாதர் விசாலாக்ஷிகோயிலை யுஞ் சேர்த்து அதைச் சேர்ந்த திருவாபரணம் பாத்திரம் வகை யருச் சகலத்துடனும் அத்தருதியாய் நீங்களிருவரும் பொது வில் ஒப்புவித்து விடல்வேண்டும்; விட்டால் என்றென்றைக்குஞ் சிறப்பாய் நடத்திவருவோம்; இந்த விஷயத்தில் உங்களுக்கு ஐயம் வேண்டாம்; அவ்வாறு ஒப்புவிப்பதில் மேற்படி கோயிற் திருப்பணிக்காகவும் பூசைப்படித்தரம் கட்டளை வகையருவுக் காகவும் உங்களுடைய முன்னோர்களா லெடுத்துவைக்கப்பட் டுத் தற்காலம் உங்களிருவர்களிடமு மிருந்துவருகிற மூலதனத் தில் இப்போது விசுவநாதர் விசாலாக்ஷியின் பூசைப்படித்தரப் பண்டுக்காக ரூ. (5000-0-0) ரூபாய் ஐயாயிரம் பொதுவாரிடம் கொடுத்துவிடல் வேண்டும், அதுபோகப் பாக்கிப்பணத்தை

வைத்திருந்து பிள்ளையார்திருப்பணியைப் பொதுவார் எப்போதும் கட்டுகிறார்களோ? கட்டுங்காலத்தில் உங்களிருவருடனும் பொதுவார்களுக்குள் உங்களுக்கு யுக்தமாகத் தோன்றுகிற மூன்று பேர்களையுஞ் சேர்த்துக்கொண்டு ஆக ஐந்துபேர்களின் மேற்பார்வையில் விசுவநாதர் விசாலாக்ஷி கோயிலிரண்டிற்கும் இரண்டுசந்நிதிகளாகவே வைத்துத் திருப்பணியைக் கட்டிமுடிப்போம்; இந்த விதமான விபரத்துடன் யாதாஸ்து ஒரேமாதிரி க்ஷாத்தாக (5) ஐந்து பிரதியெழுதி அவைகளில் எல்லாரும் கையெழுத்துச் செய்து உங்களிரண்டுபேரிடம் இரண்டு பிரதியும் (தி-வகைப் பிராஞ்சு) மூன்று வகையாரிடம் மூன்று பிரதியுமாக வைத்துக்கொள்ளுவோமென்று சொன்னார்கள்;

அப்போது (அடியேனும்-பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியாரும்) யோசித்துச் சொல்லுகிறோமென்று சொன்னோம்; (தி-வகைப்பொதுவார்க ளெல்லாரும்) சரியென்றார்கள்; அப்பால், கூடும் விசேஷவீடுகளிலெல்லாம் இந்தப்பிரஸ்தாபம் அடர்ந்தும் தொடர்ந்தும் நடந்துவந்தது; நாளடைவிலே-தி-வகைப்பிராஞ்சு தி-வகையினராகிய (-தி-அ-சு-அண்ணாமலை செட்டியாரும்,) தி-வகைப்பிராஞ்சு மா-வகையினராகிய (-வெ-ஆ-அரு - அருணாசலஞ் செட்டியாரும்,) எங்களிருவருக்கும், பொதுவார் கருத்தின்படி நீங்களிருவரும் கோயிலைப் பொதுவிலொப்பு வித்துவிடுவதே உத்தமமென அதற்குரிய சதுர்வித உபாயங்களோடும் எடுத்துச் சொல்லிவந்தார்கள்; பிள்ளையாருடன் விசுவநாதர் விசாலாக்ஷியை ஒன்றாகச் சேர்த்துச் சிறப்பாய் நடத்திவர விரும்பிய வெகுஜநஸம்மதத்தையே தெய்வஸம்மதமாக நினைத்து அடியேன் பொதுவில் ஒப்புவிக்கத் துணிந்தேன்; (பழ-சு-நா-ராமநாதஞ்செட்டியார்) ஒப்புவிக்கத் துணியாமல் மனங்கலங்கினர்; கீழ்க்கண்ட வசனங்களையும் பிரமாணப்பாக்களையும் அவருக்குஅடியேனெடுத்துப் போதித்துத் தேற்றினேன்; அவைகளையும் இங்கே சுருக்கமாய்த் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்;

விசுவநாதர் விசாலாக்ஷிகோயிலை தி.வகைப்
போதுவில் விடத்துணியாத -பழ-சு-நா-
ராமநாதஞ் செட்டியாருக்கு,
வே-ஆ-தி- சிதம்பரஞ் செட்டியார்,
விடும்படி எடுத்துப் போதித்தவை.

(அப்பா! ராமநாதா!) நமது விசுவநாதர் விசாலாக்ஷிகோயிலை (தி) வகைப்பொதுவார்களது வருதிப்படி அவர்களிடம் ஒப்பு வித்தற்கு ஏன் யோசிக்கிறாய்? பலர் கருத்தோர்மையைக் கடந் தாற் பின்னுக்கு நிர்வஹிப்பது கடினம்; நமது முன்னோர்கள், (தி) வகைப்பொதுவாரிடம் இந்த விசுவநாத ப்ரதிஷ்டையைப் பற்றி ஆதியிற் சொல்லும்போதே பொதுவிற் செய்தாலுஞ்சரி அல்லது தனதிற்செய்துகொள்ள அநுமதிபண்ணினாலுஞ் சரி யென்று சொல்லியிருத்தலால் அதை நோக்கும்போது, நாமிப் போது பொதுவில் விடுவதானது, முன்னோர்களது கருத்துக்கு விரோதமல்ல; விடுகிறது தாழ்வென்று நீ கூறுகின்றாய்; அது, தாழ்வாக மாட்டாது; ஏனெனில்? இப்போது பூசைப்படித்த ரப்பணப் பண்டுகொடுத்தும், பின்னீடு திருப்பணிக்குப் பணந் தருவதாக யாதாஸ்திற் கண்டுகொடுத்தும், பூதபௌஷ்ய வர்த்த மான நிகழ்ச்சியை அநுபவத்தாலும் அநுமானத்தாலும் நிதா னித்துத் தெளிந்தும் விடுகிறபடியால் உத்தமமேயாகும்;

இன்னமும், அது, உத்தமமென்பதை, உவமைமுகத்தா லும், அநுபவக்காட்சி முகத்தாலும், நிரூபிக்கின்றேன் கேள்! பெண்ணைப் பணம்வாங்கிக்கொண்டு மணஞ்செய்து கொடுப்பது மாம்ஸவிக்ரயமெனப்பட்டு நரகத்தைத் தரத்தக்க பாவமாகவும், ஸ்த்ரீதனங் கொடுத்துச் செய்துகொடுப்பது கந்நிகாதான மெனப்பட்டுச் சுவர்க்கத்தைத் தரத்தக்க புண்ணியமாகவுஞ் சொல்லப்படும்; இவ்விரண்டும், பெண்ணைப் பிறந்தாத்திலிருந்து புக்காத்துக் கனுப்புங் கிர்த்தியத்தா லொத்திருந்தபோதிலும்,

அவற்றுள், ஸ்த்ரீதனத்தோடு கொடுக்குங் கந்நிகாதானம், உத்தமமாமன்றே? அதுபோல, முன்னும் பின்னும் பணங்கொடுத்து ஆலயத்தை ஒப்புவிப்பது உத்தமமென்று உவமைமுகத்தாலறியக்கடவாய்; மேற்காட்டியது முற்றுவமையன்று; ஏகதேசவுவமையாம்; இது நிற்க, நமது நகரவட்டகையில் தனதிற்ருபித்திருந்த ஆலயங்களைப் பின்பு பொதுவிலொப்புவித்தோ ரநேகருளர்; இந்த அநுபவத்தாலும் அறியக்கடவாய்; நாம் விட்டாற் பலரும் கவனித்துச் சிரத்தையோடு விதிப்படி நடத்திவருவார்கள்; ஆனதாற் சபலிக்காமல் விடுதற்குச் சம்மதி;

(அப்பா! ராமநாதா!) இனி, சிவாலயத்தைப்பற்றிய விஷயங்களை உனக்குச் கொஞ்சஞ் சொல்லுகிறேன்; கேள்! சிவாலயங்களிற் பூசைகள் காலந்தோறுந் தவறாது நடைபெறுமாயின் உலகத்தில் அரசநீதியும் மழையும் விளைவும் குன்றாமற் பெருகும்; தவறுமாயின் அவைகள் குன்றுவதோடு பிணியும் களவும் தீமையும் உண்டாகும்; கோயிலதிகாரிகளுள் இம்மைப்பயனைக் குறியாது நடத்துவோர், இம்மையிற் புகழையும் மறுமையிற் சிவலோகத்தையும் அடைகுவர்; இம்மைப்பயனைக்குறித்து நடத்துவோர், இம்மையில் இகழையும் மறுமையில் நரகத்தையும் அடைகுவர்; க்ஷாத்ர மோஹாக்ஞாநங்களு ளொன்றன் வசப்பட்டு, சிவாலயத்தில் முந்தின திருப்பணி பூசை படித்தரங்களைக் குறைத்த அதிகாரிகள், அலிப்பிணி க்ஷயப்பிணிகளையடைந்து வருந்துவர்; ஆதலால், சிவாலய விசாரணையைப் பற்றிய விஷயத்தில் அதிகாரிகள் வெகுசாக்ரதையாயிருந்து நடத்தல் வேண்டும் ;

அதுநிற்க, கோயில் விசாரணை செய்யத்தக்க அதிகாரி லக்ஷணமென்னை யெனில்? கூறுகின்றேன் கேள்! உள்ளும் புறமும் பரிசுத்தமுடையவராயும், சமயம் விசேடம் நிருவாணமென்னும் மூன்று தீக்ஷைகளையும் பெற்றவராயும், சிவாகம புராணங்

களைக் குற்றமறக் கற்றவராயும், மெய்யன்புடையவராயும், சைவாசாரமுடையவராயு முள்ளவரே சிவாலய விசாரணைக்கு உரியவராவாரென்று, உண்மைநூல்கள் விதிக்கின்றன; இவற்றிற்குப் பிரமாணம் :—

## சிவாலய பரிபாலனமும் தருமகர்த்தாவி னிலக்கணமும்.

### திருமந்திரம்-517-518.

" ஆற்றரு நோய்மிகு மவனி மழைகுன்றும்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்களானவை
சாற்றிய பூசைக டப்பிடிற் றானே "

" முன்னவனார் கோயிற் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினிக்
கென்னரு ணந்தி யெடுத்துரைத் தானே "

### சிவதருமோத்தரம்.

சுவர்க்க நரக சேடவியல்-17.

" இம்மைப் பயனைக் குறியாதே யிறைவன்றிருவா லயமதனுட்
செம்மை சிறக்க மாபூசை செய்விப் பவரே சிறப்புடையார்
இம்மைப் பயனைக் குறித்தியற்று மதிகா ரிகளு யுடலெடுப்பர்
பொய்ம்மைப் புலைய னெனுமுடலும் பொருந்தி விடுவர் புக
[ழினையே "

### திருத்தணிகைப் புராணம்.

அகத்திய னருள்பெறுபடலம்-340.

" திரிதருமிம் மைப்பயனைக் குறித்திறையா லயப்பூசை
செய்வித் தோரும், பருவருநா யொடும்புலைய வுடலெடுப்பர்"

### கடம்பவன புராணம்.

இலீலாசங்கிரகவத்தியாம்-136.

[நாகர்
"பலங்கெழு மீசன் திருப்பணி பூசை படித்தரங் குறைத்ததி
கலங்கவே செய்யு மலிப்பிணி வருத்தங் காட்டுறு மருங்கய
[ரோகர் "

## தனியூர்ப் புராணம்.

### சிவாலய தரிசனவிதிப்படலம்-11-12-13.

" தகவகம் புறமுந் தூயர் சமயமுன் மூன்றும் பெற்றோர்
புகலுமா கமபு ராணம் புகாறக் கற்று ணர்ந்தோர்
பகலரும் பத்தி வாய்ந்த சைவரே பரமன் மேய
நிகரிலா லயத்தை யோம்பு நீர்மைய ராவர் மாதோ "

" இம்மையைக் குறியா தைய னிருந்தளி யோம்பு வார்கள்
இம்மையிற் புகழ்சார்ந் தம்மை யெய்துவர் சிவலோ கத்தில்
இம்மையிற் பொருட்கோளாதி யெண்ணியா லயத்துற் றாலும்
இம்மையிற் பழிசார்ந் தம்மை நரகில்வீழ்ந் திடருழப்பார் "

" கண்ணுதற் பெருமான் மேய கோயிலிற் காலந் தோறும்
நண்ணுநற் பூசை யாதி விதிப்படி நடத்தல் வேண்டும்
பண்ணுத றவறு மாயிற் பார்த்திபன் றனக்கும் பாரில்
அண்ணுபல் லுயிர்க்குந் தீமை யணுகுதல் சரத மாமே "

---

மேலே பிரமாணங் காட்டப்பட்ட தனியூர்ப் புராணச் செய்யுளில் " தக " என்ற விசேஷண அடைமொழிக்கு, சிவாலய விஜாரணைதா ரானதற்கு " ஏற்க " எனப் பொருள் கொள்ளப் படும் ; அவ்வாறு கொள்ளப்படவே, அதனையடுத்த " அகம்புறந் தூய்மை " என்ற விசேஷிய மொழிகட்கு " அகந்தூய்மை நீரா னமையும் புறந்தூய்மை—வாய்மையாற் காணப் படும் " என்னுந் திருக்குறட் குரைத்தாங்குக் கொள்ளப்படும்பொதுப்பொரு ளோடு, சிவாலய விஜாரணைதார் ஆலயஸம்பந்தமாயுள்ள இடம் பொருளேவல்களைப் புறத்துச் சொப்பிரயோசன மாக்காமையா லாகிய புறந்தூய்மையும், அதுஸம்பந்தமாய்க் கழிகண்ணோட்டங் கழிபேருவகையை அகத்துச் சாராமையா லாகிய அகந்தூய் மையும் என்ற சிறப்புப் பொருள்களும் ஈண்டு முக்கியமாய்த் தழுவிக் கொள்ளத்தக்கன வேயாம் ;

---

இந்த விதமாகப் பிரமாணத்தோடு அடியேனெடுத்துப் போதித்த போதனையைக் கேட்டபிறகு, (பழ-சு-நா-ராமநாதஞ்செட்டியார்) விசுவநாதர் விசாலாக்ஷி கோயிலை (தி-வகைப்பொதுவாரிடம்) விடுவதற்கு ஒருவாறாய் ஒப்புக்கொண்டார்; அதனைத் தெரிந்தவுடன் (தி-வகைப்பொதுவார்களெல்லாரும்) கலியுகாதி (௫தூ௰௪)-ல் நிகழ்ந்த ராக்ஷஸஷு ஆவணிமீ ௰௪உயில் பழய தொண்டியார் வீட்டிற் கூடியிருந்து கொண்டு,(அடியேனையும் பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியாரையும்) அழைப்பித்துச் சொன்னதாவது நாளது ஆவணிமீ உ௰௭உ நல்லதினமாக இருப்பதால் அன்றையதினம் பிள்ளையாருடன் விசுவநாதர் விசாலாக்ஷி கோயிலையும் அது ஸம்பந்தமான திருவாபரண முதலிய யாவத்தையும் பொதுவில் ஒப்புவித்து விடல்வேண்டும் ஷை உ௰௪உ வரைக்கும் விசாரணையைப் பார்த்துவந்து அதுவரைக்குமுள்ள செலவை, மாமூல்வழக்கப்படி ஈவித்து, நீங்களிருவருங் கொடுக்கவேண்டியதை நீங்கள் கொடுத்தும், பொதுவாரிடங் கணக்குக் கொடுத்துப் பெற்றுக்கொள்ளவேண்டியதை அவ்வாறு அவர்களிடம் பெற்றுக்கொண்டும் உங்களுடைய விசாரணைக் கணக்கை நேர்செய்துகொள்ளுங்கள்; பொதுவா ரொப்புக் கொள்ளுந் தினமாகிய ஷை உ௰௭உ முதற்கொண்டு அவர்களுடைய ஆள்கையில் இரண்டுகோயிலும் இரண்டறக்கலந்திருந்து வரப்போகிறபடியால் மேற்படி தேதிமுதல் மதுராஸ் நடப்பு வட்டியுடன் தருவதாகக் கண்டும், இருவரும், சேர்ந்துவிட்ட நிலவரந் தெரியும்பொருட்டு உங்களிரண்டுபேருடைய கையெழுத்துச் செய்தும், படித்தரப் பண்டுக்காகத் தரவேண்டிய உண்டியலைத் தேவகோட்டையிற் பணந்தருவதாக இப்போது பொதுவார்களின் ட்ரஸ்டிகளான மூவர்களாடருக்கு எழுதிக் கொடுங்கள்; அப்படிக்கு இப்போதெழுதிக் கொடுத்தாற் பிறகு அதற்குபதிலாக மதுராசுண்டியலாய் உங்களிலொருவர் தரலாம்; யாதாஸ்த்தும் எழுதிக் கையெழுத்துச் செய்துகொள்ளுவோ

மென்று சொன்னார்கள்; மேற்கண்ட பொதுவாரநுமதிப்படி நாங்களிருவரும் சரியென்று, எங்களிருவர் கையெழுத்தும் போட்டுப் படித்தரப் பண்டுக்காக ரூ. (5000-0-0) ரூபாய் ஐயாயிரத்துக்கு ஒரு உண்டியலெழுதிக்கொடுத்தோம்;அப்பொழுதே யாதாஸ்த்தும் ஒரேமாதிரி க்ஷரத்தாக-5-பிரதியெழுதி அனைத்திலும் எல்லாரும் கையெழுத்துச் செய்துமாயிற்று; மேற்படி ஐந்து பிரதியில்-தி-வகைப் பிராஞ்சு மூன்றுவகைக்கும் மூன்று பிரதியைக் கொடுத்து, மீதி இரண்டில் (பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியா) ரிடம் ஒருபிரதியைக் கொடுத்து, மற்றொரு பிரதியை அடியேனிடங் கொடுத்தார்கள்; மேற்படி படித்தரப்பண்டுண்டியனுக்கு நகலும் யாதாஸ்த்துக்கு நகலும் இதனடியில் வரையப்படுமானதால் அவைகளைப் பார்வையிடக்கோருகின்றேன் ;

---

விசுவநாதர் விசாலாக்ஷி கோயிற் பூசைப் படித்தரப்பண்டுக்கு, வெ-ஆ-தி-சிதம்பரஞ் செட்டியார்; பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியார் என்னுமிருவருஞ்சேர்ந்து தி-வகைப்பொதுவாரிடங்கொடுத்த,

# உண்டியல் நகல்.

உ சிவமயம்.

ராக்ஷஸஹு ஆவணிமீ ௰சஉ தேவகோட்டை ஸ்ரீ கைலாச விநாயகர் கோயிலைச்சேர்ந்த (தி-வகைப்பொதுவார் வரவு) ஸ்ரீ விசுவநாதர் கோயிலைச்சேர்ந்த (வெ-ஆ-தி, பழ-சு-நா-பத்து) ஸ்ரீ விசுவநாதர் விசாலாக்ஷிகோவில்ப் பூசைப்படித்தரம் வகையரு வுக்காக நாளதுதேதியில் எழுதிக்கொண்டிருக்கிற யாதாஸ்த்துப் பிரகாரம் பண்டாகவைத்து நடத்திவரவேண்டியதற்குத் தா

வேண்டியது ரூ. 5000-0-0-இந்த ரூபாய் ஐயாயிரத்துக்கும் நாளதுமீ உ௩௨ முதல் சென்னப்பட்டணம் நம்மிடபிள்ளை கள் நடப்புவட்டியுடன் (வெ-ஆ-பள-ராமஞ் செட்டியார்) (பள-சு-அரு-சபாபதி செட்டியார்,) (தி-சு-பள-ப-பளனியப்ப செட்டியார்) இவர்களாடருக்குத் தேவகோட்டையிற் பணங்கொடுத்து இதைச் செல்லுடன் பெற்றுக்கொள்வோமாகவும்.

| | | |
|---|---|---|
| வெ - | ஆ - தி | - சிதம்பரஞ் செட்டி. |
| பள - | சு - நா | - ராமநாதஞ் செட்டி. |

உண்டியல் நகல் முற்றிற்று.

---

விசுவநாதர் கோயிலை ஒப்புக்கொண்ட (தி·வகைப் பொதுவாரும்) ஒப்புவித்த (வே - ஆ - தி, பள - சு - நா, என்னுமிருவரும்) பரஸ்பரஞ் செய்துகொண்ட

# யாதாஸ்து நகல்.

உ சிவமயம்.

கைலாஸவிநாயகர் துணை.

ப॥ கூஉ௯ஸஞ் ஆவணிமீ 14உ தேவகோட்டை-தி-வகைப் பொது கைலாஸ விநாயகர் கோவில் மானேஜ்மெண்டை மேற்படி பொதுவாருக்காகப் பார்த்துவருகிற (வெ-ஆ-பள-ராமஞ் செட்டியார்) (1) (பள-சு-அரு-சபாபதி செட்டியார்) (2) (தி-சு-பள-ப-பழனியப்ப செட்டியார்) (3) மூனுபேர்களும் ஒருபுறமாகவும், விசுவநாதர் விசாலாக்ஷி கோவில்ப் பாத்தியஸ்தர்களான (வெ-ஆ-தி-சிதம்பரஞ் செட்டியார் 1) (பள-சு-நா-இராமநாதஞ் செட்டியார் 2) இரண்டுபேர்களும் ஒருபுறமாகவும் செய்துகொண்ட யாதாஸ்து.

(1) ஷை பொதுக் கைலாஸ விநாயகர் கோவிலுடன் (சிதம்பரஞ் செட்டியார், ராமநாதஞ் செட்டியார்) முன்னோர்களால் விசுவநாதர் விசாலாக்ஷி அம்பாள் வகையறா பிரதிஷ்டைசெய்து அதற்குப் பூஜைப் படித்தரம் வகையறா அவர்களே நாளது தேதிவரை நடத்திவருகிறார்கள்.

(2) இப்போது ஷை கோவிலையும் அதைச்சேர்ந்த திருவாபரணமும் பாத்திரம் வகையறாச் சகலத்தையும் ஷை கைலாஸ விநாயகர்கோவில்ப் பொதுவில் ஒப்புவித்து ஷை விநாயகர் கோவில்ப் பொதுவாரே பூஜை படித்தரம் வகையறா நடத்திவருகிறதென்றும், அதற்காக ஷை (சிதம்பரஞ் செட்டியார், ராமநாதஞ் செட்டியார்) ஷை பொதுவாருக்காக ஷை கோவில் மானேஜ்மெண்டு பார்த்துவருகிற மேலேகண்ட (ராமஞ் செட்டியார்) வகையறா மூனுபேர்களிடம் படித்தரம் வகையறாச் சிலவுக்காக ரூ. 5000-0-0 ஐயாயிரம் கொடுத்துப் பெற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

(3) அந்தத் துகையை ஷை கைலாஸ விநாயகர் கோவில்ப படித்தரப்பண்டுடன் சேர்த்துவைத்திருந்து அதின் வட்டி வரும்படியிலிருந்து பூஜை படித்தரம் விசேஷம் வகையறாக் காரியங்களை ஷை பொதுவாரே நடத்திவரவேண்டியது.

(4) விசுவநாதர் விசாலாக்ஷி கோவில்த் திருப்பணி வகையறாவுக்காகவும் ஷை கோவில்ப்படித்தரம் கட்டளை வகையறாவுக்காகவும் ஷை (சிதம்பரஞ் செட்டியார், ராமநாதஞ் செட்டியார்) முன்னோர்களாற் சொந்தத்திலிருந்து எடுத்துவைத்து இருவர்களிடமும் தற்கால மிருந்துவருகிற துகையிலிருந்து மேற்கண்டபடி படித்தரம் விசேஷக்கட்டளை வகையறாவுக்காகக் கொடுத்திருக்கிற ரூ. 5000—0—0 ஐயாயிரம் நீங்கலாகப் பாக்கியிருக்குந் துகைகளை ஷை (சிதம்பரஞ் செட்டியார், இராமநாதஞ் செட்டியார்) இவர்கள் கணக்கைப் பார்த்துத் தேறுகிற துகை



யை ஷை விசுவநாதர் விசாலாக்ஷி அம்பாள் வகையரு ஆலயங்களைப் புதுப்பிவிக்க வேண்டியதற்காகவும் கட்டளைகளை நடத்திவரவேண்டியதற்காகவும் பண்டாக வைத்திருந்து ஷை கைலாஸ விநாயகர் கோவில்த்திருப்பணி வேலையை ஷை பொதுவார்கள் எப்போது நடத்துகிறார்களோ? அப்போது [விசுவநாதர் விசாலாக்ஷி கோவிலுக்கு இரண்டு சன்னிதிகளாக வைத்துத்] திருப்பணி நடத்துவதற்காகவும், கட்டளைகளை நடத்துவதற்காகவும் ஷை (சிதம்பரஞ் செட்டியார், ராமநாதஞ் செட்டியார்) இரண்டுபேர்களும் தங்களுடன் ஷை தி-வகையைச் சேர்ந்த (வெ-ஆ-வகை, ராம-பள-வகை, ராம-தி-வகை) இந்த மூன்று வகையிலும் ஷை இருவர்களுடைய யுக்தமாகத் தோன்றுகிற மூன்று மனுஷ்யாளையும் சேர்த்துத் தஸ்தாவேசு எழுதிவைத்துப் பணத்தையும் ஷை ஐந்துபேர்களுடைய ஆடரிலும் வைத்துத் திருப்பணியையும் கட்டளைகளையும் நடத்திவரவேண்டியது.

வெ - ஆ - பள - ராமன் செட்டி.
பள - சு - அரு - சபாபதி செட்டி.
தி - சு - பள - பளநியப்ப செட்டி.
வெ - ஆ - தி - சிதம்பரஞ் செட்டி.
பள - சு - நா - இராமநாதன் செட்டி.

## சாக்ஷிகள்.

தி - பழ - சு - சுப்பிரமணியன் செட்டி.
தி - அ - சு - அ - அண்ணாமலை செட்டி.
வெ - ஆ - அரு - அருணாசலஞ் செட்டி.
பள - ராம - ஆத - வெள்ளையப்ப செட்டி.
பள - ப - ராம - சுப்பிரமணியஞ் செட்டி.
நாக - ஆ - ராம - நாகப்ப செட்டி.
அ - தி - அ - தின்னப்ப செட்டி.
பள - அ - ராம - சு - வெங்கடாசலஞ் செட்டி.
பள - வெ - அ - சுப்பிரமணியஞ் செட்டி.

யாதாஸ்து நகல் முற்றிற்று.

இந்த விதமான உண்டியலுங் கொடுக்கப்பட்டு யாதாஸ்த்தும் பிறந்தபிறகு ஷை ஆவணிமீ˚ ௨௰௬உ வரைக்கும் விசாரணை பார்த்து அதுவரைக்குங் கணக்கு முடித்துக் கொடுத்து உள்ள செலவில், பிள்ளையாருக்குள்ள ஈவுப்பணத்தைப் பொதுவாரிடம் பெற்றுக் கொண்டும், விசுவநாதருக்குள்ள ஈவுப்பணத்தை நாங்களிருவருங்கொடுத்தும் நேர்செய்து கொண்டதுடன் கலியுகாதி (௫௲௯௱௰௬)-ல் நிகழ்ந்த ராக்ஷஸஞு ஆவணிமீ˚ ௨௰௭உ ஆதித்த வாரதினத்தில் (அடியேனும்-பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியா) ருமாகச் சேர்ந்து பிள்ளையார் கோவிலுடன், விசுவநாதர் விசாலாக்ஷி கோவிலையும் அதைச்சேர்ந்த திருவாபரணம் பாத்திரம் வகையறுயாவத்தையும் ஒருங்குசேர்த்து (தி-வகைப்பொது வாரிடம்) மேற்காட்டிய அவர்களது அநுமதிப்படிக்கே அத்தறுதியாய் ஒப்புவித்து விட்டோம்; ஷை தேதி முதலாக, பிள்ளையார் கோவில், விசுவநாதர் விசாலாக்ஷிகோவில் என்னும் உபயாலயங்களும் இரண்டறக் கலந்து (தி-வகைப் பொதுவார்களிடம்) இருந்து பரிபாலிக்கப் பெற்று வருகின்றன;

அப்பாற் சிலமாதங்கள் சென்றபின்பு (தி)-வகைப் பொதுவார்களனைவரும் ரெண்டாங்கட்டார் வீட்டிற் கூடியிருந்து கொண்டு சொன்னதாவது, படித்தரப்பண்டுக்காக (அடியேனும் பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியாருமாகச்) சேர்ந்து தேவகோட்டையிற் பணங்கொடுக்கிறதென்கிற வக்கணையுடன் எங்களிருவராலும் எழுதிக்கொடுத்திருப்பதாக மேலே சொல்லப்பட்ட உண்டியலை வாபீசு பெற்றுக் கொள்ளும்படிக்கும், அதற்கு பதிலாக அதிற்கண்டதேதிக்கு மதுராசு உண்டியலாக அடியேனைமட்டும் எழுதித்தரும்படிக்கும், முந்தின உண்டியலிற் கண்ட ஆடர்ப் பேர்வழி மூவரில் (தி-சு-பள-ப-பளனியப்ப செட்டியார்) இது ஸமயம் ஆடர்க்கையெழுத்துப் போடுவதற்கு உள்ளூரிலில்லாமையாலும் உண்டியலைச் சிக்கிரமனுப்பவேண்டிய

திருக்கிற படியாலும் இனி யெழுதப்போகிற பதிலுண்டியலில் அவருக்குப் பதிலாக அவருடைய தமயனார்குமாரராகிய (தி-சு-பள-சு-முத்துக்கருப்பஞ் செட்டியாரைப்) போட்டுத்தர வேண்டுமென்றும் சொன்னார்கள்; அதுபோலவே கலியுகாதி (ருகூ௰எ)ல் நிகழ்ந்த நளஹு வைகாசிமீ உ௰ருஉயில் முந்தின உண்டியலிற் கண்ட தேதியான ராக்ஷஸஹு ஆவணிமீ உ௰எஉமுதல் நடப்பு வட்டியுடன் கொடுக்கும்படி கண்டு வேறு மதுராசு உண்டியல் அடியேன் மட்டும் எழுதிக்கொடுத்தேன்; அதற்கு நகலும் இதனடியில் வரையப்படுமானதால் அதனையும் தயவுசெய்துபார்வையிடக்கோருகின்றேன்;

படித்தரப்பண்டுக்கு இருவருஞ்சேர்ந்து முன்பு கொடுத்த
மேலேகண்ட உண்டியலுக்குப் பதிலாக, பின்பு
ஒருவர்மட்டுந் தனிமையிற் கொடுத்த,

# உண்டியல் நகல்.

உ. சிவமயம்.

வெ-ஆ-தி. வெ-ஆ-அரு.
தேவகோட்டை. மதுராஸ்.

நளஹு வைகாசிமீ உ௰ருஉ தேவகோட்டை ஸ்ரீ கைலாசவிநாயகர் கோயிலைச் சேர்ந்த (தி-வகைப்பொதுவார்) வரவு ஸ்ரீ விசுவநாத சுவாமி கோயிலைச்சேர்ந்த (-வெ-ஆ-தி) பத்து ஸ்ரீ விசுவநாதர் விசாலாக்ஷியம்பா கோயிற் பூசைப்படித்தரம் வகையருவுக்காகச் சென்ற ராக்ஷஸஹு ஆவணிமீ ௰சஉயில் எழுதிக்கொண்டிருக்கிற யாதாஸ்துப் பிரகாரம் பண்டாக வைத்து என்றும் நடத்திவரவேண்டியதற்கு மேற்படிதேதியில் (நானும்) மேற்படி விசுவநாதர் விசாலாக்ஷியம்பா கோயிலைச் சேர்ந்தவரான (-பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியாரும்) மேற்படி ஆவணிமீ உ௰எஉ முதல் மதுராஸ் நடப்பு வட்டியுடன் -வெ-ஆ-பள-ராமஞ் செட்டியாரவர்கள் (1)-பள-சு-அரு-ச-சபாபதி செட்டியாரவர்கள் (2) தி-சு-பள-பளனியப்ப செட்டியாரவர்கள் (3)

இம்மூவர்களாடருக்குக் கொடுக்கிறதாக எழுதிக்கொடுத்திருந்த (ருதூ) ரூபாய் உண்டியலை இவடத்திற் செல்லெழுதி வாங்கிக் கொண்டவகையில் தரவேண்டியது ரூ (ருதூ) இந்த ரூபாய் ஐயாயிரத்துக்கும் சென்ற ராக்ஷஸவரு ஆவணிமீ உ௰௭ஷ முதல் மதுராஸ் நடப்பு வட்டியுடன் (வெ-ஆ-பள-ராமஞ் செட்டியாரவர்கள் (1) பள-சு-அரு-ச-சபாபதி செட்டியாரவர்கள் (2) தி-சு-பள-சு-முத்துக்கருப்பஞ் செட்டியாரவர்கள் (3) மூன்றுபேர் ஆடருக்கு-வெ - ஆ - அரு - ஏஜண்டு சீனிவாசய்யங்காரவர்கள் கொடுத்து இதிற் செல்லெழுதிவாங்கிக்கொண்டு எங்கள் பத்தெழுதிக் கொள்ளவேண்டியது.

வெ - ஆ - தி - சிதம்பரஞ் செட்டி

உண்டியல் நகல் முற்றிற்று.

---

# கனம்பொருந்திய, தி-வகையார்களே!

மேற்கூறியபடி உபயாலயங்களும்-தி-வகைப்பொதுவார்களுடைய ஆள்கைக்கு வந்தபிறகு அவர்களால், கலியுகாதி (ருதூ௰௭)-ல் நிகழ்ந்த நளவரு ஆனிமீ ருஉ ஆதித்த வாரதினத்தில் எல்லா மூர்த்திகட்கும் அஷ்டபந்தன மருந்து சாத்திக் கும்பாபிஷேகஞ் செய்யப்பெற்றது;

அப்பாற் சிலகாலஞ் சென்ற பின்பு பொதுவார், கலியுகாதி (ருதூ௰௧)-ல் நிகழ்ந்த காளயுக்தி வருத்தில் சுபதினத்தில் சூரியன் சந்திரன் வயிரவர் சனீசுவரன் என்கிற நான்கு சிலாவிக்ரகங்களைச் செய்துகொணர்வித்து, விசுவநாதருக்கு எதிரே சன்னதிக்குத் தெற்கருகினும் வடக்கருகினும் அவருக்கு வலக்கண்

ணுகச் சூரிய விக்ரஹத்தையும், இடக்கண்ணுகச் சந்திர விக்ரஹத்தையும், ஈசானிய மூலையில் மதிலோரத்தில் மற்றை இரண்டு விக்ரஹங்களையும் பிரதிஷ்டை பண்ணினுர்கள் ;

மேற்கூறிய ஆலயங்கள், ஒன்று சேர்ந்த ராக்ஷஸஞு ஆவணிமீ² உ௰௭வ முதலாக, (தி-வகைப்பிராஞ்சு-மா-வகையாரால் ஒருவருஷமும், பள-வகையாரால் ஒருவருஷமும், தி-வகையாரால் ஒருவருஷமுமாக) டிறன் மாறி மாறி விசாரணை பார்க்கப் பெற்று வருகின்றன ;

இனி, இச்சருக்கத்தை இவ்வளவினிறுத்திக்கொண்டு, ஆலயத்திருப்பணியைப்பற்றி நடந்த முயற்சியையும் வர்த்தமானத்தையும் கூறவேண்டிய காரணத்தால், இதனையடுத்த சருக்கமானது, "திருப்பணிமுயற்சி வர்த்தமானச்சருக்கம்" என்கின்ற பெயர்வைத்தமைத்துக் கூறப்படும்; அதனையும் தயவுசெய்து சிரமநோக்காது ஆழ்ந்து பார்வையிடவேண்டுமென மிகவும் வணக்கத்துடன் கேட்டுக் கொள்ளுகின்றேன்; சுபம்.

உபயாலயச் சேர்க்கைச் சருக்கம்
முற்றிற்று.



# திருப்பணிமுயற்சி வர்த்தமானச் சருக்கம்.



நூதனச்செய்யுள்.

"விருப்புறு கயிலாசப்பேர் விநாயகன் றனக்குங் கற்ப
தருப்புரை விசுவே சற்குந் தாய்விசா லாட்சிக் குஞ்சீர்
ஒருப்படு புதிய கோயி லுண்டுபண் ணுதற்குச் செய்த
திருப்பணி முயற்சி வர்த்த மானத்தைச் செப்பு வாமால்"

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

மேற்சருக்கத்திற் கூறியபடி உபயாலயங்களும் பொது விசாரணையிலிருந்துவருங் காலத்தில் நமது வகையா ரெல்லா ருடைய மனசிலும் ஆலயத்தைப் புதுத் திருப்பணியாகக் கட்ட வேண்டு மென்னும் விருப்பமானது, நாளடைவிலே வளர்ந்து வந்தது.

அவ்வாறு வளர்ந்து வருங்காலத்தில் கலியுகாதி (ரு௲உ௰உ)-ல் நிகழ்ந்த துர்மதிஞு ஆனிமீ உ௰௭உ ஞாயிற்றுக் கிழமையில் சுவாமி வீட்டில் பழனியாண்டவர் பூஜாவிசேஷநிமித்தமாக (தி)-வகைப் பொதுவா ரெல்லாருங் கூடியபோது, கோயி லைப்புதிதாகக் கட்டுகிறதென்றும், பிள்ளையார்கோயிலுக்குப் பணம் நமது வகைக்குட் பிறந்த பங்கிலுமெடுக்கிற தில்லை, முதலீவிலு மெடுக்கிறதில்லை, அவரவர் மனோபாவப்படி தந்ததை வாங்கிக் கொள்ளுகிற தென்றும், விசுவநாதர் விசாலாக்ஷி கோயி லுக்குப்பணம் (வெ-ஆ-தி) இடமும் (பழ-சு-நா) இடமுமிருப் பதை வாங்கிக்கொள்ளுகிறதென்றும் பொதுவிற்பேசித் தீர் மானமாயிற்று.

ஆனவுடன் ஒவ்வொருவரும் அவரவர் மனசிற் சங்கற்ப மான தொகைக்கு ஷை துர்மதிஞு ஆனிமீ உ௰௭உ முதல் மது ராஸ் நடப்பு வட்டிகண்டு உண்டியல் கொடுத்தார்கள்; அவ்வாறு உண்டியல் மூலம் பணஞ் சேர்ந்தவுடன் பொதுவார் (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரைத்) திருப்பணிப்பிளான் போடும் படி நியமனஞ் செய்தார்கள்; ஷை (சுப்பிரமணியஞ் செட்டியார்) திருப்பணிப்பிளான் தயார்ப்பண்ணினார்கள்;

பின்பு (பழ-வெ-அ-வெ-சாமிநாதஞ் செட்டியாருடைய) கல்யாண வீட்டில் அதனிமித்தம் ஷை துர்மதிஞு ஆவணிமீ

உபசவ வியாழக்கிழமையில் (தி)-வகைப் பொதுவார்கள் கூடிய போது (தி-ரா-ம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்) திருப்பணிக் குத் தலைமையைப் பொறுப்பாய் வஹித்து நடத்துகிற தென் றும், (வெ-ஆ-அரு-அருணசலஞ் செட்டியார்-1) பழ-அ- வெங் கடாசலஞ் செட்டியார்-2.) (தி-சு-பழ-பழனியப்ப செட்டியார்-3) இந்த மூவரும் திருப்பணிப்பணங்களை இனங்களிற் கொடுத்து வாங்கி வருகிறதென்றும்,) (வெ-ஆ-வெ-வெள்ளையப்ப செட்டி யார்-1, நாக-ஆ-ராம-கிருஷ்ணஞ் செட்டியார்-2, பழ-சு-அரு- அ-நாராயணஞ்செட்டியார்-3,பழ-வெ-சு-லெக்ஷுமணஞ் செட்டி யார்-4, தி-அ-சு-அ-சுப்பிரமணியஞ் செட்டியார்-5, தி-பழ-சு-சு- சுப்பிரமணியஞ் செட்டியார்-6)இந்த அறுவரும் திருப்பணி வேலையை மேற்பார்த்து நடத்தி ஷை கணக்கு வரவுசெலவு செய்துவருகிறதென்றும், நியமனஞ் செய்தார்கள்.

திருப்பணி, கும்பாபிஷேகம் யாகம் முதலான பெருத்த காரியங்களில் இன்னாரின்னார் இன்ன இன்ன காரியங்கட் குரிய ரெனத்தேர்ந்து நியமித்தல் நீதி நூற் கருத்தும், ராஜகுடும்பத் தாசரணையுமாதலால் மேற்கண்ட வாறு நமது (தி-வகைப்பொது வார்கள்) நியமித்த விஷயம்,உத்தமமேயாம்; குருகுலச் சக்ரவர்த் தியான தருமபுத்திரர் தாம்செய்த ராசசூய யாகத்தில், வீமனைப் போஜனகாரிய மேற்பார்வைக்கும், விசயனைச் சந்தனம் பனிநீர் புஷ்பங் கொடுக்குங்காரிய மேற்பார்வைக்கும், நகுல சகாதேவர் களை வெற்றிலை பாக்குக் கொடுக்குங்காரிய மேற்பார்வைக்கும் கர்னனைத் தானதியாககாரிய மேற்பார்வைக்கும், துரியோதனனை உக்கிராணகாரிய மேற்பார்வைக்கும், மற்றைய அரசர்களை மற் றையகாரிய மேற்பார்வைக்கும் நியமனஞ் செய்திருக்கின்றனர்; இவ்வாறு தருமபுத்திரர் நியமனஞ் செய்திருக்கும் விஷயத்தை, "மாபாரதஞ் சொன்னநா ளேடாக மாமேரு வெற்பாக வங்கூ ரெழுத்தாணி தன்கோடாக வெழுதும்பிரான்" எனப்பாரதத் தினும், "பாரதப் பெரும்போர்த் தவளமாமருப்பொன் றொடித்

தொரு கரத்திற் றரித்துயர் கிரிப்புறத் தெழுதுங்—கவளமா களிற்றின் திருமுகம்படைத்த கடவுள்" எனத் திருவாதவூரடிகள் புராணத்தினும், "மன்னிதிகா சத்தையுயர் மாட்டுவரை மாட்டு வரை நன்னிதிநால் வாயான்" எனத்திருவெற்றியூர்ப் புராணத் தினும், "பாரதங் கோட்டு நுதியா லெழுதிய பண்ணவன்" எனப் பழமலையந்தாதியினுங் கூறியபடி நமது விநாயகப் பெரு மானது திருக்கரத்தா லெழுதப்பட்ட மறைத்துவமுடைய ஐந் தாம் வேத மென்னும் மறைபாரதத்திற் காண்கின்றோம்; இதற் குப் பிரமாணம்:—

## திருக்குறள்—517.

"இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்"

## பாரதம்.

இராசசூயச் சருக்கம்-100, 101, 102.

"மாலைமுன் வணங்கிக் கங்கை மைந்தனை வணங்கி யாக
சாலையை நோக்கும் வேந்தன் றம்பியை நோக்கி முந்நீர்
வேலையின் மணலிற் சாலு மிகுசன மருந்தத்தேவ
ராலயத் தமுத மென்ன வடிசினீ யளித்தி யென்றான்"

"நாவியின் மதமுஞ் சாந்து நறும்பனி நீருந் தாரும்
வாவியிற் காவிலுள்ள மலர்களு மற்றும் யாவும்
மேவிய வரிவில் லாண்மை விசயனை நல்கு கென்றான்
றாவிலை பளித மேனைத் துணைவரை வழங்கச் சொன்னான்"

"தானமுந் தியாகந் தானுந் தபனன்மா மதலையான
மானவன் கொடுக்க வென்றான் வரம்பிலா நிதிகள் யாவுங்
கானலங் கடல்சூழ் வையங் காவலன் காவ லென்றான்
ஏனையோர் பலரும் வேந்த னேவலின் முறைநின் றாரே"

---

இந்த விதமாகப் பதின்மரை நியமனஞ் செய்தபோது அந்த நியமனம் பிறழாமைபற்றி ஒரு யாதாஸ்து எழுதி அங்குள்ளார்க ளாற் கையெழுத் திடப்பெற்றது. அத்தருணம் பொதுவார்கள்

(அடியேனையும் பழ - சு - நா - ராமநாதஞ் செட்டியாரையும்) அங்கே வரவழைத்துச் சொன்னதாவது, விசுவநாதர் விசாலாக்ஷி திருப்பணிக்காக உங்களிடமிருக்கிற பணத்தை வட்டியுள்படக் கணக்குப்பார்த்து உண்டியல் தரவேண்டுமென்றும், இந்த யாதாஸ்த்தில் கையெழுத்துப் போடவேண்டுமென்றுஞ் சொல்லி யாதாஸ்த்தைத் தந்தார்கள், அதற்கு நாங்களிருவரும் பணந்தர ஆக்ஷேபணையில்லையென்று ஒப்புக்கொண்டு யாதாஸ்த்தை வாங்கிப்பார்த்தோம், மேற்படி "யாதாஸ்த்தில் திருப்பணியும் இப்போது போட்டிருக்கிற பிளான்படிக்கு நடத்துகிறது" என்றெழுதி யிருந்தமையால் அந்தப்பிளானைப் பார்க்கவேணுமென்று தெரிவித்துக்கொண்டோம்; உடனே (தி - ராம - தி-சுப்பிரமணியஞ் செட்டியார்) தம்மாற் போடப்பட்ட பிளானைக் காண்பித்தார்கள்; மேற்படி பிளானில் விசுவநாதருக்கும் விசாலாக்ஷிக்கும் அர்த்தமண்டபமின்றிக் கெர்ப்பக்கிரகம் மட்டுமே போட்டிருந்தது; மேற்படி (சுப) அவர்களை, இது யார்போட்ட பிளான்? என்று கேட்டோம், நான்போட்ட பிளான்றானென்றார்கள்; மதுராநகரத்தில் அரிமர்த்தனபாண்டியராஜன் பொய்க்குதிரை லெக்ஷணத்தை, அக்குதிரையைக் கொண்டுவந்த திருப்பெருந்துறைச் சேவகரிடத்திற் கேட்டுக்கொண்டவாறு போல, ஒரு வஸ்துவைக் கற்பித்தோரிடமே, அவ்வஸ்துலெக்ஷணங் கேட்பது முறையாதலால் நாங்களிருவரும் மேற்படி (சுப) அவர்களிடம் கேட்டதாவது, தாங்கள்போட்டிருக்கிற இந்தப்பிளானில் விசுவநாதர் விசாலாக்ஷிக்குக் கெர்ப்பக்கிரகமென்னும் ஒரு அங்கத்தை மட்டும் போட்டிருக்கிறது, இந்த ஓரங்கப் பிளானோடு, இப்போது கெர்ப்பக்கிரகார்த்த மண்டபமென்னும் இரண்டங்கத்தோடு பிரத்யக்ஷத்திலிருந்து வருகிற புராதநாலயத்தை ஒட்டிப் பார்க்கும்போது ஓரங்கம் குறைவதால் "பூர்வாங்க ஹீநதோஷம்" ஏற்படுகிறது, அர்த்த மண்டபம் போக சக்திஸ்தானமாதலால், அது, இனிப்புதிதாய்க் கட்டப்போகிற ஆலயத்திலும்

அவசிய மிருந்தே தீரவேண்டும்; அஃதில்லாமற் செய்வது பெருங்குற்றம்; அந்த விஷயம் ஒருவாறிருக்கட்டும்; இனி, இந் தப்பிளான்படிக்கே அர்த்தமண்டபமின்றிக் கட்டப்படுமானால் நைவேத்ய தீபாராதனைகளை எங்கே வைத்துச் செய்கிறது? என்று கேட்டோம்; அதற்கவர்கள் பதிற் சொன்னதாவது, நைவேத்யாதிகளைக் கெர்ப்பக்ரகத்தில் வைத்துச் செய்யலாமென் றார்கள்; அதிற் செய்யலாகாது, செய்தாற் றோஷம்வரும், நைவேத்தியாதிகளை வைத்துச் செய்தற்குரிய ஸ்தானம் அர்த்த மண்டபமேதான், சிவாகமாராய்ச்சியுடைய ஆதிசைவ சிவாசாரியர்களைக் கேட்டு இந்தப்பிளான்படி கட்டலா மென்ற விதியிருந் தாற் செய்யுங்களென்று, விரித்துரைக்க அவகாசமின்மையாற் சமயோஜிதம்பற்றிச் சுருக்கிச் சொன்னோம்; அதற்கவர்கள் ஒப் பாமற் பிளான்படிக்குத்தான் செய்வோமென்றார்கள்; அதைக் கேட்டுக்கொண்டிருந்த அங்குள்ளா ரனைவரும் தடைவிடையு மொன்று முரையாதிருந்தார்கள்;

ஷை (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்) இவ்வாறு சொன்னதைக் கேட்டபிறகும் நாங்களிருவரும், ஷை யாரைப் பார்த்து மற்றொருவிஷயமுஞ்சொன்னோம்; அஃதாவது, நாங்க ளிந்த விசுவநாதர் விசாலாக்ஷி கோயிலை நமது (தி)-வகைப்பொது வில் சென்ற ராக்ஷஸஞு ஆவணிமீ ௰௫௳ ஒப்புவித்த காலத்தில், விசுவநாதர் விசாலாக்ஷியின் பூசைப்படித்தரத்துக்கு நீங்களிப் போது கொடுக்கிற பணத்தைவினால் மீதியுங்களிடமிருப்பதை வட்டியுடன் வைத்திருந்து ஷை ரெண்டு சுவாமிகளின் திருப் பணிக்கேயுபயோகப்படும்படி திருப்பணிகட்டுங் காலத்திற் றர வேண்டுமென்று பொதுவார்கள் சொன்னதற்கு, நாங்கள் அது போலே தருகிறோம் விசுவநாதர் விசாலாக்ஷிக்குப் பிரதிஷ்டா காலத்திற் பழங்கோயிலி லிடஞ்சுருக்கமாய் அப்போதிருந்ததை யுத்தேசித்து அபிமுகமதிலில் இரண்டுசன்னல்கள் முன்னோர்க ளால் வைக்கப்பட் டிருப்பதால் இனிப் புதுக்கோயிலாகக் கட்

டப்போகிற காலத்தில் ஷை சன்னல்களை யெடுத்துப்போட்டு ஷை இரண்டு சுவாமிகளுக்கும் இரண்டு சந்நிதிகளாக வைத்துக் கட்ட வேண்டுமென்று நாங்களிருவருந் தெரிவித்துக் கொண்டதன் பேரில், அப்படியே செய்வோ மென்று பொதுவார்களும் அநுமதிபண்ணினபடியால், அந்த இரண்டுவிபரங்களையுங் கண்டே அக்காலத்திற் (பொதுவார்களும் நாங்களும்) பரஸ்பரம் யாதாஸ்த்துச் செய்துகொண்டிருக்கிறோமென்றும், அந்த யாதாஸ்த்தைப்பார்த்து அதிற்கண்டவாறு விசுவநாதர் விசாலாக்ஷிக் கிரண்டு சந்நிதிகளாக வைத்துக் கட்டும்படி இந்தப் பிளானிற் றுலங்கப்போட் டேற்பாடு செய்யுங்களென்றுஞ் சொன்னோம்; அதற்கு ஷை(சுப) அவர்கள் பதிற்சொன்னதாவது; விசுவநாதர் விசாலாக்ஷிக்கு ராஜகோபுரத்துட னிரண்டு சந்நிதிகளாக வைக்கிற பக்ஷத்தில், பிள்ளையாருக்கும் விசுவநாதருக்கும் கோபுர மிரண்டு கிழக்கேயமைக்க நேருவதால், அவ்விரண்டு கோபுர அடிநிலைப்பரப்பும் மிகநெருங்கி அவைகளின் ஒருபக்க வர்க்கவேலைமானங்கள் மறைபடுமென்று சொன்னார்கள்; அதற்கு நாங்கள் பதிற் சொன்னதாவது, விசுவநாதருடைய கோபுர அகல நீளவுயரங்களை இயன்றவரையிலுங் குறைத்து அதமபக்ஷமுறையில் அடக்கிச் செய்தால் அடிப்பரப்பின் வர்க்க வேலைமானம் மறைபடமாட்டா தென்றும், தெற்கு மதிலிலே தனியே விசாலாக்ஷிக்குக் கோபுர மமைப்பதாக விருப்பதால் அது, மற்றொன்றின் வேலைமானத்தை மறைக்குமென்று சொல்ல இடமில்லை யென்றும், இல்லையேனும் விசுவநாதருக்கு அடக்கமா யமைக்க நேர்தலால் அதினின்றும் அம்மை கோபுர மீறலாகா தென்பதை யுத்தேசித்து விசாலாக்ஷிகோபுரத்தையும் அதினின்றும் அடக்கியே செய்யவேண்டியதுதா னென்றும் சொன்னோம்; இந்த விபரத்தைக் கேட்டபிறகு ஷை (சுப) அவர்கள் பதிற் சொன்னதாவது, இரண்டு சந்நிதிகளாக வைத்துக் கோபுரத் துடன் செய்தாற் செலவதிகமாகுமானதால் அவ்வாறு சந்நிதி

வைத்துச் செய்யமுடியாதென்று சொல்லிவிட்டார்கள்; அதைக் கேட்டுக் கொண்டிருந்த அங்குள்ளாரனைவரும் தடைவிடையு ளொன்று முரையாதிருந்தார்கள். அர்த்த மண்டபத்தை யொழித்துப் பிளான்போட்ட ஷை (சுப) அவர்கண்மாட்டு, சந்நிதி வைக்கவேண்டிய விஷயமாய் நாங்களிருவருங் கேட்டதானது, "அரைக்கு உடையை யொழித்தார் மாட்டுத் தலைக்கு முடியை யிரந்ததனோ டொக்கும்?" அது நிற்க, கோபுரவேலையைப் பின்னிட்டு இயன்றபோது செய்து கொள்ளுவதும் உலக வழக்கத்திலேகதேசத்திலிருப்பதால் சந்நிதிவைக்க வேண்டிய விஷயத்தில் நாங்களிருவரும் அதிகமாக வற்புறுத்தா திருந்தோம்; பின்னிட்டு நினைத்தபோதெடுத்துக் கூட்டிச் செய்யத் தகாததும் முக்கியாங்கமா யுள்ளதுமான அர்த்தமண்டபத்தை நீக்கிப் பிளான்போட்டிருப்பதான சற்றும்பொருத்தமில்லாத விஷயத்தைக் குறித்தே யாதாஸ்த்திற் கையெழுத்திட யோசித்துத் தாழ்த்தோம்;

அப்போது (பழ-அ-வேங்கடாஜலஞ் செட்டியார்) முதலிய சிலர் எங்களிருவரிடமுஞ் சொன்னதாவது, அர்த்தமண்டபமின்றிச் செய்யப்படாதென்கிற ஆகமவிதியையும் முந்திய யாதாஸ்த்தையும் எடுத்துக்காட்டி நாளடைவிற் சொல்லி (தி-ராம-தி-சுப) அவர்களையும், பிளானையுந் திருத்திப் போடுவோம்; சாஸ்த்திர விரோதமாயின் இந்தப்பிளான் நிலைக்காது; நம்மவருள் உண்டியல்தரவேண்டியசிலர் அதற்கிதனைக் காரணமாகச் சொல்லி நாளைக்கடத்துவர்போற் றெரிகிறது; ஆதலால் இப்போதிந்த யாதாஸ்த்திற் கையெழுத்திட்டு வையுங்க ளென்றார்கள்; அவர்கள் சொன்ன சொல்லையுத்தேசித்தும், பொதுவாருடைய கட்டளையை மறுக்க அஞ்சியும், சர்வஞ்ஞ சிவனால் அநாதியிற்றயார் பண்ணிவைக்கப்பட்டிருக்கிற சிவாகமசாஸ்வதப் பிளானையும், முந்தின யாதாஸ்த்தையும், உறுதுணையாகக் கொண்டும் மேற்கண்ட இந்த யாதாஸ்த்தில் எல்லாருடனும் நாங்களிருவரும் கையெழுத்திட்டோம்;

சர்வத்ர சுகங் கருதியே இந்த அர்த்தமண்டப ஹீனப் பிளான்படி செய்யலாகா தென் றடியேன் கூறுவதாகப் பின் னீடு பிரஸ்த்தாபித்த சிலரிடம், அந்தப்பிளானபிமா னிகளிற் சிலர், ஆகாதென்ற இவர்களேன் யாதாஸ்த்தில் முன்பு கையெழு த்திட்டன ரென்று வினவினர்களாம்; அவர் வினவுக்கு மேற் கண்ட காரணமே விடையாய் நிற்கும்; அன்றியும், ஆகாசத் தாம ரைப் பூவில் நூறுக்கும், முயற் கொம்பில் நூறுக்கும் ஏற்பட்ட ஒப்பந்த ரிகார்டு, எழுதிவாங்கினேர்க்குச் சாதிக்காமலும் எழு திக்கொடுத்தோரை வாதிக்காமலும் போவதுபோலவே, இந்த அர்த்தமண்டப ஹீனப்பிளானை ஸ்த்திரம் பண்ண ஏற்பட்ட யாதாஸ்த்தும் நக்ஷத்திரக் கணக்காய்க் கையெழுத்திடினும் இட் டோரனைவரையுமே முடிவில் வாதிக்கமாட்டா தென்பதை, அவ ரறியக்கடவர்; நக்ஷத்திரக்கணக்கென மேற்கூறிய சொல்லானது, அசுவதியாதி இருபத்தேழு நக்ஷத்திரங்களைக்குறித்துப் பொருள் கொள்ளும்போது, ஷை யாதாஸ்த்திற் கையெழுத்திட்டிருக்கிற இருபத்தெழுவரை மட்டுங் குறித்தும், வானத்து மீனனைத்தை யுங் குறித்துப் பொருள் கொள்ளும்போது, உலகத்தநேகரைக் குறித்தும் நிற்கும்.

## கனம்பொருந்திய, ஹி-வகையார்களே!

(ஹி- ராம-ஹி-சுப்பிரமணியஞ் செட்டியாரால்) விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்தமண்டபமில்லாதபடி கெர்பக்கிரஹமட்டிற் போடப்பட்டுள்ளதான மேற்பிரஸ்த்தாபித்த நூதநாலயப் பிளானை இதனடியில் அச்சிட்டும், அதனருகே, பதின்மரை நிய மனஞ் செய்தபோது அந்தப்பிளான் நிலைக்கப் பிறந்ததான யாதாஸ்த்து நகலை அச்சிட்டு மிருக்கின்றேன்; தயவு செய்து பார்வையிடக் கோருகின்றேன்.

தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால், விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்த மண்டப ஹீனமாய்ப் போடப்பட்ட

# நூதநாலயப் பிளான்.



புதின்மரை நியமனஞ் செய்தபோது தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால் விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்தமண்டபஹீனமாய்ப் போடப்பட்ட நூதநாலயப் பிளானிலிருந்த

# யாதாஸ்த்து நகல்.

உ

சிவமயம்.

ஸ்ரீ கையிலாசவிநாயகர் துணை.

துன்மதி ஞூ ஆவணிமீ 24வ தி-ஷராணிக் கையிலாச விநாயகர் கோயில்த் திருப்பணி விஷயமாய் (தி-வகையார்) பேசிக் கொண்டதர்க்கு விபரம்.

இப்போது நம்மிட ஆள்க்கள் வசம் திருப்பணிக்கு எழுதி வாங்கி யிருக்கிற உண்டியல்களுக்குப் பணம் வாங்கியும், (வெ-ஆ-தி, பள-சு-நா) இருவர்களிடமும் விசுவநாதர் விசாலாக்ஷி திருப்பணிக்காக வைத்திருக்கிற பணங்களை வாங்கியும், (வெ-ஆ-அரு-அரு-1, பள-அ-வெ-2, தி-சு-பள-ப-3,) மூன்று பேர்களும் நம்மிட பங்காளிகள் தவிர பிரத்தி இனங்களில் மதுராஸ் அடத்தியில் ரூ. (உ௰௲) இருபதினாயிரம் வைத்துக்கொண்டு பாக்கித் தொகையைத் தவணைபேசி நல்ல இனங்களில் அவர்கள் நோக்கம் போல் கொடுத்து வாங்கிவர வேண்டியது.

மதுராசில் நடப்புச் செலவுக்காக அடத்தியில் வைத்திருக்கிற ரூபாய் இருபதினாயிரத்தையும் முதலாவது வருஷம் (வெ-ஆ-அரு) வும் இரண்டாவது வருஷம் (பள-அ) வும் மூணாவது வருஷம் (தி-சு-பள-ப) வும் மதுராஸ்க்கடையில் வைத்து விந்தாஸ் அன்னியில் மதுராஸ் நடப்பு வட்டிப்படி பத்து வரவு செய்துவர வேண்டியது.

திருப்பணியும் இப்போது போட்டிருக்கிற பிளான்படிக்கு அம்மன்கோயிலைத் தெற்கு முகமாய்வைத்து

(வெ-ஆ-வகையில், வெ-ஆ-வெ-வும், நாக-ஆ-ராம-கி-வும், பள-வகையில் பள-சு-அரு-அ-நா-வும், பள-வெ-சு-லெ-வும், தி-வகையில்-தி-அ-சு-அ-சுப-வும், தி-பள-சு-சு-சு-வும், (தி-ராம-தி-சு) வைக்கலந்து கொண்டு மேற்படி திருப்பணிவேலையை நடத்தி வரவேண்டியது.

மேற்படி திருப்பணிக்கு வேண்டிய பணத்துக்கு மதுராஸ் அடத்திக்கு (தி-ராம-தி-சு) உண்டியல் விட்டுப்பணம் தருவித்துக் கொள்ள வேண்டியது.

மேற்படி கணக்கு வரவு செலவும் மேற்கண்ட திருப்பணிக்கு வேலை பார்க்கிற ஆறுபேர்களும் கெவனித்து ஐந்துகையுடன் வைத்துக்கொள்ளவேண்டியது.

திருப்பணிக்கு வேண்டிய காரியங்களை (தி - ராம - தி - சு) பொறுப்பாய்க் கவனித்து நடத்தி வரவேண்டியது.

## கையொப்பம்.

1. தி-ராம-தி-சுப்பிரமணியன் செட்டி.
2. பள-அ-வெங்கடாசலஞ் செட்டி.
3. தி-சு-பள-ப-பளநியப்ப செட்டி.
4. சுப-சோம-ராமனுதஞ் செட்டி.
5. வெ-ஆ-தி-சிதம்பரஞ் செட்டி.
6. வெ-ஆ-அரு-மாயாண்டி செட்டி.
7. பள-சு-அரு-அ-நாராயணன் செட்டி.
8. நாக-ஆ-ராம-கிருஷ்ணஞ் செட்டி.
9. பள-வெ-அ-சு-இராமநாதஞ் செட்டி.
10. அ-தி-அ-தின்னப்ப செட்டி.
11. ஆ-ப-ராம-வெ-வெள்ளையப்ப செட்டி.
12. அ-தி-சு-அ-சுப்பிரமணியன் செட்டி.
13. தி-அ-சு-அ-சுப்பிரமணியன் செட்டி.
14. தி-பள-சு-சுப்பிரமணியன் செட்டி.

15. பள-வெ-சு-லெக்ஷுமணன் செட்டி.
16. பள-வெ-அ-வெ-ராமனுதன் செட்டி.
17. வெ-ஆ-பள-ராமஞ் செட்டி.
18. பள-ப-ராம-சுப்பிரமணியஞ் செட்டி.
19. தி-அ-ராம-ராமனுதஞ் செட்டி.
20. ஆ-ப-ராம-லெ-ராமன் செட்டி.
21. பள-ராம-ஆத-ராம-சுப்பிரமணியஞ் செட்டி.
22. பள-ராம-சு-இராமநாதன் செட்டி.
23. பள-சு-அரு-சு-வெ-லெக்ஷுமணஞ் செட்டி.
24. சு-சு-சொக்கலிங்கஞ் செட்டி.
25. பள-சு-நா-இராமனுதன் செட்டி.
26. ஆ-நா-ராம-ராமனுதன் செட்டி.
27. யே-சு-அரு-அருணுசலஞ் செட்டி.

யாதாஸ்து நகல் முற்றிற்று.

---

# கனம்பொருந்திய, தி-வகையார்களே!

(தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாராற்) போடப்பட்ட மேற்கண்ட நூதனலயப் பிளான், ஆகமவிதியுமின்றி நிஷேதத்தையு முடையதாக விருத்தலால் வேதசிவாகம விற்பந்நர்களான ஆதிசைவ சிவாசாரியர்களிடத்திற் கேட்டுத் தோாமற் சுவேச்சையிற் செய்ததென மதிக்கத்தக்கதாக விருக்கின்றது.

உலகத்திற் பலவகைக் காரியங்கள் உள்ளன; அவற்றுள், "எல்லாமறிந்த வருமில்லை ஏது மறியாதவருமில்லை" ஆதலால், எந்தெந்தக் காரியத்தில் எவரெவர் வல்லவர்களாக விருக்கின்றார்களோ? அந்தந்தக் காரியத்தை அவ்வவைகளில் வல்லவர்களிடத்திற் கேட்டுத் தெளிந்து தாமும் ஆலோசித்துச் செய்ய வேண்டுமென்பதும், தேர்ந்து செய்வார் குற்றமுமின்றிக் காரிய சாத்தியமுமாகப்பெற் றுயர்ச்சி யடைவரென்பதும் நூற்றுணிபாகும்; இதற்குப் பிரமாணம்:—

## தாயுமானசுவாமி பாடல்.

### தேசோமயானந்தம், 9.

"எல்லா மறிந்தவரு மேதுமறி யாதவரு
மில்லையெனு மிவ்வுலகின் மீது"

## நீதிநெறிவிளக்கம்-14.

"முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றன மென்று களியற்க"

## திருக்குறள்.

### 462-464-465-467.

"தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்"

"தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்"

"வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு"

"எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு"

## கந்தபுராணம்.

### சூரனமைச்சியற் படலம்-93.

"முற்றுற வருவது முதலு மன்னதாற்
பெற்றிடு பயன்களும் பிறவுந் தூக்கியே
தெற்றென வுணர்ந்துபின் பலவுஞ் செய்வரேற்
குற்றமொன் றவர்வயிற் குறுக வல்லதோ"

## இராமாயணம்.

### வாலிவதைப் படலம்-112.

"தக்க வின்ன தகாதன வின்னவென்
றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள
மக்க ளும்விலங் கேமனு வின்னெறி
புக்க வேலவ் விலங்கும்புத் தேளிரே"

### பாரதம்.

சூதுபோர்ச் சருக்கம்-266.

"யாதொரு கரும மேனு மெண்ணியே துணிக வென்றுங்
காதலிற் றுணிந்து செய்தா லெண்ணுதல் கடனன் றென்றும்
ஓதுநூற் புலவர் சொன்னர்"

### நீதிவெண்பா-16.

"செய்யு மொருகருமந் தேர்ந்து புரிவதன் றிச்
செய்யின் மனத்தாபஞ் சேருமே"

### கொன்றைவேந்தன்-52.

"நுண்ணிய கரும மெண்ணித் துணி"

---

இனி, எடுத்த திருப்பணிக்காரியம் இந்தப் பிளான்படி பூர்த்தி பெற்முற்முனே விதியினதின் றி நிஷேதத்ததாகும், பிளான்மட்டும் போட்ட அளவில் அவ்வாருகுமா? என்கிற கேள்வி வரின், (தி-ராம-தி-சுப) அவர்கள் திருப்பணித் தலைமையைப் பொதுக்கடிந்து வஹித்தவர்களாயும், பலரையும் தமது பிளான்படிக் குடன்படுத்தக் கூடிய வியாபக வல்லபமுடையவர்களாயுமிருத்தலால் அவர்களது முயற்சி, தெய்விகம் முதலிய வழி மூன்று ளொன்ருற் றடைப்படாவிடில் "வல்லான் வகுத்தது வாய்க்காலா" மாறுபோல, ஒருக்கால் முற்றுப் பெறவுங்கூடு மென்பதே அக்கேள்விக்கு விடையாகும்; வல்லான் வகுத்தது வாய்க்காலா மென்பதற்கும், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம், ஆத்யாத்மிகமென வழிமூன்றுள வென்பதற்கும் பிரமாணம்:—

### தாயுமானசுவாமி பாடல்.

சுகவாரி-3.

"வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்கு முண்டோ"

## சீகாழிப் புராணம்.

### தலவிசிட்ட வத்தியாயம்-11.

"ஆதிதெய் விகமே யாதி முத்துயாடவியை வடவைபோற் காய்
[வது"

### பண்டார மும்மணிக்கோவை-10.

"ஊழெனப் பட்ட தாழ்புனற் படுகரிற்
றெய்விக முதலாச் செப்புமும் மதகும்
ஒவ்வொரு மதகா வுடனுடன் றிறந்து"

---

அப்பாற் சிலநாட் சென்றபின்பு மேற்படி துர்மதிஞு புரட்டாசிமீ 23உ சனிக்கிழமை காலையில் (வெ-ஆ-அரு) வீட்டில் மகரநோன்பு விசேஷநிமித்தமாக நமது (தி) வகையாருட் சிலர் கூடிய போது (தி-ராம-தி-சுப்பிரமனியஞ் செட்டியார்) அடியேனைப் பார்த்துக் கேட்டதாவது, (நீயும்-பழ-சு-நா-ராமநாதனும்) உங்களிடமிருக்கிற விசுவநாதர் விசாலாக்ஷிகோயிற்றிருப்பணிப்பணத்துக்கு ஏன் உண்டியல் தரவில்லை? தருவதற்கென்ன ஆக்ஷேபணை ? என்று கேட்டார்கள் ; அதற்கு நான் பதிற்சொன்னதாவது, விசுவநாதர் விசாலாக்ஷிக்குத் தங்கள்பிளான்படிக்கு அர்த்தமண்டப மில்லாமற் செய்யப்படாதென்ப தொன்றைத் தவிர உண்டியல் தருவதைப்பற்றி யாதொராக்ஷேபணையுமில்லையென்றும், அதிற்சம்பந்தப்பட்ட (பழ-சு-நா-ராமநாதன்) இப்போது வெள்ளிக்குறிச்சி யென்னும் ஊரிலிருப்பதால் அவன் வந்து விடட்டும் கலந்துகொண்டு தருகிறேனென்றும் சொன்னேன், அதற்கு மேற்படி (சு-ப) அவர்கள் பதிற்சொன்னதாவது வெள்ளிக்குறிச்சியிலிருக்கிற (ராமநாதன்) வரும்வரைக்குந் தாமசிக்கமுடியாது இப்போது நான் போட்டிருக்கிற பிளான்படிக்குத்தான் திருப்பணிவேலையைச் செய்யக்கூடு மென்றதுடன் ராமநாதனது அபிப்பிராய முனக்குத் தெரிந்துகொள்ளவேண்டுமானால் அவனுக்கு வெள்ளிக்குறிச்சிக்கு நீயொரு லெட்டரெழுதித்தா, பொதுவாராகிய நாங்களும் அவனுக்கொரு லெட்ட

ரெழுதி இரண்டையுஞ் சேர்த்துக்கொடுத்து (பழ-வெ-ராம-லெ-நடுக்குப்பாஞ் செட்டியை) வெள்ளிக்குறிச்சிக்கனுப்பி பதில் வாங்கி வரச்செய்வோமென்ருர்கள்; அதுபோலாகட்டுமென்று (அடியேன்) ராமநாதனுக்கொரு லெட்டரெழுதிக்கொடுத்தேன், (சு-ப) அவர்களும் மேற்சொன்ன பிரகாரம் பொது விலாசம் போட்டுப் பொதுவார்களது லெட்டராக ஒருலெட்டரெழுதி இரண்டையுங்கொடுத்து மேற்கண்ட (பழ-வெ-ராம-லெ-நடுக்குப்பாஞ் செட்டியாரை) வெள்ளிக்குறிச்சிக்குப் போய் பதில் வாங்கிவரும்படி சொல்லியனுப்பினுர்கள் ;

வெள்ளிக்குறிச்சிக்கு மேற்படி (குப்பாஞ் செட்டியார்) புறப்பட்டுப் போனதான அந்தச்சமயமானது, மேற்படி புரட்டாசிமீ 26ഉ செவ்வாய்க்கிழமை விஜயதசமி யென்னும் விசேஷ தினத்தைச் சமீபத்திற் கொண்டிருந்தமையால், அதற்குள் அவர் தேவகோட்டைக்கு பதில்லெட்டருடன் வந்து சேருவரென்று மதிக்கக்கூடிய சமயமாகவே யிருந்தது ;

வெள்ளிக்குறிச்சிக்குப் போன மேற்படி (குப்பாஞ் செட்டியார்) திரும்பிவருவதற்குள், தேவகோட்டையில் அபூத விஷய மொன்று நடந்தது, அதனை முன்னர்த் தெரிவித்துக் கொள்ளு கின்றேன், தயவு செய்து கேளுங்கள் ;

## கனம்பொருந்திய, தி-வகையார்களே !

துர்மதிஹூ புரட்டாசிமீ 25ഉ திங்கட்கிழமை சரசுவதி பூசை யென்கிற விசேஷதினம் ; நமது பழனியாண்டவர் சுவாமி வீட்டில் (தி) வகைப்பிராஞ்சு (பழ-வகையார்களும்) மேற்படி பிராஞ்சு (தி-வகையார்களும்) அந்த விசேஷதினத்தில் வருஷப் பிரதி வருஷமும் கணக்குப் பெட்டி கொண்டுவந்துவைத்துப் படைப்பது வழக்கமல்லவா? அதனிமித்தமாக அத்திங்கட் கிழமை யிராத்திரியில் அந்தச்சுவாமி வீட்டில் அந்த (இரண்டு பிராஞ்சு வகையார்களும்) வந்திருக்கும்போது, அங்கே அத

னிமித்தம் வந்திருந்த (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்) பொதுவிஷய நிருணயத்துக்கு மூன்று பிராஞ்சினருமிருக்க வேண்டிய தவசியமென்பதுகருதி, அங்கு அப்போதாஜரில்லா தெஞ்சிய (மா) வகைப்பிராஞ்சுக்காக, சமீபத்திலிருக்கும் (வெ-ஆ-அரு-அருணாசலஞ் செட்டியாரைத்) தருவித்துவைத்துக் கொண்டு சொன்ன தென்னவென்றால் (வெ-ஆ-தி-சிதம்பரமும், பழ-சு-நா-ராமநாதனும்) நான்போட்டிருக்கிற பிளான்படிக்குக் கோயிலைக்கட்டச் சம்மதித் துண்டியல்தர வொத்துக்கொள்ளா விட்டால் அவ்விருவர்களையும் நமது வகையிலொருவித நியாயஞ் செய்துவைக்க வேண்டுமென்று குறிப்புச் சொல்லாற் சொன்னார் களாம்; அவர்களவ்வாறு சொன்னதற்கு அங்கிருந்த (வெ-ஆ-அரு-அருணாசலஞ் செட்டியாரும், பழ-அ-வெங்கடாசலஞ் செட்டியாரும்) வெள்ளிக்குறிச்சிக்குப் போயிருக்கிற (குப்பாஞ் செட்டி) ராமநாதனுடைய பதில் லெட்டரைக்கொண்டுவரட்டும், அதைப் பார்த்துக் கொண்டு அப்பாற் செய்வோமென்று சமா தானஞ் சொன்னதின் பேரில் மேற்படி (தி-ராம-தி-சுப்பிரமணி யஞ் செட்டியார்) சரியென்றொத்துக் கொண்டார்களாம்;

பழனியாண்டவர் சுவாமி வீட்டில் 25உ திங்கட்கிழமையன் றிரவிலிவ்வாறு நடந்த விஷயத்தை, 26உ செவ்வாய்க்கிழமை விடியற்காலம் (வெ-ஆ-அரு-அருணாசலஞ் செட்டியார்) வந்து தேனமை யூருணிக்கரையில் வைத்துச்சொல்ல, அவர்களது சொல்லாலடியேனுக்குத் தெரிந்தது; சொல்லாற் றெரிந்ததே னும், வந்துசொன்னவர்கள் சின்னஞ் சிறுசல்லாத தக்கவர்க ளானதால், மேற்கண்ட விஷயம் நடந்ததுண்மையென உறுதி யாகக் கொள்ளத் தக்கதேயாம்;

உலகத்திற் சொல்லப்படுஞ் சொற்கள், குறிப்புச் சொல் லெனவும் வெளிப்படைச் சொல்லெனவும் இரண்டு விதமாக வுண்டென்பதை, நன்னூற் சூத்திரம்-259-ல் "வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே" எனவும், 269-ல் "குறிப்பிற்

றருமொழி யல்லன வெளிப்படை" எனவும் வருமாற்றாலறிய லாம்; காடிந்யச் செயலைக் குறிப்புச் சொல்லானுணர்த்துதல் மரபாமென்பதை, பெரியபுராணத்தில் மெய்ப்பொருணயனார் புராணம்-15-ல் "பத்திரம் வாங்கித் தான்முன் னினைந்தவப் பரிசே செய்ய" எனவும், ஏனாதிநாதநாயனார் புராணம் 40-ல் முன்னின்ற பாதகனுந் தன்கருத்தே முற்று வித்தான்" எனவும் சேக்கிழார் பெருமான் பக்தவாஞ்சைகொண்டு காடிந்யச் செயலைக் குறிப்பாலுணர்த்துமாற்றா லறியலாம்;

இவ்வாறு தேனமை யூருணிக்கரையில் வைத்துச் சொன்ன (வெ-ஆ-அரு-அருணாசலஞ் செட்டியாரிடம்) அப் போது அடியேனொரு விஷயமெடுத்துச் சொன்னேன், அதாவது, (நானும் பழ-சு-நா-ராமநாதனும்) உண்டியல் கொ டுக்கத்தடையில்லை, விசுவநாதர் விசாலாக்ஷிக்கு (தி - ராம - தி - சுப்பிரமணியஞ் செட்டியாரால்) போடப்பட்டிருக்கிற அர்த்த மண்டப ஹீனப் பிளான்படி கோயிலைக் கட்டலாகா தென் றதனாற் குற்றவாளிகளாய் விடமாட்டோம்; எங்கள்பாற் குற்றங் கண்டன்றி எங்களைப் பொதுவார் தள்ள மார்க்கமில்லை; ஒருக் கால் (தி-ராம-தி-சுப-அவர்களின்) வியாபகச் சொல்லேறி, அத னால் நமது கனம் பொருந்திய (தி) வகையார்களால் தற்காலம் நாங்களிருவருந் தள்ளப்படினும், எங்களிருவரது தடையுங் குண மாமெனப் பெரியோர்களாற் சமீபத்தில் நிரூபிக்கப்பெற்று நமது வகையார்களால் மீண்டுங் கொள்ளப்படுவோ மென்பது நிச்சயம்; தவிரவும் தீக்ஷிதர்களென்னுந் தில்லை மூவாயிரந் திரு வுடையந்தணர்களுள் ளொருவரான கொற்றங்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகளே, அம்மூவாயிரவர்களாற் சிலகாலந் தள் ளப்பட்டுப் பின்பு அவர்களாற் கொள்ளப்பட் டிருக்கின்றார்க ளென்றால், அதை நோக்கும்போது, நாங்களிருவரும் எம்மாத் திரம்? என்றதுடன் அந்தச்சுவாமி சரித்திரத்தையுஞ் சொன் னேன்; (வெ-ஆ-அரு-அருணாசலஞ் செட்டியார்,) அதனைக்

கேட்டு நன்கு ஆமோதித்தார்கள்; அவ்வாமோதிப்பே, முதல் நாளிரவில் (நி-ராம-நி-சுப) அவர்கள் சொன்ன மேற்கண்ட குறிப்புச் சொல்லின துட்பொருளை யாவர்க்குந் தேற்றத்தக்க தாகும்; ஆமோத மென்னும் பதத்திற்கு, அங்கீகாரமென்பது பொருள்;

இனி, குருகுலச் சக்கரவர்த்தியாகிய தருமபுத்திரர், திருக் குறள்-663-ல் "கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக் கொட்கி—னெற்ரு விழுமந் தரும்" என்றபடி, தம் பக்கலில் நடக்குங் காரியத்தை இடைநடுவிற் பிறரறியாமற் செய்வதே வினைத்திட்பமென் றறிந்திருந்தும், அத்திட்பத்தை விழுங்கி யெழுந்த விருப்பு வெறுப்பில்லாச் சமபாவனைக் கருணைமிகுதி யால் பாரதம் பதின்மூன்றும் போர்ச்சருக்கம்-221-ல் "இங்கிவர் மூவரு மேகினர் மீளுமு னெறிமுர சக்கொடியோன்—அங்குரை யாடிய துரைசெயின் மண்மிசை யார்விய வாதொழிவார்—பங் குனனேதிய வஞ்சின மும்பசு பதியிடை யேகியதும்—கங்குலி னேவின னுரைசெய்க வென்று கடோற்கச மீளியையே" என்ற படி கிருஷ்நார்ச்சுனர் பாசுபதம் பெறக் கயிலைக்குச் சென்ற தைப் பிறபக்கற் கறிவுறுத்து மாற்றை இவ்வுலகத்தனைவரும் பாராட்டுதல் போலவே, (வெ-ஆ-அரு-அருணாசலஞ் செட்டியார்) சுவாமிவீட்டிலிரவுநடந்த மேற்கண்ட விஷயத்தை விடியலில் அடியேனுக் கறிவுறுத்தியதும், வினைத்திட்பத்தை விழுங்கி யெழுந்த கருணைமிகுதியென் றனைவராலும் பாராட்டத் தக்கதே யாம்;

இவ்வாறு அறிவுறுத்தியும் ஆமோதித்துமான பின்பு மேற் படி (அருணாசலஞ் செட்டியார்) அவர்களது வீட்டிற்குச் சென் ருர்கள், (அடியேன்) எனது வீட்டிற்கு வந்து சேர்ந்தேன்;

உமாபதி சிவாசாரிய சுவாமிகளின் சரித்திரத்தை இங்கே விரிப்பிற் பெருகும், அவர்களது புராணவாயிலாக அறியலாம் அந்தச் சுவாமிகள் தில்லை மூவாயிரவர்களாற் றள்ளப்பட்டு;

ஸ்ரீமங் நடராஜப்பெருமானது பெஹிரங்க பூசை முறையை விட்டிருந்தமையைக் கீழ்க்காட்டிய-12-14-ஆவது லெக்கச் செய்யுளாலும், பின்பு அவர்களாற் கொள்ளப்பட்டு அப்பூசைமுறையைச் செய்தமையை-20-21-ஆவது லெக்கச் செய்யுளாலு மறியலாம்; இதற்குப் பிரமாணம்:——

## சந்தாநுசாரிய புராண சங்கிரகம்.

### உமாபதிசிவாசாரியர்புராணம்-12-14-20-21.

"இம்முறை வாழ்வார் தம்மை யெழிலரு ணிருத்தர் தாளை
மெய்ம்முறை பூசை செய்யும் வேதிய ரதியா ராகித்
தம்முறை பிறழ்ந்தா ரிந்தத் தனியுமா பதியா ரென்ன
எம்மர பிழந்தீ ரென்றே யெள்ளின ரெவருங் காண"

"இந்தமுறை ஞானநிட்டை புரியு நாளி
லெழில்வளரு நடராசர்க் கியற்றும் பூசை
அந்தமுறை நாள்வரவுந் தில்லை வாழு
மந்தணர்கண் மேவுதிரு வம்ப லத்தே
பந்தமக லுமாபதியார் பரிவு கூர்ந்து
பரமனடி பூசிப்பான் பணிந்து செல்லச்
சிந்தைவே றாகியநல் லந்த ணாளர்
செல்லன்மின் போமெனவே செப்பி விட்டார்"

"உற்றடி பணிந்தி யாரு மோதிசான் முனியே யெங்கள்
குற்றநற் குணமாக் கொண்டு குறைவுதீர்த் தருளு மாறு
பற்றிலார்க் கருளுந் தில்லைப் பரனடிப் பூசை யாற்ற
இற்றைக்கே வருதல் வேண்டு மெம்பிராற் குரியா யென்றார்"

"இன்னணந் தில்லை வாழு மந்தணர் வேண்ட வேகிப்
பொன்னணி மன்ற வாணர் பூம்பதப் பூசை யாற்றித்
தன்னிக ரந்த ணாளர் தனிமட மேவிப் பின்னர்
மன்னுறு சீவன் முத்தி வரத்தராய் வைகு நாளில்"

---

இனி, இவ்வுலகத்தில் விவகாரதிசையிலிருந்து காரியத் தலைமையை வஹித்துக் காரியங்களை முடிக்கப் புகுபவர்களெல்லாம், அவை முடிதற்கு நிலைக்களமான எதிரிகளிணங்காராயின்,

இருதறப்பினுமுள்ள வலிகாலமிடமென்னும் மூன்றையுஞ் சீர் தூக்கியறிந்து பாரதம் கிருட்டினன் றூதுச் சருக்கம்-2-ல் "ஞான மன்பொ டினிதுரைத்து ஞானமுனி யகன்றதற்பின் சாமபேத —தானதண்ட மெனநிருபர் தருமமுறை மையிற்புகலுந் தகுதி நோக்கி" என வருவதன்கண்ணும், விநாயகபுராணம் அரசியற் கைப்படலம்-67-ல் "ஆற்றன் மூன்று முபாயங்க ணான்கு மிடத்தோ டமைந்திடினும்—போற்றி நினக்கு வென்றியுறும் பொழுது தேர்ந்தே வினைபுரிக" என வருவதன்கண்ணும், 467-468-469-470-ஆம் திருக்குறள்களினுரையின்கண்ணும் கூறப் பட்ட சாமபேத தானதண்டமென்னும் நால்வகை யுபாயங் களுள் ஏற்பதொன்றைச்செய்து தாந்தாமெடுத்த காரியங்களை முடிக்கக் காண்கின்றேமல்லவா? அதுபோல, இந்த (தி-ராம-தி-சுப-அவர்கள்) எங்களிருவரிடத்தும் "உண்டியல் வாங்குதல்" "பிளானுக்குடன்படுத்தல்" என்னு மிரண்டு காரியத்தையு முடித்தற் பொருட்டு அந்நால்வகையு ளொன்றாகிய பேதோ பாயத்தை எங்கள்பாற் செய்து முடிக்கப் புகுந்தார்க ளென்னில்? அவ்விரண்டுகாரியத்திற்கும், நான்குபாயங்களுமே, ஈண்டு அநாவசியமாகும்; எப்படியென்னில்? உண்டியல் கொடுக்கவேண் டிய நாங்களிருவரும் அதுகொடுப்பதைப்பற்றி யாதொ ராக்ஷே பணையுமில்லை யென்று வனுவிற் றெரிவித்துக்கொண்டே வருத லானும், தெரிவித்தபடி செய்கை நடைபேற்றிற்கு வாராத அற்ப காலகாரணம் பிளானைநோக்கி யேற்பட்டதென்பது யாவர்க்குந் தெரிந்த விஷயமானதானும், உண்டியல் வாங்குங் காரியங்கருதிச் செய்திருப்பினும், அது, அநாவசியமேயாகும்; மேற்படி (சுப) அவர்களாற் போடப்பட்ட அசாஸ்திரிகப் பிளான்படி செய்தா னேரிடும் ஆபத்தைத்தெரிந்தோர், அதன்படிசெய்ய ஒருகா லத்து முடன்படாராதலால், அந்தப் பிளானுக்குடன்படுத்துங் காரியங் கருதிச் செய்திருப்பினும், அதுவும், அநாவசியமே யாகும்; மேற்கூறிய நால்வகையுபாயங்களுள், சாமம்-இன்சொற்

கூறுதலெனவும், பேதம்-பிரித்த லெனவும், தானம்-கொடுத்த லெனவும், தண்டம்-ஒறுத்த லெனவும் பொருள் கொள்ளப் படும்;

இனி, விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்தமண்டபம் வைத்துக் கட்டவேண்டு மென்று (அடியேங்கள்) சொன்ன சொல்லானது, (தி-ராம-தி-சுப-அவர்களால்) அர்த்தமண்டபமின்றிப் போடப்பட்ட பிளானுக்குத் தடையாயிருந்த போதிலும், நாட்டார் நகரத்தார் கர்த்தா முதலிய அனைவர்க்குங் குடும்பக்ஷேமந் தரத்தக்க நன்மையேயாம்; அந்நன்மை சொல்லிய எங்களுக்கு மேற்கூறிய (சுப) அவர்களது முயற்சிப்படி வகை நியாயஞ் செய்து வைத்தலென்னுந் தீமை ஸம்பவிக்கமாட்டாதென்பது நிச்சயம்; ஆனால், (சுப) அவர்கள் தாமிதற்கு மத்யஹேதுவாய் நின்று முயற்சித்த அளவிலுண்டான அஸம்பாவிதத்தைப்பற்றி அவர்களை நோகலாமோவென்னில், அதற்கு அணுவளவேனும் நியாயமில்லை; எதனாலென்றால்? ஒருவர்பால் நன்மை தீமையுளொன்றைப் புகுத்துதற்கு மற்றொருவர் இடையிலேதுவாய் வந்து தோன்றுவரென்பதும், தோன்றினும் அவைகள் சித்திப்பதும் சித்திக்காமையும் புகுத்தப்பட்டாரது ஆகூழ்போகூழென்னுமிரண்டைப் பொறுத்தனவென்பதும், தீமையிற் புகுத்த முயன்றாரை நோவதற்கு நியாயமில்லையென்பதும் நூற்றுணிபாகும்; இதற்குப் பிரமாணம்:—

## திருக்காளத்திப் புராணம்.

### கருமகாரணங் கூறிய அத்தியாயம்-55.

"தன்னுடை நலந்தீங் குக்குத் தானுடை யவனே யன்றி
உன்னிடின் வீற்றொ ருத்த ருடையவ ரலரக் காலம்
மன்னிய வளவிற் றன்பால் வருமின்பத் துன்பங் கட்குத்
துன்னுற வொருவ னேது வாய்வந்து தோன்று வன்காண்"

## பேரூர்ப் புராணம்.

### குழகன் குளப்புச்சுவடுற்ற படலம்-65.

"நன்னலம் பயப்ப துண்டேற் றீயவு நல்ல வாகும்
செந்நல மிழப்ப துண்டே னல்லவுந் தீய வாகும்
இன்னவால் வினையி னுக்க மெனினிடை யேது வான
அன்னவர் தம்மை நோவ வழக்கில யந்தோ வந்தோ"

---

இனி, நன்மை கூறிய எங்கட்குத் தீமை புகுத்தற் கிடையி லேதுவாய் நின்று முயன்றவர்களான (தி-ராம-தி-சுப்பிரமணி யஞ் செட்டியாரை) நோகலாகாதேல், இச்சம்பவத்திற்கு மற்று ஆரை நோகலாமென்னில்? நன்மைகூறுவார்க் கிடையூறு புரிவித் தலையே சகசகுணமாகக் கொண்டு நிகழா நின்ற கலியுகத்தை நோவதல்லது வேறுவழியில்லை; கலியுகக் கண்ட்ராவிக் கொடு மையைக் கேட்டால் கேட்டமாத்திரத்தாலேயே நல்லோர்க்கு மனம் பரிதபிக்கும், அதனை இங்கேகூறின் இச்சருக்கம் பெருகு மாதலாலும், இதிற் கூறவேண்டியதை இதனையடுத்துக்கூறல் சருக்கமுறைமையாதலாலும் இச்சருக்கத்தை யடுத்ததாகக் கலி யுகக் கொடுமைச் சருக்கமென வைத்து ஒரு சருக்கங் கூறப் படும்; கலியுகக் கொடுமைகளை, நமது வகையாரனைவரும் அச் சருக்கத்திற் பார்வையிடக் கோருகின்றேன்; இது நிற்க;

வெள்ளிக்குறிச்சிக்கு (பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியா ரிடம்) லெட்டர் வாங்கிவரப் போயிருந்த (பழ-வெ-ராம-லெ-குப் பாஞ் செட்டியார்) (தி-வகைப் பொதுவாருக்கு) ஒரு லெட்டரும் (அடியேனுக்) கொரு லெட்டரும் வாங்கிக்கொண்டு தூர்மதிஸு புரட்டாசிமீ 26உ செவ்வாய்க்கிழமை பகல்-12-மணிக்குத் தேவகோட்டைக்கு வந்து சேர்ந்தார்; மேற்படி (ராமநாதஞ் செட்டியார்) எனக்கெழுதி யிருந்த லெட்டரில் "விசுவநாதர் கோவில் விஷயத்தில் தாங்கள் சொல்லுகிறபடி எனக்குச்சரி"

என்றெழுதியிருந்தார், அதைப்பார்த்தவுடன் அர்த்தமண்டபம் அமுக்கியமென்று வாதிக்கிற (தி-ராம-தி-சுப-அவர்க) ளெதிரில் அது முக்கியமென்னும் நியாய வெதிர்வாதத்தை ஒருவர்க்கிருவ ராயிருந் தெடுத்துரைத்தல் சாதக மென்றுலோசித்து உடனே புறப்பட்டு வராமல், லெட்டர் மூலம் அவர்பொறுப்பையும் நம் பாலேற்றினரே (ராமநாதஞ்செட்டியா) ரென்றெண்ணிக்கொண் டிருந்தேன்.

இவ்வாறிருக்கும்போது அதற்கு மறுதினமான துர்மதிஞு புரட்டாசிமீ 27உ புதன்கிழமை காலையில் (வெ-ஆ-அரு-அரு ணாசலஞ் செட்டியாரும்-பழ-அ-வெங்கடாசலஞ் செட்டியாரும்-தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால‌னுப்பப்பட்டு) அடி யேனுடைய வீட்டிற்கு வந்தார்கள்; வந்து சொன்ன விஷய மென்னவென்றால், வெள்ளிக்குறிச்சியிலிருந்து (பழ-சு-நா-ராம நாதன்) பொதுவாருக் கெழுதியிருக்கிற லெட்டரில் நீசொல் லுவதவனுக்குஞ்சரி யென்றெழுதிப் போட்டானென்றும், இப் போது போடப்பட்டிருக்கிற பிளான்படிக்குத்தான் செய்யலா மென்றும், விசுவநாதர் திருப்பணிப்பணம் உன்னிடமிருப்பதற்கு உண்டியல் வாங்கிவரும்படிக்கும், பிளானுக் காக்ஷேபனை சொன் னயானால் அதைப்பத்தி ஒத்துக்கொடுத்துப் பதிற் சொல்லச் (சுப) தயாராயிருக்கிறார்களென்றும், நான் அங்கே வரட்டுமா? அல்லது அவன் இங்கே வருகிறானா? வென்றுகேட்டு வாருங்க ளென்றும் (தி-ராம-தி-சுப) சொல்லி எங்களை உன்னிடமனுப்பி யிருக்கிறார்க ளென்றார்கள்; அதற்கு நான், பெரியவர்களிங்கே வரலாகாது நானே அவர்களிருக்குமிடத்துக்கு வருகிறே னென்று பதிற்சொல்லி அவ்விருவர்களுடனும் (தி-ராம-தி-சுப) அவர்களின் வீட்டுக்குப் போனேன்;

அப்போது மேற்படி (சுப) அவர்கள் (அருணாசலஞ் செட்டியார், வெங்கடாசலஞ் செட்டியா) ரென்னு மிருவரையும் வைத்துக்கொண்டு அடியேனைப்பார்த்து (பழ-சு-நா-ராமநாதன்),

நீ சொல்வதவனுக்குஞ்சரியென் றுனக்கெழுதியதைப்போற் பொதுவாருக்குமெழுதிப் போட்டான்; பிளான்படி செய்வதற்கும் உண்டியல் தருவதற்கும் என்ன ஆக்ஷேபணை? யென்றார்கள்; அதற்கு நான் பதிற்சொன்னதாவது, உண்டியல் தருவதைப்பற்றியவாக்ஷேபணை முன்னுமில்லைப் பின்னுமில்லை; தாங்கள் போட்டிருக்கிற பிளான்படி அர்த்தமண்டப மில்லாமற் செய்தாற் சாஸ்த்திரத்துக்கு விரோதமும் புளக்கத்துக்கு இடஞ்சலுமுண்டாகுமென்று சொன்னேன்; அதற்குச் (சுப) அவர்கள், புளக்கத்துக்கு என்ன இடஞ்சலென்று கேட்டார்கள்; அதற்கு நான் பதிற்சொன்னதாவது, பூஜாமுக்கியமா யுள்ளவைகள் நைவேத்தியமும் தீபாராதனையுமாம், அவைகளைக் கொண்டுவந்துவைத்துச் செய்யத் தக்க ஸ்தானமாயுள்ளது அர்த்த மண்டபமேயாம்; அதனாற்றான் அர்த்தமண்டபத்திற்கு அர்ச்சாமண்டப மென்கிற பெயரேற்பட்டிருக்கிறது; அதைக் கட்டாவிடில் அவைகளை வைத்துச் செய்ய வேறிடமில்லாதினாற் புளக்கத்துக்கு இடஞ்சலேயா மென்று சொன்னேன்; அதற்குச் (சுப) அவர்கள் சொன்னதாவது, கெர்ப்பக்ரஹ நிலையையொட்டி அந்தராளமென்று ஒன்று வகுக்கப் போகிறோம் அதில் வைத்து நைவேத்தியந் தீபாராதனைகளைச் செய்யலா மென்று சொன்னார்கள்; அதற்கு நான் பதிற் சொன்னதாவது, முன்னொருமுறை கெர்ப்பக்ரஹத்துக்குள் வைத்துச் செய்யலாமென்று தாங்கள் சொன்னீர்கள்; அதிற்செய்ய விதியில்லை செய்தாற்றோஷம்வரு மென்று பதிற் சொல்லியிருக்கிறேன்; இப்போது தாங்கள் வகுக்கப்போகிறதாகச் சொல்லுகிற அந்தராளப்ரதேசத்தில் வைத்துச் செய்யவும் விதியில்லை; அதில் இடவிஸ்த்தாரமும்போதாது; தவிரவும் ஆலயத்தைச் சயநபுருஷாகுருதியாகவும் நின்ற புருஷாகுருதியாகவும் உருவகப்படுத்தி ஆகம சிற்ப சாஸ்த்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது; அவற்றுட் சயந புருஷாகுருதி ரூபகாங்க வகுப்பில், விமானம் சிகையாகவும், கெர்ப்பக்ரஹம் சிரசாகவும்,

அர்த்தமண்டபம் முகமாகவும், அந்தராளம் நாக்காகவும், சன்னல் காதுகளாகவும், மஹாமண்டபம் மார்பாகவும், மணிமண்டபம் வயிருகவும், பிராகாரம் தோள்கைகளாகவும், கோபுரம் பாதமாகவும், இன்னும் ஏனையஸ்தானங்கள் ஏனைய அங்கங்களாகவும் சொல்லப்பட்டிருக்கிறபடியால், கால்கைகளையின்றி விரலில்லாமைபோல, முகமென்னும் அர்த்தமண்டபமுதற் பொருளையின்றி நாக்கென்னும் அந்தராளச் சினைப் பொருளேற்பட ஹேதுவில்லை; இது சாஸ்த்திரப் பொருத்தத்தோடு யுக்திக்கும் பொருத்தம்; ஆதலால் ஆகம சில்ப்ப சாஸ்த்திரங் கற்றவர்களைக் கேட்டு அவைகளிற் சொல்லப்பட்டிருக்கிறபடி செய்யுங்களென்று சொன்னேன்; அதற்குச் (சுப்) அவர்கள் பதிற் சொன்னதாவது, கற்றவர்களைக் கேட்டுச் சாஸ்த்திரப்படிக்கே எல்லாரும் நடக்கிருர்களா? இப்போது போடப்பட்டிருக்கிற பிளான்படிக்குத்தான் செய்வோம்; நீ உன்னிட மிருக்கிற பணத்திற்கு உண்டியல் கொடுத்துவிட வேண்டியதுதா மென்று சொன்னுர்கள்; அதற்கு நான் பதிற்சொன்னதாவது, இந்தப் பிளான்படியே செய்தால் அது விஷயத்தில் சாஸ்த்திரப்ரக்ஞையுள்ளவர்கள் பின்பு கேட்டபோதெல்லாம் நீங்கள் வகைசொல்ல வேண்டியதாகத்தான் நேரும்; நான் கொடுக்கு முண்டியல் எப்பவுங் கொடுத்துத் தீரவேண்டிய வுண்டியலே யானதாலும், கொடுத்தபின் அதைச்சுட்டிச் சொல்லுஞ்சொல் இல்லையானதாலும், அதைக் கொடுத்ததினுல் அசாஸ்த்திரிகப் பிளான் ஊர்ச்சிதப்படமாட்டா தானதாலும், என்னிடமிருக்கிற பணத்துக்கு உண்டியல் நானே கொடுக்கத்தக்க தென்றுலும் அதில் (ராமநாதன்) கையெழுத்தும் பாத்தியவுடன்பாட்டுக்கு வேண்டுமானதாலும் அவன் வந்தவுடன் அவன்கையெழுத்தையு மிடுவித்து உண்டியலைக் கொடுத்துவிடுகிறேனென்று சொல்லிப் போட்டு அடியேன் எனது வீட்டிற்கு வந்துவிட்டேன்; அங்கே நடந்த மேற்கண்ட சமாசாரங்களை யெல்லாம் ஆதியோடந்தமா

கக் கேட்டுக்கொண்டிருந்த:(வெ-ஆ-அரு-அருணசலஞ் செட்டியாரும், பழ-அ-வெங்கடாசலஞ் செட்டியாரும்) அவரவர்களின் வீட்டிற்குச் சென்றூர்கள் ;

## கனம்பொருந்திய, தி-வகையார்களே !

அடியேன், கற்றவர்களைக் கேட்டுச் சாஸ்த்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிறபடி செய்யுங்களென்று சொன்னதற்குச் (சுப) அவர்கள்; கற்றவர்களைக் கேட்டுச் சாஸ்த்திரப்படிக்கே எல்லாரும் நடக்கிறூர்களா ? வென்று பதிற் சொல்லி மறுத்ததனை மேலே காட்டியிருக்கின்றேன் ; விதி விலக்கை யறிவிக்குங் கண்போல்வன சாஸ்த்திரங்க ளாதலாற்றான், அவைகளைக் கற்ரூரைக் "கண்ணுடைய ரென்பவர் கற்ரூர்" என மேம்படுத்திக் கூறினர் தெய்வப்புலமைத் திருவள்ளுவதேவர் ; அதனல் கற்ரூர், எல்லாராலும் வேண்டப்படுவர் ; கற்ரூர்க்கும் மற்ரூர்க்கும் உளதாய தாரதம்மியத்தை யுணருமாறு விரிவஞ்சி வசனரூபமா யெழுதாமல், போதுமான சில பிரமாணப்பாக்கள் மட்டும் எடுத்துப் பின் வரும் ஆதிசைவ சிவாசாரிய மகிமைச் சருக்கத்திற் காட்டப்படும் ; அவைகளை அங்கே பார்வையிடக் கோருகின்றேன் ;

இனி, உலகத்தில். ராஜாக்ஞைப்படி நடந்தவர்கள் நன்கு மதிப்போடின்புறுதலையும் மீறினவர்கள் அவமதிப்போடுதுன் புறுதலையும்போல, இகபர ஸாதக லௌகிக வைதிகக் கிரியைகளனைத்தின்கண்ணும் அவைகளைச் செய்யப்புகும் யாவரும் சிவாக்ஞையாகிய வேதசிவாகமங்களில் விலக்கியனவற்றை யொழித்தும் விதித்தனவற்றைத் தழுவியும் நடப்பராயின் இன்பமும் கடப்பராயிற் றுன்பமும் அடைவார்களானதால், வேத சிவாகமாதி சாஸ்த்திரங்கள் ஆஸ்த்திகர்களெல்லாராலும் வேண்டப்படும் ; அவைகளை மாற்றுதலும், வேறுகற்பித்தலும், நிந்தித்தலும், அவைகட்கு உயர்வொப்புக் கூறுதலும் ஆகாவாம் ; இவற்

றை நன்குணருமாறு வசனசங்க்ரஹத்துடன் சில பிரமாணப் பாக்கள், சிவஞானசித்தியார், விநாயகபுராணம், கந்தபுராணம், சிவரகசியம், சூதசங்கிதை, தணிகைப்புராணம், விருத்தாசல புராணம், சேது புராணம், திருப்பெருந்துறைப்புராணம், வைராக்கிய தீபம், திருவிளையாடற் புராணம், நீதிநெறிவிளக்கம், பகவற்கீதை, சிவதருமோத்தரம், காஞ்சிப்புராணம் முதலியவற்று ளிருந்தெடுத்துப் பின்வரும் வேதசிவாகம மகிமைச்சருக்கத்திற் காட்டப்படும்; அவைகளை அங்கே பார்வையிடக் கோருன்கிறேன்;

மேற்காட்டியவாறு வேத சிவாகமாதி சாஸ்த்திரங்கள் ஆஸ்த்திகர்களெல்லாராலும் வேண்டப்படுமெனவே, அக்குழாத்துட்பட்ட நம்மவர்களாலும் அச்சாஸ்த்திரங்கள் வேண்டப்படுவனவேயாகும்; ஆதலாற் சாஸ்த்திரப்படி பிளான் தயாரித்தலும் ஆலயத்திருப்பணி செய்தலுந்தான் உய்வுதருமென்பதுறுதியாகும்;

அப்படியானல் இதற்கு முன் சிவாலயத்திருப்பணி செய்தவர்களெல்லாரும் ஆகம சில்ப சாஸ்த்திரங்களிற் சொல்லப்பட்ட படிக்கேதான் செய்துவந்திருக்கின்றூர்களோ? என ஆராய வேண்டியது வரும்; அதுவும் அவசியந்தான்; ஆராயப்புகின், அப்படியே தொன்று தொட்டுச் செய்துவந்திருக்கின்றூர்களென்பதைக் கீழ்க்காட்டப்படும்பிரமாணங்களா லறியலாம்;

தொண்டை நாட்டிலே திருநின்றவூரிலே பிராமணகுலத்திலே அவதரித்தருளிய பூசலார் நாயனுரென்னுந் தவசிரேஷ்டரொருவர் சிவபெருமானுக்கு நதிருசய த்யாநோபாதார பாவநாலயத் திருப்பணியொன்று செய்தன ரென்பதாகவும், அவராலவ்வாறு செய்யப்பட்டது உலகவர்கண்ணுற் காணப்படாத த்யாநசொரூபக் கோயிலா யிருந்தும் அதனை அவர் ஆகமவிதிப்படியே செய்துள்ளா ரென்பதாகவும் பெரியபுராணத்திற் காண்கின்றேம்; இதற்குப் பிரமாணம்:—

## பெரியபுராணம்.

### பூசலார்நாயனார்-1-6.

"அன்றினர் புரமெரித்தார்க் காலய மெடுக்க வெண்ணி
யொன்றுமங் குதவா தாக வுணர்வினு லெடுக்குந் தன்மை
நன்றென மனத்தி னாலே நல்லவா லயந்தான் செய்த
நின்றவூர்ப் பூச லார்த நினைவினை யுரைக்க லுற்றும்"

"சாதனத் தோடு தச்சர் தம்மையு மனத்தாற் றேடி
நாதனுக் காலயஞ்செய் நலம்பெறு நன்னாட் கொண்டே
ஆதரித் தாக மத்தா லடிநிலை பாரித் தன்பாற்
காதலிற் கங்குற் போதுங் கண்படா தெடுக்க லுற்றார்"

---

இனி, உலகத்திற் பலர்கண் காணுதபடி இருந்தவிடத்தி லிருந்து த்யாநோபா தானங்கொண்டு பணச்செலவின்றி அந்த ரங்கத்திற் பூசலாரென்னுந் தபோதனராற் செய்துள்ள பாவ நாலயப்பணி ஆகம விதிப்படி செய்யப்பட்டிருக்கின்றதென் பதனை, ஈண்டுக் கல்லாலயப்பணிக்குப் பிரமாணமாகக் காட்ட லாமோ? வெனில், அந்தப் பாவநாலயப்பணியானது, பலர் கண் காண மிகமுயன்று கருங்கற் செங்கற் சுண்ணும்பு முதலிய வுபா தானங்கொண்டு பணச்செலவுடன் பெறுநிரங்கத்தில் ஏனைப்பல ராலுஞ் செய்யப்பட்ட இந்தக் கல்லாலயப் பணிகளினும் பார்க்க எத்தனையோ மடங்கு உயர்ந்ததாகும்; எதனுலென்றால்? பாவ நாலயம் யோகபாதரேட்டினுள்ளதுங், கல்லாலயம் சரியாபாத ரேட்டினுள்ளது மாதலாலேயாம்; அதனுற்றான், காடவராஜன் கச்சிப்பதியிற் கல்லினுற் செய்துமுடித்த கல்லாலயத்திற்கும், நின்றவூர்ப் பூசலார் மனசினுற் செய்துமுடித்த பாவநாலயத் திற்கும் தனித்தனி அவ்விருவரும் அவ்விரண்டற்கும் ஒருதினத் தையே கும்பாபிஷேகநற்றினமாகக் குறிப்பிட்டிருந்தும், அவ் விரண்டினுஞ் சாந்நித்யமாதற்குரிய சிவபெருமானே, முதனளிர விற் காடவராஜாவின் கனவிற் றேன்றி (நின்றவூர்ப் பூசலார்தல் நினைவினுற் செய்துள்ள பாவநாலயத்தில் நாளைநாங் குடிபுகு

துவோ மாதலால் உன்னுலயக் கும்பாபிஷேகத்தை நாளையதினத்திற் செய்தலை யொழிந்து பின்பு வேறொருநாள்வைத்து அதிற் செய்யக்கடவாய்) என்று சொல்லிவிட்டு மறைந்துபோய், முன் பார்த்திருந்த தினத்திற் பூசலாரின் பாவநாலயத்திற் சாந்நித்யராயினுரென வறிக; இதற்குப் பிரமாணம்:—

## பெரிய புராணம்.

### பூசலார் நாயனுர்-9-10.

"காடவர் கோமான் கச்சிக் கற்றளி யெடுத்து முற்ற [வான்
மாடெலாஞ் சிவனுக் காகப் பெருஞ்செல்வம் வகுத்தல் செய்
காடமா ல்றியா தாரைத் தாபிக்கு மந்நாண் முன்னுள்
ஏடலர் கொன்றை வேய்ந்தா ரிரவிடைக் கனவி லெய்தி"

"நின்றவூர்ப் பூச லன்ப னெடிதுநா ணினைந்து செய்த
நன்றுநீ டாலயத்து நாளைநாம் புகுவோ நீயிங்
கொன்றிய செயலை நாளை யொழிந்துபின் கொள்வா யென்று
கொன்றைவார் சடையார் தொண்டர் கோயில்கொண் டரு
[ளப் போந்தார்"

---

இனி, கல்லாலயத்தினும் பார்க்கப் பாவநாலய முயர்ந்த தென்பது சரி, பாவனைகொண்டு செய்யப்படுவதற்கும் கற்கொண்டு செய்யப்படுவதற்கும் பிரதிஷ்டித ஞெருவனே முன்பின்னுகச் சாந்நித்தியஞ்செய்து காட்டினமையையும் அவற்றின் உபாதாந பேதத்தையும் நோக்கும்போது ஸஜாதிகத்துவமில்லையாதலாலும், இங்கே ப்ரகிருதத்திற் செய்யப்படுவது கல்லாலயப் பணியாதலாலும், இதற்குப் பாவநாலயப்பணி ஆகமவிதியாற் செய்யப்பட்ட தென்னும் பிரமாணத்தை எடுத்துக் காட்டினது பொருத்தமன்றுதலாலும், பணச் செலவு செய்து முயன்று கல்லாதிகொண்டு பலராற் செய்துள்ள ஆலயங்கள் ஆகம சிற்ப சாஸ்த்திரப்படிக்கே செய்யப்பட்டமைக்கான பிரமாணத்தை எடுத்துக் காட்டினுல் அங்கீகரிக்கலா மென்னில்? அவ்வாறே காட்டுதும்;

விண்ணுலகத்திலுள்ள தேவவகுப்பின்கண்ணும், மண்ணுலகத்திலுள்ள அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் முதலிய மனிதவகுப்பின்கண்ணும் சிவபக்தசிகாமணிகளாய்த் தோன்றிச் சிவாலயத்திருப்பணி செய்து சிவாநந்தப் பேறடைந்தோர் அநேகர்; அவர்களெல்லாம் சிவாகம சிற்ப சாஸ்த்திரங்களிற் கூறப்பட்ட விதிப்படிக்கே அவ்வவ்வாலயப்பணிகளைச் செய்து வந்திருக்கின்றார்கள்; ஆகமமுஞ் சிற்பமுந் தம்முட் பெரும்பாலும் முரணா; மேற் கூறப்பட்ட சாஸ்த்திரோக்தமாய்ப் பணியைச் செய்தவர்கள்தான், போகமோக்ஷங்களை யடைவார்கள்; தம்மனம்போனபடிக்கெல்லாஞ் செய்தவர்க ளடையார்கள்; அவ்விருபகுதியோ ரடைதலடையாமைகளை, கீழ்க்காட்டிய சிவரகசியம், காஞ்சிப்புராணம், சிவதருமோத்தரம், பகவற்கீதைச் செய்யுட்களாலறியலாம்; இதற்குப் பிரமாணம்:—

## சிவரகசியம்.

சுமமுனிச் சருக்கம்-22. வசிட்டருந்நாச் சருக்கம்-14.

" ஆல யஞ்சிவ னுக்க மைத்தன னதிக மாகிய சிகரமும்—
மாலையாகிய மதிலு டன்பல மண்ட பங்க ளுஞற்றவுஞ்—சீல மே
[பெறும் (ஆகமப்படி) "

" தன்னினைவின் படிமுடிக்கிற் குற்ற மன்றே சங்கரனாருள்
பெறவே வேண்டு மென்னிற்—(சொன்னபணி புரிந்திடுவீர்) "

## திருநெல்வேலிப் புராணம்.

வேண்டவளர்ந்த மகாலிங்கச் சருக்கம்-130.

" ஆலயமுந் திருமதிலும் (ஆகமத்தின் படியமைத்தான்) ".

## திருவாப்பனூர்ப் புராணம்.

ஆப்பனூர்ச் சருக்கம்-71-73.

"கால்புகத் திகைக்குங் கடுவன மெறிந்து கடிநகர்கண்டுநீள்(சிற்ப
நூல்புகச் சிவன தாலயம் வகுப்பீர்)நுண்மதியீரென "

"அங்கணன் பரம (னுகம வளவை யாற்சின கரமெடுத்) தமைச்சர்—திங்கணன் மரபின் முதலடி தொழுது திருநகரால யஞ் செய்தேம்—நங்கணன் புடையா யெனவவ ருடன்போய் நோக்கியுண் மகிழ்ந்துநன் னுதலிற்—செங்கணன் பூசை செய்வ தற் காதி சைவரை யழைத்தனன் றென்னன்"

## திருக்கடந்தைப் புராணம்.

சேதுபந்தன மகாராஜன் பூசைச் சருக்கம்-23.

"(மன்னு கமநூல் விதிவழியே) மருவும் யாக சாலையுடன்
எந்நா ளுந்தன் புகழுடம்பிங் கிருப்ப வான்சேர் திருமதிலும்
பொன்னுற் சிகர கலசங்கள் பொற்பி னமையப் புரவலனும்
முன்னுட் செய்த முதிர்தவத்தான் முடித்தா னரிய திருப்பணி
[யே"

## திருவானைக்காப் புராணம்.

திருவிழாப் படலம்-3. நீலவிண்டு வீச்சாப் படலம்-19.
கோச்செங்கணூர் வழிபடு படலம்-214.

"புரிசை யாதி பலவுறுப்பும் பொருப்பென் றெவரு மதிசயிப்ப
வரிசை யாக (வாலய நூன் மரபின் வகுத்து)"

"(சிற்ப நூல் விதியி) னுற்றுற் சிவலிங்கத் தளவைக் கேற்பக்
கற்பகிர்ந் தனைய தீர்த்தக் கரையின்மேல் பாங்கர்க் கோயில்
பொற்புற வமைத்திட்(டாத்தன் புகன்றநூல் விதியிற் றுபித்)
தற்பகங் கனியப் பூசை யாற்றினன்"

"புரையறு (சிற்பநூல் புகன்ற வாற்றினுல்)
வரையென விலகிய விமானம்"

## விநாயக புராணம்.

சோமகாந்த னேய்தீர்ந்த படலம்-15.
மயூரேசர் திருவவதாரப் படலம்-160.

"அண்டர்கம் மியரு நாண வழகுறச் (சிற்பத் தாக்கி)"
"மண்டபம் (நூலி னுற்றுன்) வகுத்தனர்"

## திருவிளையாடற் புராணம்.

திருமணப் படலம்-197. திருநகரங்கண்ட படலம்-36.

"(மெய்ம்மைநூல் வழியே கோயில் விதித்)தருட்குறிநி றீஇப்பேர்
இம்மையே நன்மை நல்கு மிறையென நிறுவி"

"(சிறந்த சிற்பநூற்) புலவராற் சிவபரஞ் சுடர்வந்
தறைந்து வைத்தவா ருலய மணிநகர் காண்பான்"

## காஞ்சிப் புராணம்.

கச்சிமயானப் படலம்-1. சிவபுண்ணியப் படலம்-52-53.

"(சிற்பநிகழ்) மணிமாட நெடும்புரிசைத் திருவநந்த
பற்பநா கேசத்தின் பரிசறிந்த வாறுரைத்தாம்"

"விளங்கு நாகரந் திராவிடம் வேசர மற்றுங்
(கிளந்த வற்றுளோர் பெற்றியிற்) கெழுவுபே ரன்பாற்
றுளங்கு வெண்டிரைக் கருங்கடற் சுடுவிடம் பருகிக்
களங்க றுத்தவ னுலயங் காண்டக வெடுப்பார்"

"மேவு மவ்வமால் வரைநிகர் விமானமேல் கொண்டு
தேவர் மாலயன் முனிவரர் சித்தரேத் தெடுப்பக்
காவி நேர்மிடற் றெம்பிரான் கயிலையை நண்ணி
ஓவ ரும்பெரும் போகமுண் டுறைந்துவீ டடைவார்"

## சிவ தருமோத்தரம்.

சிவஞான தானவியல்-73.

"செய்தார் சிறக்கச் சிவபுரத்தைச் (சிற்பவுரையிற் றிகழ்விதியால்)
எய்தார் பிறப்பிற் சிவலோக மெய்திப் போக மினிதருந்தி
வெய்தாம் வினையு மாணவமும் வீயா மாயை யுடன்விடவே
மெய்யாம் பரம வித்தையுற விமலன் கமலம் விரவுவரே"

## பகவற்கீதை.

பதினாற மத்தியாயம்-20. பதினேழா மத்தியாயம்-2.

"(கூறின நூல்வழி) சேர்குறி பேணு
தேறின வாறுசெய் வாரிக லோகம்
வேறிய லார்பர லோகம் விளக்கும்
பேறின வானவை பேறுபெ ருரால்"

"(வேத மேமுத னூல்விதி) யின்றியே
காத லானுல கோர்செயுங் காரியம்—ஏதமாம்"

## திருநாகைக்காரோணப் புராணம்.

நாகநாதப் படலம்-26.

"(சிற்பநூல் விதிவ ழாது) சிறக்குமா லயமொன் ருற்றி"

## திருக்குடந்தைப் புராணம்.

நகர்காண் படலம்-17.

"வைய முழுது மிகவியப்பச் (சிற்ப விதிவாய்ந் திடவியற்றி)"

## திருக்குறுக்கைப் புராணம்.

திருவிழாச் சருக்கம்-12.

"ஆலய மாதி யின்னே யமைத்திட வேண்டு மென்னச்
சாலவு முவந்து தெய்வத் தச்சனுஞ் (சிற்பம் வாய்ப்பக்)
கோலமார் தளிமுன் யாவுங் குறித்தினி தியற்றுவானல்"

## திருக்கருவைத்தல புராணம்.

ஆரியனுலயஞ் செய்த சருக்கம்-21.

"(சிற்பநூ லதனிற் கூறும் விதிகளிற் றிறம்ப லின்றி)
நற்பெருங் கனகத் தானு நவமணித் தொகுதி யானும்
பொற்புறப் புனைந்து பல்கோ புரங்களோ டிலங்கித்தோன்றும்
அற்புத மேவு கோயி லியற்றின னரசன் மாதோ"

## அஃதீச்சுர புராணம்.

இந்திரசுந்தரச் சருக்கம்-169.

"தாழ்ந்தெ ழுந்துகாற் றிசையினோர் வசதியிற் சார்ந்துசுந் தரனுங்கே—சூழ்ந்த நெஞ்சனு யற்புறச் சிற்பநூற் கற்பினர்த் தரீஇக்கூய்ப்—போழ்ந்து நீலமா மணிமலை கொணர்ந்தெனப் பொலிசிலை கொணர்வித்து—வாழ்ந்தி டப்புரி (சிவாகம விதிப்படி மணிநிகே தனஞ்செய்வான்)"

## உறையூர்ப் புராணம்.

திருவிழாச் சருக்கம்-19.

"ஒவு (சிற்பநூல் விதியமைத் தா)ரூறு தொழிலோர்"

## கோயிலூர்ப் புராணம்.

கோற்றவாளீசப் படலம்-47.

"விரைதரச் (சிற்பம் வாய்ப்பப்) புரிதொழின் மேயினாரே"

## சூரைமாநகர்ப் புராணம்.

திருப்பணிப் படலம்-41.

"(சிற்ப) முணர்ந்த திறலோரைச் சிறப்பின்வருவித் திறைவனுக்குப்—பொற்ப வமரா லயநன்கு புரிமி னென்று பொருள் பலவும்—அற்ப மொழிய நனிகொடுத்தான்"

## திருப்புனவாயிற் புராணம்.

அகத்தியச் சருக்கம்-85.

"சென்று கட்செவி நதிமருங் காச்சிவ கோட்டம்
ஒன்று செய்தனன் (சிற்பர்த நூன்மர புளியே)"

---

மேற்காட்டிய பிரமாணங்களால் இதற்குமுன் சிவாலயத் திருப்பணி செய்தவர்களெல்லாம் மொத்தமாக ஆலயமுழுதையுமே ஆகமசிற்ப சாஸ்த்திரவிதிப்படிக்குச் செய்துவந்திருக்கின்றார்களென்பது சாதிக்கப்பட்டது.

இனி, அவ்வாலயங்களின் சாங்கோபாங்கப் பிரத்தியங்கங்களுக்குள் அர்த்தமண்டபமானது, கெர்ப்பக்கிரகத்தையடுத்திருந்து அதற்குச் சுத்தியை விளைப்பதாயும், நைவேத்ய தீபாராதனைகட்குரிய போகசக்த்தி ஸ்தானமாயு மிருத்தலால், அது, ஏனைய அங்கங்களைப்போலாது முக்கியாங்கமெனக் கொள்ளப்பட்டு ஆலயங்கடோறும் அனைவராலும் விடாது வைத்தே செய்யப்பட்டுள்ள தென்பதனைக் காக்ஷியாலுமறிவதோடு, புராணவாயிலாகவு மறியலாம்; இதற்குப் பிரமாணம்:—

## அருணகிரி புராணம்.

வலம்புரி சருக்கம்-54. ஆலயத்தோடு புரியாக்கிய சருக்கம்-9.

“(அருத்தமண் டபத்துட்) புக்கே யந்தண ரமலன் பாதங்
கருத்தினுங் கண்டு வாழ்த்திக் கைதொழு வார்நா லேழுந்
தரித்துநால் வேத மாதி தன்னையு மமலன் மேனி
யருச்சனை செய்வார் சுத்த சைவருட் புகுந்தன் பாலே”

“ஆதிநடு வந்தமிலா னமலனுறை யுங்கோயி லாதியிப்பால்
வேதியர்க ளருமறையை விளம்(பருத்த மண்டபமாம்)”

## திருக்காளத்திப் புராணம்.

சிலந்தி முதலிய முற்கதைச் சருக்கம்-80.

“பொன்பெய் மாரி யனைய புரவலன்
மின்செய் செஞ்சடை வேதியன் மேவிட
மன்செ யுங்கரு விற்(கரை மண்டபம்)
முன்செய் மண்டப முற்று மியற்றினன்”

## திருவிளையாடற் புராணம்.

திருநகரங்கண்ட படலம்-37.

“மறைபயில் பதும மண்டப (மருத்த மண்டப) மழைநுழை வளைவாய்ப்—பிறைபயில் சிகைமா மண்டப மறுகாற் பீடிகை திசையெலாம் பிளக்கும்—பறைபயி னிருத்த மண்டபம் விழாக் கொள் பன்மணி மண்டபம் வேள்வித்—துறைபயில் சாலை திரு மடைப் பள்ளி சூழுறை தேவர் தங் கோயில்”

## திருவாப்பனூர்ப் புராணம்.

அன்னவினோதச் சருக்கம்-42. சுதரிசனச் சருக்கம்-23.

“(அருத்த மண்டப) மாதிமா மண்டப மறுகாற்
பொருத்து பீடிகை மண்டபம் பொன்னனு ராடும்
நிருத்த மண்டபந் திருமதில் கோபுர நிமலற்
கருத்தி யான்முடித் துமைக்குமப் படிவகுத் தமைத்து”

“முத்திரை யிருப்பப் பூட்டு முறிபடா திருப்ப வுள்புக்
(கத்தமண் டபமு) மிச்சி லன்னமாங் காங்குச் சிந்திக்
குத்திரக் களவு மின்றிக் குறிமிசைச் சொன்றி யாக்குஞ்
சித்திர மிதனை யொன்றுந் தெளிகிலம் யாங்க ளென்றார்”

## திருநெல்வேலிப் புராணம்.

### சிவபுண்ணிய மகிமைச் சருக்கம்-12.

"அடிக ளாலயங் கெர்ப்பக் கிரகமே யாதி யா(யத்த மண்டப) நீண்மதில்—நெடிய கோபுரஞ் சூழ்பிர காரங்க ணீறுஞ் செங்கலுங் கல்லு னிரப்புவோர்"

## திருக்குடந்தைப் புராணம்.

### சோழன்றிருப்பணிப் படலம்-32. நகர்காண் படலம்-10.

"ஆன்ற பொற்கருக் கிரகமொண் பன்மணி (யருத்தமண்டப)மாதி
சான்ற மங்கள நாயகி யாலயந் தவாதகோ புரநொச்சி [லாந்
யேன்ற பொய்கைசூழ் படித்துறை நந்தன மியைதர மற்றெல்
தோன்ற நன்குசெய் தணிவிழா முதலிய துலங்கவாக் கினன்
[மாதோ"

"பொருவு தவிர்நங் கும்பேசர் பொருப்பில் வருமங் களவல்லி
மருவு கருப்பக் கிரகமே வயங்கு (மத்த மண்டபமே)
வெருவு தவிர்மா மண்டபமே விளங்கு நிருத்த மண்டபமே
ஒருவு ருத பலவிழா வுஞற்றும் பற்பன் மண்டபமே"

## திருவதிகைப் புராணம்.

### திருநகரப் படலம்-107.

"தொழில்வ லாரிறும் பூதடைந் திடப்பெருந் தூபி
யெழின்மி குந்திடு மந்தரா ளங்களு மினிய
அழிவரு (மர்த்த மண்டப) முதலிய வமைந்தப்
பொழில்வ ளர்ந்துறச் சிறப்புற வோங்குவ பொற்பாய்."

## சாயாவன புராணம்.

### திருவிழாச் சருக்கம்-3.

"பொங்கு (மருத்தத் திருமண் டபமும்) புனைகோலத்
துங்க மகாமண் டபமுமை நிலயஞ் சுடர்வீசும்
மங்கையர் தங்கி நடம்புரி மண்டப மயிலோனும்
ஐங்கர வள்ளலு மேவுறு தளியு மமைத்தேபின்"

## உறையூர்ப் புராணம்.

### திருவிழாச் சருக்கம்-16.

"அண்டர் கைதொழும் விமானமா மண்டபம்
(அர்த்தமண்டபம்) * * * * * அமைத்தார்"

## அத்தீச்சுர புராணம்.

### இந்திரசுந்தரச் சருக்கம்-170.

"கருவி (லத்தமண் டப)மகா மண்டபங் கண்ணுண்மண் டபமாதி
பொருவி லாத்திரு மாளிகை யடுக்குயர் பொற்றிரு மதிலாதி [ம்
தருவி சும்புறு கோபுரம் விமானமுன் சாற்றுநூல்வகையொன்று
ஒருவு றாதுசெம் பொன்மணி யாதிகொண் டுஞற்றினன் றிருக்
[கோயில்"

## சூதவன புராணம்.

### ஆதிசேடன் றிருப்பணிச் சருக்கம்-22.

"வருமறையோர் புகு(மருத்த மண்டபஞ்)சத்திரியமனர் வணிகர்
சற்சூத்—திரர்புகுமா மண்டமுன் றிகழாறு காற்பீடஞ் சேரச்
[செய்தான்"

## திருப்புத்தூர்ப் புராணம்.

### ஆதிசந்திர பாண்டியச் சருக்கம்-176.

"மீண்டிடா விதம்பணித்—தாண்டுதம்வ யஞ்செயுங்
காண்டகுங்க ருப்பவில்—மாண்ட(வர்த்த மண்டபம்)"

## திருக்குறுக்கைப் புராணம்.

### திருவிழாப் படலம்-13.

"வளர்கருக் கிரக (மருத்தமண் டப)மா மண்டப நிருத்த
மண் டபம்பொன்—கிளர்தரு நூறு காலொடு மமைந்த கேடின்
மண் டபமொளி வீசித்—தளர்வரு மோரா யிரம்பெருங் கால்க
டவாதமா மண்டபம் வண்டர்—உளர்தரு மாலை யுவந்ததிண் புயச்
சூ ழுறைபல தேவர்தங் கோயில்"

## திருவாளொளிபுற்றூர்ப் புராணம்.

### துசகேது முத்தியடைந்த படலம்-5.

"என்றனுமே தபதியர்க ளெழின்மேவு கருக்கிரகம்
மன்றநல மிகு(மர்த்த மண்டப)மா மண்டபஞ்சீர்
ஒன்றுநட மண்டபமற் றுமைமருவா லயஞ்சிற்பம்
நன்றமைய மாவரணம் வானவர்வாழ் நகுதளிகள்"

## திருவேடகப் புராணம்.

### நகரப் படலம்-52.

"அண்டரூ ருக்கு மேற்போ மணிமதில் கோபு ரங்கள்
எண்டரும் விமானங் கர்ப்ப வில்(லத்த மண்ட பம்)மா

மண்டப நூற்றுக் காற்கன் மண்டபம் பதின்ம டங்காம்
மண்டபம் பொலிவுற் ளேங்கி மன்னுமப் பொற்பூங்கோயில்"

## திருச்சுழியற் புராணம்.

முந்தீமாநகாச் சருக்கம்-30.

"உத்தி ரங்கொள் கபோத கம்பிற வுத்தி ரஞ்சி காத்துடன்
(அத்த மண்டப) மிக்க மண்டப மாறு காற்றரு பீடமும்"

## வீரவன புராணம்.

சோழன்றிருப்பணிப் படலம்-91.

"வளர்கருக் கிரக (மத்தமண் டப)மா மண்டப நிருத்தமண் டபமேர்—தளர்வரும் வசந்த மண்டப மூர்தி தயங்குபொன் மண் டபம் விசும்பிற்—கிளர்தரு விழாக்கொண் மண்டபஞ் செம் பொன் கெழுமுகா னூறுற நிறுவி—விளர்தபப் புரிமண் டபஞ் சகத் திரக்கால் விளங்கிய மண்டப மமைத்தார்"

## கோயிலூர்ப் புராணம்.

நொற்றவாளீசப் படலம்-51.

"திகழ்கருக் கிரக (மத்த மண்டபஞ்) சிற்பம் வாய்ந்த
புகழ்மகா மண்ட பஞ்சீர் பொலிநட மண்ட பங்கார்
அகழ்முடி மன்றஞ் சாறு கொள்ளுமண் டபம லங்கி
இகழ்வறப் பொலியா நிற்கு மடைப்பள்ளி யாகசாலை"

## மண்ணிப்படிக்கரைப் புராணம்.

பாண்டவ ரருள்பெறுபடலம்-9.

"வந்து நாயகன் மலரடி பணிந்துபொன் மதில்வான்
முந்து கோபுர முகிழொடு வெழுகருக் கிரகம்
நந்து (மத்தமண் டப)மகா மண்டப நலங்கூர்
இந்து வானுத லிறைவிய ரிருவர்தங் கோயில்"

## சூரைமாநகர்ப் புராணம்.

திருப்பணிப் படலம்-42.

"ஆன்ற கருப்பக் கிரகமே யலங்கு (மத்த மண்டபமே)
தோன்ற மிளிர்மா மண்டபமே சோதி நிருத்த மண்டபமே
யேன்ற மதிலே கோபுரமே யாக சாலை மடைப்பளியே[மே"
சான்ற வொருபார்ப் பதியென்றுந் தணவா தமருஞ்சினகர

## இளசைப் புராணம்.

### அசுரர்புராதனவனம்புகு படலம்-24.

“அணிபெற வண்மையா (மருத்த மண்டபம்)
பிணிபெற னீக்கிடும் பெரிய மண்டபம்
மணிபெற வயங்கிய நிருத்த மண்டபம்
பணிபெறப் பல்கிய பன்மை மண்டபம்”

## அரிமழத் தலபுராணம்.

### திருப்பணிப் படலம்-19.

“எண்டகுசொல் வடிவனைத்து மிறைவிவடி வாமருத்தங்
கொண்டுறைவா னிறைவனெனக் கூறுவது தேறினராய்
விண்டகுவா னவருமுளம் வியப்பெய்த மிளி(ருத்த
மண்டபமு) மோங்குமகா மண்டபமுங் கடிதாற்றி”

## கோட்டூர்ப் புராணம்.

### முசுகுந்தப்படலம்-93.

“சித்திரக் கருவி (லத்த மண்டபங்) தேவர் நாளும்
நத்துமா மண்ட பாதி நயமுறக் கண்டார் மன்னே”

## கண்டதேவிப் புராணம்.

### பொன்மாரி பொழிந்த படலம்-32.

“வானள வோங்கு செம்பொற் கோபுரம் வயங்கு நொச்சி
ஊனமில் கருவி (லத்த மண்டப) முரையா நின்ற
ஏனவுஞ் செம்பொ னூற்செய் திலங்குபன் மணிகால் யாத்துக்
கூனல்வெஞ் சிலையா னன்னாட் கும்பாபி டேகஞ் செய்து”

## கரையேறவிட்டநகர்ப் புராணம்.

### திருநகரப் படலம்-40.

“கெற்பவொண் கிரக மந்த ராளமே களக்கா நின்ற
சிற்பநல் விதிய மைந்து திக(மூர்த்த மண்ட பஞ்)சீர்ப்
பொற்பின்மா மண்ட பாதி புகலுறுப் பெலாம மைந்தே
அற்பகன் முழக்க மாரு தவிரு மாலயந்தா னன்றே”

---

இனி, பற்பல சிவஸ்தலங்கட்கமைந்துள்ள பற்பலவடமொழிப் புராணங்களுள், தென்மொழியில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன சிலவாதலாலும், மொழிபெயர்த்தவற்றுட் சிவாலயத் திருப்பணி செய்த சரித்திரத்தன சிலவாதலாலும், அச்சரித்திரத்தனவற்றுட் கிடைத்தாராய்ந்தன சிலவாதலாலும், நேர்ந்தவரைக்கும் பிரமாண மெடுத்து மேலேகாட்டப்பட்டன; காட்டப்பட்ட செய்யுட்களில், "கருவில்" எனவருவது கெர்ப்பக்கிரகமெனவும், "அரைமண்டபம்" எனவருவது அர்த்த மண்டபமெனவும் பொருள் கொள்ளப்படும்.

மேற்காட்டிய பிரமாணங்களாற் சிவாலயத்துக்கு அர்த்தமண்டபமென்னும் முக்கியாங்கம், செய்து தீரவேண்டிய காரியமேயென்பது நன்கு துணியப்படும்; இந்த விஷயத்துக்கே ஆகமப்பிரமாணம் பின்வருந் திருப்பணிச்சருக்கத்தில் எடுத்துக் காட்டப்படும்; அதனை அங்கே பார்வையிடக் கோருகின்றேன்.

இனி, (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்) அர்த்த மண்டபம் வைக்காதபடி போட்டிருக்கிற பிளானோடு, விசுவநாதர் விசாலாக்ஷிக்கு இப்போதிருந்து வருவதான அர்த்தமண்டப ஸஹித ப்ரத்யக்ஷ புராதநாலயத்தை யொட்டிப்பார்க்கும் போது அங்கலெக்கக் குறைவேற்படுகிறது; ஏற்படவே, அது திருப்பணிகுறைத்த தோஷமாய் முடிகிறது. திருப்பணி குறைத்ததோஷம், குறைத்தோர்க்கு மிக்க துன்பத்தைத் தரத்தக்கதாகும்; இதற்குப் பிரமாணம்:——

## திருமந்திரம்-516.

"கட்டுவித் தார்மதிற் கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்மபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டுவித் தேவிடும் விண்ணவ னணையே"

## கடம்பவன புராணம்.

இலீலா சங்கிரக வத்தியாயம்-136.

"பலங்கெழு மீசன் றிருப்பணி பூசை படித்தரங் குறைத்
ததி நரகர்—கலங்கவே செய்யு மலிப்பிணி வருத்தங் காட்டுறு
[மருங்கய ரோகர்"

## சிவதருமோத்தரம்.

பாவவியல்-53. சுவர்க்க நரகவியல்-189.

"புலனிழந் துடைப்பா னவனுந் துணையான
தேவர் விமானந் துயக்குறவே"

"கண்டக ரோடு களித்தற நீதி கறுத்தீரே
உண்டொரு தெய்வமு மென்றவர் தம்மை யுவர்த்தீரே
அண்டர்த மாலய மாமர மற்று மறுத்தீரே
மண்டனில் வாழ்வை மதித்தெளி யாரை வதைத்தீரே"

## தணிகைப் புராணம்.

அகத்தியனருள்பெறு படலம்-245.

"வீரமுற் றமர்தல் சமயங்கால்கோறல் விண்ணவர் விமானங்கள்
[சிதர்த்தல்"

## திருக்குடந்தைப் புராணம்.

கிருதவீரியன் புத்திரனையடைந்த படலம்-39.

"சிவாலயத் தியல்பில செய்து ளேன்கொலோ
சிவாலயத் தழிவுறச் செயிர்த்து ளேன்கொலோ"

---

மேலே பிரமாணங் காட்டப்பட்ட திருமந்திரச் செய்யுளில் வந்திருக்கிற "வாங்குதல்" என்னுஞ் சொல்லுக்கு, முன்னிருந்த அங்கத்தை நிலைகெடச் செய்த லென்பது பொருள்; இப்பொருள்கோளை, விநாயகபுராணம் திருநாட்டுப் படலம் 19-ல் "பன்றியைத் தொடர்ந்த வேடன் பயந்தசே யிவனுமாய—வன்றியை வேட்டையாடி மருப்பொன்று வாங்கும் வேடன்" எனவும், மேற்படி புராணம் பிந்தியமயூரேசர் திருவவதாரப்

படலம்-171-ல், " தூங்கு மென்கனி காய்வடுத் துன்னிட நோக்கி —ஆங்கு வைகிய முனிச்சிறுர் சிலரடுத் தன்பால்—வாங்கி " எனவும், திருப்பெருந்துறைப் புராணம் கடவுள் வாழ்த்து-1-ல் " மாமேவு புயனிறத்து மோட்டாமை முதுகொருகை வாங்கி " எனவும் வருமாற்ருலறிக; இவை, தற்கிழமைப்பொருளாய அங்கஙிலேகேட்டை யுணர்த்தவந்த பிரயோகங்கள்; இனி, பிரபுலிங்கலீலே கயிலாசகதி-21-ல் " ஓங்கு வாவுடை யும்ப னயனரி— தாங்கு மாவி தணந்தொழி நாளினும்—வாங்குறு வெழின் மங்கல நாண் " எனவருவதன்கண்ணும், கந்தரலங்காரம் - 77 - ல் " களிற்ருன் கிழத்தி கழுத்திற் கட்டும் நூல்வாங் கிடாது " என வருவதன்கண்ணும், பாரதம் சூதுபோர்ச் சருக்கம்-246-ல் " வாங்காத வுத்தரியம் வாங்கியிந்தான் " என்வருவதன் கண்ணுமுள்ள " வாங்குதல் " என்னுஞ் சொற்கள், பிறிதின்கிழமைப் பொருளாய அங்கஙிலேகேட்டை யுணர்த்தவந்த பிரயோகங்களெனவறிக; சிவதருமோத்தரச் செய்யுளிலும் தணிகைப்புராணச் செய்யுளிலும் வந்திருக்கிற " விமானம் " என்னும் சொல்லுக்கு, கோயிலென்பது பொருளாம்;

மேற்காட்டிய பிரமாணங்களாற் புராதநாலயத்திலேற்பட்டிருக்கிற அர்த்தமண்டப அங்கத்தை (தி-ராம-தி-சுப-அவர்கள்) குறைத்துச் செய்யப் பிளான்போட்டிருப்பது, செய்யத்தகாத காரியமே யென்று நன்குதுணியப்படும்; இந்த விஷயத்துக்கே ஆகமப்பிரமாணம் பின்வருந் திருப்பணிச் சருக்கத்தில் எடுத்துக் காட்டப்படும், அதனே அங்கே பார்வையிடக்கோருகின்றேன்.

இனி, (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்,) விசுவநாதர் விசாலாக்ஷிக்குக் கெர்ப்பக்கிரகமொன்றைமட்டும் இனிக்கட்டப்போகிற புதுத்திருப்பணியிற் கட்டி விடுவதாகப் போட்டிருக்கிற பிளானே, கெர்ப்பக்கிரகமர்த்தமண்டப மென்னு மிரண்டங்

கத்துட னிப்போதிருந்துவருகிற புராதநாலயத்தோடொட்டிப் பார்க்கும்போது இரண்டங்கத்தி லோரங்கங் குறைவதால், அது, திருப்பணிகுறைத்த லென்னுஞ் செய்யத்தகாததைச் செய்த குற்றமாக முடிகிறது, மேற்படி பிளானை, சிவாகமாதி நூல்களின் விதியோடொட்டிப் பார்க்கும்போது, நூதநாலயத்துக் கவசியஞ் செய்துதீரவேண்டியதாயுள்ள அர்த்தமண்டபத்தைச் செய்கிறதில்லையென்று விட்டிருப்பதால், அது, செய்யத்தக்கதைச் செய்யாமல் விட்ட குற்றமாகமுடிகிறது; நூல்களால் விலக்கிய செய்யத்தகாதனவற்றைச் செய்தாலும், அவைகளால் விதித்த செய்யத்தக்கனவற்றைச் செய்யாமல் விட்டாலும், அவ்விரண்டுங் கேடுபயக்குமென்பது, நூற்றுணிபாகும்; இதற்குப் பிரமாணம் :——

## திருக்குறள்-466.

"செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்"

## விநாயக புராணம்.

### தூமகேது திருவவதாரப் படலம்-35.

"ஆத்தனரு ளான்மொழிந்த வாரணமா கமமென்னும்
மூத்தபனு வலின்விதித்த முறைபுரியி னவர்க்கென்றும்
ஏத்தரும்புன் ணியம்புகழென் றிவையுளவாம் விலக்கியன
நீத்தல்புரி யாதியற்றி னெடும்பழிபா வமுந்தொடுமே"

---

இனி, மேற்காட்டிய (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்), விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்தமண்டபமின்றிக் கெர்ப்பக்கிரகத்தை மட்டுங் கட்டுவதாகப் போட்டிருக்கிற பிளானையும், அதின்படிசெய்யிற் ச்ரேஷமென்னும் நூல்விதியை யடியேனெடுத்துக் கூறியதற்கங்கீகரியாமல் மறுத்தமையையும் உய்த்துணரும்போது பலவகையானும் சாஸ்திரவிரோதமாகும், எவ்வாறென்னில்? இம்மைக்கட்புகழும் மறுமைக்கண் அறமுந்

தராதகாரியத்தையும், நன்கு மதிப்பை யொழிக்குங் காரியத்தையும், நாம் செய்த தெத்தன்மைத் தென்று செய்தபின்பு தாமே தனியிருந்து இரங்கத்தக்க காரியத்தையும், செய்யலாகாது; சாஸ்த்திரங்களிற் செய்யலாகாதெனக் கடிந்தகாரியம் நிறைவேருது; எடுத்தோரின் அதிமுயற்சியாலும் வல்லபத்தாலும் ஒருவாற்ருல் நிறைவேறு மாயினும், அது, பின்பு துன்பத்தைத் தரும். தவிரவும், ஒரு காரியத்தைச் செய்யப்புகுந்தவர், நன்மை தராத பாணிப்பா யெடுத்துவிட்டால் அஃதறிந்த பின்னும் நானெடுத்த காரியத்தை யிடைமுறியவிடுவேனு? எடுத்ததை முடித்தே விடுவனென்று பிடிவாதங்கொண்டு முடிப்பதும் உஜிதமில்லை; இவற்றிற்குப் பிரமாணம்:—

## திருக்குறள்—652-653-655-658.

"என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை"

"ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
ஆஅது மென்னு மவர்"

"எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று"

"கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்"

## விநாயக புராணம்.

### அரசியற்கைப் படலம்-54.

"நன்றி பயவா வினையினையு நண்ணு மதத்தான் முடியற்க [னே"
வென்றி விளங்கப் புகழ்விளங்க விழுப்பம் விளங்க வேண்டிடி

---

இனி, மேற்காட்டிய (சுப-அவர்கள்) அர்த்தமண்டப மின்றிப் போட்டபிளான், உலகத்திற் பலரும் கைக்கொண்டாண்டு வந்த தல்லாததாகவிருக்கின்றது; சுபாசுப காரியங்களுள் யாதா

னுமொன்றைச் செய்யப்புகுவோர், இதற்குமுன் உலகத்தாரிய ல்பா யனுசரித்து வந்திருக்கிற வரன்முறைப்படிக்கே செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யாவிடின் அதனை, உலகம் அங்கீ கரிக்கமாட்டாது. இதற்குப் பிரமாணம்:—

### திருக்காளத்திப் புராணம்.

பொதுவொழுக்கங்கூறிய அத்தியாயம்-21.

"நலம தேனு நலமில தேனுமிவ்
வுலகி னிற்பலர் செய்வ துளுற்றுக"

### விநாயக புராணம்.

அரசியற்கைப் படலம்-50.

"எவ்வகை யுலகத் துள்ளா ரியல்புட னொழுகு கின்றார்
அவ்வகை யொழுக்கி னின்றே யழிவன வருமுன் காத்துத்
தவ்வெனும் பழிபா வங்க டபுதியெய் தாமை யஞ்சிச்
செவ்விய நெறியி னுளுஞ் செலுத்துக பொறிக ளைந்தும்"

### திருக்குறள்—426-470-637.

"எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு"

"எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு"

"செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்"

### ஆத்திசூடி.

"இயல்பலா தனசெயேல்"

---

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

இனி, நம்முடைய தொண்ணூற்றூறார் வட்டகை நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள், பெரும்பாலும் வீடுகட்டும் வழக் கத்தில் தொன்றுதொட்டு உள்வீடெனவும், வெளிவீடெனவும்

வரிசையி லிரண்டிரண்டாகக் கெர்ப்பக்கிரகார்த்தமண்டபம் போல் ஒன்றோடொன்று பொருந்த வைத்து வளவுகட்டிவருவதனை நாமெல்லாரும் நேரிற் பார்த்து வருகின்றோம், அவ்வாறு கட்டப் பெறுதல், சுவான்தாரின் அனுமதியின்றி ஏனையோரெளிதிலும் விரைவிலும் புகாமைப்பொருட்டும், சுபகாரியங் கணடத்தும்போது தீபங் காற்றினலலையாமைப்பொருட்டும், பெங்தோபஸ்த்தின் பொருட்டும் ஏற்பட்டதென யுக்தியாலறிவதோடு, நவீனமாய்த் தற்காலத்திற் சிறுபான்மை ஒற்றைவீடு வைத்துக்கட்டினேர் தங்கட் கம்மூன்று ளேற்ற தொன்று நேர்ந்தபோதுதவறுதலைக் கூறுமனுபவத்தாலுமறியலாம்; விசுவநாதர் விசாலாக்ஷிக்கர்த்தமண்டப மின்றிப் பிளான்போட்ட இந்தத் (தி-ராம-தி-சுப-அவர்களே) தேவகோட்டையில் (வெ-ஆ-வெ-குடும்பத்தார்களுடன்) கூட்டுச்சேர்ந்து அவர்கட்குப் பாதியுங் தங்கட்குப் பாதியுமாக இரட்டை வீடு பத்துவைத்து ஒரு வளவுகட்டிக் குடியிருங் தனுபவித்து வருகின்றார்கள்; அடிமைகளாகிய நமக்கவ்வாறு செய்துகொள்ளுகின்ற நாம், ஆண்டானுக்கிவ்வாறு செய்யலாமா வென்பதையும், ஷை (சுப) அவர்கள் யோசித்தார்களில்லை; ஆயினும், அர்த்தமண்டபம் வைத்தேதான் செய்ய வேண்டுமென்பதானது, நமது கனம்பொருந்திய (தி-வகையார்களெல்லாருங்) கூடிச் சமுகத்திற் பிளானைப்பயிலில் வைத்து யோசித்துத் தீர்ப்புச் செய்யவேண்டிய விஷயம்.

அது நிற்க, (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரிடம்) அர்த்தமண்டப மின்றிப் போட்டிருக்கிற அசாஸ்த்திரிகப் பிளான்படி செய்தால் அதுவிஷயத்தில், சாஸ்த்திரப்ரக்ஞையுள்ளவர்கள் பின்பு கேட்டபோதெல்லாம் தாங்கள் வகை சொல்ல வேண்டியதாகத்தான் நேருமென்றும், (பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியார்) வந்தவுடன் அவர் கையெழுத்தையு மிடுவித்து நான் என்னிடமிருக்கிற விசுவநாதர் விசாலாக்ஷியின் திருப்

பணிப்பணத்துக்கு உண்டியல் கொடுத்துவிடுகிறே னென்றும் சொல்லிவிட்டு வந்ததாக மேலே கூறியிருக்கின்றே னல்லவா? அதன்மேற் சில நாட்சென்றபின்பு (ஷெ ராமநாதஞ்செட்டியார்) வெள்ளிக்குறிச்சியிலிருந்து தேவகோட்டைக்கு வந்துவிட்டார்; வந்த பிறகு அதனைத் தெரிந்துகொண்டு துர்மதிஞு கார்த்திகை மீ 1௨ புதன்கிழமையன்றைக்கு (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியா) ராலனுப்பப்பட்டு (வெ-ஆ-அரு-அருணுசலஞ் செட்டியார்) என்னிடம்வந்து உண்டியல் கேட்டார்கள், உடனே (ஷெ-பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியாரை) யழைப்பித்து அவருக்கு மேற்கண்ட தகவல்களையெல்லாஞ் சொன்னேன், அவரும் கேட்டு நீங்கள் உங்களிடமிருக்கிற பணத்துக்கு உண்டியலைக் கொடுங்கள் அதில் உங்களுடன்ஃ நானுங் கையெழுத்திடுகிறே னென்ருர்; அப்பால் எங்களிருவர்களது முன்னோர்களால் விசுவநாதர் விசாலாக்ஷியின் றிருப்பணி பாற்கட்டளைக்குப் பூர்வத்தில் மூலதனமாக எடுத்து வட்டிவிர்த்தியம்ஸத்துக்கு வைக்கப்பட்டதில் என்மாறலிலிருந்துவந்த பணத்திற்கு மட்டும் கணக்குப் பார்த்து வட்டியுள்படக் கலியுகாதி (5022)-ல் நிகழ்ந்த துர்மதிஞு கார்த்திகைமீ 1௨க்குக் கூடியது விசுவநாதர் விசாலாக்ஷி திருப்பணிப் பேரால் ரூ. (16109-4-3) ரூபாய் பதினறுயிரத்தி நூத்தியொன்பதே காலுங் கால்வீசத்துக்கும், ஷை பாற்கட்டளைப் பேரால் ரூ. (1730-8-0) ரூபாய் ஆயிரத்தி யெழுநூற்று முப்பதரைக்கும், (வெ-ஆ-பழ-ராமஞ் செட்டியார்-1) (பழ-ப-ராம-சுப்பிரமணியஞ் செட்டியார்-2) (தி-சு-பழ-ப-பழனியப்ப செட்டியார்-3) (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்-4) (பழ-அ-வெங்கடாசலஞ் செட்டியார்-5) இந்த ஐந்துபேர்களார்டருக்குப் பணங் கொடுக்கும்படி மதுராஸ் உண்டியலிரண்டெழுதி நான் கையெழுத்திட்டு மேற்படி (பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியாரின்) கையெழுத்தையு மிடுவித்து அவ்விரண்டுண்டியலையும் கேள்க்க வந்த (வெ-ஆ-அரு-அருணுசலஞ் செட்டியாரிடம்) கொடுத்த

னுப்பினேன்; ஷ உண்டியல் இரண்டினது நகல்களை இதனடியில் தனித்தனி வரைந்திருத்தலால் அவைகளையுந் தயவுசெய்து பார்வையிடக் கோருகின்றேன்;

---

வே - ஆ - தி - சிதம்பரஞ் செட்டியார்,
விசுவநாதர் விசாலாக்ஷி கோயிற்றிருப்பணிக்காக
அவர்மாறலிலிருந்துவந்த பணத்திற்குக் கொடுத்த

# திருப்பணிஉண்டியல்நகல்.

உ

துர்மதிஞு கார்த்திகைமீ 1உ தேவகோட்டை - தி - கைலாச விநாயகர் கோயிலிலிருக்கிற (விசுவநாதசுவாமி விசாலாக்ஷியம்பா கோவில் வரவு) மேற்படியூர் (வெ-ஆ-தி-சிதம்பரஞ் செட்டி-1) (பழ-சு-நா-ராமநாதஞ் செட்டி-2) இந்த இருவர்கள் பத்து மேற்படி கோவில்த் திருப்பணிவகையறுவுக்காகவும் கட்டளை வகையறுவுக்காகவும் நாங்கள் பொதுவாயெடுத்து வைத்திருந்த பணத்தில் ராக்ஷஸஞு ஆவணிமீ 14உ யில் (தி-வகைப்பொதுவாரும் நாங்களும்) செய்துகொண்ட யாதாஸ்த்துப் படிக்கு எங்களில் (வெ-ஆ-தி) வசமிருந்த கணக்கைப் பார்த்துக் கொடுக்கவேண்டியது ரூ.(௰௯௲௩௱௰௪௯௨௨)-த்தில் பாற்கட்டளைக்காக நாளது தேதியில் கொடுத்த உண்டியல் க-க்கு ரூ. (௲௩௱௰௨) நீக்கித் திருப்பணிவகையறுவுக்காகக் கொடுத்தது ரூ. (௰௬௲௩௱௪௯௨) இந்த ரூபாய் பதினாறாயிரத்தி நூத்தியொன்பதே காலுங் கால் வீசத்துக்கும் நாளது தேதி முதல் மதராஸ் நடப்புவட்டியுடன் தேவகோட்டை (வெ-ஆ-பழ-ராமஞ் செட்டியாரவர்கள்-1) (பழ-ப-ராம-சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள்-2) (தி-சு-பழ-ப-பழனியப்ப செட்டியர்ரவர்கள்-3) (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள்-4) (பழ-

அ-வேங்கடாசலஞ் செட்டியாரவர்கள்-5) இந்த ஐந்து பேர்களாடருக்கு மதுராசில் - அரு - அரு - சோம - கடை ஏஜண்டு (மாயாண்டி செட்டியார்) பணங்கொடுத்து இதைச்செல்லுடன் பெற்றுக்கொண்டு எங்களில் - (வெ-ஆ-தி-) கணக்கில்ப் பத்தெழுதிக்கொள்ள வேண்டியது.

| | | |
|---|---|---|
| வெ - | ஆ - தி | - சிதம்பரஞ் செட்டி. |
| பள - | சு - நா | - ராமநாதஞ் செட்டி. |

திருப்பணி உண்டியல் முற்றிற்று.

---

வெ - ஆ - தி - சிதம்பரஞ் செட்டியார்,
விசுவநாதர் விசாலாக்ஷி கோயிற் பாற்கட்டளைக்காக
அவர்மாறலி லிருந்துவந்த பணத்திற்குக் கொடுத்த

## பாற்கட்டளை,

# உண்டியல் நகல்.

௨

துர்மதிஹு கார்த்திகைமீ 1௳ தேவகோட்டை - தி - ஸ்கலாச விநாயகர் கோயிலில் இருக்கிற (விசுவநாதசுவாமி விசாலாக்ஷியம்பாகோவில் வரவு) மேற்படியூர் (வெ-ஆ-தி-சிதம்பரஞ் செட்டி-1). (பழ-சு-நா-ராமநாதஞ் செட்டி-2) இந்த இருவர்கள் பத்து மேற்படிகோவில்த்திருப்பணி வகையறுவுக்காகவும் கட்டளை வகையறுவுக்காகவும் நாங்கள் பொதுவாய் எடுத்து வைத்திருந்த பணத்தில் ராக்ஷஸஹு ஆவணிமீ 14௳யில் (தி-வகைப் பொதுவாரும் நாங்களும்) செய்து கொண்ட யாதாஸ்த்துப் படிக்கு எங்களில் (வெ-ஆ-தி-) வசமிருந்த கணக்கைப்பார்த்

துக் கொடுக்க வேண்டியது ரூ. (௰ளதூஅாஙூ௰கூஸ௨ே)த்தில் திருப்பணி வகையருவுக்காக நாளது தேதியில்க்கொடுத்த உண்டியல் க-க்கு ரூ. (௰சூதூாகூவ௨ே) நீக்கிப் பாற்க்கட்டளைக்காகக் கொடுத்தது ரூ. (தூளாஙூ௰இ) இந்த ரூபாய் ஆயிரத்தி யெழுநூத்தி முப்பதரைக்கும் நாளது தேதிமுதல் மதுராஸ் நடப்பு வட்டியுடன் தேவகோட்டை (வெ-ஆ-பழ-ராமஞ் செட்டியாரவர்கள்-1) (பழ-ப-ராம-சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள்-2) (தி-சு-பழ-ப-பழனியப்ப செட்டியாரவர்கள்-3) தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள்-4) (பழ-அ-வெங்கடாசலஞ் செட்டியாரவர்கள்-5) இந்த ஐந்து பேர்களாடருக்கு மதுராசில்-அரு-அரு-சோம-கடை ஏஜண்டு மாயாண்டி செட்டியார் பணங் கொடுத்து இதைச் செல்லுடன் பெற்றுக்கொண்டு எங்களில் (வெ-ஆ-தி) கணக்கில்ப்பத் தெழுதிக் கொள்ளவேண்டியது.

| | | |
|---|---|---|
| வெ - | ஆ - தி | - சிதம்பரஞ் செட்டி. |
| பள - | சு - நா | - ராமநாதஞ் செட்டி. |

பாற்கட்டளை உண்டியல் முற்றிற்று.

---

# கனம்பொருந்திய, தி-வகையார்களே!

தி-வகைக் கைலாச விநாயகர் கோயிற் திருப்பணிக்கு அவ்வகையிலுள்ள ஒவ்வொருவருந் தாந்தாம் தனித்தனி கொடுத்த உண்டியல்க ளெல்லாவற்றிலும் மூன்று பேர்களதாடர்ப் போட்டுக் கொடுத்திருக்க, நீ கொடுத்த மேற்கண்ட இரண்டுண்டியல் களிலும் (ஐந்து பேர்களதாடர்ப் போட்ட காரணமென்ன?) வென்று கேட்பீர்களாயின், அந்த விபரத்தைக் கூறுகின்றேன்;

அடியேனும் - (பழ - சு - நா - ராமநாதஞ் செட்டியாரும்) சேர்ந்து விசுவநாதர் விசாலாக்ஷி கோவிலை, அதைச்சேர்ந்த படித் தரப் பண்டுப்பனைத் துண்டியனுடனும் திருவாபரணம் பாத்திரம் வகையறாக்களுடனும் நமது (தி-வகைப்பொதுவி) லொப்புவித்த காலமாகிய ராக்ஷஸஹு ஆவணிமீ 14உ யில் எங்களிருவருக்கும் (தி-வகைப்பொதுவார்களுக்குமாகப்) பரஸ்பரம் ஒருயாதாஸ் துப் பிறந்திருக்கிறது; அதன் நகலை முந்திய உபயாலயச் சேர்க் கைச் சருக்கத்தில் வரைந்திருக்கின்றேன்; அந்த யாதாஸ்த்தின் 4-ஆவது பாராவில் [விசுவநாதர் விசாலாக்ஷி கோவில்த் திருப் பணி வகையறாவுக்காகவும் மேற்படி கோவிற்படித்தரங் கட்டளை வகையறாவுக்காகவும் மேற்படி சிதம்பரஞ் செட்டியார் ராமநா தஞ் செட்டியார் முன்னோர்களாற் சொந்தத்திலிருந்து எடுத்து வைத்திருவர்களிடமும் தற்காலமிருந்துவருகிற துகையிலிருந்து மேற்கண்டபடி படித்தரம்விசேஷக்கட்டளை வகையறாவுக்காகக் கொடுத்திருக்கிற ரூபாய் ஐயாயிரம் நீங்கலாகப் பாக்கியிருக்குந் துகைகளை மேற்படி (சிதம்பரஞ் செட்டியார், ராமநாதஞ் செட் டியார்) இவர்கள் கணக்கைப்பார்த்துத் தேறுகிற துகையை மேற்படி விசுவநாதர் விசாலாக்ஷியம்பாள் வகையறா ஆலயங் களைப் புதுப்பிவிக்க வேண்டியதற்காகவும் கட்டளைகளை நடத்தி வர வேண்டியதற்காகவும் பண்டாகவைத்திருந்து மேற்படி கை லாசவிநாயகர் கோவில்த்திருப்பணிவேலையை மேற்படி பொது வார்களெப்போது நடத்துகிறார்களோ ? அப்போது விசுவநாதர் விசாலாக்ஷி கோவிலுக்கு இரண்டுசென்னிதிகளாக வைத்துத் திருப் பணி நடத்துவதற்காகவும், கட்டளைகளை நடத்துவதற்காகவும், ஷை (சிதம்பரஞ் செட்டியார், ராமநாதஞ் செட்டியார்) இரண்டு பேர்களும் தங்களுடன் மேற்படி தி-வகையைச் சேர்ந்த (வெ-ஆ-வகை) (ராம-பள-வகை) (ராம-தி-வகை) இந்த மூன்று வகையிலும் ஷை இருவர்களுடைய யுக்தமாகத் தோன்றுகிற மூன்று மனுஷ்யாளையுஞ் சேர்த்துத்தஸ்தாவேசு எழுதிவைத்

துப் பணத்தையும் மேற்படி ஐந்துபேர்களுடைய ஆடரிலும் வைத்துத் திருப்பணியையும் கட்டளைகளையும் நடத்திவரவேண்டியது] என்றெழுதப்பட்டிருப்பதால், அதையனுசரிக்கும்போது, கைலாசவிநாயகராலயப்பணி மேற்பார்ப்போரை விஞல், விசுவநாதர் விசாலாக்ஷியாலயப் பணிமேற்பார்வைக் கென்று பிரதக்காய் (அடியேனும் பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியாரும்) (நமது-தி-வகைப்பிராஞ்சு மூன்றிலும்) எங்களுக்கு யுக்தமாகத் தோன்றுகிற மூன்றுபேர்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு அம்மூவர்களோடு நாங்களிருவருஞ்சேர்ந்து ஐவர்களாயிருந்து விநாயகர் பணிப்பார்வைகாறரோடுங்கூடி நடத்தவேண்டியது முறைமையாகும்; அந்தயாதாஸ்த்து முறைமையில், (ஐவரென்னுஞ் சங்கையை மட்டு மெடுத்துக்கொண்டு) மேற்கண்ட உண்டியல்களிரண்டும் ஐந்துபேர்களை ஆடர்ப்பேர்வழிகளாகப் போடப்பெற்றன; போடப்பட்ட ஐவரில் முந்திய மூவரும், விநாயகராலய டிரஸ்டித் தன்மையை வஹித்தலாலும் ஏனைச்சில காரணங்களாலும் எங்களிருவரால் தி-வகைப் பிராஞ்சு மூன்றிற்றேர்ந் தெடுக்கப்பட்டோராய்ப் போடப்பெற்றனர்; பிந்திய இருவரும், (அடியேனுக்கும் - பழ - சு - நா-ராமநாதஞ் செட்டியாருக்கும்) பிரதிநிதிகளாக இருந்து நடத்தட்டுமென்று மதித்து ஆடரிற் சேர்த்துப் போடப்பெற்றனர்; நமது (தி) வகையுள் எத்தனையோ? பேர்களிருக்க, (இந்த இருவரை மட்டும்) எங்களிருவரின் பிரதிநிதிகளாக ஏற்படுத்திய காரணமென்னவெனில்? விசுவநாதர் விசாலாக்ஷிக் கர்த்தமண்டப ஹீனப்பிளான் போட்டவர்களையே நாம் நமது பிரதிநிதிகளாகக் கோருவோமாயின், அவ்வுரிமை கருதியேனும் அக்குறையைப் பிடிவாதங்கொண்டு செய்யத்துணியாமல் நீதி செலுத்துவார்களெனக்கருதி (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரையும்,) ஆற்றலோடின்றி மறுக்கா விடினும் மாநுடர் தயவொன்றையே பொருளெனக் கொண்டொதுங்காமல் ஈசுவரவிஷயமென்று

தம்மாலியன்ற வரைக்கும் - ஷை (சுப - அவர்கட்கு) அர்த்த மண்டபங் குறைப்பது அநீதி யென்பதையும் பண்டையயர் தாஸ்த்திறுற் சந்நிதி வைக்கவேண்டியது முறை யென்பதையும் இன் சொல்லா லெடுத்துக் கூறுவரெனக் கருதி, (பழ-அ-வெங் கடாசலஞ் செட்டியாரையும்) பிரதிநிதிகளாக ஏற்படுத்தி உண் டியலாடரிற் சேர்த்துப் போட்டமையே காரணமென்றறிக;

மேற்கண்ட (பழ-அ-வெங்கடாசலஞ் செட்டியார்) அடி யேங்கள் கருதிப்போட்டபடியே ஈசுவரவிஷய மென்பதையும் உண்டியலிற் றம்மைப் பிரதிநிதியாக்கி யாடர்ப் போட்டமையை யும் பாராட்டி ஷை (தி-ராம-தி-சுப-அவர்களிடத்தில்,) விசுவ நாதர் விசாலாக்ஷிக்கு, பூஜாருகமான அர்த்தமண்டபம் அவசிய மிருக்கவேண்டு மென்றும் விசுவநாதருக்குக் கோபுரஸந்நிதி வைத்தால் அது பிள்ளையார்கோபுர அடிப்பரப்பின் ஒருபக்க வர்க்கவேலை மானத்தை மறைக்கும் பக்ஷத்தில் அதனைச் செய்யா விடினும், தெற்குமதிலில் அவ்விகாத மில்லாமையால் விசாலாக்ஷி க்கு மட்டுமாவது கோபுரஸந்நிதியை வைத்துச் செய்யுங்க ளென்றும் தாம் சிபார்சு சொன்னதாகவும், அதற்கும் ஷை (சுப-அவர்கள்) ஒத்துக்கொள்ள வில்லையென்றும் சொல்லி விட்டார் கள்; மேற்கண்ட (தி-ராம-தி-சுப-அவர்கள்) தம்மை உண்டிய லாடரிற் பிரதிநிதியாக்கிப் போட்டிருத்தலைப் பாராட்டாவிடி னும், (பழ-அ-வெங்கடாசலஞ் செட்டியாருடைய) இன்சொல் லைச் செவியேற்றுங்கூட, விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்தமண் டபம்வைத்தும் சந்நிதிவைத்தும் ஆலயங்கட்டுவதற் கிசைந் திலர்; இசையாமைக்குக் காரணத்தை அடியே னறிந்திலன்;

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

மேற்கண்டபடி விசுவநாதர் விசாலாக்ஷியின் திருப்பணி பாற்கட்டளை யுண்டியல் கொடுபட்ட டயத்தினின்றுஞ் சிலமா தங்கள் சென்றன, பின்புநடந்த விஷயத்தைக் கூறுகின்றேன்;

(வெ-ஆ-பழ-ராம-லெ-பழனியப்ப செட்டியாருடைய) கல்யாண வீட்டில் அதனிமித்தமாக கலியுகாதி (5023)-ல் நிகழ்ந்த துந்துபிஞு வைகாசிமீ 6உ வெள்ளிக்கிழமையன்றைக்கு நமது (தி-வகைப்பொதுவார்கள்) கூடியிருந்தபோது, (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்) அடியேனைப் பார்த்துக் கேட்டதாவது, நீ கொடுத்த உண்டியல்களுக்கு ஏனிதுவரையிற் பணங் கொடுக்கச் செய்யவில்லை? கொடுப்பதற்கென்ன ஆக்ஷேபனை? யென்றுகேட்டார்கள்; அதற்கு அடியேன் பதிற் சொன்னதாவது, உண்டியலுக்குப் பணங்கொடுக்க யாதொரு ஆக்ஷேபனையுமில்லை; நாளையே கொடுப்பிக்கிறேன்; இந்த இடத்தில் நமது வகையார்களெல்லாங் கூடியிருக்கிற இது சமயத்தில் தாங்கள் போட்டிருக்கிற பிளானைப்பற்றி மட்டும் ஒருவிஷயந் தெரிவித்துக்கொள்ள வேண்டியதிருக்கிறதென்று சொன்னேன், அதற்கு (சுப அவர்கள்) அந்த விஷயத்தைச் சொல்லு நான் பதிற் சொல்லுகிறேனென்றார்கள்;

அவ்வாறு சொல்லென்ற (தி-ராம-தி-சுப) அவர்களைப் பார்த்து அடியேன் சொன்னதாவது என்னவென்றால்? தாங்கள் போட்டிருக்கிற பிளானில் விசுவநாதர் விசாலாக்ஷிக்குப் பிரத்யக்ஷத்திற் புராதநாலயத்தில் ஏற்கனவேயமைந்து தற்காலம்வரையினும் ஆட்சியிலிருந்து வருகிறதான அர்த்தமண்டபத்தை அடியோடேமாற்றிக் குறைத்துவிட்டமையால், அது, பூர்வாங்கஹீந தோஷமாய்க் கர்த்திரு நாசத்தையும், நூதனாலயத்துக்கே இன்றியமையாததான அர்த்தமண்டப ஆட்சி இனிப்பின்னே (பௌஷ்யத்தில்) வருங்காலத்தில் இல்லாமற் போதலால், அது, போக சக்திஸ்தாநஹீநதோஷமாய்க் களத்திர நாசத்தையும் நிச்சயமாய்த் தரத்தக்கதாக விருக்கின்றது; இந்தப் பிளான்படி செய்தால், இது, ஆகமவிரோதமாகும்; ஆதலால், ஆதிசைவ சிவாசாரியார்களைக் கேட்டு இந்தப்பிளான்படி சுவாமி அம்பாளுக்கு அர்த்த மண்டபமின்றிக் கோயில் கட்டலாமென்கிற விதி

யிருந்தாற் செய்யுங்களென்று சொன்னேன்; அதற்கு, (சுப அவர்கள்) பதிற் சொன்னதாவது "நான் போட்ட பிளானை இனி மாற்றப்போகிறதில்லை; அதின்படிதான் செய்வோ மென்று சொன்னார்கள்; இந்தவிதமாக அவர்கள்சொன்ன சொல்லானது ஸ்கந்தபுராணம் உமைவரு படலம்-37-ல், "ஏற்றின் மேவுநின் னிறைவ னுக்கியான்—ஆற்றும் வேள்வியுள் ளவியு மீகலன்—சாற்றுகின்றவே தத்தின் வாய்மையும்—மாற்றுகின்றனன் மற்றென் வன்மையால்" எனவும், ஷை புராணம் அநந்தன் சாப நீங்குபடலம்-33-ல் "முனிவகேள் பலவ் மீண்டு மொழிவதிற் பயனென் வெள்ளிப்—பனிவரை யுறையு நுங்கோன் பகவனே யெனினு மாக—அனையவன் றனக்கு வேள்வி யவிதனை யுதவேனீயும்—இனியவை மொழியல் போதி யென்செயன் முடிப்பனென்றான்" எனவும் வரும் தக்ஷவாஸகச் செய்யுட்களின் குறிப்பை, அங்கிருந்து கேட்டோரனைவர்க்கு முணர்த்தத் தக்கதேயாம்;

**நா**ன் போட்ட பிளானை இனிமாற்றப் போகிறதில்லையென்று சொன்னமட்டோடு விடாமல் "ஒரு டிம்மிப் பேப்பரெடுத்து இங்கேயிருக்கிற நம்மிட பங்காளிகளெல்லாரிடமுங் கையெழுத்து வாங்கிப்பார், வாங்கினையானால், அர்த்தமண்டப மின்றி நான்போட்ட பிளான்படி செய்யச் சம்மதிப்பதும், அர்த்தமண்டபம் வைத்துத்தான் செய்யவேண்டுமென்கிற உன்சொல்லுக்குச் சம்மதிப்பதும் தெரியும்; நீ சொல்வதற் கிங்குள்ளார்களில் ஒருவரும் உடன்படார்களென்றுஞ் சொன்னார்கள்; அதனைக் கேட்டுக்கொண்டு அங்குள்ளா ரனைவரும் வாய்திறந்தொன்றுமுரையாதிருந்தார்கள்; எல்லாரும் அவ்வாறிருந்தமையையும், டிம்மிப்பேப்ப ரெடுத்துக் கையெழுத்து வாங்கிப்பார் நீ சொல்வதற்கிங்குள்ளார்களி லொருவரேனு முடன்படார்களென்ற (சுப-அவர்களின்) திண்ணிய சொல்லையும் பொருத்திப் பார்க்கும்போது, (தி-ராம-தி-சுப-அவர்களாகிய ஒருவரே) போதித்

துப் பலரையுமுடன்படுத்தி யிருக்கின்றார்களென அடியேன் அநுமானித்தறிந்து கொண்டேன்.

ஒருவர் போதித்துப் பலரையுடன்படுத்துதல் (1) பலர் போதித்து ஒருவரையுடன்படுத்துதல் (2) ஒருவர்போதித்து மற்றும் ஒருவரையுடன்படுத்துதல் (3) பலர் போதித்து மற்றுப் பலரையுடன்படுத்துதல் (4) இந்த நான்கு தினிசும் புராதன புராண சரித்திரங்களி லிருத்தலால், அவற்றுள், இஃதொரு தினி சாகுமேயன்றிப் புதிதல்ல; இந்த நான்கு தினிசுக்கும் சரித்திரச் சுருக்கத்தோடு பிரமாணம் கீழ்க்காட்டப்படும், அவைகளைத் தயவுசெய்து பார்வையிடக் கோருகின்றேன்.

ஒருவர் பலரையுடன்படுத்தினமையை, முன்னொருகாலத்தில் விஷ்ணுமூர்த்தியானவர் லோக ஸம்ரக்ஷணார்த்தம் பவுத்தாவதாரமெடுத்து திரிபுரத்துட் சென்று புத்தமதமே பெரிதெனப் போதித்துச் சைவமதவழி யொழுகிவந்த அந்தத் திரிபுரவாஸிகளனைவரையும் பவுத்தமதவழி யொழுகச் செய்த சரித்திரத்தாலும், மற்றொருகாலத்திற் காசிப்பதியில் வேதவிதி வழி யொழுகிநின்ற புருஷர்களெல்லாரையும் விஷ்ணுமூர்த்தி பவுத்தவுருவங்கொண்டு சென்று போதித்தும் ஸ்த்ரீகளெல்லாரையும் இலக்குமிதேவி பவுத்தமதத்தவமா துருவங்கொண்டு சென்று போதித்தும் வேதநிஷேத வழிப்புகுத்தினர்களென்ற சரித்திரத்தாலும் அறியலாம்; இதற்குப்பிரமாணம் :—

## உபதேசகாண்டம்.

திரிபுர விசயச் சருக்கம்-137-189-190.

"மாளா வசுரர் சிவபூசை மயங்க மயக்கு மாறெண்ணி
மூளாச் சமண முனியாகி யதற்கு வேண்டு மொழிமுற்றித்
தாளார் கமலத் தவற்குவமை சான்ற தவத்து நாரதனைக்
கோளார் சீட னெனவருத்திக் கொண்டான் கருடக்கொடி
[யோனே"

“ நீறழித் தொழிந்தனர் நிருத்த னின்னருள்
ஊறுமஞ் சக்கரத் துண்மை சோர்ந்தனர்
மாறொடு முருத்திர மணியு நீத்தனர்
ஆறணிந் தவனருச் சனையு மற்றனர் ”

“ இற்படும் வாழ்க்கையர் யாருந் தம்முடைக்
கற்பற நீத்தனர் கலவிப் பூசலின்
முற்படு சிந்தைய ராகி முன்னினார்
பற்பலர்க் களித்தன ரதர பானமே ”

## கூர்ம புராணம்.

### திரிபுரதகனமுரைத்த அத்தியாயம்-26-28.

“ சாக்கிய ருருவின் மாய னுங்கவர் புரத்திற் சார்ந்து
கோக்களிற் றுரிவை போர்த்த கொன்றைவே ணியன்மே லன்பு
நீக்கிய வவுணர் தம்மை நிகழ்த்துபுன் சமயந் தன்னில்
ஆக்கிநல் லிலிங்க பூசை யறிவொடு மகற்றி னானே ”

“ உலகம் பொதிந்த செங்கனிவா யுரவோன் மாயைச் சிமிழ்ப்பெய்தி—இலகு மதிதாழ் செஞ்சடையெம் மிறைவன் பாதமேத்தாமல்—அலகி லவுணர் கொலைகளவு கள்ளுண் டயர்த லயன் மனையாள்—கலவி நயத்தன் மனங்கொண்டு நெஞ்சமயங் கிக் களிப்புற்றார் ”

## காஞ்சிப் புராணம்.

### கயிலாயப் படலம்-14-15.

“ மீயுயர் புரமூன்றின் மேவுந ரவர்செய்யும்
மாயையின் மருளுற்று மற்றவர் மாணுக்க
ராயின ரவர்கூறுஞ் சாத்திர மதுநம்பித்
தீயதோர் வழியொழுகிச் சிவநெறி தனைவிண்டார் ”

“ தாழ்நெறி தலைநின்று சாதனந் திருநீறு
வாழ்வுறுஞ் சிவதரும மறைநெறி கைவிட்டார்
ஊழ்வலி யெவர்வெல்வா ருங்குவர் மனைவியரும்
யாழ்முனி மொழிகேட்டுக் கற்பினை யிழந்தார்கள் ”

## திருக்கூவப் புராணம்.

### திரிபுரதகனச் சருக்கம்-54-56.

“மறமொன்று கின்ற வாணங்க டம்மின் வருமம் புயக் கணிறைவன்—திறமொன்று புத்த னருகன் றயங்கு சின னென்ன வங்கணடையா—அறமென்று வஞ்ச மதிநூன் மருட்டி யறைகின்ற காலையவுணர்—நிறமொன்று பூதி மணியோ டிலிங்க நிலைவிட் டகன்றனரரோ”

“புரமொன்று தீய மடமாத ராரு முனம்வந்து புக்க முனி வன்—விரகங்க லந்து மிகுதிட்ப நெஞ்சி னிகழும் படிக்கு வின யன்—தருகின்ற சொல்லி மயல்செய்ய வும்பர் தமபுண்ணியத்தின் வலியின்—திரமொன்று கற்பு நிலைபோ யகன்று தெறுகாம முற்று மெலிய”

## திருவதிகைப் புராணம்.

### திருமால் பௌத்தாவதாரப் படலம்-20-21-25.

“வந்து சாரு மரக்கர் வழிப்படி
புந்தி வேண்டும் பொருளை யளித்துமே
தந்த சாத்திரந் தன்னை யவர்க்குமே
சந்த மாகவு மோதினர் சாக்கியர்”

“பின்னர் வேதம் பிழையெனச் சொல்லியே
கன்னி சாத்திரங் கற்பித மென்றுமே
உன்னு புத்தரி னாலே யுயர்வென
மன்னிச் சொற்றனன் மாயையில் வல்லவன்”

“இன்ன வாறே யிசைவுறச் செய்தனர்”

## விநாயக புராணம்.

### உடுண்டி விநாயகர் திருவவதாரப்படலம்-152-153-154-155.

“கள்ளத் தலைவர்க் கருளாத கணேசர் புரிந்த விளைவனைத் தும்—உள்ளத் துணர்ந்து விசுவேச ருவண முயர்த்தோன் றனை விடுத்தார்—வள்ளத் தனத்துத் திருமாது மருங்கு கவுந்தியாய் நடப்பப்—பள்ளக் கடலிற் கண்படுத்தோன் பவுத்த னாகி நக ரடுத்தான்”

“புத்தன் புகுந்தா டவர்க்குரைத்தான் பொருந்திவாழு நம் போல—வைத்த பசுவைத் தகரினத்தை வதைத்துப் புரியும் வேள்வியினால்—மெத்து நரக மேயன்றி வேறு பயனின்றெனவிவ்வா—றொத்த கரும மனைத்தினுக்கு முளது போலப் பிழை நாட்டி”

"பிறைசேர் நுதன்மங் கையர்பாங்கர்ப் பேணுங் கவுந்தி யடுத்துரைப்பாள்—மறையோன் மைந்தர் காசிபரே மரீசி தக்கன் முதற்பலரே—யிறைசேர் தக்கன் மகளிர்களை யெழிற்காசிபனு தியர்மணந்து—முறைசே ரமர ராதியரை முகிழ்த்துந் பெரிய ராயிருந்தார்"

"நீவி ரெவனே வேறுமுறை நியமித் தின்ப நுகர்கின்றீர்—ஆயின் முறைவேண் டாமெனவே யனந்தம் வழுக்க ளெடுத்துரைத்தாள்—மேய விருவ ருரையானு விழும நெறியிற் பிறழ்ந்தனர்கள்—ஆய நகருள் ளார்நாள்கள் பதினு றவ்வா றொழிந்தனவே"

---

திரிபுரத்தில் விஷ்ணுமூர்த்தியாகிய புத்தரது சூழ்ச்சிப் போதனையி லகப்படாமற் றப்பிப்பிழைத்த மூவருமுண்டு; அவர் சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்னும் பெயர்களையுடையவராவர்; அம்மூவர்களுஞ் சூழ்ச்சிப்போதனையி லகப்படாமையை, காஞ்சிப்புராணம் முப்புராரிகோட்டப்படலம்-2-ல் "முப்பு ரங்களின் மூவர் புத்தன் மொழித்தி றத்து மயங்கிடா—தப்ப ணிந்தவர் தாள்ப ணிந்தரு ளாற்றி னின்றனர்" எனவருதலாலும், அம்மூவர்களும் பெற்ற பெரும்பதவியை "மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரி லிருவர் நின்திருக்கோயிலின் வாய்தல்—காவலாளரென்றேவிய பின்னை யொருவ னீ கரி காடரங் காக—மானைநோக்கியோர் மாநட மகிழ மணிமுழா முழக்கவருள் செய்த—தேவதேவ நின்றிருவடி யடைந்தேன் செழும்பொ ழிற்றிருப்புன் கூருளானே" எனத் திருப்புன்கூர்த் தேவாரத்தில் வருதலாலும், "மூவார் புரங்க ளெரித்தவன்று மூவர்க் கருள் செய்தார்" எனத் திருவண்ணுமலைத்தேவாரத்தில் வருதலாலும், பெரிய புராணம் ஏயர்கோன்கலிக்காமநாயனர் 354-ல் "தானவர் புரங்கள் செற்று மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்" என வருதலாலும், திருநெல்வேலிப்புராணம் காமதகனச் சருக்கம் 83-ல் "எரிந்திடா மூவர் நிற்பப் புரமதுதகனஞ் செய்த புண்ணியப் புனிதமூர்த்தி" என வருதலாலு மறியலாம்.

---

இனி, பலர், ஒருங்குசேர்ந்து ஒருவரையுடன் படுத்தினமையை, முன்னொருகாலத்தில், பிரமேந்திராதி தேவர்களனைவருங்கூடித் திருக்கயிலாயமலையிற் சிவபெருமானது தவயோகத்தை மாற்றும்படி போதித்து மன்மதனை யுடன்படுத்தி யனுப்பிய சரித்திரத்தாலும், மற்றொருகாலத்தில் அவர்களே அப்பெருமானது சந்திசையோகத்தை மாற்றும்படி போதித்து அக்கினிதேவனை யுடன்படுத்தி யனுப்பிய சரித்திரத்தாலும் அறியலாம்; இதற்குப் பிரமாணம் :—

## கந்தபுராணம்.

காமதகனப் படலம்-80-107-110.

" முறுவலி னெயின்மூன் றட்ட முதல்வனைப் பொருதி யென்றே
நறைமல ரயனு மேனைத் தேவரு நாகர் கோனும்
உறுதுய ரகல விங்ஙனுய்த்தனர் வினையேற் கின்னே
இறுதிவந் தணுகிற் றுகு மிதற்குமோ ரைய முண்டோ"

"போவென்று வரவிட்ட தேவரெலாம் பொடியாகிப் போன வுன்னை—வாவென்று கடிதெழுப்ப மாட்டாரோ"

" மருகென்றே யவமதித்த தக்கனுர் வேள்வி செற்ற வள்ளறன்னைப்—பொருகென்றே தேவரெலாம் விடுத்தாரே யவராலே பொடிபட்டாயே"

## புள்ளிருக்குவேளூர்ப் புராணம்.

திருவவதாரச் சருக்கம்-11-12-13-14.

" எண்ணும் வானவ ரங்கியங் கடவுளை யேத்தி
நண்ணு மெம்மனோர் துயரம தொழிப்பது நாடி
யுண்ணி றைந்திடு காதலா னுனையுணர்ந் தனம்போய்க்
கண்ணு தற்பிரான் புணர்ச்சிசெய் யுறையுள்கா ணுதியால்"

" அன்ன வேலையில் வெள்கியே யம்பிகை பிரிவாள்
இன்ன வாறுசெய் யென்றன ரென்செய்வா னெழுந்து
நின்ம லன்வரும் வீரியம் விடுமுன நின்றான்
பொன்ன வாஞ்சுணங் கவிர்முலை புறம்பகன் றனளே"

"இதமு யிர்க்கெலா மளித்திடு மிறையவ னிணையில்
கதமி குத்திடக் கண்சிவந் தெரிகவின் வாடும்
வதன நோக்கியே வியோகநீ வரச்செயு மதனுற்
சிதநி றங்கொளும் வீரியந் தாங்கெனச் சீறி"

"அய்யன் கொண்டிடுங் கோபவெந் நெருப்பினுக் கஞ்சி
வெய்ய செந்தழ லவனெடுத் தனனுடல் வெதும்பி
உய்யு மாறில னாகிவா னவர்க்குரை செய்தே
துய்ய கங்கையில் விடுத்தனன் சூர்கிளை தடிய"

---

இனி, ஒருவர் மற்றுஒருவரை யுடன்படுத்தினமையை; முன்னொருகாலத்திற் கிருஷ்ணபகவான் ஏகான்மவாதமதப் பகவற்கீதையைப் போதித்துச் சுற்றத்தாரொடும் போர்செய்யேனெனமறுத்துக் கைசோர்ந்து நின்ற அருச்சுனனை அதற்குடன்படுத்திச் செய்வித்த சரித்திரத்தாலும், மற்றொருகாலத்திற் சுக்கிரபகவான் ஏகான்மவாத மதக்கருத்தைப் போதித்துச் சூரபத்மாவைத் தேவர்கட் கிடுக்கண்செய்வித்த சரித்திரத்தாலும், மற்றொரு காலத்தில் வியாழபகவான் சாருவாக மதநூலைப் போதித்து சிற்றின்பத்தில் வெறுப்புற்ற இந்திரனை உடன்படுத்தி, அதிற் புகுத்திய சரித்திரத்தாலு மறியலாம், இதற்குப் பிரமாணம்:—

பாரதம்.

அணிவகுப்புச் சருக்கம்-33-34. முதற்போர்ச் சருக்கம்-2-7-8.

"யானையொடு தேர்புரவி யாளிவை யநேகவித மெண்ணரிய தானை யுடனே—சேனைமுத லாய்முனையி னின்றருள் பிதாமகனு மற்றுள செழுங்கு ரவருந்—தானைநெடு வாரியிடை தேரிடை யருக்கனென நின்ற துரியோ தனனும்வான்—மீனைநிகர் கேளிரு மணிந்தநிலை கண்டுருகி விபுதபதி மைந்தன் மொழிவான்"

"நின்றமர் தொடங்கநினை கிற்பவர் பிதாமகனு நீள்கிளைஞருந் துணைவருங்—கொன்றிவரை வாகுவலி யிற்கவர்வ தித்தரணி கொள்பவனு மென்று ணவனே—யென்றுபல பேசியதி பாதகமெனக்கருதி யான்மலைவு.றேனி னியெனு—அன்றுவசு தேவன் மகனோடுரைசெய் தானமரி லவனுமிவ னோடு ரைசெய்வான்"

" மாயையென் றொருத்தி தன்பான் மனமெனு மைந்தன்றோன்
றாயநல் லறிவன் றன்னைத் தோற்றமின் றாக்கி வைத்தான் [றித்
தாயொடு தந்தை மக்க டாரமென் றிவர்பால் வைத்த
நேயமு மவன்ற னாலே நிகழ்ந்ததோர் நினைவு கண்டாய்"

" நின்னிடை மயக்கு மிந்த நேயமு மொழிக வென்று
தன்னிலை யவற்குக் காட்டித் தத்துவந் தெளிவித் தானே "

" ஆங்கவன் றெளிந்துதேறி யறம்பொரு ளின்ப முற்றிப்
பாங்கினு னின்னை யெய்தும் பயனெனக் குரைத்தா யென்று
பூங்கடிக் கமல நாறும் பொன்னடி போற்றி யான்செய் [ன்"
தீங்கெல்லாம் பொறுத்தி யென்று செருக்செயு மாறுபூண்டா

## திருவான்மியூர்ப் புராணம்.

### பார்த்தசாரதி பாப நாசப்படலம்-72--74--75-77-78-79.

" சவ்விய சாசி யோடு தானிர தத்தி லூர்ந்து
வெவ்விய துரிய னாதி வேந்தர்தம் படைமுன் போக
அவ்விய மில்வீ பற்சு வச்சுதன் வதன நோக்கி
ஒவ்விய வேத நீதே முரைத்திடற் கெண்ணி னனல் "

" சயமிக வுற்றிட் டாலுந் தரணியிற் கோடி காலம்
பயஞ்சிறி தின்றி யாளும் பயனதங் குண்டு கொல்லோ
பெயர்வறப் புரந்த மன்னர் பேசிடக் கேட்டே மில்லை
அயர்வற வாளா மாய்த்திங் காண்டிடேன் மன்னை யென்றான்"

" சாரதிப் பணியை யேற்ற சலசநா பனுஞ்சொல் வானல்
வீரரில் வீர னேநெய் விரிந்திடும் விவகா ரத்திற்
சாரமதென் னச் சாற்றுஞ் சதிருறு கருமம் யாவும்
பாரமார்த் திகத்தின் முற்றும் பயனிலை யுண்மை தேர்தி "

" பிரமமே நானும் மாவன் பிரமமே நீ மாவை
பிரமமே நின்கை வாளி பிரமமே யொன்ன லார்கள்
பிரமமே சமர தாகும் பிரமமே வெற்றி யாகும்
பிரமமே தோல்வி யாகும் பிரமமே யாவுங் காண்டி "

" ஏகம துற்ற வந்த வினையிலாப் பிரமந் தானே
போகம தாக நின்று பொலிந்திடு மதனை யூட்டும்
ஆகலி னேனே வாளா வடர்தரு தட்டிற் சாய்ந்து
மோகம துற்றாய் போரில் முனைகுவாய் முன்ன மென்றான் "

"இவ்வகை மருட்டக் கண்ண னிணையில்காண் டீபர் வாய்ந்தான்
தெவ்வர்க ளோடுந் தெவ்வைத் தின்னிய நிருபர் சூழ
அவ்வயி னீரொன் பானு ளாற்றினன் வயத்தைக் கொள்வான்
செவ்விய தருமற் கன்று திகழ்முடி சூட்டி னனல்"

## பகவற்கீதை.

சாங்கிய யோக அத்தியாயம்-3. சந்சேப அத்தியாயம்-63.

"ஒவ்வாதி தொழிந்தமர்மே லொருப்படுகென் றுருக்கரிய
செவ்வாயன் திருமொழியத் தேர்விசயன் செப்புவான்
மெய்வாயி னெடுமனத்தான் மிகப்போற்றற் குரியாரை
எவ்வாறு கொலைபுரிவே னென்றிவ்வா றியம்பினன்"

"பிணித்த பிறவிப் பெருந்தளையைப் பெயர்த்தென் பெரும்பே தைமைநோயைத்—தணித்தவரசே யெனக்குத்தான் றகுமேயாகத் தகாதாகத்—துணித்த திறல்வான் போரினையே தொடங்கு கென்று நீயிங்குப்—பணித்த பணியான் செய்வ னெனப் பார்த்த னவனு முடன்பட்டான்"

## கந்த புராணம்.

சுக்கிரனுபதேசப் படலம்-23-40-47. அண்டகோசப் படலம்-1.
இந்திரபுரிப் படலம்-7-10-51-52.

"தீது சான்மனத் தேசிகன் கூறுவான்"

"தருமஞ் செய்க தவறுள பாவமாங்
கருமஞ் செய்யற்க வென்பர் கருத்திலார்
இருமை தன்னையும் யாவர்செய் தாலுமேல்
வருவ தொன்றிலை மாயம்வித் தாகுமே"

"உற்றதோர் மேன்மை நாடி யுன்னைநீ பிரம மென்றே
தெற்றெனத் தெளிதி மற்றத் திசைமுகன் முதலோர்தம்மைப்
பற்றலை மேலோ ரென்று பணியலை யிமையோ ருங்கள்
செற்றல ரவரை வல்லே செறுமதி திருவுஞ் சிந்தி"

"தீயதோ ரினைய மாற்றஞ் செப்பலு மிதுநன் றெந்தை,
மேயின பணியி னிற்பன்"

"சுரகுரு விந்திரன்பதம் கின்றிட வீதொரு நிகழ்ச்சி கூறுவான்"

"ஓவ ருந்தவ மியற்றிய முனிவரி லுலகத்
தேவர் தங்களிற் பாதலத் தோர்களிற் சிறந்த
மூவ ரென்றுபேர் பெற்றிடு முதல்வர்க டம்மில்
ஏவர் மங்கையர் முலைத்தலைப் போகம் விட்டிருந்தோர்"

"முன்னுற மதன நூலின் முறையெலாந் தொகையிற் கூறி
யன்னதன் வகையுங் கூறி யகலமு மெடுத்துக் கூறிப்
பொன்னவ னிருத்த லோடும் புரந்தர னவற்றை யோர்ந்து
கன்னியைப் புணருங் காமக் கவலைமேற் கருத்தை வைத்தான்"

"கொற்றவெங் குலிச வள்ளல் குரவனை யிறைஞ்சி யெந்தை
சொற்றிடு பான்மை யெல்லாந் துணிவது வாகக் கொண்டேன்
மற்றொரு பொருளும் வெஃகேன் வரம்பிலா வின்பந் தன்னைப்
பெற்றனன் போலு மென்னப் பெருமகிழ் வெய்திப் போனான்"

---

விஷ்ட்ணு மூர்த்தியானவர், கிர்ஷ்ணவதாரத்தில் அருச்சுனனுக்குப் போதித்தது "பகவற்கீதை" எனவும், பவுத்தாவதாரத்திற் றிரிபுரத்தவர்க்குப் போதித்தது "பிடகம்" எனவும், காரணார்த்தம் பிறந்த நூல்களாக இன்றைக்கும் விளங்குகின்றன; இதற்குப் பிரமாணம்:—

## சிவஞான சித்தியார்.

### பரபக்கம், பாஞ்சராத்திரி மதமறுதலை-23.

"பார்த்தனு ரிரத மேறிப் படைதனைப் பார்த்துச் சார்பைக்
கூர்த்தவம் பாலே யெய்து கொன்றர சாளே னென்னத்
தேர்த்தனி லிருந்து மாயை செய்துமால் கொல்லச் செப்பும்
வார்த்தைநூ லாக்கிக் கொண்டாய் புரங்கொனூன் மதித்தி
டாயே"

---

இனி, பலரொருங்கு சேர்ந்து மற்றுப் பலரை யுடன்படுத்தினமையை, முன்னொருகாலத்தில் க்ஷமணமுனிவ ரெண்ணாயிரவரும், சைவமத வழி யொழுகி நின்ற சவுந்தரபாண்டிய னுள்ளிட்ட பாண்டிநாட்டாரனைவரையும் ஆருகதத்தைப் போ

தித்து அவ்வழிப் புகுத்திய சரித்திரத்தாலறியலாம்; இதற்கும் கூடிமணமுனிவர் எண்ணாயிரத் தொகையின ரென்பதற்கும் பிரமாணம்:—

## பெரிய புராணம்.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்-613-855.

"கன்னிநா டமணர் தம்மாற் கட்டழிந் திழிந்து தங்கண்
மன்னனு மவர்கண் மாயத் தழுந்தமா தேவி யாருங்
கொன்னவி லயில்வேல் வென்றிக் குலச்சிறை யாருங் கூடி
இந்நிலை புகலி வேந்தர்க் கியம்புமென் றிறைஞ்சி விட்டார்"

"எண்பெருங் குன்றத் தெண்ணா யிரவரு மேறி னார்கள்"

## திருவிளையாடற் புராணம்.

பாண்டியன் சுரந்தீர்த்த படலம்-42. சமணரைக்கழுவேற்றிய படலம்-37.

"வைதி கத்தனி யிளஞ்சிறு மடங்கலே றடைந்த
செய்தி யைத்தெரிந் தயன்மலை யிடங்களிற் றிரண்ட
கைத வத்தவெண் ணாயிரங் கயவரு மொருங்கே
எய்தி முத்தமிழ் விரகர்மேற் பழித்தழ லிழைத்தார்"

"ஆறி னோடி ரண்டடுத்த வாயிரஞ் சமணரும்"

---

# கனம்பொருந்திய, தி-வகையார்களே!

(தி-ராம-தி-சுப-அவர்கள்) ஒரு டிம்மிப் பேப்ப ரெடுத்துக் கையெழுத்து வாங்கிப்பார் அர்த்த மண்டபம் வைத்துக் கட்ட வேண்டு மென்கிற உன் சொல்லுக் கிங்குள்ளாரி லொருவரு முடன்படார்க ளென்ற ஸமயத்தில் எல்லாருங் கூடியிருந்த பப்பளிக்கைச் சபையினது மத்தியில் (அடியேன்) எழுந்து நின்று என் சிற்றறிவிற் கெட்டின மட்டில் உவமையோ டொரு விஷய மெடுத்துச் சொல்லி முறையிட்டேன்; அது யாதெனில்? ஒரு கிராமத்தில் சாமானியராகிய ஒருதறப் பிருவர், தங்கட்குரிய

நியாயப்பேற்றின் பொருட்டுக் கேசின்செக்ஷன்காட்டிச் செய்து கொண்ட பெட்டிஷனுக்காக மஹாராஜப் பிரதிநிதிகளாயுள்ள பெரிய அதிகாரிகள் செய்கைநடந்த ஜாகாவை யடுத்து உள்ளுள வைப் புரையறத் தெரிந்து தீர்ப்புச் சொல்ல விசாரிக்கு நிமித்த மாய் அந்தக் கிராமத்துக்கு முகாம் போட்டு வந்து ஒருபொது ஸ்தானத்தி லிறங்கி யிருந்து கச்சேரிபண்ணுவரே யானல், அந்தக் கிராம வாஸிக ளெல்லாரும் சாமானியரான இருவரது பெட்டிஷனுக்கு வந்தவரன்றோ இவரெனப் பெட்டிஷனர்களின் சிறுமையை நோக்கி அவரைப் பாராமுகஞ் செய்யாம லுன்முகர்களாய், முகாம்போட்டு வந்திறங்கின அந்த ராஜப் பிரதிநிதிகளின் பெருமைக்கேற்ப மாலை எலுமிச்சம்பழ சஹிதவந்தநாதியுபசாரஞ்செய்து "கொற்றவ னறித லுற்றிடத்துதவி" என்ற ஔவைப் பிராட்டி திருவாக்கை யனுசரித்து நன்கு மதிப்புப் பெறுதலை நாமெல்லாரும் இவ்வுலகத்திற் பிரத்யக்ஷத்திற் பார்க்கின்றோம்; அது போல, நமது-தி-வகைப்பொதுப் பிள்ளையார் கோவிலில் (வெ-ஆ-தி—பழ-சு-நா) என்ற சாமானியரிருவர் புருஷார்த்தப் பேற்றின் பொருட்டுச் செய்த மூர்த்தியாவாகனத்துக்காக, அகோசரசிவமே மூர்த்தி சாந்நித்ய முற்றிருத்தலால், (தி-வகைப்பொதுவார்களாகிய நீங்களனைவரும்) சாமானியரான எங்களிருவரது ஆவாகனத்துக்குச் சாந்நித்தியமானவ ரன்றோ விவரெனப் பிரதிஷ்டாபகர்களின் சிறுமையை நோக்கி அவரைப் பாராமுகஞ்செய்யாம லுன்முகர்களாய்ப் பிரதிஷ்டிதனான அந்தப் பரமசிவனது பெருமைக் கேற்பக் குறைக்காத்திருப்பணி யாதி கைங்கரியங்களைச் செய்து "சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகு" என்ற ஔவைப்பிராட்டி திருவாக்கை யனுசரித்துத் திருவருள்பெற வேண்டியது மிக்க ஆவசியகம்; ஆதலால் எல்லாரும் இது விஷயத்தை ஆலோசித்து நிதானியுங்களென்று முறையிட்டேன்; (அடியேனது) முறையீட்டைச் செவியேற்றும் அங்குள்ளாரனைவரும் தடைவிடைகளி லொன்றையு முரையாதிருந்தார்கள்.

மேற்கூறியபடி அதிகாரிகள் பெட்டிஷன்தாரின் ஜாகாவுக்குப் போய் ஆராய்ந்து நீதி செலுத்தக் கூடிய பிரமேயமும் ஏக தேசத்தில் நேருமென்பதனை, திருவிளையாடற் புராணம் பழியஞ்சின படலம்-17-ல் "தீமைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ" என வருவதனுளடங்கிய பாண்டிய ராஜ சரித்திரத்தா லறியலாம்;

இவ்விதம் அங்குள்ளா ரெல்லாரும் ஒன்றுமுரையாதிருந்த அச்சமயத்தில் "ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றாம்புலவர்—வார்த்தை பதினாயிரத் தொருவர்" எனத் தனிபாடற்றிரட்டில் வரும் ஔவைப்பிராட்டி திருவாக்கு அனைவர்க்கும் ஞாபகமாம்படி (மா) வகைப்பிராஞ்சினருள் ளொருவரான (வெ-ஆ-அரு-அருணாசலஞ் செட்டியார்) எழுந்து மேற்படி (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரைப்) பார்த்துக் கெம்பீரத்துடன் சொன்னதாவது, (நீங்கள் போட்ட பிளான்படி செய்கிற தென்பது முன்னமே தீர்மானித்த விஷயம், அதைப்பற்றி இப்போ தாக்ஷேபிப்பவர்கள் யாவர்? அப்பிளான்படிக்கே செய்யுங்க) ளென்று வாய்திறந்து சொன்னார்கள்; தன் ஆன்மலாபங்கருதுவோர், நிஷேத வழிக்கநுசரணையாகச் சொல்வரோ? சொல்லார்; ஸ்ரீ சுப்பிரமணியப்பெருமான் அகத்தியமுனிவருக்குத் திருவாய் மலர்ந்த கீழ்க்காட்டப்பட்ட சிவதருமோத்தர மென்னும் பார்லிமெண்டுத்தீர்ப்பைக் கண்டிருந்தால் மேற்படி (வெ-ஆ-அரு-அரு-அவர்களும்) நிச்சயமாகச் சொல்லி யிருக்கமாட்டார்கள்; அத்தீர்ப்பின் விவரம் என்னை யெனில்? சிவபுண்ணியங்களை வேதசிவாகம மார்க்கத்துக்கு விரோதமாக யாவரேனுஞ் செய்யப்புகின் அதனைக் கண்டோர், தடுக்கு மாற்றல் தமக்கிருந்துந் தடுக்காமல் மௌனமாய் நழுவுவராயிற் றுன்பமடைவ ரென்பதும், தடுத்துரைத்து விதிப்படி செய்விப்பராயில்; இன்பமடைவ ரென்பதுமேயாம், இதற்குப் பிரமாணம் :—

## சிவதருமோத்தரம்.

சிவஞானயோகவியல்-122.

"நிறுத்திடவல் லானமல னானெறியை யென்றும்
மறுத்திடவல் லானவல மார்க்கமய னற்றே
நிறுத்திலன் மறுத்திலனெனிற்கரிச னேசம்
அறுத்தவனை மாய்க்கைகரி சல்லவற மாமே"

## ஆன்றோர்வாக்கு.

"நிகாறுநற் சிவதரும சிவஞானத்தை
நிறுத்திடுவோ னினுமுயர்ந்தோ னிலத்தி னில்லை
பகர்பரம சிவயோகி யவனே யாகும்
பரிவினிறுத் திடுமாற்றல் படைத்து முய்தி
அகனுமய லானிறுத்தா தொழிந்தோன் யோகி
யாயினுமீ சுரப்பிரிய னல்ல னன்னுன்
புகருறுதீ நரகினிடை வீழ்ந்து புன்கண்
பொருந்திடுவ னெனமறைகள் புகலு மன்றே"

---

இனி, அன்மலாபங் கருதி அறத்தைப் பொருளாகக் கொண்டவர்கள், அதற்கு விலக்கான வழிக்குடன்படுமாறு தமது மனைவிமக்கள் தாயத்தார் சுற்றத்தார் வேண்டிக்கொண்டாராயினும், அவர்களது தாக்ஷண்யத்துக்காகத் தாமுடன் படாராதலோடுங்கூட, அது விஷயத்தில் மட்டு மவர்களை ஒரு பண்டமாகவுங் கொள்ளார்கள்; ஏனென்றால்? நிஷேதவழிக் குடன்படுந் தோஷம் தம்மைப் பிறவிகடோறும் சரீரநிழல்போல விடாது தொடர்தலாலும், மேற்கூறிய மனைவியாதிய அனைவரும் "இல்லிடை யிரண்டுநாளைச் சுற்றமாய்" இப்பிறப்பிலேயே விட்டு நீங்குதலாலுமா மென்றறிக; இதற்குப் பிரமாணம்:—

## சேது புராணம்.

அக்கினிதீர்த்தச் சருக்கம்-63.

"சேயினேரையுஞ் சிற்றிடை யாரையுங்
காயுறுத கடம்பினுள் ளோரையும்
பாயும் வேலைப் படியிலோர் பண்டமென்
றுய்வரோநல் லறம்பொருளென்பவர்"

## சீவகசிந்தாமணி.

நாமகளிலம்பகம்-241.

"தொல்லைநம் பிறவி யெண்ணிற் றொடுகடன் மணலு மாற்றா
எல்லைய வவற்று ளெல்லா மேதிலம் பிறந்து நீங்கிச்
செல்லுமக் கதிக டம்முட் சேரலஞ் சேர்ந்து நின்ற
இல்லிடை யிரண்டு நாளைச் சுற்றமே யிரங்கல் வேண்டா"

---

இனி, இவ்வுலகத்தில் போட்டுமெயில், எக்ஸ்பிரஸ் முதலிய ட்ரயின்களில் மூவகைக்கிளாசில் தாமெடுத்த டிக்கட்டினளவில் முன்னும் பின்னும் மொத்துமேறிக் கூடியும் அவ்வாறிறங்கிப்பிரிந்தும் பிரயாணஞ்செய்யும் பாஸஞ்சர்கள் ஸீட்டில் மீட்டாயிருக்கிறடயம் அற்பமாதல்போல, ஒவ்வொருஜாதியிலுந் தாரதரக் குடியிற் பிராரத்துவ வளவில் முன்னும் பின்னு மொத்தும் பிறந்திறந்து திரியு மான்மாக்கள், மனைவியாதிய சுற்றத்துடன் மனையிலிருந்து வாழும்நாள் மிகவும் அற்பமென்பது தோன்றத்தான் "இல்லிடை யிரண்டு நாளைச் சுற்றம்" என்றார் சீவக சிந்தாமணிகாரர்; அநித்தியத்தைக் குறித்த செய்யுளை இங்கே விவகாரதிசையிற் காட்டுதல் பொருந்தாது; பொருந்தாதேனும், தாக்ஷண்யப்படுதற் கேதுவாய் நின்ற மனைவியாதியரின் உடனுறைவநித்தியங் கூறுவிடல், ஆன்மலாப நீதிவழியில் உறைத்து மனஞ் செல்லா தாகையால், பற்பல இருந்தும் அவற்றுள் ஒரு செய்யுண்மட்டும் எடுத்துக் காட்டப்பட்டது; ஆன்மலாபத்துக்கு மாறல்லாத எந்தவழியாலேயும் மேற்கூறிய மனைவி, மக்கள், தாயத்தார், சுற்றத்தார்களை அநவரதமுந் தழுவியே நடக்கவேண்டுமென்பது, முக்கியத்துண் முக்கியமேயாம்; இது முக்கியமென்பதை, திருக்குறளில் இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், புதல்வரைப்பெறுதல், அன்புடைமை, சுற்றந்தழால், முதலிய அதிகாரங்களிலும் ஏனைய நூல்களிலும் பரக்கக் காணலாம்;

இனி, பாவபுண்ணியமிரண்டும்; செய்தல், செய்வித்தல், உடன்படலென மூன்று வழியினவாய்ச் சேஷ்டக நிஷ்டக் கிரமத்திற் றாரதம்மியமாய்ப் பலன்றருமென்பதும், அவற்றுள் நிஷேத வழிக் குடன்பாடு தீமை தருமென்பதும் நீதிநூற்றுணிபாகும்; இதற்குப் பிரமாணம்:—

### சூடாமணி நிகண்டு.

பனிரெண்டாவதில்-4.

"விரைவொடு செய்த லேசெய் வித்தலே யுடன்பா டென்ன
வருமுறை பாவ மோடு புண்ணிய வழக்க மாமே"

### கடம்பவன புராணம்.

இலீலாசங்கிரக அந்தியாயம்-319.

"திரிபுரத்துக் கிலகனு மன்னன் மைந்தர் கிளர்பாவ சித்துமுத லுல்வர் தம்முள்—திரிபுரஞ்செற் றவன்கோயிற் செங்கன்மாயன் சினகரஞ்செய்தா னொருவன் மரத்தைக் கொன்றே—பரவுறுமோ மச்சாலை யுய்த்தான் பின்னோன் பன்மலர்பன் னியுந்தானு முடித்தான் கேட்டப்—புரவலனத் துரோகரைக்கொன் றான்றுள் சேர்ந்தான் புகனுமன்னே ருடன்பட்டோர் நிரயஞ் சார்ந்தார்"

### கூர்ம புராணம்.

யுகதன்மமுரைத்த அந்தியாயம்-23.

"கொலைகள வுறல்கள் ளுண்டல் குருநிந்தை
யுடன்பா டென்னும் மலைவுறு கொடிய பாவம்"

### சேது புராணம்.

வேதாள வரதச் சருக்கம்-73.

"தடுத்திலை யென்றுனக்குத் தந்தனன் சாபம்"

---

மேற்கூறியவாறு அனுசரணையாகச் சொல்லிய (வெ-ஆ-அரு-அருணாசலஞ் செட்டியார்,) இப்பிளான்படி செய்தாற் செய்தோர்க்குப் பின்வரற்பாலதாய தீமையைக் கருதி அதற்குத் தக்கன கூறிச் (சுப-அவர்களைத்) தடுக்காததோடுங்கூடச் சும்மாவுமிருக்காமல் தத்காலக்ஷணிகவுவப்பொன்றையே கருதி அவர்களின் விருப்பத்திற்கொத்த அனுசரணை வசனத்தையுஞ்

சொன்னபடியால் (சுப-அவர்கட்குப்) பகைவராய் முடிவரேயன்றி உற்றநண்பினராகார்கள் ; எதனாலென்றால்? ஒருகர்த்தா வரம்பு கடந்தொருகாரியத்திற் செல்வாரானால், அவர் அக்காரியத்திற் றுணிவுறுதற்குமுன்னரே அதன்கணுள்ள ஹிதாஹிதங்களை விவரித்து நன்மைதரத்தக்க நீதியைச் செவிகைப்ப வெடுத்துச் சொன்னவர்தாம், அக்கருத்தாவுக்கு மந்திரியும், சகோதாரும், மேலோரு மாவரென்பதும், பின்வருவதோராமல் கருத்தா நோக்கம்போற் றாமுஞ் சொன்னவர், அக்கருத்தாவுக்குப் பகைவராயே முடிவரென்பதும் நூற்றுணிபாகும்; இதற்குப் பிரமாணம் :—

## கந்தபுராணம்.

### ஞானமைச்சியற் படலம்-91-92.

"பெற்றிடு திருவினிற் பிறந்த வெஞ்சினங்
கற்றவ ருணர்வையுங் கடக்கு மன்னது
முற்றுறு கின்றதன் முன்ன மன்பினோர்
உற்றன கூறியே யுணர்த்தல் வேண்டுமால்"

"மன்னவர் செவியழன் மடுத்த தாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவ ரமைச்சர்க டுணைவர் மேலையோர்
ஒன்னலர் விழைந்தவா றுரைக்கின் றார்களே"

## திருக்குறள்-638-784-787.

"அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந் தான் கூறல் கடன்"

"நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு"

"அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு"

## விநாயக புராணம்.

### அரசியற்கைப் படலம்-125.

"அழிதரு நெறியிற் செலவினை விலக்கி ஆம்வழிச்
செலுத்திக் * * * * கலப்பதே நட்பெனப்படுமால்"

## கனம்பொருந்திய, தி-வகையார்களே !

மேற்கண்டபடி (தி-ராம-தி-சுப-அவர்கள்) மறுத்துச் சொல்லிய சொல்லையும், (வெ-ஆ-அரு-அரு-அவர்கள்) அம் மறுப்புக் கனுசரணையாகச் சொல்லிய சொல்லையும் கேட்ட பிறகு அடியேன் மிகப் பரிதாபத்தோடு (தி-ராம-தி-சுப-அவர் களைப்) பார்த்துச் சொன்னதாவது, விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்தமண்டபமின்றிப் போட்ட பிளான்படிதான் கோவில் கட்டுவோமென்று பிடிவாதமாய்த் தாங்கள் சொல்லப்படாது; அவ்வாறு செய்தால் அச்செய்கை, சிவாபராதமாய்க் கர்த்தா வுக்கு நாசத்தைத்தருமென்று சிவாகமங்களும் முறையிடுகின் றன வென்று சொன்னேன்; அதற்கு மிகவுங் கோபத்துடன்,

**தி=ராம=தி=சுப்பிரமணியஞ் செட்டியார், "அந்தச்சுவாமி என்னைக் கழுத்தைச் சீவட்டும்" என்று சொன்னார்கள்.**

இவ்வாறு மேற்படி (சுப அவர்கள்) வரம்புகடந் தஞ்சா மற் சொல்லிய தீய சொல்லானது, பரமசிவனையே மதியா திகழ்ந்த சொல்லாயிருந்தது; "அஞ்சாமை புருஷலெக்ஷணம்" என்பது உலகவதந்தி யாயினும், அஞ்சக்கூடாத விஷயத்தி லஞ் சாதிருக்க வேண்டு மென்பதே, அவ்வதந்தியின் கருத்தாகும்; எல்லாவிஷயத்திலுந்தானென்னில், அது, நூலோடு முரணும்; ஆதலால், அஞ்சத்தக்க விஷயத்தி லஞ்சுதலும், அஞ்சத்தகாத விஷயத்தி லஞ்சாமையுமே அறிஞர்களாற் கொள்ளத்தக்கன; வாய்சோர்ந்தேனும் அளவுகடந்த தீயசொற் சொல்லுதல், ஒழுக்கமுடையார்க் கொவ்வாததாகும்; இதற்குப் பிரமா ணம்:——

## திருக்குறள்-428-139-127.

"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்"

"ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்"

"யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"

## சிவஞானசுவாமிகள் பிரபந்தத்திரட்டு.

### சோமேசர் முதுமொழி வெண்பா-14-13.

"தீயனவே சொல்லுஞ் சிசுபாலன் முன்புகண்ணன்
தூயதலாச் சொல்லுரையான் சோமேசா—ஆயின்
ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்"

"எல்லா முணர்ந்தும் வியாத னியம்பியவச்
சொல்லாலே நாவயர்ந்தான் சோமேசா—வல்லமையால்
யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"

## நாலடியார்-74-346.

"அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனால்
இன்புற்று வாழு மியல்புடையா ரெஞ்ஞான்றுந்
துன்புற்று வாழ்த லரிது"

"சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொல்"

---

இனி, பரமசிவனை மதியாதிகழ்ந்தார்க்கு உய்திறமில்லை யென வேதாகமாதி சர்வ சாஸ்த்திரங்களும் ஆரவாரித்துக் கட்டளை யிடுதலாலும், ஸ்ரீ வயிரவாவதாரமும் வீரபத்திராவதாரமும் சிவநிந்தை செய்தாரைத் தண்டித்தற் கெழுந்தன வாதலாலும்

(சுப அவர்கள்) மேற்கண்டவாறிகழ்ந்த இகழ்ச்சி, எப்படிப்பட்டவர்களுக்கும் மனவாக்குக்காயமென்னும் முக்கரண வழியாலும் நனவிலுங் கனவிலுங் அணுவளவேனுங் கூடாத காரியமாமென்பது, சத்தியமேயாகும்; கேட்டிருத்தலும், 'உடன்பாட்டுத் தோஷமாதலால் அதுவும், கூடாவாம். இதற்குப் பிரமாணம்:—

## உபதேச காண்டம்.

### சிவத்துரோகிகளெய்தும் நரகவேதனைப்படலம்-45.

"சுருதி நாலுமற் றாகம புராணமுந் தொகுத்து
மாபி னேதுதன் மாதொரு பாகனை மதியார்
புரைபு ரிந்தவர்க் கொன்றினு முய்திறம் புகாது
சாத மென்றெடுத் திசைப்பன சத்தியம் புகன்றேம்"

## சூதசங்கிதை.

### கழுவாயுரைத்த வத்தியாயம்-32.

"அம்பிகை பாகனை யிகழ்ந்தோர் பொதிதருபாவம்
அவனருளன்றிப் போக்கிடப்படா தெவற்றாலும்"

## சிவரகசியம்.

### தும்பமுனி யுத்தரச் சருக்கம்-6-7-25. தக்கன் மகமழிந்த சருக்கம்-3-4.

"முன்னவனை வேதமுதல் வன்றனை யிழித்தே
சொன்னவரை யெரியிடைசு டக்கடவ தன்றோ
மன்னுகோடி யோர்கள்வத னத்தில்விழித் தோமே
இன்னவுரை கன்னமுற வென்னபவ முற்றோம்"

"செந்தழ னிகர்த்தசிவ நிந்தைசெய லாலே
வெந்தழலி னீகிளைகள் வெந்திடுத றிண்ணம்
வந்துனது நன்புபெறு வானவர்க ளெல்லாம்
சிந்தனைக லங்கவரு தீவிடம தன்றே"

"இந்திர னுபேந்திர னிமையவர்க ளேனும்
நிந்தனை சிவன்றனை நிகழ்த்திடுவ ரென்றால்
வந்தனைவர் நந்தரக கத்திலென மறலி
சிந்தனைசெய் தூதரொடு செப்புதல்செய் தனனே"

"ஐம்பாதகங் கொடும்பாதக மரும்பாதகஞ் செயினும்
வெம்பாதக மவைதீர்தரும் வியன்கன்மமு முளவாற்
கும்போதய னரனிந்தனை குறித்தோனொடுந் திரிநாள்
நம்பாவுறில் வெகுகற்பம்வெந் நரகிற்புகு வாரே"

"தீதுற்றவன் மகச்சாலையிற் சேர்ந்தேன் சிவன்றனையே
ஓதுற்றநிந் தனையென்செவி யுறப்பெற்றன னன்றே
ஈதிற்கினிப் பரிகாரமென் செய்வேனென வினைந்தாள்
சோதிப்பெயர் நினைந்தாளுயிர் துறந்துற்றன ளன்றே"

## கடம்பவன புராணம்.

பிரமன்பூசித்த அத்தியாயம்-39.

"சிவனைநொந் தொன்றையுஞ் செப்பொணாது
அவனவன் செயும்வினை யனுபவித்துத் தீர்வுறும்"

## விநாயகபுராணம்.

வல்லாளன் வேதனை நீங்கு படலம்-17. சந்திரனனுட்டித்த படலம்-36.

"இறைவன்றனக்கு நிந்தனைகள் யாவனொருவ னெண்ணும
லிசைத்தா னந்தக் கொடும்பாவி"

"மறந்தும்வாய் சோர்ந்துமெய் வழூக்கி யுஞ்சுகத்
திறம்பெற வேண்டுவோர் தேவ தேவன்பால்
அறந்தகா தனபுரி யற்க வாற்றுவோர்
இறந்தபே ரிடர்நர கிவற்றி னீங்குறார்"

## கந்தபுராணம்.

சந்திரசாபப் படலம்-59. உமைவரு படலம்-55. ததீசிப் படலம்-24.
யாகசங்காரப் படலம்-4-18-19-130-131-147.

"ஈசனை யிகழ்ந்தவ ருய்யார்—மறையெலாமவை
சொற்றது மற்றவன்றனை நீ—யிறையுமெள்ளலை"

"முண்டக மிசையினோன் முகுந்த னாடியே
பண்டுணர் வரியதோர் பரனை யாதியாக்
கொண்டில ரெள்ளிய கொடுமை யோர்க்கெலாந்
தண்டம்வந் திடுமென மறைகள் சாற்றுமால்"

"ஆதலி னெவர்க்கு மேலா மாதியை யிகழா நிற்றல்
பேதைமை யன்றி யீதோர் பெருமித மன்றால்"

"முக்கணெம் பெருமான் றன்னை முனிந்திகழ் கின்ற னீரோர்
அக்கண முடிவ ரென்றற் கையமு முண்டோ வென்பார்"

"ஆங்கது கேளா வண்ண லம்புய னாதி யாகிப்
பாங்குற விரவும் வானோர் பல்குழு வதனை நோக்கி
நீங்களு மிவர்பா லானீர் நிமலனுக் கவிநல் காமல்
ஈங்கிவ னிகழுந் தன்மை யுசைவுகொ ளுமக்கு மென்றான்"

"என்றலு மனையர்தொல்லூ ழிசைவினு லதுகே ளார்போல்
ஒன்றுமங் குரையா ராகி யூமரி னிருத்த லோடும்
நின்றதோர் வீரன் வல்லே நெருப்பெழ விழித்துச் சீறி
நன்றிவர் வன்மை யென்னு நகையெயி றிலங்க நக்கான்"

"ஈசனை யிகழ்ந்தோர் தம்பா லிருப்பரோ வெண்ண மிக்கோர்"

"ஆதிநா யகனை யொல்லா ரனையவர்ச் சேர்ந்தார்க் கெல்லாம்
வேதமே யிசையா நிற்கும் வியன்பெருந் தண்டம்"

"அந்தண் முனிவோ ரனைவோரும் வானவரும்
இந்திரனே யாதி யிமையோர் களும்வெருவிச்
சிந்தை மருண்டு சிவனை யிகழ்ந்ததனுல்
வந்தபழி யுன்னி வருந்திமிக வெள்கினரால்"

## திருப்பறியலூர்ப் புராணம்.

### தக்கன் சங்காரச் சருக்கம்-99.

"ஈறுநல் லெழுவாய் நாப்ப ணிலாதவெம் முக்க ணனை
மாறுகொ ணிந்தை செய்தோ ரவரொடு மருவி வாழ்ந்தோர்
கூறிடு மதனைக் கேட்ட கொடியவர் தீயோ ரென்று
வீறுகொண் மறைகள் சாற்றும் விதியினு லமரர் மாய்ந்தார்"

## புள்ளிருக்கு வேளூர்ப் புராணம்.

### தக்கனருள்பெறு சருக்கம்-34.

"ஈசனை யிகழ்ந்த பாவ மிதுவிட வெண்ணில் கோடி
பேசவந் திடுபா வத்திற் பெரியதோர் பாவங் காணேன்"

## திருவாரூர்ப் புராணம்.

### துலிசேச்சுரச் சருக்கம்-25.

"தேசிக னின்றோர் மூத்தவர் தம்மைச் சிவாகம புராணமா
மறையை—ஈசனை யிசற் கன்புசால் கல்வி யிருந்தவத் துயர்ந்

தவர் தம்மை—மாசிலேன் தெழுத்து நீலுகண் டிகையை மனத் தொடு வாயினுற் பழிக்கும்—ஆசுறு கொடிய தீவினை யாள ரடையுமா ரவுரவத் தடைவேன்"

### கந்தபுராணம்.

கடவுள் வாழ்த்து-9.

"பரமனை மதித்திடாப் பங்க யாசனன்
ஒருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றல் செய்குவாம்"

### திருவாசகம்.

திருப்பூவல்லி-4.

"பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
எண்பட்ட தக்க னருக்கனெச்ச னிந்துவனல்
விண்பட்ட பூதப் படைவீர பத்திரராற்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ"

### பிரபுலிங்கலீலை.

கைலாச கதி-40.

"செருக்கொ டுஞ்சிவ நிந்தைசெய் வாய்க்கிலை தீர்வு
விரிக்கி னென்றுமுன் சிறுவிதி தலையற வெட்டி
எரிக்கு நல்கிநிந் தனைசெயா மதிமுக மியைத்துத்
தருக்கி நின்றவவ் வீரன்வந் தொருபுடை சார்ந்தான்"

---

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

மேற்கண்டவாறு (தி-ராம-தி-சுப-அவர்கள்) சொன்ன அந்தச்சமயத்தில் அவர்களைப்பார்த்து அவர்களின் இளைய குமார ராகிய (பழனியப்ப செட்டியார்) எழுந்துநின்று வணக்கத்துடன் சொன்னதாவது, விசுவநாதர் கோயிற்றிருப்பணி ஈசுவர விஷய மாகச்சே பங்காளிகளெல்லாரும் பார்த்துச் செய்கிறபடி நமக் குஞ்சரி, இது விஷயத்தில் நீங்களேன் இவ்வளவு வற்புறுத்திப் பேசுகிறீர்களென்று, இன்சொல்லாற் றடுத்துச் சொன்னார்கள்;

சொன்னதற்கு (ஷை சுப அவர்கள்) "உனக்குத் தெரியாது பேசாதிரு" என்று பதிற்சொல்லி அதனையும் மறுத்துவிட்டார்கள்; மேற்படி (பழனியப்ப செட்டியார்) பாலியராயிருந்தும் "என்னப்ப னெம்பிரா னெல்லார்க்குந் தானீசன்" எனவருந் திருவாசகத்தின் தத்துவத்தை யுட்கொண்ட ஊகமுடையவராய்த் தமது "*மெய்வாயி னுடுமனத்தான் மிகப்போற்றற் குரியாரை" இவ்விஷயத்திற் றடுத்துச்சொன்னதானது, அரன்கணன் புடை யறிஞர்களனைவராலும் பாராட்டத்தக்கதே யாகும்; அன்றியும், பிதாவிற்கு நன்மை கூறியதனாற் சற்புத்திரருமாவர்.

இனி, பாலிய ருரையாயிருந்தபோதிலும், அது, ஊகமுள்ளதாக இருக்குமானால் அதனைக் கொள்ளவேண்டு மென்பதும், பிரமதேவ ருரையாயிருந்த போதிலும், அது, ஊகமில்லாததாக இருக்குமானால் அதனைத் தள்ளவேண்டு மென்பதும் நூற்றுணிபாகும்; இதற்குப் பிரமாணம்:—

## ஞானவாசிட்டம்.

### முமுட்சுப் பிரகரணம்-27.

"ஊகமுள தேற்சிறுவ ருரையுங் கொள்க
வொழிந்ததய னுரையெனினுந் திரணமொப்ப
ஏகவிடு வாய்ஞான மெளிது தோன்ற
வியம்புமுவ மானமெலா மேக தேசம்
ஆகநின் வாயுருவ மற்ற ஞான
மாகார மாமுவமைக் கண்டா தென்னும்
மூகரனு பவமில்லா விகற்பத் தாலே
மொழிகுதர்க்க மறிவழிக்கு முயல வேண்டாம்"

## திருக்குறள்-416.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"

---

* இது-பகவற்கீதை சாங்கியயோக அத்தியாயம்—3-ல் உள்ளது.

மேற்கண்டபடி (தி-ராம-தி-சுப-அவர்கள்,) குமாரர் சொல்லையும் மறுத்தமையால் உடனே (அடியேன்) அங்கிருந்த நமது (தி - வகையார்களைப்) பார்த்து முறையிட்டதாவது, ஐயா தி-வகையார்களே! (சுப அவர்கள்) பரமசிவனையுங் கருதாது அலக்ஷயமாய்ச் சொல்லிவிட்டமையால், அவர்களுக்குப் பதிற் சொல்ல இனி அடியேனால் முடியாது; அவர்களாற் போடப்பட்டிருக்கிற பிளான்படிக்கு அர்த்த மண்டப ஹீனமாகத் திருப்பணியைச்செய்தாற் கர்த்தாவுக்கு ஆபத்து வருமென்று தெரிவதால், குருக்கண்மார்களைக்கேட்டு அவர்கள் சொல்லும் ஆகம விதிப்படி செய்யுங்கள்; நானெழுதிக்கொடுத்த உண்டியல்களுக்குச் சீக்கிரம் பணத்தைச் செல்லாக்கி விடுகிறேனென்று மிகவும் அநுதாபத்தோடு முறையிட்டேன்; அதைக்கேட்டும் அங்குள்ளாரனைவரும் தடைவிடையு ளொன்று முரையாதிருந்தார்கள்; அப்பால் (அடியேன்) எனது வீட்டிற்கு வந்து உண்டியல்களுக்குப் பணங்கொடுக்கும்படி தாக்க லெழுதிவிட்டேன்;

விசுவநாதர் விசாலாக்ஷி கோயிற் திருப்பணியுண்டியலுக்கு வட்டியுள்பட ரூ. (17232-7-6)-ம், மேற்படி பாற்கட்டளை யுண்டியலுக்கு வட்டியுள்பட ரூ. (1851-2-6)-ம் ஆக அடியேனாற் கொடுக்கப்பட்ட இரண்டு உண்டியல்களுக்கும் அவைகளிற் கண்ட ஐவர்களாடர்ப்படி மதராஸ்-வி-கரு-சித-கடையில் துந்துபிஸு ஆனிமீ 20உயிற் பணம் செல்லாயின.

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

பெரிய புராணத்தில் "தீண்டு வீராயி னெம்மைத் திருநீல கண்டமென்றூர்" எனவும் "எம்மையென் றதனுன் மற்றை மாதரார் தம்மை யென்றன் மனத்தினுந் தீண்டே னென்றூர்" எனவுஞ் சொல்லப்பட்டிருக்கிறபடி, திருநீலகண்ட நாயனருக்குப் பத்தினியாரிட்ட ஆணைக்கண்ணுள்ள "எம்மை" என்னுந் தன்மைப்பன்மைச் சொல்லானது, அப்பன்மைப் பொருளைத்

தந்து அப்பத்தினியாரோ டேனை மாதர்களனைவரையு முட் படுத் துணர்த்திநின்ற வாறேபோல, (தி - ராம - தி - சுப அவர்கள்) "விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்தமண்டப மில்லா மற் போட்ட பிளான்படிக்குத் தான்செய்வோம்" என்று தன் மைப்பன்மை விகுதிகொடுத்துச் சொல்லிய சொல்லானது, அவ் விகுதிச் சிறப்பால், சொன்ன அவர்களோ டேனையவர்களையு முட்படுத்தியுணர்த்தி நின்ற தேனும், "யாவுஞ் சிவன்செய" லெனச்சுருதி கூறுந் துணிவுபற்றி அவனே, அனைவரையும் பின் னுக்குக் கனிவிப்பனெனச் சிந்திக்கலானேன்; யாவும் சிவன் செயலென்பதற்குப் பிரமாணம்:——

## கந்த புராணம்.

காமதகனப் படலம்-40-41-42. அடிமுடிதேடு பட்லம்-89.

"எல்லார் செயலு மிறைவ னியற்றுவதே
அல்லா திலையோ ரணுவுமசை யாதெவையும்
நில்லா தருளின்றே னீயின் றவன்பாலிற்
செல்லா யுனது செயலுமவன் செய்கையதே"

"செம்மாந்து தற்புகழுந் தேவர்குழு வும்மருள
எம்மான் பிறன்போ லிருந்தோர் துரும்புநிறீஇ
அம்மாதன் செய்கை யனைத்துமெனக் காட்டினனே
நம்மானு முற்றுஞ் சிலவென்கை நாணன்றோ"

"பாடு திகழ்பாவை பல்லுயிரு மல்லனவும்
ஆடல் புரிவிப்பா னருவுருவாய் நின்றபரன்
நாடி லவனையன்றி நம்மாலொன் றாகவற்றோ
ஏட விதனிலைமை யிந்நா ளுணர்ந்திலையோ"

"எந்திரம்யா முன்னின் றியற்றுகின்றாய் நீயன்றோ"

## தேவாரம்.

தனித்திருத்தாண்டகம்-3.

"ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
அடக்கு வித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
உருகுவித்தா லாரொருவ ருருகா தாரே

பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரே
பணிவித்தா லாரொருவர் பணியா தாரே
காட்டுவித்தா லாரொருவர் காணா தாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே"

## விநாயக புராணம்.

விமலன் விநாயகாருள் பெறு படலம்-23.
விக்கினராசர் திருவவதாரப் படலம்-94.
பிந்தியமயூரேசர் திருவவதாரப் படலம்-324.

"ஐந்து பூதமு மடிகளா ணையினசை கின்ற"

"எங்ஙளைப் பாவைபோல விடைவிடா தியக்காநிற்கும் அங்
[கணன்"

"மூவகை யுலகினு முதல்வ நின்னுடை
மேவரு மாணையே விரவி நின்றது"

## காசிகாண்டம்.

வியாதன் கையும்நாவு மெழாது நின்ற வத்தியாயம்-11.

"ஊனமுறு சடமொருவ னுஞற்றினன்றி யாடாதால்
யானுலக மளிப்பதுவு நான்முகத்தோ னியற்றுவதும்
ஆனிவருஞ் செஞ்சடையோ னுட்டுவித்தா லாமதனுல்,
வானவர்தஞ் செயலெல்லா மரப்பாவைக் கூத்தாமால்"

## பிரபுலிங்கலீலை.

வசவண்ணர்கதி-36.

"சூத்திரப் பாவையானச் சூத்திரி நீயருட்கண்
பார்த்தெனைக் குறையகற்றிப் பணிசெயக் கோடி"

## திருவருணைக் கலம்பகம்.

"எல்லா வுயிர்க்கு முயிரரு ணேச ரிவரசையின்
அல்லா தணுவு மசையாத தென்ப தறிந்தனமே
வில்லாடன் மார னிருக்கவும் யோகம் விளைத்தவந்நாட்
புல்லா திருந்தன வெல்லா வுயிருந் தம் போகத்தையே"

## அருணகிரியந்தாதி.

"ஐயா மரப்பாவை யாடுவதுஞ் சூத்திரிதன்
கைவாசி யோபாவை கற்றதோ—வெய்யவினை
என்னிச்சை யோவருணை யீசா படைத்தளிக்கும்
உன்னிச்சை யன்றோ வுரை"

## பட்டினத்தடிகள் பாடல்.

திருவேகம்பமாலை-4. திருச்செங்காடு-1. பொது-22.

"நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னார்தப்பினாற்
றன்னாலு மாடிச் சலித்திடு மோவந்தத் தன்மையைப்போல்
உன்னாலி யானுந் திரிவதல் லான்மற் றுனைப்பிரிந்தால்
என்னாலிங் காவதுண் டோவிறை வாகச்சி யேகம்பனே"

"கருப்பா சயக்குழிக் கேதள்ளு மோகண்ணன் காணரிய
திருப்பாத மேதரு மோதெரி யாது சிவன்செயலே"

"என்செய லாவ தியாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன்செய லேயென் றுணரப் பெற்றேன்"

## தாயுமானசுவாமி பாடல்.

எங்கு நிறைகின்ற பொருள்-1. பரிபூரணானந்தம்-3. கருணாகரக்கடவுள்-3.
பாயப்புலி-45. பராபரக்கண்ணி-117.

"அவனன்றி யோரணுவு மசையாதெனும் பெரிய
வாப்தர் மொழி யொன்று கண்டால்"

"பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே
பார்க்கினின் செயலல்லவோ"

"எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
யெல்லாமு னுடைய செயலே"

"எல்லாஞ் சிவன்செய லென்றறிந் தாலவ னின்னருளே
யல்லாற் புகலிடம் வேறுமுண் டோவது வேறில்லையாம்"

"பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே
ஆர்க்குஞ் செயலிலையே யையா பராபரமே"

குமரேசர் சதகம்.

"வாடாம லிவையெலாஞ் சிவன்செயல்க ளல்லாதுன்
மனச்செயலி னாலும் வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவுகு மரேசனே"

---

இனி, இதுகாறுங் கூறிப்போந்த திருப்பணிமுயற்சியும், அம்முயற்சிக்கண்ணடந்த வர்த்தமானங்களும் மேற்கண்ட வாறிருக்க (தி-ராம-தி சுப்பிரமணியஞ் செட்டியார்) துந்துபிவரு பங்குனிமீ வெயிற் காலஞ்சென்று விட்டார்கள்; அவர்கள் காலஞ் சென்றதற்குப் பின்பு திருப்பணித்தலைமையை வஹித்து முயல்வாரின்றிச் சில வருஷங்கள் வாளாகழிந்தன; திருப்பணி நடைபெறும் முயல்வாரு மின்றிச் சிலவருஷங்கள் வாளா கழியவே, அது வரையிலும், தானுபயோகப்படுங் காலங்கருதியே, இம்முறையிடும் பிறக்கத்தாழ்த்திருந்தன;

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

அப்பால், (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாராற்) போடப்பட்ட முதற்பிளான் பெண்டிங்கியி லிருக்கும்போதே, அதனையநுசரியாதபடி அதற்கிரண்டாவதாக பிரபவவரு வைகாசிமீ த்தில் நமது வகையினருள்ளொருவர், திருப்பணித்தலைமையை வஹித்து முன்னின்று முயன்று குறும்பலாக் குற்றாலம் போய் அங்குள்ள ஆசாரி மூலமாக வேறொருதினிசான பிளான் (அதாவது) ராசிகருதி, பிள்ளையாரை ஸ்தானபேதஞ் செய்யாதபடி இப்போதிருக்கு மிடத்தில் வைப்பதாகவும், நூதநாலயத்திற் ப்ராகாரவிசாலம் சமமாயமைவதுகருதி, விசுவநாதர் விசாலாக்ஷியை இப்போதிருக்கு மிடத்தைவிட்டுக் கிளப்பி ஸ்தானபேதஞ் செய்வதோடு, தம்பதிபேதமும் அமையும்படி, பிள்ளை

யாருக்கு வடபாகத்திலொன்றுந் தென்பாகத்திலொன்றுமாய்ப் பிரதிஷ்டை செய்து. பிரித்துவைக்கிறதாகவுந் தீர்மானித்து அவ்வாறே ஒரு பிளானைப் போட்டுக்கொண்டுவந்திருப்பதாகவும், மறுமுறை தச்சுச்செய்வதற்கு ஷை பிரபவஹூ ஐப்பசிமீ த்தில் நாட் பார்த்திருப்பதாகவும், பின்பு அஃதோரேதுவால் நடைபெறவில்லை யென்பதாகவும் (அடியேன்) கேள்விப்பட்டேன்; இந்தப் பிளானை (அடியேன்) நேரிற்பார்த்தது மில்லை; போட்டாரிவரெனத் துருவமாய்க் கேட்டதுமில்லை; ஆவளைச் சேதியானதால், இந்த இரண்டாவதுபிளானைப் பற்றி இங்கே விரிப்பது, அநாவசியமாகும்;

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

அப்பால், மூன்றாவதாக ஒருபிளான்கிளம்பிற்று; அதனது தோற்றவொடுக்கங்களைச் சுருக்கமாகக் கூறுகின்றேன்; அனைவரும் தயவுசெய்து கேளுங்கள்; பிரபவஹூ தைமீ உமளவயில் நமது தி-வகையிலுள்ள தி-அ-சு-சோமசுந்தரஞ் செட்டியார் (1) பள-வெ-சு-லெக்ஷுமணஞ் செட்டியார் (2) வெ-ஆ-வெ-வெள்ளையப்பசெட்டியார் (3) இந்த மூன்றுபேர்களும், காளையார் கோயிற் திருப்பணிவேலை செய்த மாரிமுத்தாசாரி (1) மாயவரங் கோயிற் திருப்பணி வேலைசெய்த பொன்னுச்சாமி ஸ்தபதியார் (2) ராமேசுவரங் கோயிற் திருப்பணிக் கணக்குவேலை பார்த்த அம்பாசமுத்திரம் கந்தசாமி பிள்ளை (3) இம்மூவர்களையும் உடனழைத்துக்கொண்டு, ஒரு புதுப் பிளானையுங் கையிலெடுத்துக் கொண்டு அடியேனுடைய வீட்டிற்கு வந்தார்கள்; வந்த அவர்கள் சொன்னதாவது, "நமது வகைப்பொதுவா ரநுமதியாற் திருப்பணித் தலைமையைச் சிலநாளாக (தி-அ-சு-அ-சுப்பிரமணியஞ் செட்டியார்) வஹித்து வருகின்றனர்; பிள்ளையார் கோயிலில், பிள்ளையாருக் கீசானியத்தில் ஆவரணதேவதையாக, சிவலிங்கத்தை ஸ்தாபிக்கலாமென்கிற சாஸ்திரவிதி யிருக்கிறதாம், (அச்செட்டியார்) எங்களுடனிங்கே வந்திருக்கிற தொழி

லாளிகள் மூவரையும் உசாத்துணையாகக் கொண்டு, விசுவநாதரை முன்னிருக்குமிடத்தினின்றுங் கிளப்பி, பிள்ளையாருக் கீசானியத்தில் ஸ்தாபிப்பதாகத் துணிந்து போட்டபிளான், இது; இந்தப் பிளான்படி செய்யலாமென்பதாக, (ஷை சுப்பிரமணியஞ் செட்டியார்) நமது (தி-வகைப் பொதுவார்) கூட்டத்தில் இன்று தெரிவித்தனர்; (பொதுவார்) இந்தப்பிளானை உன்னிடங்காட்டி உன்னபிப்பிராயத்தைக் கேட்டுவரும்படி எங்களை யனுப்பினார்கள்; இந்தப் பிளான்படி செய்யலாமென்ற சாஸ்திரவிதியை யுனக் கெடுத்துச் சொல்லும்பொருட்டு, பிளான்போட்ட தொழிலாளிகளான இதோ இருக்கிற மூன்றுபேர்களையும் (ஷை-தி-அ-சு-அ-சுப்பிரமணியஞ் செட்டியா) ரனுப்பினார், அதன் பேரில் நாங்கள் எங்களுட னழைத்துக்கொண்டு வந்தோம்" என்று பிளானையுங் காட்டிச் சொன்னார்கள்; ஷை பிளானில், பிள்ளையாருக் கீசானியத்தில், விசுவநாதரைப் பெயர்த்து ஸ்தாபிப்பதற்கு ஆலயவெல்லை காட்டியிருந்தது; உடனே, ஷை தொழிலாளிகள் மூவரையும் பார்த்து, இது யார்போட்ட பிளானென்று கேட்டேன்; அம்மூவரும், (தி-அ-சு-அ-சுப்பிரமணியஞ் செட்டியா ரனுமதியின் பேரில்) நாங்கள்தான் போட்டோமென்றார்கள்; இவ்வாறு செய்ய விதியிருக்குமானாற் பொறுப்பைச் சாஸ்திரத்தின் றலையிலேற்றிவிட்டுக் குசாலாய்ச் செய்யலாம்; விதி எந்த நூலிலிருக்கிறது? அந்த நூலெங்கே? அதிலுள்ள சுலோகமெப்படி? சொல்லுங்களென்றேன்; இந்தவிதமாக அடியேன் கேட்டதற்கு அம்மூவரும் பதிற் சொன்னதாவது, விதி விநாயக கல்பத்திலிருக்கிறது, அந்தநூல் இப்போது கையிற் கொண்டு வரவில்லை, சுலோகமும் பூரா ஞாபகமில்லை, அந்தச் சுலோகத்தில் விநாயகராலய ஆவரணத்தில் ஈசானியத்தில் நிஷ்கள மூர்த்தியை ஸ்தாபிக்கலாமென்றும், நிர்த்தந மூர்த்தியை ஸ்தாபிக்கலா மென்றும் இரண்டுவிதமுஞ் சொல்லப்பட் டிருப்பதால் நாங்கள் இந்தப்பிளானில் விசுவநாத லிங்கத்தைப் பிள்ளை

யாருக் கீசானியத்திற் பெயர்த்துவைக்கும்படியாக ஆலயவெல்லே காட்டிப் போட்டோ மென்ருர்கள்; அதற்கு நான், நிஷ்கள மூர்த்தி என்பதற்கு அர்த்த மென்ன; என்று கேட்டேன், தெரியாதென்ருர்கள், நான் சொல்லவோ? என்றேன்; சொல் லுங்க ளென்ருர்கள்; (அழைத்துவந்த செட்டியார்களாகிய மூவ ரது முன்னிலேயில்) தொழிலாளிகளாகிய மூவரையும் பார்த்து (அடியேன்) சொன்னதாவது, நிஷ்கள மென்னுஞ் சொல்லுக்கு, கலாதீத மென்பது பொருளாம்; கலேயையன்றிச் சிவபெரு மானுக்கு த்ருச்யரூப மில்லே; நிஷ்களம், சகளநிஷ்களம், சகள மென்கின்ற சொன்மூன்றும், முறையேஅரூபம், ரூபாரூபம், ரூப மென்கின்ற சிவபெருமானது மூவகை வடிவங்களேயு முணர்த்தி நிற்பனவாகும்; அவற்றுள், நிஷ்கள மென்கிற அரூபவடிவ மானது, சகளநிஷ்களமான லிங்கத்துக் கப்பாற்பட்டதும், கையாற் பரிசிக்கவுங் கண்ணுற்பார்க்கவுங் கூடாத அகோசர நிலேமையிலுள்ளதுமாகும்; இது, இந்த நிலேமையிலுள்ள தென் பதை, "அருவமுத லொருமூன்றுட் கட்புலனு வனவிரண்டால்" எனத் திருநாகைக் காரோணப் புராணத்துள், நிஷ்களத்தை யொதுக்கி யேனேயிரண்டையும் அவற்றிலக்கணங்கூறுதற் கான் ரூ ரெடுத்திருக்குமாற்ரு லறியலாம்; ஒன்றுக்குமெட்டாத இந்த நிலேமையிலுள்ள நிஷ்களமூர்த்தி, உங்களுடைய பிரதிஷ்டைக் குள் எவ்வாறு அகப்படும்? அகப்படமாட்டாது; அன்றியும், நிஷ்கள மூர்த்தியென்ற சொல்லும் சிவலிங்கத்தைக் குறிப்பிட்ட தல்ல, அதுநிற்க, இனி நிர்த்தநமூர்த்தி என்ற சொல்லேப் பற்றி ஆராய்வோம்; நிர்த்தந மூர்த்தி என்கிற சொல்லுக்குப் பொருள் என்னவென்ருல்? நடநவடிவம் என்பது பொருளாம்; ஆகவே, அச்சொல்லானது, நிர்த்தநரூப நடராஜரையும், நிர்த்தந கணபதி யையும் குறிப்பிடுமேயன்றி, நிர்த்தந மின்றிச் சகளநிஷ்கள வடி வமாயிருக்கிற சிவலிங்கத்தைக் குறிப்பிடமாட்டாது; ஆதலால், நீங்கள் சொன்ன சொல்லிரண்டும், சுலோகத்திலிருந்தாலுமே

அச்சொற்கள், பிள்ளையாருக் கீசானியத்தில் விசுவநாத லிங்கத்தைக் கொண்டுபோ யொதுக்கிவைக்கப் பிரமாணமாகமாட்டா; என்று சொன்னேன், அதற்கவர்கள் சாஸ்திரவிஷயத்தை நாங்களாராயவில்லை யென்றார்கள்? அப்பால், இவ்வாக்ஷேபணை சமாதானங்களை யெல்லாங் கேட்டுக்கொண்டருகிருந்த மூன்று செட்டியார்களிடத்திலும் இந்தப்பிளான்படி செய்ய விதியில்லையென்றடியேன் சொல்லியனுப்பிவிட்டேன்; உடனே (ஷை செட்டியார் மூவரும்) உடன் வந்த தொழிலாளிகண் மூவரையும் அழைத்துக்கொண்டு திரும்பிப்போய்விட்டார்கள்; அவர்கள் போய், பிள்ளையார் கோயிலிற் கூடியிருந்த (பொதுவார்களது ஸமூகத்தில்) நடந்த மேற்கண்ட எல்லாவற்றையும் விரித்துரைத்ததாகவும், அதைக்கேட்ட பொதுவார்களெல்லாரும், (தி-அ-சு-அ-சுப்பிரமணியஞ் செட்டியாரால்) போடப்பட்ட மற்றொரு சைஸான மூன்றும்பிளானைக் கான்ஸல் செய்து விட்டதாகவும் கேள்விப் பட்டேன்; அந்தப் பிளானைப் பொதுவாரே தள்ளிவிட்டபடியால், அதைப்பற்றி விதிநிஷேதம் வரைதலை, வீண்மெனக்கேடென்று அடியேனுந் தள்ளிவிட்டேன்;

## கனம்பொருந்திய,தி வகையார்களே!

இனி, இச்சருக்கத்தை இம்மட்டினிறுத்திக் கொண்டு, இச்சருக்கத்தை யடுத்துக் கூறுவதாக முன்னே சொன்ன காரணம் பற்றிக் கலியுகக் கொடுமைச் சருக்கமென் ஒன்று கூறப்படும்; அதற்குமேலே, வேதசிவாகம விதிவிலக்கை ஆதிசைவ சிவாசாரியமுகமாக வுணர்ந்து செய்யத்தக்கது திருப்பணியாதலால், வேதசிவாகம மகிமைச் சருக்கமெனவும், ஆதிசைவ சிவாசாரிய மகிமைச் சருக்கமெனவும், திருப்பணிச்சருக்க மெனவும் முறையே மூன்று சருக்கங்கள் கூறப்படும். எல்லாவற்றையுந் தயவுசெய்து பார்வையிடக் கோருகின்றேன் சுபம்.

திருப்பணிமுயற்சி வர்த்தமானச் சருக்கம்
முற்றிற்று.

# கலியுகக் கொடுமைச் சருக்கம்.

நூதனச்செய்யுள்.

* சொலிய றத்தின் சொரூப விடைபதம்
ஒலிக டற்புவி யொன்றிஞ னின்றிட
நலிபெ ருந்துயர் நல்லவர்க் கேசெயுங்
கலியு கத்தின் கொடுமை கரைகுவாம்.

## குணம்பொருந்திய, இவகையார்களே!

எல்லாம் வல்ல கடவுளாணையாற் றோன்றி நின்றழியு முலகத்திற்குத் துணைக்காரணமா யமைந்துள்ளது, காலதத்துவமாகும்; இதற்குப் பிரமாணம்:—

சிவஞான சித்தியார்.

சுபக்ஷம் முதற்சூத்திரம்-10.

"காலமே கடவுளாகக் கண்டன முலகுக் கென்னிற்
காலமோ வறிவின்றுருகு மாயினுங் காரி யங்கள்
காலமே தரவே காண்டுங் காரணன் விதியி னுக்குக்
காலமுங் கடவு ளேவ லாற்றுணைக் கார ணங்கான்"

சூதசங்கிதை.

காலவளவையுரைந்த அந்தியாயம்-11.

"நிலவணி பெருமான் றன்வலி யாற்கற் பித்ததிந் நிரம்பிய
[காலம்"

அக்காலதத்துவமானது நிமிஷம், காஷ்ட்டை, கலை, முகூர்த்தம், பகல், இரவு, அகோராத்திரமென்று சொல்லப்பட்ட நாள், வாரம், பக்ஷம், மாசம், இருது, அயனம், மநுஷவருஷம், தேவவருஷம், கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபர

* சொலித்தல்-பிரகாசித்த னிற்றல்; இது வடமொழிச்சொல், விடை-விருஷபம்.

யுகம், கலியுகம், அந்நான்குங் கூடிய சதுர்யுகம், அச்சதுர்யுகமிரண்டாயிரங் கூடிய பிர்மைகதினம், சதுர்த்தசமங்வந்தரமாகிய கிருதகம், பிரமகல்ப்பார்த்தமாகிய பரார்த்தம், பரமென்றுங் கிருதகாகிருதக மென்றும் பிரமப்பிரளயமென்றுஞ் சொல்லப்படுகின்ற பிரமகல்ப்பம், சர்வசங்காரமென்றும் அகிருதகமென்றும் பிரகிருதிப்பிரளயமென்றுஞ் சொல்லப்படுகின்ற விஷ்ட்ணுகல்ப்பம் என ஒன்றற்கொன்று சாஸ்தியளவைகளை யுடையதாய்ப் பலவகைப்பட்டு நிற்கும்; இவ்வகை விவரத்தைக் காஞ்சிப்புராணத்திற் காரோணப்படலத்திலும், திருப்பெருந்துறைப் புராணத்திற் பிரமனுபதேசப்படலத்திலும், சூதசங்கிதையிற் காலவளவையுரைத்தவத்தியாயத்திலும், வாயுசங்கிதையிலும், கூர்மபுராணத்திலும் கூறப்பட்டிருத்தலால் அவைகளிற் காண்க.

மேற்காட்டிய காலவகையுட்பட்ட சதுர்யுகத்துள், முன்றயே பிர்ம க்ஷத்திரிய வைசிய ஜாதியின் மூன்றுவகைத்தரங்களை யுடையனவாய், சத்துவம் சத்துவத்தோடளாவியராஜசம் ராஜசமென்னு மூன்றுவகைக் குணங்களையுடையனவாய், வீடறம் பொருளென்னு முப்பகுதியிற்றோன்றி யம்மூன்றுவகைப்பயன்களைத்தரத்தக்கனவாய், பிரமா சூரியன் விஷ்ட்ணு வென்னு மூவரை நடாத்துங்கடவுளராகக் கொண்டுள்ளனவாய், மநுஷ வருஷத்தில் (1728000) (1296000) (864000) என்னும் நாற்கூற்று முக்கூற் றிருகூற் றெல்லைகளையுடையனவாய், தவமும் ஞானயோகமுங் கருமயோகமுஞ் செய்தற் கியன்றனவாய், கிரேதாயுகம் திரேதாயுகந் துவாபரயுக மென்று சொல்லப்பட்ட சேஷ்டமுறைமையையுடைய யுகங்கள் மூன்றிற்குப் பின்னே, சூத்திர ஜாதித் தரமுடையதாய், தாமசகுணத்தையுடையதாய், காமமென்னும் பகுதியிற் றோன்றி யப்பயனைத் தரத்தக்கதாய், ஏனைக் கடவுளர்களா லடக்கிநடாத்தற் கருமைபற்றி உருத்திர மூர்த்தியை நடாத்துங்கடவுளாகக் கொண்டுள்ளதாய், மநுஷ வருஷத்தில் (432000) ஆகிய ஒருகூற்றெல்லையை யுடையதாய்

தானமொன்று செய்தற் கியன்றதாய்க் கநிஷ்டமுறைமையிற் கடைப்பட்டு விளங்கிநிற்பது, கலியுக மெனப்படும்.

உலகமுழுதும் அழிந்த முன்னொருகல்ப முடிவிலே சரணாகதி யடைந்தபோது சிவபெருமானு லூர்தியாகக் கொண்டிரக்ஷிக்கப்பெற்ற தரும தேவதா சொரூப விருஷபமானது, கிரேதாயுகத்தில் தவம் ஆசாரம் அருள் மெய்ம்மை யென்னு நான்கு கால்களையும் ஊன்றியும், அடுத்த திரேதாயுகத்தில் ஆசாரம் அருள் மெய்ம்மை யென்னு மூன்று கால்களை யூன்றியும், அதற்கடுத்த துவாபரயுகத்தில் அருள் மெய்ம்மை யென்னு மிரண்டுகால்களை யூன்றியும் நின்றதான், இக்கடையுகத்தில் நிற்றற் கஞ்சி மெய்ம்மை யென்னுங் காலொன்றை மட்டு மூன்றி நின்ற தெனக் கூறப்படுதலாலேயே இக்கலியுகக் கொடுமையைப் பொதுவகையா லறியலாம்.

இனி, இக்கலியுகத்தில் நடைபெறுங் கொடுமைச் செயல்களைச் சிறப்புவகையால் முற்று மறியப்புகின் அசாத்தியமாகும்; அவைகள் பற்பல நூல்களிற் கூறப்பட்டிருக்கலாமேனும், அடியே னாராய்ச்சிக் கெட்டின வரையிற் சிலநூல்கள் மட்டுந் தான், இதனடியிற் பிரமாணமாக எடுத்துக் காட்டப்பட்டன; அந்தப் பிரமாணச் செய்யுட்களிற் கூறப்பட்ட செயல்களுள்ளும் விரிவஞ்சிச் சிற்சில செயல்கண் மட்டுமே இவ்வசனத்தி லெழுதப் பட்டன; எழுதப்படா தெஞ்சிய செயல்களைக் கீழ்க்காட்டப் பட்டுள்ள பிரமாணச் செய்யுட்கள் வெளிப்படைப் பொருளன வாதலாற் அவைகளைப் படித்துப்பார்த்தறிந்து கொள்ளலாம்.

இக்கலியுகத்தில் நீதி, நல்லொழுக்கம், புண்ணியம், இரக்கம், தவம், ஆசாரம், சத்தியம், கற்பு, வைதிகம், அடக்கம் முதலிய நற்செயல்களெல்லாம் குறைந்து தளர்ந்தொழியும்; அநீதி, தீயொழுக்கம், பாவம், வன்கண்மை, அவம், அநாசாரம், அசத்தியம், வியபிசாரம், அவைதிகம், டாம்பிகம் முதலிய துற்செயல்

களெல்லாம் நிறைந்து வளர்ந்து நிற்கும். வருணநெறி ஆச்சிரம நெறிகளெல்லாமும் வரம்புகடந்து தட்டுண்டு தலைதடுமாறிப் போம்; பிதாமாதாக்களைப் புத்திரர் வணங்கார், அவர்களது சொல்லின்வழி நில்லார். மூத்த சகோதரரை இளைய சகோதரர் வணங்கார், இளைய சகோதரரை மூத்த சகோதரர் பாராட்டார். புருஷர்களை மனைவியர்கள் வணங்கார்கள், அவர் கண்மீது அன்பும் வையார்கள், அவர்களது சொல்லின்வழியினு நில்லார்கள். மாந்தர்கள் ஆசாரியனை வழிபடார். சிவாலயங்களிற்போய் வலஞ்செய்திறைஞ்சார். விபூதி உருத்திராக்க மணியார். பஞ்சாக்ஷரஜபஞ்செய்யார். ஓதற்குரிய வருணத்தார் வேதமோதார், அல்லாத வருணத்தா ரோதுவர். நீதிமொழிகளைக் கேளார். அநீதிமொழிகளை விரும்பிக் கேட்பர். பிறர்மனையை விரும்புவர். தவ வினையை விரும்பார். நன்னெறிக்கட் புகார். புன்னெறிக்கட் புகுவர். பொய்யுரைப்பர். மெய்யைக் கனவினு முரையார். கொலைக்கு அஞ்சார். பிறர்பொருளை யபகரிக்கு நிமித்தமாய்ப் பிறரைவஞ்சித்து அவர்களுக்கிடரை விளைப்பர். மாதர்களது கற்பினையழிப்பர். ஆன்மார்த்தமாயுள்ள காரியங்களைச் செய்யார். காமக் குரோத லோப மோக மத மாச்சரியங்களைப் பொருந்திச் சற்காரியங்களை விடுப்பர். செய்ந்நன்றியை மறப்பர். பரமசிவனுக் கன்புபூண் டொழுகுகின்ற பெரியோர்களுக்குப் பிழைசெய்து நரகமடைவர். தந்தைதாய் சகோதரர் மனைவிமைந்தர் முதலிய சுற்றமும் குருவும் அதிதியரும் பசிப்ப வுண்பர். பண்டறிவுண்மையிற் கருதிவந்தாரும் அஃதின்மையிற் கருதாதுவந்தாரு மென்று திருக்குறளுரையிற் சொல்லப்பட்ட இருவகை விருந்தையுமோம்பார். விரதம் நோன்பு சிராத்தங்களை விடுப்பர். பிதாமாதாக்களை மைந்தர்கள் போற்றார். மைந்தர்களைப் பிதாமாதாக்கள் போற்றார். தமயன்மாரைத் தம்பிமார் போற்றார். தம்பிமாரைத் தமயன்மார் போற்றார். ஆள்பவரை அடியவர் போற்றார். அடியவரை ஆள்பவர் போற்றார். மனைவியர்

புருஷரைப் போற்ருர். புருஷர் மனைவியரைப் போற்ருர். சீடர் குருவைப் போற்ருர். குரு சீடரைப் போற்ருர். நான்கு வருணத்தாரும் வரைக்கோல், செங்கோல், துலாக்கோல், ஊளவுகோல் களாலியற்றத்தக்க தத்தந் தொழில்களை விதிமுறையிற் செய்யாராய் அதிக்கிரமித்துச் செய்வர். பெண்கள் பன்னிரண்டு வயதில் மக்களைப் பெறுவர். கல்யாணஞ் செய்யுமுன்பே காமத்தால் மெலிவர். நாணமடமச்சம்பயிர்ப் பென்னும் நாற்குணத்தையும் இழப்பர். உயர்குலமாதர் இழிகுல மைந்தரை விரும்புவர். மனைவி கணவனுக்குப் புத்தி சொல்லுவள். புத்திரன் பிதாவிற்குப் போதிப்பன், அப்பிதா அப்போதனையை மறுப்பனுனல் புத்திரன் மாதாவுடன் சேர்ந்துகொண்டு அன்னே இவன் மருந்திற்றணியாப் பித்துடையா னென்று பிதாவைச்சுட்டி யிகழ்ந்துரைப்பன். கூன்குருடு செவிடூமை குறளுருவமைந்து இழிதொழில்செய்து பாவமீட்டுவோர் குழுவே எங்கும் நிறையும். கோள் வஞ்சனை கொலை கள் உலோபம் பொய் காமம் பொருமை முதலியனவற்றை மேற்கொண்ட துற்குணத்தவர்களே நக்ஷத்திரக்கூட்டம் போல் எங்கும் நிறைவார்கள். பத்தினிமாதர் வரவரக் குறைவர். பரத்தைமாதர் வரவர நிறைவர் உத்தமமாந்தர்களெல்லாந் துன்புறுவர். தீய மாந்தர்களெல்லாம் புத்திரப்பேறுற்று மகிழ்ந்து வாழ்வர். தரித்திரமும் வியாதியும் நல்லவர்களையே பீடித்து வருத்தும். பொறுமை யில்லாதவராற் பொறுமையுடையவரும், சிறியவராற் பெரியவரும், பேதையோரால் அறிவுடையவரும் துன்பமுறுவார்கள். தருமத்தையே பொருளெனத்துணிந்து சத்தியந் தவருமல் விரதநியமம் பூண்டு சீவகாருண்யத்தாற் பரோபகாரத்தைச் செய்துகொண்டிருக்கிற உத்தமர்களுக்கெல்லாம் துன்பமே வந்துசேரும். புண்ணியத்தைப் பாவம் வெல்லும். சத்தியத்தை அசத்தியம் வெல்லும். உபகாரத்தை உலோபம் வெல்லும். மேகம் மழையைச் சரிவரப் பெய்யமாட்டாது. பூமி சரிவரவிளையாது, ஆற்றவருந்தி விளைப்பிப்பினும்

பொலிவுகாணுது. பசுக்கள் சரிவரப்பால் சுரவா. சோலைகள் மலர் காய்கனிகளைச் சரிவரத் தாரா. யாகம் தானம் விரதம் நோன்பு தவம் மந்திரம் தீர்த்தம் தீர்க்கபயன்களைத் தரமாட்டாது. அந்தணர்சாபம் பலிக்கமாட்டாது. விலங்குபறவை தம்முட் பகைகொண்டு மேவும். மாந்தர்கள் துஷ்ட்டஜந்துக்களாலும் தரித்திரத்தாலும் பிணியாலுந் துன்பமடைவர். இக் கலியுக முதிர்ச்சியிற் கீழோர் மேலோரை வேலைவாங்குவர். நாற்சாதியுமிழிந்து ஸங்கரஜாதி மயமாய்ப் பாவமும் இழிதொழிலும் பிணியுந் தரித்திரமும் நிறையப்பெறும். கள்ளும் மாமிசமும் வீதிகடோறும் கறிகாய்களைப்போற் கூறிவிற்கப்படும். நெற்சோறு முதலிய உயர்ந்த ஆகாரங்களகப்படாமற் சருகு கிழங்கு காய் முதலியவற்றையுண்டு ஜாதி வரம்புகடந் தெல்லாருமொன்ருய்ப் பதினறு வயதிலே நரைதிரை மூப்பாய கிழப்பருவங் கொண்டு வருந்தி யிறப்பார்கள். முனிவர்களெல்லாம் அரக்கராலும் அசுரராலும் பிறவற்ருலும் தவத்தையுமிழந்து புலிக் கூட்டத்துக்குள் ளகப்பட்ட மான்களைப்போலப் பதைத்து வருந்துவர். சிவாலயத் திருப்பணியாதி செய்யுஞ் சரியாவான்களையும், சிவபூசை செய்யுங் கிரியாவான்களையும், சுவாஸ பந்தனத்துடன் தியானசமாதி செய்யும் யோகவான்களையும், உலகத்துறங்கிப் பரத்தில் விழித்திருக்கும் ஞானவான்களையும் நிந்திப்பார்கள். வஞ்சனை பொருமை செருக்கு கோபம் காமம் பொய் ஈயாமை ஆங்காரம் முதலியன, இயற்கையிற் றங்கிய குணங்களாய் எவர்மனசிலும் வளர்ந்துகொண்டு வரும். தெய்வ நிந்தனை மதநிந்தனைகளைச் செய்வர். கோபத்தாற் கடவுளது விக்கிரகங்களைப் பிடுங்குவர். விக்கிரகாராதனஞ் செய்யார். யாகாதி கிர்த்தியங்களைச் சிலர் புகழை விரும்பிச் செய்வர். பொருளை விரும்பி மேற்சாதியார் கீழ்ச்சாதியாரோ டுடனுண்டுறைவர். வேதாகம சாஸ்திர புராணுதிகளை யிகழ்வர். அநீதியோர் செல்வராவர். நீதியோர் வறியராவர். புண்ணியபாவ வினை

யும், மறுமையில் அவற்றூற் பெறத்தக்க சுகதுக்கப்பயனும், நுகர்வோனும், நுகர்விப்போனுமில்லை யென்பவரே பெரும்பாலாராவர். மறப்பது குருமொழியும், துறப்பது பெரியோர்கேண்மையும், வளர்ப்பது காமப்பைங் கூழுமாம். பிருகு ததீசி கௌதமாதி ரிஷிகளின் சாபத்தாலன்றியும், இக்கலி தோஷத்தாலும் பாஞ்சராத்திர பவுத்தாதி நூல்களில் அந்தணர்க்குறுதிபிறக்கும். எங்கும் சிறுதெய்வாராதனைகளே மிக்கு நடைபெறும்.

இக்கலியுக முடிவிலே யாவரும் தேரையைப்போ லுடல் குறுகி வங்கென்று சொல்லப்படுகிற மலைக்குகையுட்புகுந்து மிருகங்களும் பக்ஷிகளும் பாம்புகளும் எடுத்துண்ண மயக்கமுற்றிறப்பார்கள்.

இக்கலியுகத்திலே, அருளும் அறிவும் ஒழுக்கமும் மானமும் ஆசாரமும் பொறுமையும் அன்பும் தருமமும் தானமும் சத்தியமும் தவமும் ஆண்மையும் விரதமும் நோன்பும் சிவபக்தியு முடையவர்களாக ஒருபேர்வழியைக் காண்பதும் அருமையாகும்.

இக்கலி காலமானது தாய்புத்திசொன்னல் மறுக்கத் தக்க காலமும், தந்தையைக் கோபிக்கத்தக்க காலமும், குருவை நிந்திக்கத் தக்க காலமும், பேயைத் தெய்வமென் றாராதித்துபசரிக்கத் தக்க காலமும், பிரட்டருக்கேற்ற காலமும், பெண்டாட்டி சொல்லை விருப்புடன் கேட்கத்தக்க காலமும், பெரியோர் சொல்லைக் கேளாதகாலமும், அமரகத் தாற்றறுப்போர் சம்மானம் பெறத்தக்க காலமும், பழிப்போர்க் குதவத்தக்க காலமும், வாய்மதம்பேசும் அநியாய காறருக்கு வாய்த்த காலமு மாகும்.

ஆதலால் இப்படிப்பட்ட நன்மையில்லாத கலியுகத்திலே நல்லவர்கள் வந்து பிறக்கமாட்டார்கள். தீயவர்கள்தான் வந்து பிறப்பார்கள். இவையனைத்திற்கும் பிரமாணம்:—

## கந்த புராணம்.

ததீசியுத்தரப் படலம்-303 முதல் 307 வரை.
ஞானமைச்சியற் படலம்-57.

"பெருகு தேயுப் பிரளய மன்னதிற்
றருமம் யாவினுக் குந்தனித் தெய்வதம்
வெருவி யாமிவண் வீடுது மேலினிப்
புரிவ தேதெனப் புந்தியிற் சூழ்ந்ததே"

"ஆறு லாஞ்சடை யண்ணலைச் சேர்வனேல்
ஈறி லாதென்று முற்றிடு வேனெனாத்
தேறி யேயறத் தெய்வதஞ் செங்கணு
னேற தாயொ ரெழிலுருக் கொண்டதே"

"ஏற்றின் மேனிகொண் டீசன்முன் னேகியே
போற்றி யானின்று பொன்றிடுந் தன்மையை
மாற்றி யாற்றல் வழங்கிநிற் கூர்தியாம்
பேற்றை யெற்குப் பிரானரு ளென்னவே"

"இறத்தலை யின்மையும் யான மாய்த்தனைப்
பொறுத்திடுந் தன்மையும் பொருவில் வன்மையும்
உறைத்திடு மன்பும்வா னுணர்வு நல்கியே
அறத்தனிக் கடவுளுக் கண்ணல் கூறுவான்"

"முதலய விடைகடை மொழிய நின்றிடுஞ்
சதுர்வித யுகந்தனிற் றருமத் தின்றிறம்
இதுவென நான்குமூன் றிரண்டொன் றாகிய
பதமுறை யூன்றியே படியிற் சேறிமேல்"

"கண்டன மின்றியாங் கலியின் வண்ணமே"

## திருவாரூர்ப் புராணம்.

கலியுகச் சருக்கம்-26 முதல் 58-வரை.

"இந்தவெங் கலியு கத்தி னியற்கையை யிசைப்ப தென்னே
தந்தைதாய் மாற்றங் கேளா ரன்னவர் தாளிற் றாழார்
மைந்தர்தா மூத்தோர் தம்மை வணங்கிடா ரிளையர் வாட்கட்
பைந்தொடி மகளிர் கேள்வர்ப் பணிந்தவ ருரையி னில்லார்"

"தேசிகர்ப் போற்றல் செய்யார் சிவபிரான் செம்பொற் றாள்கள்
பூசனை புரிதல் செய்யார் கண்டிகை புனைதல் செய்யார்
ஆசினீ றணிதல் செய்யார் அஞ்செழுத் தியம்பல் செய்யார்
ஈசனா லயம்வ லங்கொண் டிறைஞ்சுதல் செய்யா ரென்றும்"

"அறமொழி விரும்பிக் கேளா ரறமலா தறையுந் தீய
மறமொழி விரும்பிக் கேட்பார் மறமிலா மாத வத்தீர்
பிறர்மனை விழைதல் செய்வார் பெருந்தவம் விழைதல் செய்யார்
நெறிதரு நெறியி னில்லார் நெறியலா நெறியி னிற்பார்"

"பொய்யுரை யன்றி மெய்யைக் கனவினும் புகலார் பொல்லா
வெய்யமா கொலைக ளஞ்சார் பிறர்பொருள் வெஃகித் தீமை
செய்திடர் விளைப்பர் மாதர் கற்பினைச் சிதைப்பர் தீராக்
கைதவ வினையே செய்வர் கதிதருங் கருமஞ் செய்யார்"

"கரவழுக் காறு மோகங் களிமதங் காம நோயே
மருவிநற் றொழில்வி டுப்பர் செய்ந்நன்றி மறப்பர் முக்கட்
பரமனுக் கன்பு பூண்டு பரமனே பொருளென் றெண்ணும்
பெரியவர்ப் பிழைத்து நாளும் பேரிரு ணிரயத் தாழ்வார்"

"பெருங்கிளை தந்தை தாய்முன் பிறந்தவர் மனைவி மைந்தர்
அரும்பெற லாசா னுற்ற வதிதியர் பசிப்ப வுண்பர்
விருந்தெதிர் கொண்டு போற்றார் விரதநோன் பினைவி டுப்பர்
திருந்துசீர்த் தென்பு லத்தார் செய்கடன் சிறிதுஞ் செய்யார்"

"உயர்பெருங் குலத்து தித்த வொண்டொடி மகளிர் தங்கள்
இயல்புடை மகிழ்நர் தம்மைப் பிழைத்துவே றிழிகு லத்துப்
பயனறு மாந்தர் தோண்மேற் பற்றுடை வேட்கை வைத்து
மயல்பெரி துழந்து காம நோயினால் வருத்தங் கூர்வார்"

"யாணர்மங் கலஞ்செ யாமு னிளஞ்சிறு மகளிர் காம
வேணவா வுற்று மாழ்கி மெலிவர்பன் னிரண்டி யாண்டிற்
பூணிழை மங்கை மாதர் புதல்வரைப் பெறுவர் பொய்தீர்
நாணமே யாதி நான்கி னூன்கொரீஇ நவையி னிற்பார்"

"மன்னரு ளின்றோர் தம்மை மைந்தர்தா மகிழ்ந்து போற்றார்
இன்னிள மைந்தர் தம்மை யீன்றவ ரினிது போற்றார்
முன்னவர் தம்மைப் பின்னோர் போற்றிடார் முன்னோர் தாமும்
பின்னவர் தம்மைப் போற்றார் பிடுசொல் பெருந்த வத்தீர்"

"அடியவர் தம்மைப் போற்று ராள்பவ ராள்வோர் தம்மை
அடியவர் போற்றார் போற்றார் மாணாக்க ரறஞ்சால் கேள்வி
அடிகளாங் குரவர் தம்மை மாணாக்கர் தம்மை யன்பால்
அடிகளாங் குரவர் போற்று ரந்தணர் திலக மன்னீர்"

"மாதரை மகிழ்நர் போற்றார் மகிழ்நரை மாதர் போற்றார்
பூதல வேந்தர் தம்மைப் பொருபடை மாந்தர் போற்றார்
மேதினி வேந்தர் தாமும் விறற்படை மாந்தர்ப் போற்றார்
ஆதியங் கடவு ளீச னடிமலர்க் கன்பு மிக்கீர்"

"அந்தணர் வேத மோதா ரருஞ்சிவபூசை செய்யார்
செந்தழல் வேள்வி யாற்றார் செயத்தகு நியமஞ் செய்யார்
மந்திர நவிற்று ரன்பு வளரருண் மனத்தில் வையார் [ர்"
வெந்தொழில் வினைமேற் கொள்வார் விரதநல் வினைவிடுப்பா

"பொருளினை வெஃகிவேந்தர் புவியினோர்க் கிடுக்கண் செய்வார்
தருமமா மனுவி னீதி தணந்துகூன் கடுங்கோ லோச்சி
அருளினை விடுப்பர் வேள்வி யாற்றிடா ரறங்கள் பேணார்
வெருவருந் தொழில ராவர் மிகுபெரும் பாவ மஞ்சார்"

"தம்பெரும் பரிசனத்தாற் கள்வர்தந் திறத்தாற் றம்மால்
மின்பரந் திலங்கும்வைவாட் பகைவரால் விலங்கா லெய்துந்
துன்பவெம் பகைது ரந்து தொடுகட லாடை மண்மேல்
மன்பதை யோம்பி வாழார் மறவரின் வாழ்வார் மன்னர்"

"மனுமுறை மரபி னீட்டார் மாண்பொருள் வணிகர் வண்பால்
இனியவா னினங்கள் பேணா ரீசனை யீசற் கன்பாம்
புனிதரைப் போற்றல் செய்யார் புண்ணியக் கிழமை பூணார்
வினைமிகு கொடுமை பூண்டு வெம்பவம் விளைத்து வாழ்வார்"

"அறுதொழி லாளர் தங்கட் காசிலா வேவ லாற்றும்
நெறிவழி நில்லார் வேத மந்திர நெறியிற் செய்யும்
மறுவறு வேள்வி செய்வர் சூத்திர வருணத் துள்ளார் [பீர்"
குறைதவிர் நிறைசால் கேள்விக் குணப்பெருங் குன்ற மொப்

"அறநிலை திருத்தார் வேந்த ரஞ்செவி சுடுஞ்சொற் கூறி
மறநிலை விலக்கார் கோளும் வஞ்சமும் படைத்துப் பொல்லா
நெறிவழி நிற்பர் நெஞ்சி னெடும்பொருள் வெஃகி யர்க்குப்
பிறர்குடி கேடு சூழ்வ ரமைச்சர்கள் பெருந்த வத்தீர்"

"கூனொடு செவிடு மூங்குங் குறளுமா யறிவு மஃகி
மானமும் வலியு மின்றிப் பிணியொடு வறுமை மிக்காங்
கீனவெந் தொழின டாத்தி யிருளுறு பாவ மீட்டும்
ஊனர்தங் குழாமே யோங்கு முலகெலா முயர்த வத்தீர்"

"கோளுரை வஞ்சம் வெய்ய கொலைகள வுலோபம் பொய்ம்மை
தேள்விட நாக மென்னத் தெறுகுணங் காம மோகம்
நீளழுக் காறுமுன்னுந் தீமையா னிறைந்து ளோரே
வாளுடக் கணத்திற் சால மலிவரால் வைய மெங்கும்"

"அருளறி வொழுக்க மான மாசாரம் பொறைசீ ரன்பு
தருமநன் னெறிநற் றூனஞ் சத்தியந் தவத்தோ டாண்மை
விரதநோன் பிரக்க மீசன் மெய்யருட் பத்தி யுள்ளோர்
ஒருவரை யுலகிற் காண்ப தரிதுகா ணுயர்த வத்தீர்"

"பத்தினிப் பெண்டி ரீட்டம் பல்கிடா தருகி மாயும்
சித்திரப் பரத்தை மாதர் தங்குழாஞ் சிறப்பப் பல்கும்
உத்தம மாந்த ரெல்லா முறுதுய ருழந்து சோர்வர்
மைத்தரு மனத்துத் தீயோர் மகவொடு மகிழ்ந்து வாழ்வார்"

"வறுமையும் பிணியு நல்லோர் தம்மையே வலிந்து பற்றும்[ர்வார்
பொறையிலாப் புன்மை யோராற் பொறையுளோர் புன்கண் சே
சிறியவர் தம்மான் மேலாம் பெரியவர் செல்லல் கொள்வார்
அறிவிலா தவரா லுண்மை யறிவுளோ ரல்லல் கூர்வார்"

"தருமமே பொருளென் றெண்ணிச் சத்தியந் தவறு தோம்பி
விரதமே பயின்று நித்த நியமங்கள் விதியிற் பேணி
அருள்புரிந் துதவி யாற்றி யனைவர்க்கு மிதமே செய்யும்
பெரியவர் தமக்கே துன்பம் பெரிதுவந் தடையு மன்றே"

"அறத்தினை வெல்லும் பாவ மழித்திடும் பொய்ம்மை மெய்யை
ஒறுத்திடு முலோப மென்ப துபகாரந் தனையெர் டுங்கச்
செறுத்திடு நற்கு ணத்தைத் தீக்குணந் தீக்கொள் செங்கைக்
கறைத்திரு மிடற்றுப் புத்தேள் கமலத்தாள் கருத்துள் வைத்
[தீர்"

"வான்பயன் றூரா தாற்ற வருந்தினு விளைநெற் பூமி
தான்பயன் றூரா தம்ம தருகினும் பொலிவு தாரா
தான்பயன் றூரா தந்த ணலர்கனி மதுர மூறுந்
தேன்பயன் றூரா தோங்குந் தருவனுஞ் செய்த வத்தீர்"

"செந்தழல் வேள்வி தானந் தீதுதீர் விரத நோன்பு
மந்திரந் தவங்கள் கங்கை மாநதி முதல தீர்த்தம்
அந்தமில் பயன்க ளல்கா தரும்பொருள் சான்ற வேதச்
சந்தநூன் மாத வத்தோர் சாபமும் பலியா தன்றே"

"விலங்கினம் பறவை யாதி வெம்பகை கொண்டு வைகும்
விலங்குபாம் பலகை தீர் வெய்யகால் கள்வர் தம்மால்
விலங்கருந் துன்ப மேவி வறுமையான் மெலியும் வையம்
விலங்கலி னுயர்த வத்து மேதகு மெய்யு ணர்ந்தீர்"

"இவ்வுக முதிர்ந்த வெல்லை யந்தண ரிழிந்தோர்க் கேவல்
செய்வர்வே லரசர் கொற்றஞ் சிதைந்துகீ ழோர்க்கீழ் நிற்பர்
வெவ்வினை புரிந்து நாய்கர் தங்குல முறைவி டுப்பர்
தெய்வநூ லொழுக்கம் பேணிச் சூத்திரர் தவமே செய்வர்"

"சாதிநான் கிழிந்த னந்தஞ் சாங்கர சாதி பல்கி
ஏதமாங் கொலைவெம் பாவ மிழிபுலைத் தொழிலே யீண்டிப்
பூதல மெங்கு நோயுங் கரிப்புமே பொருந்திக் கள்ளூன்
வீதிதோ றடகு காய்தீங் கனியென விற்கு மன்றே"

"கதிர்நறுஞ் சாலிமுன்னு மூணின்றிக் கரிந்து வாடி
உதிரிலை கிழங்கு காய்கள் ளுணுமுத லூணே யுண்டு
விதிநிலை முறைவ ரம்பு விடுத்தழிந் தெவரு மொன்றாய்ப்
பதினறு வயதின் மூப்புப் பழுத்துமாய்ந் தொழிவ ரன்றே"

"அரக்கரா லசுரர் தம்மாற் பிறவற்று லரிய நோன்புந்
திருத்தகு தவமு மாண்டு முனிவரர் சிறுமை யெய்தி
வெருக்கொடு துயரின் மூழ்கி வெங்கொலைத் திருகு சீற்ற
வரிப்புலிச் சூழல் புக்க மானெனத் திரிவ ரன்றே"

"உரைதரு மிவ்வு கத்தி னீற்றினி லுடல்கு றைந்து
குறைதரு தேரை போலத் தோன்றியே வலியுங் குன்றித்
தரைபடு வங்கு புக்குச் சார்ந்துபுள் விலங்கு பாம்பங்
கிரையெனக் கவர மாழ்கி யின்னுயி ரிழப்பர் யாரும்"

"இன்னுமிவ் வுகத்தி யற்கை யெண்ணில வுண்டி யாவும்
பன்னுது மென்றாற் கோடி பகலினு முடியா தம்மா
நன்மைதீர் கொடிய விந்த வுகத்திடை நண்ணார் நல்லோர்
புன்மைசேர் தீய மாந்தர் நண்ணுவர் புலன்க டந்தீர்"

## திருக்காளத்திப் புராணம்.

யுகதருமங்கூறிய அத்தியாயம்-1-முதல்-33-வரை.

"கால தத்துவ வறிஞர்நான் குகமெனக் கணிப்பர்
ஏல வற்றினுண் முதலுகங் கிருதமா மிரண்டாம்
பால தாவது திரேதமூன் றதுதுவா பரமாம்
ஞால மீதினி னுன்கதா முகங்கலி நவிலின்"

"முண்ட கத்தவி சுகந்தவன் முதலுகக் கடவுள்
விண்டொ டார்ந்தெழு கதிரிரண் டாவதின் வேந்தன்
தண்டு ழாய்நறுந் தாமன்மூன் றுவதின் றலைவன்
மண்ட லம்புக ழுருத்திரன் கலிக்குமன் னவனே"

"சத்து வங்குண மாவது முதலுகந் தனக்குச்
சத்து வத்துட னிராசத குணமடுத் ததற்கு
வைத்த ராசத குணத்தினைத் துவாபர மருவும்
எத்தி றத்தினுங் கலியுகந் தாமத மெய்தும்"

"ஒன்ற தாகிமே லாகியே யொளிதிக ழறந்தான்
மன்ற நாடொறுந் தூயதாய் மழவிடை வடிவாய்
நின்ற நம்முடை யூர்திகா ணுங்கது நீதி
துன்று முந்திய வுகத்தினூற் பதத்தொடுஞ் சுடரும்"

"முப்ப தத்தொடு நிலைபெறு முதிர்திரே தத்திற்
செப்ப ரும்பத மிரண்டொடு துவாபரஞ் சேரும்
அப்ப தத்திலொன் றேகலி யுகத்தினி லமரும்
இப்ப குப்பினி னுணர்தியா லினிதுக தருமம்"

"முன்னு கத்தினின் முத்தழன் மறையவர் வலியோர்
பின்னுகத்தினிற் பெருந்திறன் மன்னவர் பெரியோர்
அன்ன தற்கடுத் ததனிடை வணிகரே யதிகர்
உன்ன ருங்கலி யுகத்தில்வே ளாளரே யுயர்ந்தோர்"

"ஆதி யாமுகந் தியானமுந் தவமுமாற் றிடலாம்
போது ஞானயோ கம்புரிந் திடறகுந் திரேதம்
மாது வாபரங் கருமயோ கம்வகுத் திடலாம்
பேத மாங்கலி தானமொன் றுஞ்செயப் பெறுமால்"

"மூன்று கத்தினி லனைவர்க்கு முழுத்திடு மாயுள்
வந்து தேவருந் திருத்தியா யுவப்புடன் வதிவர்
சுந்த ரந்திகழ் வடிவம்வா ணுள்வலி தொலையா
அந்த மில்பல னிவ்வுகத் தனைவர்க்கு மொக்கும்"

"அடுத்த திற்சிறி தொருவருக் கொருவர்மா றுவர்
விடுக்க ருந்துவா பரத்தினில் வெம்பசி தாகம்
தொடுத்துண் டாகிய பலதுயர் மறையவர் தோய்வர்
கடைப்ப டுங்கலி முறைமையைக் கழறுதுங் கேட்டி"

"பிரம நிட்டித ஞகிவிஞ் சையிற்பெரி யவனும்
உரிமை வேதியன் றனைத்தபோ தனன்றனை யுயர்ந்த
தரும நிட்டிதன் றன்னையெவ் விடத்தினுஞ் சால
அருமை யெண்ணிடா தனைவரு மிகழ்வரங் கங்கே"

"மறைய வன்றனை மன்னனை வணிகனை வாக்கால்
முறையி கந்துள பழிமொழி தன்னையு மொழிவர்
தெறுத ருங்கொலை யாதிய வினைகளுஞ் செய்வர்
குறைவில் வஞ்சக மௌவியம் பெருமிதங் கோபம்"

"காமம் பொய்யுரை மயக்கமீ யாமையாங் காரம்
ஆம னைத்துமெக் காலமுங் கலியின தழுக்காற்
றுமி யற்கையா மாந்தர்பாற் றங்குறு குணமாய்த்
தீம னத்திடை விழைவுடன் வளர்வன தினமும்"

"சிவனி டத்தினி லன்பரா கியசிலர் திருமா
லவனி டத்தினி லன்பரை யவனையாங் கிகழ்வர்
அவனி டத்தினி லன்பரா கியசில ரரனுற்
பவம கற்றிய வன்பரை யவன்றனைப் பழிப்பார்"

"முருகு விம்மிய முளரியந் தவிசின் முன்னவனைப்
பரவு வோர்சிலர் பனிப்பகை யங்கியைப் பழிப்பர்
உருவி லான்றுய ருழப்பவன் விஞ்சைகற் றுணரான்
திருவி லாஞர னில்லவன் றம்மைநிந் திப்பார்"

"எள்ளல் செய்பவ ரிவ்வுகத் தெண்ணிலர் மழையற்
றுள்ள வச்சமு மொண்பயி ருலப்புறு கேடும்
விள்ள ரும்பொரு ளழிகையும் பன்முறை மேவும்
கள்ள மாந்தர்கள் கருணையு மறிவுமில் லவராய்"

"கடவுள் விம்பமும் வெகுளியிற் பிடுங்குவர் கையால்
வடிவு சேர்திரு மேனியை மறையவர் முதலா
அடைவின் மூவரு மலர்கடு யருச்சனை யாற்று
தொடியு முள்ளமொ டொருவுவ ரச்சமு முறாராய்"

"மருண்டு தத்தமக் கமைத்துள முறையினை வழுவி
யிருண்ட புல்லிய வொழுக்கத்தி லெய்துவ ரினையர்
தெருண்டு பெட்பொடும் வீடுபே றெய்துவான் சிந்தை
முரண்டொ லைத்திடு முதுமறை நவின்றிடன் முயலார்"

"ஈட்டு மொண்பொருள் வேட்கையா லிம்மையின் பயனில்
நாட்ட மாகிநால் வேதசாத் திரங்களை நவில்வார்
வேட்டு வேள்விமுன் னாகிய நற்செயல் வினையார்
மூட்டு வெவ்வினைக் கலிவந்து தோன்றினிம் மூவர்"

"பொருளை யீட்டுவர் நீதியின் றிப்புகழ் வேண்டி
யிருளை யோட்டிய வெரிசுடர் வேள்வியை யிழைப்பர்
அருளை வீட்டுவ ராருயி ருய்ந்திட வன்பால்
மருளை வாட்டிய மகஞ்செயார் மறுமையைக் குறியார்"

"தாங்கள் பின்னவன் றன்னுழைக் கேட்பர்க டனத்து
வீங்கு பெட்பினு லவன்றனை வியந்துசே விப்பார்
ஆங்க வன்றனோ டடுத்துரை யாடியெஞ் ஞான்றும்
பாங்கி னுற்பரி சித்துட னுண்டுகண் படுப்பார்"

"வினைஞர் வேந்தனுக் சமைச்சரா யறிவின்மேம் படுவர்
புனித வேதிய ரருளின்றி யுயிர்க்கொலை புரிவர்
இனிய தண்புனல் படிகலர் செபம்பல வியற்றூர்
மனையின் முத்தழல் வளர்த்திடார் வறிதருந் துவரால்"

"கடவுள் பூசையிற் கருத்தில ராகுவர் கலியின்
முடிவின் மந்திரத் தொடுமுழு நீறுபூ சுவதும்
வடிவு றத்திரி புண்டரந் தரிப்பதும் மறந்து
நெடிது மோர்மயக் கத்தினுல் விடுவரிந் நெறியை"

"மற்று முள்ளன வாகிய வறங்களு மறையில்
உற்ற வக்கினிட் டோமமா தியவுயர் மகமும்
எற்றை ஞான்றினு மிடைவிடா தியற்றுதம் விதியும்
முற்று நீக்குவர் முதுதிரி புண்டர மெனினும்"

"தரித்தி டார்மறை தம்மொடு சாத்திர புராணம்
பரித்த பாரத மிவற்றினை பொய்தெனப் பழிப்பர்
விருப்பொ டுஞ்சிலர் வியந்துகா பாலமே வுவர்கள்
அருத்தி யாற்சிலர் பாசுப தத்தினை யடைவர்"

"சிலர்ப வுத்தமே விழைகுவர் சிலர்பர சிவத்தைப்
பலவி தப்படு மென்பர்க ளொன்றெனப் பகரார்
சிலர்ம கிழ்ந்துலோ காயதம் பெரிதெனத் தெளிவர்
சிலர்வி ரும்புவர் யாமளஞ் சிறந்ததென் றெண்ணி"

"சிலரி லாகுளஞ் சீரிதென் றினிதுசிந் திப்பர்
சிலர்க டாம்வயி ரவத்தினை மேலெனத் தேர்வார்
சிலர்து ணிந்தவ ராகிவா மந்தனிற் றிகழ்வர்
சிலர்கள் சாத்தமுஞ் சிலர்கள்சாம் பவமுமாய்ச் சேர்வர்"

"தந்தஞ் சமயத் தினுக்கியையத் தாந்தா முயர்ச்சி பெறச்சாற்
அந்தன் பனுவல் களுமற்றைச் சமய நூலு மருமறையால் [றும்
வந்த பிரமா ணத்தனவா வவற்றைத் தாமே மதித்துமிகச்
சிந்தையுவந்துகலிமுடிவிற் செய்வார் மறையோர் முதன்மூவர்"

"கலியின்முடிவிற் பின்னவர்தாங் கறையற் றிலகு வெள்ளெயிறுந்
தலைமுண் டனமுந் துவராடையுடையு முளராய்த் தவஞ்செய்வர்
உலகிற் சிலர்தா முடம்புவிற்ப ருயருந் தீர்த்தஞ் சிலர்விற்பர்
சிலர்தண் டயிலம் விற்றிடுவர் சிலர்விற் றிடுவர் தெய்வத்தை"

"சிலர்தாந் தீம்பால் விற்றிடுவர் சிலர்தாங் கிருதம் பகர்ந்திடுவர்
சிலர்தாம் புதல்வர் தமைப்பகர்வர் சிலர்தாம் மனைவி களைவிற்பர்
சிலர்தாம் பகர்வர் தானியத்தைச் சிலர்தாந் தெண்ணீர்தனைவிற்
சிலர்கன் னியரை விற்றிடுவர் சிலர்தாம் பசுவை விலைசெய்வர்" [பர்

"சிலருந் றன்னை விற்றிடுவர் சிலர்கள் ளினையே விற்றிடுவர்
சிலர்தம் முடனே பிறந்தவரை விற்பர் தீய கலியுகத்தில் [ன்
நிலவு கதிர்கான் றிடுமுந்நூன் மறையோர் தம்பா னிதிகவர்வா
புலவு கமழுங் கூரிலைவே லரசரேவற் பொருபடைஞர்"

"தாளைப் பிணிப்பர் தடங்கையைச் சிக்க யாப்பர் தளையிடுவர்
மூளுந் துயர்செய் திம்முறையே முழுதும் பழிப்பர் முறைபிறழ்
நாளு முயர்ந்த வாதனத்தி னுன்காம் வருணத் தவரிருப்பர் [ந்து
ஆளுந் தலைவ ரெனக்கிழ்நின் றந்த ணாளர் சேவிப்பர்"

[வர்கள்
"அன்னோர் தம்மை வாழியவென் றருமா மறையோர் பழிச்சு
முன்னூன்மார்பர் மேலிருத்தல் கண்டாற் பின்னோர் முகங்கறுப்பர்
பின்னோர் தம்வாயிலின் மறையோர் சமயம் பார்த்துப் பெரிதிருப்
அன்னோர் தமக்கு மறையவர்களருநூல் வருத்தியறிவிப்பார்" [பர்
[பர்

"மறையின்பொருளை மாநிதியின் பொருட்டு மற்றுங்கவர்க்குரைப்
முறையின்றெவருங்கலிதொடங்கிற்பிறனில் விழைந்துமோகிப்பர்
அறையினின்னுமெத்துணையென்றறைவோ மறையின் வரம்பாய
துறையு மழிந்து விடுமிவ்வாறுய கலியின் றேஷம்"

## கூர்ம புராணம்.

யுகதன்ம முரைத்த அத்தியாயம்-18 முதல் 25 வரை.

"அவாவுறு கலியு கத்தின் முறைமையை யறையிற் றெய்வந்
தவாதுயர் மகேச ளுருந் தருமமோர் காலிற் செல்லும்
குவாலுறு தருமம் யாவுங் கொடுப்பதே தரும மாமால்"

"வெளிற்றறி வுடைய புல்லர் மேதகு சான்றோர் தம்மைக்
களிப்பொடுந் தடிவர் பொய்ம்மை கடும்பசி மூப்புத் துன்பந்
தளிப்புயல் வறத்த லெய்துந் தம்பொரு ளுளியா ரேனும்
ஒளித்துமற் றொருவர் கையி னுறுபொருள் கவர்வ ரன்றே"

"ஒழுக்கமு மளியும் போரி னுடற்றுவெந் துயரு மின்றி
இழுக்குவ ரறத்தி னின்று மிருபிறப் பாளர் யாரும்
விழுத்தகு மறைக ளோதா ரருமகம் விழையா ரென்றும்
அழுக்குடை மனத்த ராகி யருநர கதனில் வீழ்வார்"

"நெறியினோர் போலக் கற்றோய் கலிங்கமெய் நிலவச் சுற்றிக்
கறையெறி வெண்பல் லோடும் பின்னவர் காலை யேகி
அறைபுனல் படிந்து நீதி யந்தணர் தம்மை யெள்ளி
மறையினை மறையோர் தம்பாற் கற்பர்மா நிரய மெய்த"

"ஆறறி மறையோ ரில்வாழ் மனைவியொடு தழுங்கப் போகிக்
கூறுபின் னவர்தம் மாதர் குவிமுலை திளைப்பப் புல்லி
ஊறுய ரின்ப மாந்தி யாங்கவர் தம்மோ டுண்டு
வீறுயர் விஞ்சை விற்று நரகிடை வீழ்வர் மாதோ"

"கொலைகள வுறல்கள் ளுண்டல் குருநிந்தை யுடன்பா டென்னும்
மலைவுறு கொடிய பாவ மலிந்திடுந் திறல்கொள் வேந்தர்

கலைபயில் மறையோர் நோவக் கடிவர்கற் றறியாப் புல்லர்
நிலைபெறு திருவ ராவர் நீதியோர் வறிய ராவர்"

"அந்தணர் மறைக ளோதார் பாஞ்சராத் திர நூ லாய்ந்து
நிந்தனை வாம மோர்ந்து நீற்றொளி பழுத்த மேனி
யெந்தையை வழுத்தா ராகிக் கவுதம னிசைத்த சாபந்
தந்ததீ வினையால் வெய்ய ரவுரவ நரகிற் றாழ்வார்"

"கொடுவரி முதல வாய விலங்கினாற் கமஞ்சூற் கொண்டற்
படுமழை வறந்த வாற்றாற் படுபுனற் சோலை தன்னாற்
கடுவளி யதனால் வெய்ய வெயிலினாற் கலங்கி மாந்தர்
மிடலருந் துன்ப மெய்தி வெந்துய ருழப்ப ரன்றே"

## காஞ்சிப் புராணம்.

சிவபுண்ணியப் படலம்-103-104-105-106-110-114 முதல் 119 வரை.
தழுவக்குழைந்த படலம்-74-75-76.

"ஔவியங் கொலைகள வாதி மிக்குடைக்
கௌவைகூர் கொடுந்திறற் கலியுகத்திடை"

"இல்லைவை திகநெறி யில்லை நல்லறம்
இல்லைநால் வருணமாச் சிரம மில்லையாம்
இல்லைமா ணாக்கர்க ளில்லை யாரியர்
இல்லைநல் லொழுக்கமுங் கலியி னென்பவே"

"வைதிக சைவநூன் மானக் கோளிலை
பொய்யிலந் தெழுத்திற்கண் மணியிற் பூதியில்
ஐம்முகப் பிரானிடத் தன்பு மிவ்வுகத்
தெய்திடு மிருபிறப் பாளர்க் கில்லையே"

"தாபதப் பிருகுமெய்த் ததீசி கௌதமன்
சாபமன் றியுங்கலி தோஷத் தான்மிகத்
தேய்பொருட் பாஞ்சராத் திரம்ப வுத்தமாம்
பாபநூ லுறுதியே பனவர்க் குண்டரோ"

"மன்னு நான்மறை வேதியர் மன்னவர் வணிகர்
பின்னு ளோருடன் வீடறம் பெரும்பொருள் காமம்
என்னு நான்கினை யிசைவுறத் தோற்றி யிந்நான்கிற்
பன்னு சிருகப் பெயரிய நான்கையும் படைத்தான்"

"கருமமிகழ் பாரதமாம் வருடமிசைக் காலப்பேரிறைமை நும்பால்—இருவினை மாண்டளவை யொன்றொழிந்த பதினொரு நான் கிலக்க மேலால்—இருபதினாயிரமுறுக விங்கிவற்றை நால் வீர்க்கு மேயு மாற்றல்—வருமுறையிற் கூறுபடுத் துதவுது மென் றருள்செய்து வகுக்க லுற்றான்"

"அருள்பயக்கும் வீடுதவுங் கான்முளையாங் கிருதயுகமூத் தோ யாதி—தெருள்பயக்கு மறம்பயக்குந் திரேதாநீ யிளையோய் காண் செப்புங் காலைப்—பொருள் பயக்குந் துவாபாநீ யிவர்க் கிளையாய் பொலிவுபெறு காம மீன்ற—மருள்பயக்குங்கலியுகநீ மூவருக்கு மிளையோயாய் வயங்கு வாயால்"

[றானே
"வேதியனே கிருதயுகம் வேல்வேந்தன் திரேதாமெய்வணிகன்
ஓதுதுவா பரமேனோன் கலியாகு மிம்முறையானுமக்கு வைத்த
ஏதமிலிங் நாற்பத்து மூன்றிலக்கத் திருபதினாயிரமா மாண்டும்
பேதமுறு மீரைந்து கூறுகப் பகுத்தந்தப் பிரிவின் மன்னோ"

"கிருதமோர் நாற்கூறு முக்கூறு திரேதாவுங் கிளந்து கூறும்
இருகூறு துவாபரமு மொருகூறு கலியுகமு மெய்து வீரால்"
[லீர் நும்மை
"இவ்விடையேற் றறக்கடவுள் முறையானே யெழிற்கிருத முத
எவ்வமறு நாற்பாத முப்பாத மிருபாதமொருபா தத்தாற் [கும்
கவ்வையற நடாத்திடநீர் காகினியைநடாத்திடுமின் முதன்மூவிர்க்
ஒளவியமி லம்புயத்தோ னிரவிமாலிவர்முறையே யிறைவ ராவார்"

"தீமையே மிகப்படைத்த கலியிவராற் காப்பரிய திறத்தாலிந்த
நாமநெடுங் கலிநாளின் மன்பதைகள் புரப்பதற்கு நாமே யுள்
[ளோம்"

"முன்னோர் கடைநான் முளரிக்கண் முகிழ்த்த புத்தேண்
முன்னுஞ் சகமுற்று நம்மான் முடிவுற்ற தாகப்
பொன்னேர் சுணங்கிற் பொலம்பூண் முலைப்பூவை யன்னைய்
அந்நா ளறத்தெய் வதமத்திற முற்று நோக்கி"

"நில்லா வுலகத் துளவாய சரிப்ப நிற்ப
வெல்லா மழிவுற் றனயானு மிறப்ப லோவென்
றல்லாந் தினிச்செய் வகையாதென் றிறைஞ்சி நம்பாற்
கொல்லே றுருவங் கொடுவந்தது போற்றி யென்ன"

"கண்டா மதனைக் கவலாதியென் றார்தி யாக்கிக்
கொண்டாங் கொளப்பெற் றுலவாக்களி கூர்ந்தது"

## ஸ்ரீ கா ழிப் பு ரா ண ம்

புகலியான அத்தியாயம்-2-3-4-5-6-7-8-9-12-13-15-16.

"அறந்தலை பணிப்ப நீதி யரசுகோல் கோட நீண்ட
மறந்தலை யெடுப்ப நான்கு வருணமு மருண்டு தத்தம்
திறந்தலை கலங்க மாதர் செயிரறு கற்பு நீங்கி
இறந்தலை படப்பொல் லாத விருட்கலி பரந்து மேனாள்"

"பரந்தவன் கலிப்புத் தேளைப் படிறுடைக் குறளை றூலின்
அரந்தைமந் திரத்தாற் பல்லோ ரமுகணீ ராட்டி யெள்ளிச்
சுரந்தபொன் மலரிற் பேதைக் கோயினுட் சூட்டிக் காம
நிரம்பமு தருத்திப் பூசை நீணில மன்ன ளூற்ற"

"மானநூன் மறையோர் யோக மகளிரா லவிந்த வேறு
தானமெண் ணிலவேட் டங்கைத் தழலும்வீ றழிந்த வாக்கில்
ஆனபொய் யுரையால் வாழ்த்து மாசிக ளவிந்த பல்லோர்
போனகம் பயில்வால் வேதம் போற்றலு மவிந்த மாதோ"

"தொழுகுலத் தவர்மா ழாப்பச் சுருதிநூற் றுறைகள் யாவும்
இழிகுலத் தவன்வி ரிக்கு மிறையில்லை வினைக ளில்லை
முழுவதுந் தானே யென்று மொழிந்துமுற் றுணர்ந்தார் போல
இழுதைக ளொடுசெம் மாக்கு மிகபர மில்லை யென்றே"

"அரிவைதன் கொழுநன் கேட்ப வாய்மதி யுறுத்து மன்னன்
தெரிவில வதற்கு மைந்தன் றெருட்டுறுந் தெருட்டுங் காலை
உரியதன் றெனம றுத்தா லுணர்விலி யஞ்ஞை யின்னும்
பிரிவிலன் மருந்திற் றீராப் பித்தனென் றெள்ளு மாங்கே"

"மறப்பது குரவன் வாய்மை மடுத்தினி துண்ப வேரி
துறப்பது பெரியோர் கேண்மை தொடங்குவ விடும்பை சூது
சிறப்பது கயமைச் சூழ்ச்சி செய்வது காமப் பைங்கூழ்
இறப்பது கடவுட் பூசை யிசைப்பது புலனில் கோட்டி"

"வற்புறு மகங்க டேய்ந்து மழைவளஞ் சுருங்கி மாதர்
கற்பிகந் தான்பா லஃகிக் காசினி பொய்த்துத் தேயம்
பொற்பழிந் தொழுக்க மாறிப் பொய்கொலை களவு காமம்
பற்பல களியாட் டாடப் படர்கலி யாடு மந்நாள்"

"புறக்கொடுங் களைகண் மொய்ப்பப் புலம்புறு பைங்கூழ் போன்
திறப்படு முலக மெங்குஞ் செறிகலி புதைப்ப நோக்கி [று

இறப்பருந் துயரா லோர்சா ரிருந்துதன் னிலம்பா டுன்னி
அறப்பெருங் கடவு ளுள்ளத் தாரனு ரெய்தி னானே"

"முன்னாக மதனி னன்காய் மொழிந்த பின்னுகத்தின் மூன்று
பின்னாக மதிலி ரண்டாய்ப் பிறமூமிக் கலியி னொன்றாய்ப் [ய்ப்
பன்னிய வறங்க ளின்ன பாங்கிலே தாழத் தாழ்ந்து
மன்னிய தாள்க டேய்ந்து வருந்தினேன் வருந்தி னேனால்"

"கலியிடைச் சுருங்கி யொற்றைக் கால்கொடு திரிக லாற்றேன்"

"பொன்வலி காட்டும் வேணிப் புண்ணிய னுளத்து வந்தாய்
நின்வலி நீயுங் காணாய் நிகழ்த்துமுன் னுகத்திற் குன்று
மன்வலித் தவமா சாரம் வளரருண் மெய்ம்மை மல்க
உன்னுடை நான்கு தாளா யுற்றன நினக்கு வேந்தே"

"அதுவழி யுகத்தா சார மருண்மெய்ம்மை மூன்று மோங்கக்
கதுவுபொற் றாளோர் மூன்றிற் கவின்றனை மற்றையூழி[பெற்றாய்
பொதுவுடைக் கருணை மெய்ம்மை பொலிந்திடத் துணைத்தாள்
முதுகலி மடங்கன் மெய்யே முயங்கவோர் தாள்பெற் றாயால்"

## திருநெல்வேலிப் புராணம்.

சத்த விருடிகள் பேறுபெற்ற சருக்கம் 17 முதல் 30 வரை.

தருமதேவதை இட்டமான சருக்கம்-13.

"கலியு கத்தி னடக்கின்ற காரணந்
தலம தெங்குந் தருமங்க ளாசமாய்
நிலையில் பாவங்க ளெங்கு நிறைந்ததாற்
பலருஞ் சத்திய மின்றிப் பகருவார்"

"சத்தி யம்மின்றித் தாம்பகர் வோர்கடம்
புத்தி போகத்தை நாடிப் பொருந்தலால்
அத்தர் முக்க ணயலர்க்கன் பாகியே
முத்தி சேரு முறையு முயல்கிலார்"

"கோடை காலங் குவலய மெங்கணும்
பாடு செய்திடும் பானுவைப் போலவே
நீடு வெங்கலி நீதியெ லாங்கொடுங்
கேடு செய்யக் கிளர்ந்த தநீதியே"

"பரிவுற் றந்தணர் பன்மறைச் சாத்திரந்
தரும நீதி திறம்பிடச் சாற்றுவார்

அரசர் செம்பொனுக் காசைகொண் டாரையுங்
குரவர் தம்மையுங் கோறல்செய் விப்பரால்"

"சனங்க டத்தங் கருமந் தணந்தனர்
மனங்கொ ளாவகை வன்ன மறந்தனர்
புனங்கொள் வேணியன் புண்ணியந் தேர்கிலார்
தினங்க டோறும்பொய்ப் போகங்கள் சிந்திப்பார்"

"மேய காமக் குரோதங்கண் மிஞ்சவே
மாயை மூடினர் வன்கொலை வஞ்சனை
நேய மோடிவை செய்வர் நெறியிலார்
ஆயு மைந்தருக் கூட்டா தருந்துவார்"

"பாவ மிஞ்சி யெவர்களும் பண்ணலால்
ஆவ தான வறங்களு மில்லையால்
ஏவ ரேனுஞ் சபையி லிருந்துநற்
றேவ தேவரைத் தூடணஞ் செப்புவார்"

"வேத மந்திரம் வேள்வி யியற்றுவார்
சாதி சூத்திரர் சாத்திரஞ் செப்புவார்
ஓத லாற்றமக் கொப்பில்லை யென்றுதாம்
நீதி யந்தணர் தம்மையு நிந்திப்பார்"

"சீல மின்றியே யந்தணர் சூத்திரர் செய்கை
போலி யற்றுவர் சதுர்த்தரு முதல்வணம் போன்றார்
ஆல முண்டவ ரடியிணை நினைப்பவ ரில்லை
ஏனு மற்றவர் யாவர்க்கு மிலைமன விரக்கம்"

"சதுர்த்த ராசனத் திருக்கவே தியர்கடாழ்ந் துடன்வாய்
புதைத்துப் பேசுவர் புகழுநற் ரூுத்திரம் புகல்வார்
விதித்த சாத்திரம் வேதங்க ளாகமம் விளம்பிக்
கதித்தி டுங்கதி பெறுவகை மனத்திடைக் கருதார்"

"அருந்து மன்னத்தை விலைகொடுப் போர்தமக் களிப்பார்
விருப்பி யுண்டிடு நீரையுங் கிரையமாய் விற்பார்
திருந்து விக்கிர கத்தொடு சிவலிங்கம் விற்பார்
பொருந்து வேசையர் போகமே நலமெனப் புகல்வார்"

"தோற்று மிக்கலி யுகத்தினிற் றுறக்கமார் பெறுவார்
ஆற்ற ருந்துய ரவமிருத் தச்சநோ யுண்டாம்

நீற்று மெய்யனை நிமலனை நிந்தனை புகல்வார்
போற்று தொண்டரை வருத்துவர் நிந்தையும் புகல்வார்"

"கள்ள ருந்துவர் காமத்தாற் பிறன்கடை காண்பார்
பிள்ளை யானது தாய்தந்தை வருந்தவே பேசும்
கொள்ளை யாடுவர் குடிகெடப் பேசுவர் கொடியோர்
வள்ளை வார்குழை மாதரே தெய்வமாய் மதிப்பார்"

"இந்த வாறுறு துன்பத்தை யெவர்க்குநல் கிடவே
வந்த தாகுமிக் கலியுக வன்மையார் தவிர்வார்
பந்த மாகுமிப் பவமெலாம் வருமெனப் பயந்து
சிந்தை யஞ்சிநின் சேவடி துணையெனச் சேர்ந்தோம்"

"முதியதோ ருகங்க ணான்கு முதலய லிடையென் றாகும்
விதிமுறை வருமா லங்கண் விரவுமெய்த் தரும நீதி
இதுவென நான்கு மூன்றி ரண்டினோ டொன்ற தாகப்
பதமுற வூன்றி நீயிப் பாரினிற் சரிப்பா யென்றும்"

## விருத்தாசல புராணம்.

கலிமலர்ச் சருக்கம்-3 முதல் 9-வரை.

"அயனை நோக்கிநின் றருஞ்சனற் குமாரரு மறைவார்
மயரும் வன்கலி வசத்தினன் மாதவர் யாரும்
துயர முற்றனர் சூத்திர னயினன் வேந்தன்
புயன்ம றுத்தது பூசையுந் தேவர்கட் கிலதால்"

"தன்ம தானமுந் தவங்களு மிறந்தது வேதக்
கன்ம நீத்தனர் கண்டவர் மறைபடிக் கின்றார்
மன்ன ரேவலின் மறையவர் நிற்கின்றார் மறையின்
நன்மை யெண்ணில ரோதிலர் நிந்தையே நவில்வார்"

"உத்த மக்குணம் விட்டனர் யோகமும் விட்டார்
சித்தி யெட்டையும் விட்டனர் செபங்களும் விட்டார்
புத்தி மேற்புலன் போகலாற் பொறுமையும் விட்டார்
முத்தி தன்னிலுங் குடும்பநன் றென்றனர் முனிவர்"

"மாதர் வார்த்தையு மைந்தர்கள் வார்த்தையு மேலாய்ச்
சாதி யில்லவர் பெரியராய்ச் சற்குரு வுடனே
வாது செய்குநர் மைந்தர்கள் வன்சிவ பூசை
நீதி யில்லையாற் சூத்திர பூசையே நிகழ்ந்தார்"

"பொய்களேயொழிந் துண்மையை யாவரும் புகலார்
தூய்ய யாகமுஞ் சூத்திரர் செயும்படி தொடுத்தார்
மையல் வேட்கையு மங்கையர் கோட்டியுஞ் சூதும்
வெய்ய மாதனந் தேடலு மாயினன் வேந்தன்"

"ஒருவர் செய்யுமா சாரமற் றொருவர்செய் கின்றார்
தரும வேடத்தை யாவருந் தரிக்கிலர் யாரும்
இருவர் காண்பரு மொருவனை யிகழ்ச்சிசெய் கின்றார்
பொருளின் மேற்கருத் தாயினர் மெய்ப்பொருள் போட்டார்"

"குடும்ப சாகரந் தன்னிலே கொலைகள வாதி
யிடும்பை யாகிய முதலைவந் திழுத்தன வவைதாம்
விடும்ப டிக்குநீ மீகாம னுகினில் லென்றார்
நடுங்கி யக்கலி தொலைந்திட நான்முக னவில்வான்"

## திருப்பெருந்துறைப் புராணம்.

### மகேச்சுர மூர்த்தமுரைத்த படலம்-14.

"ஆயவுல கழிவுறுகா லறக்கடவுண் மேவவதோ
யேயவிது நமக்குமென விடையுருவங் கொண்டடைந்து
தூயமல ரடிபோற்றத் துவன்றார்தி யாமென்றே
யேயவதன் மேற்கொளலா லிடபவா கனரானார்"

## குமரேசர் சதகம்-57.

"தாய்புத்தி சொன்னன் மறுத்திடுங் காலமுயர்
தந்தையைச் சீறு காலம்
சற்குருவை நிந்தைசெய் காலமெய்க் கடவுளைச்
சற்றுமெண் ணாத காலம்
பேய்தெய்வ மென்றுப சரித்திடுங் காலம்
பிரட்டருக் கேற்ற காலம்
பெண்டாட்டி வையினுங் கேட்கின்ற காலநற்
பெரியோர்சொற் கொளாத காலம்
தேய்வுடன் பெரியவன் சிறுமையுறு காலமிகு
சிறியவன் பெருகு காலம்
செருவில்விட் டோடினோர் வரிசைபெறு காலம்வசை
செப்புவோர்க் குதவு காலம்
வாய்மதம் பேசிவிடு மநியாய காரர்க்கு
வாய்த்தகலி கால மையா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரே சனே"

---

இந்தக் கலியுகத்தினது கொடுஞ்செயல் அநேக காலமிருந்து சொல்லினும் முழுதுஞ்சொல்லி முடிவடைய மாட்டாதென்பதை, மேற்காட்டிய திருவாரூர்ப் புராணத்திற் கலியுகச் சருக்கத்தில் 58-வது செய்யுளில் "இன்னுமிவ் வுகத்தியற்கை யெண்ணில வுண்டி யாவும்—பன்னூது மென்றூற் கோடி பகலினு முடியா தம்மா" எனக் கூறுமாற்றாலறியலாம்.

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

... (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்), விசுவநாதர் விசாலாக்ஷிக்குத் தம்மாற் போடப்பட்ட அர்த்தமண்டப ஹீனப் பிளான்படி செய்யலாகாதென்று மறுத்துரைத்தும் அதனாற் திருப்பணிப் பணத்துக்கு உண்டியல் கொடுக்கச் சற்றுத் தாழ்த்துமுள்ள (அடியேனையும் பழ-சு-நா-ராமநாதஞ் செட்டியாரையும்) விபரீத வுணவாற் குற்றமெனக்கொண்டு தாயாதி ப்ருஷ்டத்துவமான வகைநியாயஞ்செய்யவேண்டு மென்று சொன்னதானது, இந்தக் கொடிய கலிகாலத்தின் பிரபாவமே யன்றி வேறில்லை.

(தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால்) சொல்லப்பட்டதான மேற்காட்டிய விஷயக்கடுமைக்காக இந்தக் கலியுகக் கொடுமைச் சருக்கமானது, திருப்பணி முயற்சி வர்த்தமானச் சருக்கத்தை யடுத்தமைக்கப்பட்ட படியால், இக்கலியுகக் கொடுமையை இவ்வளவில் நிறுத்திக்கொண்டு, திருப்பணியின் விதிவிலக்கமைந்துள்ள வேதசிவாகம மகிமையை முன்னும், அவைகளை ஓதியுணர்ந்துணர்த்தும் ஆற்றலையுடைய ஆதிசைவ சிவாசாரியர்களது மகிமையைப் பின்னும் இரண்டு சருக்கங்களாக முறையே வைத்து இதன்பின்னே வரையப்படுமானதால், அவைகளையும் தயவு செய்து பார்வையிடக்கோருகின்றேன்.

கலியுகக் கொடுமைச் சருக்கம்
முற்றிற்று.



# வேதசிவாகம மகிமைச் சருக்கம்.

நூதனச்செய்யுள்.

"நாத ரூப மாய்மலை
மாது பாக னோதிய
வேத வாக மச்சிறப்
போது வாமோர் வாறரோ"

## கனம்பொருந்திய, திவகையார்களே!

வேதம் என்பது, இருக்கு எசுர் சாமம் அதர்வம் என்னும் நான்குமாம்; வேதமென்னுஞ் சொற்கு, அறிதற்கருவியென்பது பொருள்; இந்நான்கும் முறையே சிவபெருமானது தற்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதமென்னும் நான்குமுகங் களிற் பிறந்தன; இந்நான்கும் பெரும்பாலும் யஞ்ஞாதி கருமங் களைச் செய்து புண்ணிய லோகங்களையடைய விரும்பும் உலகர் கள் பொருட்டுச் சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்டனவா கலானும், பதித்துவவுறுதி நோக்கித் தேற்றே காரத்தோடுங் கூடிய விசேஷ விதிவாதவசனங்களாற் சிவபெருமானுக்கே பரத்துவத்தை உய்த்துணரவைத்துக் கூறினபோதிலும், சீவபரி பக்குவம் நோக்கி, சிவாஞ்ஞைதாங்கித் தொழில்புரியுங் கார ணேசுவரர்களுக்கும் சாமான்ய துதிவாதவசனங்களால் ஆங் காங் கொருவாற்றாற் பரத்துவங் கூறுவனவாகலானும் பொது நூலெனப்படும்; பொதுநூலென்பதற்கு, ஷண்மதத்தோர்களா லுங் கொள்ளப்பட்டு வருதலும் ஒருசான்றாம்;

சிவாகமம் என்பது, காமிகம், யோகஜம், சிந்தியம், கார ணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான் சுப்ர பேதம், விஜயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்நேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமே சுரம், கிரணம், வாதுளம் என்னும் இருபத்தெட்டுமாம்; ஆகம

மென்னுஞ் சொற்கு ஆப்தவாக்கியம் என்பதோடு, பதிபசு பாச லக்ஷணத்தையுணர்த்தும் நூலென்பதும் பொருளாம்; இவ்விருபத்தெட்டும், சிவபெருமானது உந்நதமுகமாகிய ஈசான முகத்திற் பிறந்தன; இவைகளை வேதங்கடோன்றிய நான்கு முகங்களில் ஒவ்வொன்றற்கைந்து வீதம் இருபதும் உந்நதமுகத்தில் எட்டுமாக ஐந்துமுகங்களினுமே தோன்றினவெனக் கூறுவதுமுண்டு; இவ்விருபத்தெட்டும், சிவசாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியங்களையடைய விரும்பும் சத்திநிபாதத்துத்தமர் பொருட்டுச் சிவபெருமானால் அருளிச்செய்யப்பட்டனவாகலானும், சிவபெருமானொருவற்கே பரத்துவங் கூறுவனவாகலானும் சிறப்புநூ லெனப்படும்; சிறப்புநூலென்பதற்குச், சுத்தாத்துவித சித்தாந்த சைவர்களான் மட்டுங் கொள்ளப்பட்டு வருதல்சான்றும்;

மேற்காட்டிய வேத சிவாகம மென்னுமிரண்டும், நித்தியனாகிய சிவபெருமானால் அருளப்பட்டமையானும், பதி பசு பாச மென்னுந் திரிபதார்த்த நிச்சயத்தையும் சீவகோடிகள் சிவனையுபாசித்தே பசுத்துவநீக்கமுஞ் சிவத்துவப்பேறு மடைய வேண்டு மென்னும் இன்றியமையா வுய்தியுபாயத்தையும் தம்முண் மாறுபடாது கூறுதலானும், சிவபரத்துவத்தையே சிரோபூஷணமாகக் கோடலானும், பதிநூலெனவும், அநாதிநூலெனவும், ஆதிநூலெனவும், முதனூலெனவும், மெய்ந்நூலெனவுஞ் சொல்லப்படுவதோடு சிவாவயங்களாயும் விளங்காநிற்கும்; இவற்றிற்குப் பிரமாணம்:—

வேதம்பொதுவாய் ஆகமம்சிறப்பாய்
இரண்டுஞ் சிவவாக்கா மென்பது

திருமந்திரம்.
2397-2399-2404-2379-61-67-68.

"வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக

நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே"

"ஆகு மரனேபஞ் சாந்தக னுமென்ன
ஆகு மறையா கமமொழிந் தானன்றே"

"முதலாகும் வேத முழுதா கமமப்
பதியான வீசன் பகர்ந்த திரண்டும்"

"ஆகு மநாதி கலையா கமவேதம்
ஆகுமத் தந்திர மந்நூல் வழிநிற்றல்"

"வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின்
ஓதத் தகுமற மெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை யோதியே வீடுபெற் றார்களே"

"அஞ்சன மேனி யரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள வாகமம்
அஞ்சலி கூப்பி யறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே"

"அண்ண லருளா லருளுஞ் சிவாகமம்
எண்ணி லிருபத்தெண் கோடிநூ றாயிரம்"

## தேவாரம்.

கோயிற் பதிகம்-3-5. திருவிடைமருதூர்ப் பதிகம்-3-9.

"பொய்யாமறை பாடல் புரிந்தானுல கேத்த"

"ஓதினார் வேதம் வாயால்"

"வேதங்கள் வேள்வி பயந்தார் போலும்"

"வேத மோதும் விரிசடை யண்ணலார்"

## திருவாசகம்.

அன்னைப் பத்து-1. கீர்த்தித் திருவகவல்-10.

"வேத மொழியர்வெண் ணீற்றர்செம் மேனியர்
நாதப் பறையின ரன்னே யென்னும்"

"சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்"

## சிவஞானசித்தியார்.

சுபக்கம் மூதற்சூத்திரம்-46. எட்டாஞ் சூத்திரம்-14-15.

"ஆரண மாக மங்க ளருளினு லுருவு கொண்டு
காரண னருளா னுகிற் கதிப்பவ ரில்லை யாகும்
நாரணன் முதலா யுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாஞ்
சீரணி குருசந் தானச் செய்தியுஞ் சென்றி டாவே"

"அருமறையா கமமுதனூ லனைத்துமுரைக் கையினு
னளப்பரிதா மப்பொருளை யரனருளா லணுக்கள்
தருவர்கள்பின் றனித்தனியே தாமறிந்த வளவிற்
றர்க்கமொடுத் தரங்களினுற் சமயஞ்சா தித்து
மிருதிபுரா ணங்கலைகண் மற்று மெல்லா
மெய்ந்நூலின் வழிபுடையா மங்கம்வே தாங்கஞ்
சுருதிசிவா கமமொழியச் சொல்லுவதொன் றில்லை
சொல்லுவார் தமக்கறையோ சொல்லொ ணாதே"

"வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டும்
ஆரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்
நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கும்
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்"

## கோயிற்புராணம்.

இரணியவன்மச் சருக்கம்-5.

"சுருதிவழி யொழுகினவர் சுவர்க்கத்தா ராகமநூற்
சரியைகிரி யாயோகர் சாலோக சாமீப
வுருவுவமை யினராக வுதவுதுமெம் முடனுகும்
பெருகியஞா னிகளெம்மைப் பெற்றூர்போக் கற்றூரே"

### உண்மை விளக்கம்-3.

"வள்ளலருளா லன்று வாய்மலர்ந்த—தெள்ளியசீ ராகமங்கள்"

## சைவசமயநெறி.

328-முதல், 339-வரைக்கும்.

"சாதாக் கியமென்னுந் தத்துவத்தில் வீற்றிருந்து
சாதா சிவனமலன் ருன்"

"நயந்தா ருயிரெல்லா நண்ணவற மாதி
யியம்பினு ளாகமநா லேழு"

"இருக்கு மிவை யெல்லாஞ் சுத்தவித்தை தன்னிற்
பரக்குமுல கெங்குமெனப் பார்"

"சத்தியோ சாதத்திற் காமிக மாதியைந்தும்
உற்பவித்து நீடுமென வோர்"

"தீத்தமுத லைந்துந் திகழ்வாம வத்திரத்தில்
வாய்த்தன வென்றே மதி"

"விசயமுத லைந்தும் விகிர்தவகோ ரத்தில்
இசையவுதித் தேயிலங்கு மென்"

"தற்புருடத் தேரௌர வாதியைந்துஞ் சாதமாய்
அற்புதமாய் நீடு மறி"

"ஈசானந் தன்னிற் புரோற்கீத மாதியெட்டுந்
தேசார வேயுதிக்குந் தேறு"

"இருபது மெட்டுமே மூல முபபேதம்
இரு நூறு மேழுமென வெண்"

"அறுபத் தறுவர் பிரணவ ராதி
அறிவுறக்கேட் டாராக மம்"

"உதிக்கு முறைதன்னைப் பேதமுற வோதும்
மதித்தே சிலவாக மம்"

"பலவாஞ் சிருட்டி பகரா கமமும்
பலவிதமாய்த் தோன்றுமெனப் பார்"

## திருவிளையாடற் புராணம்.

திருநகரப் படலம்-90-91, வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம்-34-35, வாதவூரடிகளுக்குபதேசித்த படலம்-12.

"அழிவி லானுரை யாகம மிலக்கமாய்ந் தவற்றுள்"

"மறைக ளாகமம் பொதுசிறப் பெனச்சிவன் வகுத்து முறையி
[ஞேதிய"

"சிவாகம நூலிச் சுரவர னடுமுகத் துதித்த"

"கீட்டிசை முகத்தொன் றடுத்தநா லைந்திற் கிளைத்ததா
கிருக்கது தென்பால்—ஈட்டிய விரண்டாம் வேதநூ றுருவோ

டெழுந்தது வடதிசை முகத்தில்—நீட்டிய சாம மாயிர முகத்தா னிமிர்ந்தது குடதிசை முகத்தில்—நாட்டிய வொன்ப தொரு வொடு கிளைத்து நடந்தது நான்கதா மறையே"

"பத்தி செய்தா னருள்பெறும் பத்தருக் கன்றி
முத்தி யெய்தரி தெனமறை மொழிவதப் பொதுநூல்
சத்தி யப்பொருட் டெளிவெலாஞ் சத்திநி பாதர்க்
குய்த்து ணர்த்துவ தாகம மென்பர்மெய் யுணர்ந்தோர்"

## திருவெற்றியூர்ப் புராணம்.

### முனிவர் பூசனைப் படலம்-37-38.

"மறைநான்கு மாகமங்க ளெழுநான்கு மிவையே
வான்பிரம மாஞ்சிவத்தின் வந்தமுத னூல்கள்"

"மறைநான்கும் பல்லோர்க்கும் பலபொருளு மீந்து
மதகோடி கட்கிடனாய் வைதிகத்தாற் பொதுவாம்
துறைநான்கா மாகமங்கள் சத்திநிபா தர்க்கே
தொல்சிவமாம் பொருளீந்து சைவத்தாற் சிறப்பாம்"

## விநாயக புராணம்.

### கடவுள் வாழ்த்து-13.

"வெள்ளி மால்வரை விமலனார் விளம்பிய வேதந் தெள்ளு மாக
[மம்"

## திருப்பெருந்துறைப் புராணம்.

### புரூரவன் திருவிழாச்செய்த படலம்-38.

"கண்ணிய பரம னுயிரெலா முய்யக் கரிசில்வே தாகமம் வகுத்
[தான்"

## அருணகிரி புராணம்.

### வலம்புரி சருக்கம்-1.

"சகலரு முயவெட் டிருபது தருவோன்"

## வாயுசங்கிதை.

### தேவர்கட்குச் சிவாகமமளித்த அத்தியாயம்-8.

"விடைக்கொடி யுயர்த்தோ னாகம முழுதும் முன்புபோல் விள
[ங்கிட விரித்தான்"

## சீகாழிப் புராணம்.

குருத்துரோக விமோசனமான அத்தியாயம்-14.

" காலம் புனைகற் பனையில்லி கனிந்துயிர்க்கா
ஆலம் புனைநீண் முடியைந்து முகத்தினின்றும்
நாலைந்து மெட்டு நயந்தோதிய ஞான நூல்கள் "

## திருநாகைக் காரோணப் புராணம்.

புண்டரீக முனிவர் முதற்காட்சியுரைத்த படலம்-14.

" மறைகளவன் வாய்மொழியே "

## தாயுமானசுவாமி பாடல்.

பொன்னைமாதரை-53.

" அருமறை மலர்ந்த வாய்முக்கண் மாணிக்கச் சோதியே "

## வேதம் சிவ வடிவமென்பதற்குப் பிரமாணம்.

## திருவிளையாடற் புராணம்.

உலவாக் கிழியருளிய படலம்-9.

" மறையே நமது மொழியாகும் மறையே நமது வடிவாகும் "

## விநாயக புராணம்.

சகஸ்ரநாமப் படலம்-23.

" இருக்கெசுர் சாமநயனன் "

## ஆகமம் சிவவடிவ மென்பதற்குப் பிரமாணம்.

## திருக்காளத்திப் புராணம்.

தாருகாவன விகாரமுணர்த்திய அத்தியாயம்-79.

" சும்முருவாய் ஆங்கெழுந்த நல்வடிவமாங்காமிகமாதி யோங்கு
[மாகமம் "

## திருக்குற்ருலப் புராணம்.

சிவபூசை விதியுரைந்த சருக்கம்-39-40-41-42.

"காமிகம் பதங்க ணேக்கால் யோகச மசிதஞ் சாநு
வாமங்கா ரணந்தீ பத்தங் குறங்குசூக் குமம்வாழ் குய்யம்
ஆமியற் சிந்தி யந்தா னங்குலம் விமல நாற்கை
தூமுது கஞ்சு மானே சுப்பிர பேத முந்தி"

"விசயமே வயின்சு வாயம் புவந்தனம் வீரங் கண்டம்
நிசுவாசந் துண்ட மார்பு சந்திர ஞான நெற்றி
வசையறு சித்தம் விம்பம் வதனங்க ளுக்கி னேயம்
இசைபுரோற் கிதமே நாவு ரவுரவ மிலங்கு கன்னம்"

"திரலளி தங்க போலஞ் சென்னியே மகுட மேலைப்
பரமேசந் தரள மாலை பரிவட்டம் வாது ளஞ்சீர்க்
கிரணமா பரணங் காலோத் தரங்கிளர் சாந்த மென்பர்
தருசரு வோத்த மந்தான் பூணூல்சந் தனங்கன் னப்பூண்"

"எங்குமே நிறைந்தோர்க் கிவ்வாருகம மிருபத் தெட்டும்
அங்கமே"

## வேதம் சிவனுக்கு உண்மைப் பரத்துவமும் பிறர்க்கு உபசாரப் பரத்துவமுங் கூறுதற்குப் பிரமாணம்.

## கந்த புராணம்.

சூரனமைச்சியற் படலம்-140. உபதேசப் படலம்-13-14-15-16-17-25-27-28-31. ததீசிப் படலம்-21-22.

"அச்சு தன்னய னமரரா கியபெய ரவர்க்கு நிச்ச யம்படு முக
[மனே"

"வேதமே முதலா வுள்ள வியன்கலை யனைத்துந் தொன்னாள்
ஓதினு னவனே யெங்கட் குரைத்திட வுணர்ந்தா மன்றே
ஈதுநீ யவற்றிற் காண்டி யாருமொன் ருகக் கொண்டாய்
பேதையோ பெரிது மென்னப் பிதாமக னினைய சொற்ருன்"

"அவனிது புகற லோடு மருன்மக னிசைப்பான் மேலாஞ்
சிவனருள் வேதம் பூதத் திறத்தையு முயிர்க ளோடும்
எவரையும் பிரம மென்றே யிசைப்பதென் னெனது நெஞ்சங்
கவலுறு கின்ற தெந்தை கழறுதி கடிதி னென்ருன்"

"என்னலுங் கமலத் தண்ணல் யாவருந் தெரிதரேற்று
உன்னரும் பெற்றி யீதென் றுணர்தரக் கேட்டி யன்னுன்
சொன்னதோர் மறைக டம்மிற் றுணிவுகே ளிறுதி யில்லா
முன்னவற் காத லுண்மை யொழிந்தன முகம னுமால்"

"ஆதலா லீச னல்லா வனைவர்க்கு முயிர்க்கு மைந்தாம்
பூதமா னவைக்கு மேற்றம் புகலுதன் முகம னுகும்
ஓதலா மேலா தாக வொருபொருள் புகழ வேண்டின்
வேதபா ரகரை யன்றோ யானென விளம்பு கின்றார்"

"யாதொரு பொருளை யாவ ரிறைஞ்சினு மதுபோய் முக்கண்
ஆதியை யடையு மம்மா அங்கது போலத் தொல்லை
வேதம துரைக்க நின்ற வியன்புக ழனைத்து மேலாம்
நாதனை யணுகு மெல்லா நதிகளுங் கடல்சென் றென்ன"

"பரசிவ னுணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையு மென்றும்
விரவிய துயர்க்கீ றெய்தி வீடுபே றடைத மென்றல்
உருவமில் விசும்பிற் றோலை யுரித்துடுப் பதற்கொப் பென்றே
பெருமறையியம்பிற்றென்னிற் பின்னுமோர்சான் றுமுண்டோ"

"காரெழில் புரையு மேனிக் கண்ணனை யென்னைப் பின்னை
யாரையும் புகழும் வேத மரன்றனைத் துதித்த தேபோல்
ஒருரை விளம்பிற் றுண்டோ வுரைத்தது முகம னென்றே
பேருல கறிய முன்னும் பின்னரும் விலக்கிற் றன்றே"

"நான்மறை தனிலோர் பாக நாரமார் கடவுட் சென்னி
மேன்மைய தியம்பு மெம்மை விண்ணவர் தம்மை யேனைப்
பான்மைகொள் பூதந் தன்னைப் பல்பொரு டனையும் பாதி
தான்மொழிந் திடுமோ லீது தவறல வுணர்தி தக்கோய்"

"பதியரன் பாசந் தன்னிற் பட்டுழல் பசுநா மென்றே
விதியொடு மறைகள் கூறும்"

"தேவதே வன்மா தேவன் சிறப்புடை யீச னெங்கோன்
மூவரின் முதல்வ னேகன் முடிவிற்கு முடிவாய் நின்றோன்
ஆவியு ளாவி யானோ னந்தண னாதி யென்றே
ஏவரை யிசைத்த வம்மா வெல்லையின் மறைக ளெல்லாம்"

"விதிமுத லாகி யுள்ளோர் வியனுயிர்த் தொகையா மீசன்
பதியவன் பண்ணிய தன்றே பரித்தன ரினைய ரெல்லாம்
இதுவுமச் சுருதி வாய்மை"

## காஞ்சிப் புராணம்.

"அடற்கொடும் பாச மாற்றிப் பசுக்களை யருள்வீட் டுய்ப்பப்
படைத்தளித் தழித்து நோக்கும் பரம்பொருள் சிவனேயென்
உடற்றுநர்க் கரிய வேத வுள்ளுறை யாவது" [றல்

## பேரூர்ப் புராணம்.

வியாதன் கழுவாய்ப் படலம்-10-11.

"என்னையுங் கெடுப்ப மற்றீங் கென்னகா ரியத்தைச் செய்தாய்
முன்னவன் சத்தி யெங்கு மொய்த்தலான் மறைக ளெல்லாம்
வன்னியை யென்னை யாதி வானவர் தமையு மன்னோ
தன்னிகர் பிரம மென்னுந் தானது முகம னன்றே"

"நிறைதரு மின்ப வீட்டி னிச்சலும் வாழ்தல் வேட்டோர்
அறைதரு தேவ ரென்னும் பிறரெலா மகலப் போக்கிச்
சிறைசெய்நீர் வேணிச் செம்ம றென்முகத் திறைஞ்சு கென்ன
மறைமுடி வெடுத்துக் கூறும் வாய்மையே வாய்மை கண்டாய்"

## திருநாகைக் காரோணப் புராணம்.

புண்டரீகமுனிவர் முதற்காக்ஷியுரைத்த படலம்-30.

"பரசிவனே பிரமமெனப் பன்மறையு மெடுத்தோதும்
ஊனிலா ரையும்பரமென் றோதிடுவ தென்னையெனில்
விரவுமுப சாரமே யன்றியுமே வுயிர்ப்ப ரப்பின்
தாமுணர்ந்தும் போலுமெனச் சாற்றுவார் சான்றோரே"

## திருக்குற்றாலப் புராணம்.

தக்கன் வேள்விச் சருக்கம்-4.

"ஆரணகம் பரமனுரை யுண்மைமொழி யவற்கேமற் றவர்கட்
கெல்லாங், காரணமாமுகமனுரை வேந்தனையுமீசனெனல்கடுக்கு
[மென்றான்"

## வீரவனப் புராணம்.

குபேரன் பூசைப் படலம்-14.

"மறைமுழு வதுமமு வலன மைத்தகை
யிறைவனே யேபர மென்று கூறிடும்
அறைதரும் பிறரையு மதுவென் னென்றியேல்
உறையுப சாரமென் றுணர்தி மைந்தனே"

## திருவெற்றியூர்ப் புராணம்.

### திருமால் வழிபடு படலம்-109-110.

" நீவரிய நீள்சுருதி நின்னை விதியையும்பர்
காவலனை யென்றாழைக் காமர் மதியைவிண்கால்
பாவகனீர் மண்ணைப் பரமென்றுங் காங்கிசைப்புச்
சீவபரி பக்குவத்தை நோக்கியெனச் சிந்தைதெளீஇ "

" மேதகவி னோங்கி விளங்கு நிகமாந்தந்
தீதியலாச் சுத்த சிவமே தியேயபதி
யேதிலரெல் லாமவனை யெண்ணியின்பு மேம்பசுவென்
றோதியமெய் யோர்ந்தெமது தாள்சேர்ந்தா னும்மேலோன் "

---

இவ்வேத சிவாகம மிரண்டும், முறையே உள்ளுறையாகவும் வெளிப்படையாகவும் சிவபரத்துவத்தையே தமது தேற்றப் பொருளாகக் கொண்டனவென மேற்காட்டிய ஒற்றுமையுடைமை பற்றியே ஆன்றோர்களால் நூல்களிலெல்லாம் ஒருங்கெடுத்தாளப் பெற்றன; ஒருங்கெடுத்தாளப் பெற்றமைக்குப் பிரமாணம் :—

திருமந்திரம்-1335-ல் " பகுத்திடும் வேதமெய் யாகம மெல்லாம் " எனவும், ஸ்ரீ கயிலாயத் தேவாரம் 8-ல் " அரவொலி யாகமங்க ளறிவாரறி தோத்திரங்கள்—விரவிய வேதவொலி விண்ணெலாம்வந் தெதிர்ந்திசைப்ப " எனவும், சிவஞான சித்தியார் சுபக்கம் எட்டாஞ் சூத்திரம் 13-ல் " இவையெல்லாம் அருமறையாகமத்தே யடங்கி யிடும் " எனவும், 17-ல் " மறைகளாகமங்களினு னறிவெல்லாந் தோற்றும் " எனவும், சிவப்பிரகாசம் முதற் சூத்திரம்-1-ல் " பலகலையா கமவேதம் யாவையினுங் கருத்துப் பதிபசுபா சந்தெரித்தல் " எனவும், உண்மை விளக்கம் 44-ல் " அஞ்செழுத்தே யாகமமு மண்ணலரு மறையும் " எனவும், சங்கற்ப நிராகரணம்-10-ல் " மறைகளாகமத் துறைகண் மற்றெவையும் " எனவும், கல்லாடம்-54-ல் " வேதத் தலையினும் விதியா கமத்தினும் " எனவும், ஒழிவிலொடுக்கம்-1-ல் " வேதா

கமப்பவுரி வீசுங் களாசனிலே" எனவும், விநாயகபுராணம் நைமி சப்படலம் 7-ல் "மறையோ துநரு மாகமத்தின் வழிதேர் குரு ரும்" எனவும், மகோற்கடர் திருவவதாரப்படலம்-54-ல் "அரு மறையா கமமளவை யாதிகளால்" எனவும், கந்தபுராணம் திருக் கல்யாணப்படலம் 2-ல் சொன்ம "றைத்தொகை யாகம முதலிய துதிப்ப" எனவும், காஞ்சிப்புராணம் திருமணப்படலம்-64-ல் "வேதாகமக்குறி வழாவகை மண்டிய கொழுங்கனல் வளர்த்து" எனவும், பெரியபுராணம் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் 1-ல் "வேத நெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க" எனவும், திருவிளையாடற்புராணம் வாதவூரடிகளுக்குபதேசித்த படலம் 13-ல் "வேதவாகமச் சென்னியில் விளைபொருள்" என வும், கூர்மபுராணம் விச்சுவரூப அத்தியாயம் 19-ல் "வேதாக மங்களுரை செய்ய நின்ற தெளிவாகி" எனவும், சூதசங்கிதை சிவப்ரீதிகரமுரைத்த அத்தியாயம்-5-ல் "நலவே தாகம நன்கு கற்பித்தலும்" எனவும், உபதேசகாண்டம் குருமான்மியச் சருக்கம்-13-14-ல் "எல்லை நான்மறை யாகம புராணங்க ளிறப்ப" "இறந்த நான்மறை யாகம புராணங்க ளிவற்றை" எனவும், பேரூர்ப்புராணம் பள்ளுப்படலம்-25-ல் "கலிகெழு மறையா கமங்கழ லாக" எனவும், திருக்காளத்திப்புராணம் கன்னியர்ச்சருக்கம் 16-ல் "வேதாகமங்கள் சொல்லு ஞானமலை யாமற் சொல்வான்" எனவும், திருநெல்வேலிப்புராணம் சப்த விருடிகள் பேறுபெற்ற சருக்கம்-26-ல் "விரித்த சாத்திரம் வேதங்க ளாகமம் விளம்பி" எனவும், உறையூர்ப்புராணம் உதங் கமுனி பொலிவடைந்த சருக்கம்-7-ல் "மறைகளா கமங்க ளாரு வகுத்த வங்கங்கள்" எனவும், மேற்படி சூரவாதித்தச்சருக்கம் 34-ல் "ஆரணம் புராண மங்க மாகம மாயுள்வேதம்" எனவும், திருநாகைக்காரோணப்புராணம் திருநாட்டுப்படலம்-22-ல் "விற ப்பக லுமையோர் பாகன் வேதவா கமபுராணப்—பறப்பினை நறு நீர் செய்ய" எனவும், திருவெற்றியூர்ப்புராணம் திருமால் வழி

படு படலம்-64-ல் "செம்பொருள வாகிகமச் சென்னி யுஞ்சிவா கமமும்" எனவும், திருவாதவூரடிகள்புராணம் திருவம்பலச் சருக்கம்-52-ல் "வேதந்தரு மொழியுந்தொழு விண்ணோர் தம தொலியும்—போதந்தரு சிவஞானிகள் புகலாகம வொலியும்" எனவும், மேற்படி புத்தரைவாதில் வென்றசருக்கம்-25-ல் "அங் கமறை யாகம புராணமவை யாலே" எனவும்-64-ல் "ஆரணம் புகலு மெங்கோ ணுகமம் புகல்வார் சொல்வார்" எனவும், மேற் படி திருவடி பெற்றசருக்கம்-35-ல் "வேதவாகமமும் வாழ்க" எனவும், கச்சியப்ப சிவாசாரியார் புராணம்-23-ல் "தேமிகு மறையுடன் சிவாக மக்குறி" எனவும், தாயுமானசுவாமிபாட லில் "வேதமுடனுகம புராணமிதி காசமுதல் வேறுமுளகலைக ளெல்லாம்" எனவும், "ஆரணங்களாமங்கள்யாவுமே" எனவும், "ஆரணமா கமமெல்லா முரைத்த வருண்மவுன காரணமூலங்கல் லாலடிக்கேயுண்டு" எனவும், "ஆரணமார்க்கத்தாகம வாசி யற் புதமாய் நடந்தருளும்" எனவும், "அகண்டமென்ன வருமறை யாகமம்—புகன்ற நின்றன்மை போதத்தடங்குமோ" எனவும், "இருக்காதி மறைமுடிவுஞ் சிவாகமாதி யிதயமுங் கைக்காட்டு" எனவும், "விதிக்கும் பிரபஞ்ச மெல்லாமுஞ் சுத்த வெயின்மஞ்ச ளென்னவே வேதாகமங்கண் மதிக்கும்" எனவும், "புருடர் பெறுதர்மாதி வேதமுடனுகமம் புகலுமதி னலாம்பயன்" என வும், "கைத்தலம் விளங்குமொரு நெல்லியங் கனியெனக் கண்ட வேதாகமத்தின் காட்சி" எனவும், கந்தர்கலிவெண்பாவில் "வடிக் கும் பழமறைக ளாகமங்கள் யாவு—முடிக்குங் கமல முகமும்" எனவும், கந்தரனுபூதி-26-ல் "வேதாகம ஞான விநோத" எனவும், கந்தரலங்காரம்-17-ல் "வேதாகமசித்ர வேலாயுதன்" எனவும், திருப்புகழ்-132-ல் "சிவகலைக ளாகமங்கண் மிகவு மறை யோதுமன்பர் திருவடிகளேநினைந்து துதியாமல்" என வும், 351-ல் "நாலான வேத நூலாக மாதி நானோதினேனு மிலை வீணே" எனவும், 387-ல் "ஓதுமறை யாகமஞ்சொல் யோகமது

வேபுரிந்து வூழியுணர் வார்கடங்கள் வினைதீர" எனவும், 493-ல் "ஆகமப் பத்தருமற் றூரணச் சுத்தருமுற் றூதரிக் கைக்கருணைத் துப்பு மதில்சூழும்" எனவும் வருவனவாதியாக அநேகமுள வென அறிக;

உபாசித்தோரை யுபாசித்தும் தபோபலமேறி உபாச்சிய ராகிய சிவனைச் சேர்வர்களடையட்டு மென்னு முபாயங்கருதிச் சிவனை யாசிரயித்த மற்றைத்தேவர்கட்கு முன்னும் பின்னும் பரத்துவங்கூறிய வேதங்கட்கு அந்தரங்க வுறுதிப்பொருள் சிவனே யென்பதனை, அவ்வேதம் சிவமூலமந்திரத்தை நடுநாயக மாகக் கோடலானும், யாவரை யாவர்? வணங்கினாலும் அவ்வணக் கஞ்சிவனையே போயடையுமென்னும் உபநிஷத வாக்கியத்தானு மறியலாம்; இதற்குப் பிரமாணம்:——

## கந்த புராணம்.

மேருப் படலம்-5.

"மன்னவ ரமரர் யாரை வணங்கினு மவைக ளெல்லாம்
நண்ணிய பரமன் றூளில்"

## திருநாகைக் காரோணப் புராணம்.

புண்டரீகமுனிவர் முதற்காட்சியுரைத்த படலம்-24. புண்டரீக முனிவர் மூன்றங்காட்சி யுரைத்த படலம்-26.

"மும்மறையு ணடுமறையின் முனிவிலெழு காண்டத்திற்
செம்மைதரு நடுக்காண்டஞ் சேர்ந்தவெழு சங்கிதையில்
அம்மநடுச் சங்கிதையி லாதியி றெழுதித்துநடுப்
பொம்மலுற வமர்மனுவின் பொருளாவா னெவன்மைந்த"

"அதிசயம் பயக்கு நாரா யணவுப நிடதம் யாரை
மதியினிற் குறித்தி யாவர் வணங்கினு மவ்வணக்கந்
துதிகெழு நினவே யென்று சொலுமுனைக் குறித்து நாயேன்
விதியிற்செய் வணக்கம் வேறு மேவுமோ விமல வாழ்வே"

---

வேதமானது, எண்குணச் செல்வனுந் தியேய பதியுமான சிவபெருமானுக்குக்கூறு முண்மைப் பரத்துவத்தோடு, முக்குண

வசத்தருந் தியாதாக்களுமான ஏனைத்தேவர்கட் குபசாரப் பாத்துவத்தையுங் கூறுவதனுல், அக்கூற்று, பதார்த்த கர்த்ருத்துவ கால நாம குண காரியாதி பரஸ்பர தாரதம்மியத்தா லுய்த்துணர்ந்து பதித்துவந் தாங்கு மாற்றலுடையாரிவரெனத் தெளியுஞ் சூக்கும புத்தியுடைய சிலர்க்கன்றித் தூலபுத்தியுடைய மற்றைப்பலர்க்கும் உண்மைப்பதித்துவ நிலையைத் தெளியவொட்டாது மறைத்து நிற்றலினுலே, (மறை) என்று சொல்லப்படும்; இப்பெயரன்றி ஆரணம், நிகமம், சுருதி, ஒத்து, எழுதாக்கிளவி என்பனவும் வேதத்தின் பெயர்களாம்.

ஆகமமானது, சிவபெருமா னொருவற்கே பரத்துவங் கூறிச் சத்திநிபாதத்துத்தமர்களது மனம்புத்திகளாற் சங்கற்ப விவகாரஞ்செய்து சித்தத்திற் றெளிந்த முடிபாய் நிற்றலினுலே சித்தாந்தம் என்று சொல்லப்படும், இப்பெயரன்றி, தந்திரம் மாந்திரம் என்பனவும் ஆகமத்தின் பெயர்களாம்; வேதம் தருவைப்போலவும், உபநிஷத்தென்னும் வேதாந்தம் அத்தருவின் பழத்தைப் போலவும், ஆகமம் அப்பழத்தின் சாரத்தைப் போலவும் கொள்ளப்படுதலால், ஆகமம், வேதசாரமாய் விளங்கும்; இவற்றிற்குப் பிரமாணம் :—

### கயிலாயத் தேவாரம்—1.

"மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி"

### திருவாரூர் நான்மணி மாலை—20.

"தேவரி னொருவனென் றியாவரு மருளுற
நீயே நின்னிலை நிகழாது மறைத்துக்
கூறிய தாகு மாகலிற்
றேறினர் மறையெனச் செப்பினர் நன்கே"

### சிவஞான சித்தியார்.

#### சுபக்கம் எட்டாஞ்சூத்திரம்-15-16.

"பிறநூல் திகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்"
"சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண்
சேர்த்தி * * * * * மொழிந்திடவும்"

## கந்த புராணம்.

மேருப் படலம்-6-10.

“இருட்பெருங்கடலுள் யாமத் தெறிமருத் திடைப்பட்டாங்குப்
பொருட்பெருங் கடலாம்வேதம் புடைதொறு மலைப்ப விந்நாள்
அருட்பெருங் கடலே யெய்த்தே மமைந்தில துணர்வி யாங்கள்
மருட்பெருங் கடலினீங்கும் வண்ணமொன் றருடி யென்றார்”

“அந்தமி லாக மத்தி னரும்பத மூன்றுங் கூறப்
புந்திய தொடுங்கு ஞான போதகம் போதி யென்றார்”

## பண்டார மும்மணிக்கோவை—10.

“குடிலை யென்னுந் தடவய லுப்பண்
நல்லருட் டிறத்தா னம்பி நீயே
வேத மென்னும் பாதவம் வளர்த்தனை
பாதவ மதனிற் படுபயன் பலவே—அவற்றுள்
இலைகொண்டு வந்தனர் பலரே யிலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ
அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே
அவ்வா றுறுப்பு மிவ்வா றுபயப்ப
ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே”

## திருப்பெருந்துறைப் புராணம்.

புநாவன் திருவிழாச் செய்த படலம்-39.

“வேதமார்க் கமெனும் வைதிகக் கிரியை மிளிர்சுவர்க் காதியாம் போகம்—போதநல் குபுபின் சனனமுண் டாக்கும் பொருந்திய வாகம மார்க்கத்—தாதரச் சைவக் கிரியைதா னிட்ட சித்தியு மமையுமோக் கமுந்தந்—தேதவெம் பிறவி யுருவகை செய்யு மாதலா லிஃதொன்றே விசேடம்”

## ஆன்றோர்வாக்கு.

“வேதம் பசுவதன்பான் மெய்யா கமநால்வர்
ஓதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகும்

நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெ மெய்கண்டான்
செய்யதமிழ் நூலின் றிறம்"

---

வேதவழி யொழுகுவது வைதிக மார்க்கமெனவும், சிவாகமவழி யொழுகுவது சைவமார்க்க மெனவும் சொல்லப்படும், இவ்விரண்டு மார்க்கத்தினும் வர்ணுச்சிரம தர்ம பூஜாதிகளைச் சிவபெருமான் அருளிச்செய்திருக்கின்றார்; இதற்குப்பிரமாணம்:—

சூதசங்கிதை.

சர்வ வேதாந்த சங்கிரகமுரைத்த அத்தியாயம்-12-17.
சிவபூசா விதியுஞ் செய்தோர் பெருமையுமுரைத்த அத்தியாயம்-51.

"இத்தகுவை திகமார்க்கப் பிரவர்த்தி யில்லாருக்
கத்தனு ரணத்தில் வன்னர் தருமமாச் சிரமநலம்
ஒத்தபூ சாதியெல்லா முரைத்தபடி யேபறப்பல்
சித்தநில வாகமத்துஞ் செப்பியிருக் கின்றனவால்"

"தூயபுகழ்ச் சிவாகமமே சோர்வில்லா வைதிகமே
நேயமிவற் றெப்போது நிரதரா யிருக்கின்றோர்
ஆயதிரி யக்குதிரி புண்டரநன் கழகாக
மாயமகல் விபூதியாற் றரித்தொளிர்வார் மாதவத்தீர்"

"ஆகம விதிப்படி யளவி லாதவர்
ஏகநா யகனடி யிணைய ருச்சியா
மோகவல் வினைகெட முத்தி யெய்தினர்
போகுயர் புரிசையப் பொன்ன கர்க்கணே"

---

உலகத்தில் ராஜாக்ஞைப்படி நடந்தவர்கள் நன்குமதிப்போடு இன்புறுதலையும் மீறினவர்கள் அவமதிப்போடு துன்புறுதலையும் போல, இகபரசாதக லௌகிக வைதிகக் கிரியைகளனைத்தின் கண்ணும் அவைகளைச் செய்யப்புகும் யாவரும் சிவாக்ஞையாகிய வேத சிவாகமங்களில் விலக்கியனவற்றை யொழித்தும் விதித்தனவற்றைத் தழுவியும் நடப்பராயின் இன்

பமும், கடைப்பராயிற் றுன்பமும் அடைவார்கள்; வேத சிவாகம மார்க்கத்தை மாற்றினவர்களும் வேறு குமார்க்கங்களைக் கற்பித்தவர்களும் அந்நூல்கட்கு உயர்வொப்புக் கூறினவர்களும் அவைகளை நிந்தித்தவர்களும் நரகத்திலழுந்துவார்கள். இதற்குப் பிரமாணம்:——

## சிவஞானசித்தியார்.

இரண்டாஞ் சூத்திரம்-30-31-33.

"மறைகளீ சன்சொ லச்சொல் வழிவார வுயிரை வைக்குஞ்
சிறைகண்மா நிரய மிட்ட பணிசெய்வோர் செல்வத் தோடும்
உறையுமா பதிக ளும்ப ருலகங்கள் யோனிக் கெல்லாம்
இறைவனு ணையினு லின்பத் துன்பங்க ளியைவ தாகும்"

"ஆணையா லவனி மன்ன னருமறை முறைசெய் யாரை
ஆணையிற் றண்டஞ் செய்து மருஞ்சிறை யிட்டும் வைப்பன்
ஆணையின் வழிச்செல் வோருக் கரும்பதி செல்வ நல்கி
ஆணையும் வைப்ப னெங்கு மாணையே யாணை யேகாண்"

"அருளினு லுரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யின்
இருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்"

## விநாயகபுராணம்.

தூமகேது திருவவதாரப் படலம்-35.

"ஆத்தனரு ளான்மொழிந்த வாரணமா கமமென்னு
மூத்தபனு வலின்விதித்த முறைபுரியி னவர்க்கென்றும்
ஏத்தரும்புண் ணியம்புகழென் றிவையுளவாம் விலக்கியன
நீத்தல்புரி யாதியற்றி னெடும்பழிபா வமுந்தொடுமே"

## கந்தபுராணம்.

மார்க்கண்டேயப் படலம்-54.

"வந்தனைசெய் வேதநெறி மாற்றினர்கண் மாருச்
செந்தழல வாயநிர யத்தினிடை சேர்வார்"

## சிவரகசியம்.

வசிட்டருத்தாச் சருக்கம்-14.

"மன்னவர்த மேவல்செய்வோ ரவர்தாஞ் செப்பு மாறுபுரிந்
திடல்வேண்டு மவையே யன்றித்—தன்னினைவின் படிமுடிக்கிற்
குற்ற மன்றோ சங்கரனு ரருள் பெறவே வேண்டு மென்னிற்—
சொன்னபணி புரிந்திடுவீர்"

## சூதசங்கிதை.

சிவபிரீதிகாமுரைத்த அத்தியாயம்-9-10.
பாதக விசாரமுரைத்த அத்தியாயம்-16.

"விதியைப் பேணி விலக்கை யொழித்தலும்"
"சிவப்பி ரீதி கரமெனச் செப்புவார்"

"சுருதிசிவா கமமிருதி யுரைத்தவைக்கு வேறாய தொழில்களெ
ல்லாம்—பெருகுமகா பாதகமாய் முடியுமிதற் கையமென்னோ
[பேசுங் காலே"

## தணிகைப்புராணம்.

அகத்தியனருள்பெறு படலம்-349.

"வேதநல் வழிவிட் டிச்சையா றெல்லாம் விளைத்தவ னுருவினு
மனத்தும்—வேதனை யென்றுந் தணப்புறான் முழுதும் விதப்புறி
னும்பர்நா ளுலக்கும்".

## விருத்தாசல புராணம்.

சிவபூசாவிதிச் சருக்கம்-32.

"புத்திவித் தாரந் தன்னாற் பொருகலி வசத்தாற் பூண்ட
வித்தையாற் பொருளிச் சிப்பால் வேதத்தின் வழியை விட்டுக்
குத்திர மார்க்கங் காட்டுங் குரவனும் புதல்வன் றானும்
பத்திர நரகில் வீழ்வர் பன்னிரத் தியாயஞ் சான்று"

## சேதுபுராணம்.

தனுக்கோடிச் சருக்கம்-9.

"நாலுமறை நெறிமாற்றி நவைநெறியி னடக்குமவ னரினீங்குங்
காலநெடுந் தூதுவரா லடைவனசி பத்திரவெங் கடறுதன்னில்"

## திருப்பெருந்துறைப் புராணம்.

ஆன்மநாத ரனுகிமர்த்தச் செயலுரைத்த அத்தியாயம்-8.

"திருவரச ளுளுமுல கினுக்காணைத் திருமுகங்கள் செலுத்தி யச்சொன்—மருவுநெறி நடப்பவருக் கின்பமுமந் நெறிநடவா மடமை யார்க்கு—வெருவுபல துன்பமுமே வுறவிதித்தல் போலிரண்டா விளம்பு காண்டத்—தருமநன் னூல் விதிநடப்போர் நடவார்க ளுறுபயனுஞ் சாற்றிப் பின்னர்"

## வைராக்கிய தீபம்-5.

"அரையன்வா யுரைகள் வரைதரு முடங்க
லதுவரக் காணின்மற் றவனுள்
தரையின்வாழ் பவருண் ணடுங்கியோர்ந் ததன்வாய்ச்
சாற்றிய முறைசெய்வா ரென்றூற்
கரையில்பே ரின்பந் தரவெமக் கிறைசொல்
கட்டுரை யென்னின்வே றென்னை
உரையுள வேதா கமமவ னெனக்கண்
டுரைத்தவா புரிகுவ தல்லால்"

## திருவிளையாடற் புராணம்.

நகரப் படலம்-90.

"அழிவி லானுரை யாகம மிலக்கமாய்ந் தவற்றுள்—விழுமி தாகிய விதியினும் விலக்கினு மடியைத்—தழுவு தொண்டர்கள்"

## நீதிநெறி விளக்கம்—18.

"விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யு நலத்தகையார்"

## பகவற்கீதை.

பதினாறமத்தியாயம்-20-21. பதினேழாமத்தியாயம்-2.

"கூறின நூல்வழி சேர்குறி பேணு
தேறின வாறுசெய் வாரிக லோகம்
வேறிய லார்பர லோகம் விளக்கும்
பேறின வானவை பேறுபெ றூரால்"

"ஆதலி லனைத்துமறி கைக்குவழி யான
வேதமுத னூலவை விதித்தநெறி யாலே

ஏதநினை யாதுன்வினை யேயிசைக வென்ருன்
பூதமுத லானவை பொறுத்த ருளுகின்ருன்"

"வேத மேமுத னூல்விதி யின்றியே
காத லானுல கோர்செயுங் காரியம்—ஏதமாம்"

## சிவதருமோத்தரம்.

சுவர்க்க நரகவியல்-138-186-216. பாவவியல்-9.

"வேத மாகி நூலி னுள்வி தித்த றத்தி னைப்பழித்
தேத மான நூலி யம்பு மீனர் நாவெ ழுந்துபோய்க்
காத மோட ரைத்து ரங்க லிங்க வெங்க லப்பையால்
வாதை கூரு மாறு கீறி யூறு செய்ய மாய்வரே"

"வேதத்தி னுகமத்தின் விதியிகந்து விடுத்தார்கள்
வாதிக்கப் படுவரவற் றனைத்தினுந்தா மரியாரும்
மேதைக்குண் மாதுரியர் கேட்டவுடன் வீவரெனப்
போதிக்குங் கடுந்தழலிற் கொடுவினையார் புகுவாரே"

"வெதநீதியை விட்டவர்தாமிக—ஏத மாய நரகினை யெய்துவார்"

"ஒப்பிலி யநாதி முத்த னேதிய வேத மாதிக்
கொப்புயர் வுரைப்பார் நிந்தை யுரைப்பவ ருன்னு வாரும்
வெப்பெரி நிரயந் தன்னுள் வீழ்ந்துவெந் துருகி வீயார்
எப்பொழு தேறு வாமென் றிளைத்திளைத் தேங்கு வாரே"

## காஞ்சிப்புராணம்.

ஒழுக்கப் படலம்-47-48.

"மறையுட னேனை நூல்களை * * * ஒப்பெனப்பேசற்க"

"பன்னரு மறையின்புறத்து நூலனைத்துங் கெடுதியே பயக்குமா
தலினுல்—அன்னவை விடுத்து மறைநெறி வழுவாதொழுகி"

## உபதேச காண்டம்.

மூர்த்தி விசேடச் சருக்கம்-34-35.

"ஈதெலா மிப்பரி செடுத்துக் காட்டின
வேதமப் பொருளெலாம் விரித்த வாற்றினைப்
பேதுறப் பொய்ம்மையென் றிழியப் பேசினோர்
தீதெறு நரகெலாஞ் சென்று வீழ்வரே"

"இன்னண முரைத்தன வனைத்து மெம்பிரான்
றொன்னிலை யெனவகுத் துணருந் தொன்மையோர்
பின்னிய விருவினைத் தொடர்பின் பின்னனீத்
துன்னருங் கதியடைந் துறுவ துண்மையால்"

---

வேத சிவாகமங்க ளிரண்டும் அவற்றின் வழிநூல்களும் அவ்வவற்றைப் பற்றி யொழுகுவோர்க்கு அவ்வவைகளே இகபர ஸாதக லௌகிக வைதிகக் கிரியாவாரிகளை விதிக்கு மேனும், சிவாலய நிர்மாணவிதி, கருஷணாதி ப்ரதிஷ்டாந்தமான கும்பாபிஷேகவிதி, ஸௌராதி சண்டாந்தமாகவுந் துவாராதி க்ஷேத்ர பாலாந்தமாகவு மியற்றுகின்ற நித்திய பூஜாவிதி, உச்சவாதி நைமித்திக பூஜாவிதி, சிவாலய தர்மகர்த்ருத்வ விதி, சிவாலய கைங்கரியவிதி, சிவாலய தெரிசனவிதி, சதுர்வித தீக்ஷாவிதி, ருதுசங்கமாதி விவாகாந்த ஷோடஸக் கிரியாவிதி யாதிகளை நன்குணர்த்துவன, சிவாகமங்களும் அவற்றின் வழி நூல்களுமேயாம்; இதற்குப் பிரமாணம் :—

## திருக்காளத்திப் புராணம்.

தாருகாவன விகாரமுணர்ந்திய அத்தியாயம்-79-82-84-85-86.

"ஆங்கெ மூந்தநல் வடிவமாங் காமிக மாதி
ஓங்கு மாகமத் தொழிவிலா நியமநல் லொழுக்கம்"

"தகுசி வக்குறிப் பதிட்டையி னியற்றுதந் திரமும்"

"விரவு தீக்கையின் விதிகளும்"

"நித்தி யத்தொடு நிகழ்த்துநை மித்திக நெறியும்
புத்தி முத்திகள் வழங்குறு திருவிழாப் பொலிவும்"

"அம்பொ னாலய மமைத்திடு தன்மையு மதன்முன்
வம்பு லாமலர் வாவிக ளகழ்ந்திடு முறையும்
இம்பர் மற்றிவை முதலநந் தருமங்கள் யாவும் [தேம்"
பைம்பொ னின்பொறிச் சுணங்கிளங் கொங்கையாய் பகர்ந்

## திருவானைக்காப் புராணம்.

கோச்செங்கணார் வழிபடு படலம் 147.

"இன்னவா றுரைக்குஞ் சுப்பிரபேதம்"

---

இவ்வேத சிவாகமங்களை முன்னர்ச் சிவபெருமான் பாற் கேட்ட பரம்பரையோரையும், ஓதுவித்தற்கும் ஓதற்குந்தக்க அதிகாரிகளையும், இவற்றிற்குச் சாகாசங்கியை கிரந்தசங்கியை களையும், காண்டவிவரண பாதவிவரணங்களையும், இவற்றுள் இவைகளுணர்த்தும் விஷயவிவரணங்களையும், இவற்றின் வழி நூல் சார்புநூல்களையும், இங்கே விரிப்பிற் பெருகுமாதலால், திருமந்திரம் சிவஞானசித்தியார் சூதசங்கிதை சைவசமயநெறி பெரியபுராணச்சூசனம் சைவவினவிடை முதலிய நூல்களுட் காண்க.

## கனம்பொருந்திய, தி வகையார்களே!

முற்று முணர்ந்த முழுமுதற் கடவுளாற்கூறப்பட்ட வேத சிவாகமத்தின் மகிமையை முற்றக்கூறுதல் சிற்றறிவுடையேற் கெட்டாதாகலின் இவ்வளவி னிறுத்துகின்றேன், இவ்வேத சிவா கமப்படி செய்யும் சிவாலயத் திருப்பணியாதி புண்ணியங்களை, ஆதிசைவ சிவாசாரிய மஹான்களின் முகமாகக் கேட்டு அவர் கள் விதிவிலக்குணர்ந் துணர்த்தும் விதானைப்படி செய்வதே முறையாதலாலும், கூறத்தக்கோ ரவர்களே யாதலாலும் அத் தொடர்பு பற்றி, இவ்வேதசிவாகமமகிமைச் சருக்கத்தையடுத்து ஆதிசைவ சிவாசாரிய மகிமைச் சருக்கமெனவொன்று வரையப் படு மானதால், அதனையுந் தயவுசெய்து பார்வையிடக் கோரு கின்றேன். சுபம்.

வேதசிவாகம மகிமைச் சருக்கம்

முற்றிற்று.



# ஆதிசைவ சிவாசாரிய மகிமைச் சருக்கம்.



நூதனச்செய்யுள்.

"உய்வுமைவே தாகமத்திற் குடன்பிறந்தா ரிவர்களெனத்
தெய்வசிகா மணிபரம சிவன்பாலன் னவைசெனித்த
ஐவதனத் துங்தோன்றி யதுலர்களாய் விளங்காதி
சைவசிவா சாரியர்கன் மகிமைதனேச் சாற்றுதுமால்"

---

## குணம்பொருந்திய,தி·வகையார்களே!

சைவம் என்பதற்கு, சிவஸம்பந்தமென்பது பொருளாம்; எல்லாச் சமயங்களேயும் தன்னுள் வியாப்பிய ஸோபானங்களாகத் தழுவிக்கொண்டு அவைகளுக்கெல்லாம் வியாபக மஹோரந்த சமயமாய் விளங்குவது, சுத்தாத்துவித சித்தாந்த சைவசமயமேயாம்; அச்சைவத்தைப் பற்றிநிற்போர், அநாதிசைவர், ஆதிசைவர், மஹாசைவர், அநுசைவர், அவாந்தரசைவர், பிரவரசைவர், அந்தியசைவர் என ஏழுவகைப்படுவர்; இதற்குப் பிரமாணம்:—

. ஆசௌச தீபிகை—20.

"அரியசதா சிவனென்போ னனுதிசைவ னவன்பால்
அவதரித்த சிவமறையோ ராதிசைவ ரிவர்பால்
உரியசிவ தீக்கைபெற்ற பூசுரர்மா சைவர்
உயர்ந்தவா சன்வணிக னனுசைவ ராவார்
பெரியகுவ ளேப்புயத்தோ னவாந்தரசை வன்சீர்
பெறுசவன்ன னுதியனு லோமர்பிர வராம்
விரியவனி மிசையொழிந்தோர் ரந்தியசை வத்தோர்
விரித்திடுமேழ் சைவவித மிவையெனநூல் விளம்பும்"

## கச்சியப்ப சிவாசாரியர் புராணம்-9.

"அகாரமு னநாதி சைவ மாதிசை வத்தி ேனாடு
மகாசைவ மனுசை வஞ்சீர் மருவவாந் தரசை வம்பின்
தொகாதபி ரவர சைவந் தொடருமந் தியசை வம்மென்
றிகாதமெய் யிவ்வேழ் சைவத் திரண்டதாஞ் சைவ மீதால்"

---

மேற்கூறிய ஏழு வகையினருள்ளே அநாதிசைவ னெனப் படும் பரமபதியாகிய ஸ்ரீ சதாசிவமூர்த்தியினது ஐந்து திரு முகங்களினின்றும் அவதரித்த சிவத்துவிஜ குலத்தவர்களே, ஆதிசைவராவர்.

வாயுசங்கிதை பலவகைச் சிருட்டியுரைத்த வத்தியாயம் 20-ல் "அன்னோன் முகத்தி லருமறையோ ருதித்தார் தோளி லரசர் வந்தார்—மன்னுந் துடையில் வந்துதித்தார் வணிகர் வாச மலர்த்தாளிற்—பின்னே யுதித்தார் பின்னவர்கள்" எனவும், விநாயகபுராணம் பிரமசிருட்டிப்படலம்-26-ல் "அந்தணர் குலமு மங்கியு முகத்தி லரசரைப் புயத்தில்வார் துடையிற்—சுந்தரவணி கர்குலத்தினைப் பதத்திற் சூத்திரர் தமையுமுன் படைத்து" எனவும், அருணகிரி புராணம் வலம்புரிசருக்கம்-98-ல் "அந்தணராண் பெண்முறையோ டயன்முகத்தி லுதித்தார்கள்—வந்தனர்பின் புயந்தன்னின் மன்னருமாண் பெண்முறையாற்—பந்தமுடன் வசியரவ னூருவினூற் பவித்தார்கள்—சுந்தரத்த பதத்துதித்தார் சுத்தமொடு சூத்திரரும்" எனவும் கூறியபடி பிரமதேவாது முகம், புயம், துடை, பாதமென்னும் நான்கவயவங்களிற் றோன் றியுள்ள பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திர ரென்னும் நான்கு வருணத்தார்க்கும் சமயாதி நால்வகைத்தீக்ஷைகளை அவ ரவர் பக்குவத்திற் கேற்றவாறு செய்துவைத் துய்வித்தற் பொருட்டுச் சிவதுல்லியாசாரி யாதிகாரத்தோடு ஆதியிற் றோன் றினமையால் இவ்வுத்தமோத்தம சிவத்து விஜ குலத்தவர்களே, ஆதிசைவ சிவாசாரியர்க ளென்று உலகமுழுவதுங் கூறும்.

தத்தம்பொருட்டு ஆன்மார்த்த பூசை செய்யும் ஏனைவருணத்தா ரளவினில்லாது, அவ்வான்மார்த்த பூசையைத் தாமுஞ் செய்வதோடுங்கூட, உலகத்திலுள்ளாரனைவருமுய்தற் பொருட்டுப் பரார்த்த பூசையைத் தங்கட்கேயுரியதெனப் பரோபகார சிந்தையாற் பாரம்பரியத்திற் கொண்டு முப்பொழுதுந் திருமேனி தீண்டிச் செய்துவரும் விசேஷமுடையவர்கள், இந்தச் சிவத்துவிஜகுலத்தவர்களே யாவர்.

**வே**தம், சிவாகம மென்னுமிரண்டினும் பிரவர்த்திக்கும் அதிகார வுரிமையுடையவராய் அவற்றை யாராய்ந்து அவற்றுள் விலக்கியனவற்றை நீக்கி விதித்தனவற்றைச் செய்யுமாறு அனைவர்க்கும் போதிக்கும் ஆற்றலுடைமையாலும், நான்குவருணத்தார்க்கும் சிவதீக்ஷை செய்துவைக்கு முரிமையுடைமையாலும், உலகத்திற் குருக்கண்மார் என்றவளவில் அப்பெயர் ஏகதேச குருத்துவமுடைய அந்நியாளையெல்லா மொதுக்கிவிட்டுத் தமக்குவாய்த்த நிருபபத யோகரூடிப்பெயராய்த் தம்மையே விளக்கி நிற்கப் பெறலாலும், ஆசாரியர் தேசிகர் போதகர் குருக்களென்பன வாதியான குருத்துவவிளக்க நாமங்களெல்லாவற்றையும் வஹிக்கத்தக்கவர்கள், இந்தச் சிவத்துவிஜ குலத்தவர்களே யாவர்.

ஏனைய வருணத்தா ரெல்லாரையும் பரார்த்தந் தீண்டுதற் காகாதாரென விலக்கி அதற்குரிய ரிவரேயென விதித்த சுருதிப் பிரமாணத்தாலும், தரிசிக்கும் ஏனையோரைக்காட்டிலும் மூர்த்தியைப் பரிசிப்போர் உயர்ந்தவராதல் வேண்டுமென நிதானிக்கும் யுக்திப்பிரமாணத்தாலும், தாம் கொடுக்கும் விபூதியை எந்த வருணத்தாரும் எந்த ஆச்சிரமத்தாரும் உபயகரங்களையுநீட்டியேற்கக்காணுங் காக்ஷிப்பிரமாணத்தாலும் தங்கள் மகிமை உலகத்தினிது விளங்கப்பெற்றவர்கள், இந்தச் சிவத்துவிஜ குலத்தவர்களே யாவர்; இவற்றிற்குப் பிரமாணம் :——

## சைவசமயநெறி-435.

“சிவன்முகத்தி லேசனித்த விப்பிர சைவர்
இவரே யருச்சனைக்கென் றெண்”

## அருணகிரி புராணம்.

### வலம்புரி சருக்கம்-31.

“அருச்சனை புரிக விந்த வைந்திலிங் கத்து மன்பாற்
றரித்தெழு நான்கு மீசன் முகத்தினுற் பவித்த சைவர்”

## மாயூரத்தல புராணம்.

“அண்ணலார் திருமு கங்க ளைந்தினுந் தோற்ற முற்றார்
கண்ணலார் பொதுச்சி றப்பா மறைகளா கமங்கள் கற்றார்
நண்ணலார் பார்த்தத் தோடான் மார்த்தமு நயந்தார் சிக்
எண்ணலார் ஆதிசைவர்” [கும்

## விநாயக புராணம்.

“நயத்தகு வேத மோதி நல்லவா கமங்க டேற்றிப்
புயத்தலைச் சூலம் வைத்த புனிதர்பூ சனையாற் பேறு
வயத்துறு தமக்கு மேனை வையகத் தெவர்க்கு மாக்கும்
வியத்தகும் ஆதிசைவர்”

## காஞ்சிப் புராணம்.

“இருண்மலர் தூமிக்குஞ் சிவாகம முறையி னீரிரு
பாதமு மனுட்டித்—தருள்பெறும் ஆதிசைவர்கள்”

## திருவானைக்காப் புராணம்.

“தாங்க ளேயரு ளுடையராந் தகுதியை யுதியார்
யாங்கண் யாவரு மருளின ராம்வகை யெண்ணி
ஓங்கு பூசனை யிரண்டையு முனூற்றுவிப் பிரர்கள்”

## தணிகைப் புராணம்.

“அருள்வளங் கொழிக்கு மைந்தொழிலாக வடங்கிய சிறப்பொடு
பூசை—மருவுமெய் வகையு மாகம வழியான் மயரறத் தெளிந்த
வர் வரையாச்—சுருதிகண் மிருதி புராணமெக் கலையுந் துகளறத்
தெரிந்தவ ரிறைவன்—றருதிரு மேனி தீண்டிடும் ஆதிசைவர்”

## பெரிய புராணம்.

"எப்போது மினியபிரா னின்னருளா லதிகரித்து
மெய்ப்போத நெறிவந்த விதிமுறைமை வழுவாமே
அப்போதைக் கப்போது மார்வமிகு மன்பினராய்
முப்போது மர்ச்சிப்பார் முதற்சைவ ராமுனிவர்"

"தெரிந்துணரின் முப்போதுஞ் செல்கால நிகழ்காலம்
வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்
விரும்பியவர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே யுரியனவப்
பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ"

## திருநாகைக் காரோணப் புராணம்.

"பெருமறை யுடனு கமமுழுஃதுணர்ந்தார் பிறங்குமா தேவியோர் பாகர்—திருமுக மோரைந் தினுமினி துதித்தார் திகழுமான் மார்த்தமொண் பரார்த்தம்—இருதிறங்களுநற் பூசனை புரிவா ரிணையிலாச் சிலமிக்கமைந்தார்—பொருவரும் ஆதிசைவர்கள்"

## திருப்பெருந்துறைப் புராணம்.

"மறையுட னுகம முணர்ந்த மாட்சியர்
பொறையொடான் மார்த்தப ரார்த்தம் போற்றுவார்
அறை பெரும் புகழ்மிகும் ஆதிசைவர்"

## மண்ணிப்படிக்கரைப் புராணம்.

"இறைமு கத்துதித் தெய்துமான் மார்த்தமு—நிறைப ரார்த்தமு மோம்பு நெறியினர்—குறைவி லாமறை யாகமக் கொள்கையார்—அறைபெ ரும்புகழ் ஆதிசைவர்"

## திருக்குறுக்கைப் புராணம்.

"அயன்கொள் சிர்த்தியும் பிற்பட விறைவனு லமைத்த—வியன்
கொ டெய்வவே தாகம முணர்ந்தவர் மேன்மேல்—நயன்கொ
டங்களான் மார்த்தமும் பரார்த்தமு நயந்து—பயன்கொள் ஆதி
[யஞ் சைவர்"

## திருக்குடந்தைப் புராணம்.

"வெள்ளியங் கயிலை விமலனார் மொழிந்த வேதமா கமமுழுதுணர் ந்து—தெள்ளிய சமய முதலொரு மூன்று தீக்கையும் பெற்றபி டேகம்—நள்ளிய திறத்தான் மார்த்தமொண் பரார்த்தநயந்துபூ சித்திரு வினையுங்—தள்ளிய பொலிவிற் களித்துவாழ் ஆதிசை [வர்"

## திருமயிலைப் புராணம்.

"ஓதிமறை யொருநான்கு மிருமூன்று மெழுநான்கு முணர்ந் தெல் லோர்க்கும்—பேதமற நிறைந்துறையுஞ் சிவனேயெம் பெருமானென் றுளத்துட் பேணிச்—சோதிதனைச் சின்மயனைப் பூம்பாவை யீசனெனத் தூயோ னம்பொற்—பாதமல ரர்ச்சிக் குஞ் சிவமறையோர்"

## திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்.

"வைதிக சைவ முற்றும் வரன்முறை வழாது போற்றிப்—பையர வணிந்த வீசன் பரார்த்தவான் மார்த்தபூசை—செய்திறத் ததுல ராய்முத் தீக்கையால் வினை தீர்த் தாளும்—ஐயராம் ஆதிசைவர்"

## திருவான்மியூர்ப் புராணம்.

"சரணெனச் சார்ந்தார் தங்க டரத்தினை யாய்ந்து நன்கு
முரணறு சமய மாதி முறைபெறு தீக்கை யாற்றி
அரனெனும் பாச மாற்றி யரனரு ளின்பு காட்டுந்
தரணியிற் குரவ ராளுர் சார்புபல் சிறக்கு மங்கண்"

## இளைசைப் புராணம்.

"வேதமுற் கலைக ளோடு விரிந்திடு சிவாக மங்கள்
ஓதியே யுண்மை தேறி யுயர்கயி லாய நாதச்
சோதிதன் மேனி தீண்டித் தொன்மையா ராத னஞ்செய்
கோதிலா ஆதி சைவர்"

## வைரவன்கோயிற் புராணம்.

"வேண்டி முப்பொழு தந்திரு மேனியைத்
தீண்டிப் பூசிக்கச் செய்தவஞ் செய்தவர்
காண்ட கத்திகழ் கண்ணுத லன்னவர்
பூண்ட மாட்சிமை புல்லியர் தேர்வரோ"

"பிறர்பொ ருட்டுப் பிராணைச் சபரியை
உறவி மைத்திடு முத்தமப் பேரருள்
அறைவ ரும்புக மாதிசை வக்குல
மறைய வர்க்கெதிர் வையமென் ளுற்றுமே"

## சூரைமாநகர்ப் புராணம்.

"பூதி கண்மணி வாஞ்சையர் பரார்த்தமும் போற்றும்
நீதி வாழ்க்கைய ராகம நெறிமுழு துணர்ந்தோர்
காதி மும்மலங் கண்ணுத லடிநிழல் கலக்கும்—ஆதிசைவர்"

## வீரவனப் புராணம்.

"பூதி கண்மணி புனைந்தவர் மறையொடு பொற்ப
நீதி யாகம முணர்ந்தவர் நிலவிரு திறத்துஞ்
சோதி யர்ச்சனை செய்பவர் மும்மலத் துகடீர்—ஆதிசைவர்"

## அத்தீச்சுர புராணம்.

"பிரமனினு நாற்படிமேற் பிறங்கியரு மறைக்குயிராய்ப்
பரவுசதா சிவமுகோஒற் பனசீல ராயுலகின்
மாபினினுற் சாதியர்க்கும் வயங்குசிவ தீக்காதி
தருமதிகா ரப்பெருமைச் சிவத்துவிசர்"

## சூதவனப் புராணம்.

"நிலவரு வுருவ சதாசிவ சிருட்டி நிமலவே தியர்களா மிவரை
அலர்வரு பிரம சிருட்டிவேதியரே யாதிநாற் சாதியரெவர்க்கும்
மலர்சிவ தீக்கை முதற்சமக் கார வகையெலாம் புரியதி கார
நலனினு லன்றோ குருக்களென் றுலக நயந்திடுங்குறியென நவி
[ல்ப"

## திருவெற்றியூர்ப் புராணம்.

"எனைவர்க்குந் தம்மையோம்ப லியற்கையிற் கிடந்ததொன்றால்
அனைவர்க்கு முய்தி செய்தி யரியவற் றரிதென் றோர்ந்து
நனைவர்க்கத் திச பூசை நம்பொருட் டியற்றி வெய்ய
வினைவர்க்க நீத்த ஆதிசைவர்"

## கோயிலூர்ப் புராணம்.

"கொங்கலர் கடுக்கை வேணிக் குழகரைம் முகத்துந் தோன்றித்
தங்களான் மார்த்தத் தோடு பரார்த்தபூ சனையும் போற்றிப்
பொங்குவே தாக மங்கள் புரையறத் தெரிந்து நாளுந்
துங்கமார் ஆதிசைவர்"

## அரிமழத்தல புராணம்.

"பூதி யீந்திடு முரிமையர் மனுக்களிற் புரையில்
லாதுமேதகு மைந்தெழுத் தன்பருக் கருளுங்
கோதி லாதசற் குருத்துவ விலக்கணங் கொண்டோர்
ஆதிசைவர்"

## கண்டதேவிப் புராணம்.

"எண்ணில்வே தாக மங்க ளையமெய் தாமை யாய்ந்து
மண்ணிலான் மார்த்தத் தோடு பரார்த்தமும் வயங்கப் பூசித்
தொண்ணிதி யருட்பே றெய்தி யொழிந்தமும் மலத்தி னாராம்
புண்ணிய ஆதிசைவர்"

## கரையேறவிட்ட நகர்ப் புராணம்.

"மறைகடேர்ந் தாக மத்தின் வகுத்தநாற் பாதஞ் சான்று
முறைமையாற் சிவபி ரான்மெய் மூன்றுபோ தினுந்தீண் டுற்றே
நிறையன்பிற் பூசை யாற்றி நீடன லோம்பித் தீக்கை
தறையின்மா னுடர்க்கீந் தின்பிற் றழைப்பரால் ஆதிசைவர்"

## காளையார்கோயிற் புராணம்.

"பொதுமையுஞ் சிறப்பு மென்னப் புராதனன் புகன்ற வாய்மை
முதுமறை யாக மங்கண் முழுதுமோர்ந் தென்றும் பூசை
பதியுமான் மார்த்தத் தோடு பரார்த்தத்தும்புரீஇத் தலைக்கோர்
மதிபெறும் ஆதிசைவர்"

---

மேற்காட்டிய பிரமாணங்களுட் சைவசமய நெறியில் "விப்பிரசைவரிவரே யருச்சனைக் கென்றெண்" என்பதன் கண்ணும், பெரியபுராணத்தில் "விரும்பியவர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே யுரியன" என்பதன் கண்ணுமுள்ள ஏகாரங்கள், ஏனையவைதிகப் பிராமணராதி வருணத்தாரைப் பரார்த்தந் தீண்டுதற் குரியரல்ல ரெனவிலக்கியும் சிவத்துவிஜர்களை அதற்குரியரெனத் தேற்றியும் காட்டவந்த பிரிநிலையோடு தேற்றேகாரங்களாகும்; அவ்வாறுதல், ஈண்டுச் சிந்திக்கற் பாலது.

ஸ்ரீசதாசிவ முகோற்பந்நர்களான அபிஷேகாந்த் தீக்ஷை பெற்ற சிவத்துவிஜர்களாற் பரார்த்தபூசை செய்துவரப்பெறு மானல் உலகத்துக்கு க்ஷேமமுண்டாகும், அவ்விதம் செய்தோர் செய்வித்தோரென்னு மிருதிறத்தாரும் சிவலோக வாஸிகளாவர்;

பிரமாவின் முகோற்பந்நர்களான வைதிகப்பிராமணர்கள் சைவதீக்ஷையைப் பெற்றுக்கொண்டபோதிலும் இஷ்டலிங்க மென்னும் ஆன்மார்த்தலிங்க பூசையைச் செய்யலாமேயொழி ய, பரார்த்தலிங்கத்தைத் தொடுதற்கும் அருகராகார்; எக்கார ணத்தினலாவது வைதிகப் பிராமணர்கள் பரார்த்தலிங்கத்தைத் தொட்டால், உலகத்துக்கு நாசமுண்டாகும்; தொட்டால், தொட்டமைக்குப் பரிகாரஞ்செய்து அநந்தரம் சிவத்துவிஜர் கள் சுவீகரித்துப் பூசிப்பதே முறையாம்; இவற்றிற்குப் பிர மாணம்:——

## அருணகிரி புராணம்.

வலம்புரி சருக்கம்-32-33-34.

"தரித்தபி டேக மந்தஞ் சுசியினற் சுத்த சைவர்
அருச்சனை புரிக வென்று மன்பினற் பரார்த்த லிங்கந்
தரித்திடா னபிடே காந்தந் தாவர லிங்கந் தீண்டிற்
பரித்திடா வளத்தைப் பாரும் பார்த்திவற் காகும் பாவம்"

"ஆதலால் வேந்த ராய்ந் தடைவுற வபிடே காந்தம்
ஓதுநூன் முறையி னுள்ள வுத்தம னலே யென்றும்
போதக புனிதன் றன்னைப் பூசனை புரிவித் தானேல்
ஆதிதன் சிவலோ கத்தி லமர்வன்பூ சகனு மாங்கே"

"வைதிகர் பெறினுஞ் சைவ தீக்கையை வாய்க்க வேதங்
கையினற் பரார்த்த லிங்கந் தீண்டுதல் கடனே வன்று
வையகந் தனக்கு நாசம் வருமிவர் தீண்டிற் சுத்த
சைவராற் பரிகா ரத்தைப் புரிகனல் சாற்று மாற்றல்"

## சைவசமயநெறி—436-437.

"அயன்முகத்திற் றேன்றிய வந்தணரர்ச் சித்துப்
பயனடைதற் கிட்டலிங்கம் பாங்கு"

"பாங்கில்லை தீண்டப் பரார்த்த மவர்தீண்டிற்
தீங்குலகுக் காமென்று தேறு"

## திருவிளையாடற் புராணம்.

### இந்திரன்முடிமேல் வளையெறிந்த படலம்-21.

"ஆதியிவ் விலிங்கந் தீண்டற் கருகரல் லாத வேத
வேதியர் முதலோ ரிட்ட லிங்கத்தில் விதியா லர்ச்சித்
தோதிய விரத நோற்க வர்ச்சனைக் குரிய ரல்லாச்
சாதியர் பொருணோர்ந் தாதி சைவராற் பூசை செய்க"

## திருமந்திரம்—519.

"பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றன்னை யர்ச்சித்தாற்
போர்கொண்ட வேந்தற்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டிற்குப் பஞ்சமு மாமென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே"

---

இந்தச் சிவத்துவிஜ மஹோரந்நத குலத்திலே சிவாகம வழிநூல்களாகிய பதினெட்டுப் பத்ததிகளையும் அவரவர்கள் பெயரால் நிலவச் செய்துள்ள தூர்வாஸ சிவாசாரியர், பிங்கள சிவாசாரியர், உக்ரஜ்யோதி சிவாசாரியர், சுபோதக சிவாசாரியர், ஸ்ரீகண்ட சிவாசாரியர், விஷ்ணுகண்ட சிவாசாரியர், வித்யா கண்ட சிவாசாரியர், ராமகண்ட சிவாசாரியர், ஞாநசிவ சிவாசாரியர், ஞாநசங்கர சிவாசாரியர், ஸோமசம்பு சிவாசாரியர், பிரம சம்பு சிவாசாரியர், திரிலோசந சிவாசாரியர், ராமநாத சிவாசாரியர், ஈசாந சிவாசாரியர், வருண சிவாசாரியர், பிராஸாத சிவாசாரியர், அகோர சிவாசாரியர் என்னும் வேதாகமாதி ஸர்வ சாஸ்திர ப்ரமுகர்களான பதினெண்மரும், சமயாசாரியர் நால்வருள் ளொருவரான ஆலால சுந்தர பரமாசாரிய சுவாமிகளும், புகழ்த் துணையார், சடையனார், இசைஞானியார், சிவகோசரி சிவாசாரியர், சடங்கவி சிவாசாரியர், நம்பியாண்டார்நம்பி சிவாசாரியர்

அருணந்திசிவாசாரியர், திராவிடகாந்த புராணக்ருத கச்சியப்ப சிவாசாரியர் முதலிய பல மஹான்கள் சிவாநுக்ரஹத்தினல் நிக்ரஹாநுக்ரஹ சக்தியுடையவர்களாயும், பக்தியாதிக்ய ஞாநாதிக்ய சாஸ்த்ராதிக்ய முடையவர்களாயும் ஆவிற்பவித்திருக்கின்றார்கள்; மேற்காட்டிய பத்ததிகாறர் பதினெண்மரில், உக்ரஜ்யோதி சிவாசாரியரை உத்துங்க சிவாசாரிய ரெனவும், சுபோதக சிவாசாரியரை ஸர்வாத்ம சம்பு சிவாசாரிய ரெனவும், ஸ்ரீ கண்டசிவாசாரியரை நீலகண்ட சிவாசாரிய ரெனவும், ஞாநசிவ சிவாசாரியரை வாகீச சிவாசாரியரெனவும் சில வ்யாக்யாந கிரந்தங்களிற் கூறப்படுதலாற்றான் அந்நால்வர், கீழே பிரமாணங்காட்டிய கச்சியப்ப சிவாசாரியர் புராணச் செய்யுளில் அவ்வப்பெயராதும் வழங்கப்பெற்றன ரென்றறிக; இதற்குப் பிரமாணம்:—

## அகோரசிவாசாரிய பத்ததி.

### பூமிகா லிகித சுலோகம்.

“ துர்வாஸாঃ பிங்களச்சைவ உக்ரஜ்யோதி ஸுபோதகঃ
ஸ்ரீ கண்டோ விஷ்ணுகண்டச்ச வித்யாகண்டஸ் ததைவச
ராமகண்டோ ஜ்ஞாநசிவோ ஜ்ஞாநசங்கர ஏவச
ஸோமசம்புர் ப்ரஹ்மசம்புঃ த்ரிலோசந சிவஸ்ததா
அகோர சிவஏவாத ப்ராஸாத சிவஏவச
ராமநாத சிவச்சைவ ஈசாந சிவஏவச
வருணக்ய சிவச்சைவாஷ் டாதசாசார்ய புங்கவாঃ
ஏதைர்திவ்யைச் சிவாசார்யைঃ பத்ததிঃ பரிபாஷிதா ”

## கச்சியப்ப சிவாசாரியர் புராணம்.

### 12-முதல் 16-வரை.

“ அழனிவந் தன்ன செங்கே ழவிர்சடை முதல்வன் மெய்யி
னிழலெனு நாம மேவி நிகழுமத் தேவ தேவன்
குழகுறு மடியெடுத்துக் கொடுத்ததொண் டத்தொகைக்குப்
பழமைவித் தாகுஞ் சைவப் பரமன்வாழ் குலமு மீதால் ”

“ செருவிலி புத்தூர் மன்னித் திகழ்புகழ்த் துணையார் செல்வ
மருவிசை ஞானியார்நின் மலமுறு சடையனார்மெய்த்

திருவின்முப் போதுமேனி தீண்டுவா ரின்னோர்மாயை
யொருவுமெய் யன்பின் முன்ன ருதித்ததொல் குலமு மீதால்"

"சடங்கவி யாரென் றேதத் தகுமவ ரோடி யாரு
மடங்குசி வகோச னார்சீர் வருணர்வா கீச ருண்மை
தொடங்குமுத் துங்கர் மேலோர் துதிபெறு பிரம சம்பு
தடங்கட லுலகி லின்னோர் தனித்துதி குலமு மீதால்"

"இப்புவி யெங்கு மேன்மை யியைதர வடநூற் சித்தாந்
தப்பிர காசி கைப்பேர்த் தனைநிக ரதனைச் செய்த
ஒப்பினற் சருவான் மாமுன் னுளசம்பு தானு மெய்தி
மெய்ப்பட வவதா ரஞ்செய் விழுப்பெருங் குலமு மீதால்"

"குருகெயி னம்பி யாண்டார் கூரரு ணந்தி யோடு
மருவுறு நீல கண்டர் வளர்புகழ்ச் சோம சம்பு
திருமலி யகோர வாசான் றிரிலோச னசிவ னாதிப்
பெருகுமெய்க் குரவர் பல்லோர் பிறந்ததொல் குலமு மீதால்"

---

பதினெட்டுப் பத்ததிகளும், செய்த கருத்தாக்களான் வந்த காரணப்பெயரைப்பெற்று வழங்கப்பெறுவதானது, தமிழில் அகத்தியம், தொல்காப்பியம் முதலிய நூல்கள் அவைகளைச் செய்தோர்களின் பெயரால் வழங்கப்பெறுதலைப்போலும்; நூல்கள், கருத்தாவின் பெயராலும் வழங்கப் பெறலாமென்பதற்குப் பிரமாணம்:—

## நன்னூற் சூத்திரம்-49.

"முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினும்
இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே"

---

சைவசமயாசாரத்தை விளக்காத இதரசமய நூற்றேர்ச்சியுடையார்க்கு, சிவன் செயலை யறியமுடியாது; அதனை நன்கு விளக்குங்காமிகாதி வாதுளாந்தமான சிவாகமங்களைத் தமதுரி

மையாலாராய்ந் துணர்ந்துள்ள ஆதிசைவ சிவாசாரியார்களே அதனை யறியத்தக்கவர்கள்; ஆதலால், இவர்களை யன்றிச் சிவ பெருமானது தத்துவஞானத்தைப் பெறுதல் கூடாவாம்; இவற் றிற்குப் பிரமாணம்:—

## கந்த புராணம்.

ஞானமைச்சியற் படலம்-129.

"தத்த மாற்றங்க ணிறுவிய சமயிகள் பலருங்
கத்து புன்சொலை வினவின ரவன்செயல் காணார்
சுத்த வாதுள முதலிய தந்திரத் தொகுதி
உய்த்து ணர்ந்திடு மீரரே யொருசிறி துணர்வார்"

## விருத்தாசல புராணம்.

நிருத்தச் சருக்கம்-18.

"ஞான சாரிய ரிடமா யல்லது நம்முண்மை—தான அறியார்"

---

இந்த ஆதிசைவ சிவாசாரியர்க ளிடத்துக் கற்றுணர்ந் தோரை ஒருபுறமாகவும் கல்லாதோரை ஒருபுறமாகவும் வைத் துச் சீர்தூக்கி நிதானிக்கும் போது "கற்றன்பி னிற்போர் கணக் கறிந் தார்களே" எனவருந் திருமந்திரச் செய்யுளும், "கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையாற்றொழுதேத்த" என வரும் பிரமபுரத் தேவாரமும், கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி" எனவரும் திருவாரூர்த் தேவாரமும், "கல்லாதார் மனத்தணுகாக் கடவுடன்னைக் கற்றார்க ளுற்றோருங் காதலானை" எனவரும் திருச்செங்காட்டங்குடித் தேவாரமும், "கற்றிலேன் கலைகள்ஞானங் கற்றவர் தங்களோடும்—உற்றிலே னுதலாலே யுணர்வுக்குஞ் சேயனானேன்" எனவும், "கற்றுக் கொள்வன வாயுள நாவுள—இட்டுக் கொள்வன பூவுள நீருள—கற்றைச் செஞ்சடை யானுள னுமுளோம்—எற்றுக் கோநம னுன்முனி வுண்பதே" எனவும், "கல்லா நெஞ்சி னில்லா னீசன்" எனவும்

வரும் பொதுத்தேவாரங்களும், "கற்றறியேன் கலைஞானங் கசிந்துருகே னுயிடினு மற்றறியேன் பிறதெய்வம்" எனவரும் திருவாசகமும், "கற்றவர் விழுங்குங் கற்பகக்கனியைக் கரையிலாக் கருணைமா கடலை—மற்றவ ரறியா மாணிக்கமலையை மதிப்பவர் மனமணி விளக்கை" எனவரும் திருவிசைப்பாவும், "கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு—புண்ணுடையர் கல்லாதவர்" "உடையார்முன் னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்—கடையரேகல்லாதவர்" "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்—கெழுமையு மேமாப்புடைத்து" "அரங்கின்றி வட்டாடியற்றே நிரம்பிய—நூலின்றிக் கோட்டி கொளல்" "கல்லாதான் சொற்காமுறுதன் முலையிரண்டு—மில்லாதாள் பெண்காமுற்றற்று" "கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்—கொள்ளா ரறிவுடையார்" விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்—கற்றாரோ டேனையவர்" "உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக், களரனையர் கல்லாதவர்" எனவரும் திருக்குறட்பாக்களும், "தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்—இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ—நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்—தும்பருறைவார் பதி" எனவரும் நாலடியார்ச் செய்யுளும், "பொருவிலாவிதி காச புராணங்கள்—தெருளு மாந்தர் சிறப்புளராகுவர்—தருமநூலும் புராணத்தின் றன்மையுங்—கருதி யோர்ந்தவ ரேகலை வல்லரே" எனவரும் கூர்மபுராணத்து அழற்கருமமுரைத்த வத்தியாயத்தாருவது செய்யுளும், தணிகைப் புராணத்து வீராட்டகாசப்படலம்-22-58-ல் "கற்றல் கேட்டலொடு காழறு பெருந்தகைமையும் முற்றினர்" கற்றல் கேள்வி நன்றுடையவர் தமக்கு" எனவருபவைகளும், "கற்றவர் வளைத்துத் திரிபுர மெரித்தோன் கற்றவர் கருத்தினுற் காண்போன்" எனவும், "குலமிக வுடைய ரெழின்மிக வுடையர் குறைவில் செல்வமுமிகவுடையர்—நலமிக வுடைய ரென்னினுங் கல்வி ஞானமற் பமுமிலா தவரை—வலனுயர் கிரிச் செங்கையாய் முருக்கின்

மணமிலா மலரென மதிப்பேன்" எனவும் வரும் பாரதச் செய்யுட்களும், "கல்லாதே ஞானுங் கற்றுணர்ந்த மெய்யடியார்—சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன் பராபரமே" எனவரும் தாயுமான சுவாமிபாடலும், "நற்றா மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற் போற்—கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பில்லா—மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டிற்—காக்கை யுகக்கும் பிணம்" எனவரும் மூதுரைச் செய்யுளும், "கல்லா வறிவிற் கயவர்பாற் கற்றுணர்ந்த—நல்லார் தமதுகன நண்ணாரே—வில்லார்—கணையிற் பொலியுங் கருங்கண்ணாய் நொய்தாம்—புணையிற் புகுமொன் பொருள்" "கற்ற வறிவினரைக் காமுறுவர் மேன்மக்கண்—மற்றையர்தா மென்று மதியாரே—வெற்றி நெடும்—வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்காடி—பால்வேண்டும் வாழைப் பழம்" எனவரும் நன்னெறிச் செய்யுட்களும், "கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்—செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச்—சொல்வளம்—மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்துஞ்—செல்வமு முண்டு சிலர்க்கு" என வரும் நீதிநெறி விளக்கச் செய்யுளும், "கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினுநூல்—வல்லானொருவனையே மானுவரோ—அல்லாரும்—எண்ணிலா வான்மீ னிலகிடினும் வானகத்தோர்—வெண்ணிலா வாமோ விளம்பு" எனவரும் நீதிவெண்பாவும் அறிஞர்களாற் சிந்திக்கற் பாலனவேயாம்.

யாவரும் சிற்றொளிக்கண்களைப்பெற்றிருந்தபோதிலும் சூரியனது பேரொளியோடு கலக்கப்பெற்றார்க்கே யன்றி ஏனையோர்க்கு நிலவுலகப் பொருள்களைக் காணமாட்டாமைபோல, பெருஞ்செல்வத்தோ டியற்கையறிவைப் பெற்றிருந்தபோதிலும் இவ்வாதிசைவ சிவாசாரியர்களின் முகமாய் வேதசிவாகம விதிவிலக்குணர்ந்தார்க்கேயன்றி ஏனையோர்க்கு, புண்ணிய பாவ இம்மை மறுமை வீட்டியல்புகள் தெரியமாட்டா; ஆகவே, அவ்வியல்பு தெரியாதார் செய்யப்புகுந்த பதிபுண்ணிய பசுபுண்

ணியங்கள், தாழ்ப்பாலில்லாத கதவைப் போன்று நிவாதவல்லப மில்லாதனவாகும்; இவற்றிற்குப் பிரமாணம்:—

## திருக்குற்றாலப் புராணம்.

### நாற்பயனுரைத்த சருக்கம்-1.

"இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும் வானிரவி
யெழுந்தா லன்றிக்
கருதுநிலப் பல்பொருளுங் காண்டலரி தாமுலகிற்
கண்போல் யாரும்
பெருகியசெல் வமுமறிவும் பெற்றாலு நூற்கேள்வி
பெறுவார்க் கன்றித்
திருவளர்புண் ணியபாவ மிம்மைமறு மையும்வீடுந்
தெரியா வன்றே"

## நன்னெறி—32.

"பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னு மறங்கள் வலியிலவே—நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான்"

---

மேற் பிரமாணங்காட்டிய பாக்களிற் பொதுவாகப் புண்ணியம் அறமென்ற வளவிற், பதிபுண்ணியம் பசுபுண்ணிய மென்னுமிரண்டும் அடங்கும், அடங்குமேனும், அவற்றுயர்ந்துள்ள சிவாலயத்திருப்பணியாதி பதிபுண்ணியங்களை, இவ்வாதிசைவ சிவாசாரியர்க ளிடத்துக்கேட்டுத் தெளிந்து அவர்களநுமதிக்கின்ற விதானைப்படி செய்யவேண்டியது மிக்க அவசியமாகும்; அவ்வாறு செய்தாற்றான் அவைகள், செய்தகர்த்தாவுக்குப் பலனையுந்தந்து உலகத்தில் என்றென்றைக்கும் விளங்கிக்கொண்டிருக்கும்; அவ்வாறு கேளாமல் விதானையின்றித் தம் மனம்போனவாறே செய்யின் அவைகள், பயன்றராமையோடு, தாமும் நிலைக்காமற் கெட்டொழியு மென்பது, சிவாகம சம்மதமாகும்; இதற்குப் பிரமாணம்:—

## சிவபுண்ணியத் தெளிவு—142.

"புங்க மாஞ்சிவ புண்ணியந் தேசிகர்
தங்கள் வாக்குப தேசம தன்றியே

இங்கி யற்றி னிரும்பய னில்லையாய்
மங்கு மென்னும் வரன்புக லாகமம்"

---

இனி, இவ்வுலகத்தில் வைக்கீல்த்தொழிற்கண் சீனியரிடத்திற் ஜூனியராயிருந்தும், வயித்தியத்தொழிற்கண் டாக்டரிடத்திற் கம்பவுண்டராயிருந்தும், துலைக்கொண்டுவிலைத் தொழிற்கண் மேலாளிடத்தில் அடுத்தாளாயிருந்தும் பழகி அநுபவத்திற்றேர்ந்தவர்களே, அவ்வத்தொழிற்கும் வல்லவர்ளெனக் கொள்ளப்பட்டு அந்த அந்த மேல்வேலைகளின்கண்ணும் நியமிக்கப்படுதலை நேரிற் பார்க்கின்றேமாதலால், அதனைக்கொண்டே, ஏனைய ஒவ்வொரு தொழிற்கும் அதுஸம்பந்தமான கல்வியைக் கற்றிருந்தபோதிலும் அக்கல்வியோடு அநுபவமுமுடையவர்களே நடாத்தவும் இட்டோட்டந்தெரிந்து சொல்லவும் வல்லவர்களாவார்களென்பதனை நன்கறியலாம்? அதுபோல, இந்த ஆதிசைவ சிவாசாரிய பரம்பரைக்கே, திருவெற்றியூர்ப்புராணம் முனிவர் பூசனைப்படலம்-41-ல் "தீக்கைபெற்றார்க் கன்றியாகமத்தி னதிகாரமிலது" எனக்கூறியபடி சிவதீக்ஷைபெற்ற பின் பாராயத்தக்க சிவாகமாராய்ச்சியோடு, அவ்வாராய்ச்சியின்படி சிவாலயத்திருப்பணி கும்பாபிஷேகம் உச்சவம் நித்திய நைமித்திக பூசை முதலியவைகளில் அளவு - நியதி - காரணம் - காலம் - திக்கு-கருத்து-இடம்-மந்திரம்-தந்திரம்-பாவனை முதலியவைகளைத் தமது முன்னோர்களின் கைக்கீழ் வாழையடி வாழைபோலிருந்து பழகிவந்த பழக்கமேறியதனாற் றேறிய அநுபவத்தேற்றமும் வாய்த்திருக்கின்றபடியால், மேற்கண்ட திருப்பணியாதி காரியங்களின் விதிவிலக்குகளைக் கல்வியோடு அநுபவத்திலும் ஒட்டி யாராய்ந்து விதரணையாயெடுத்துச் சொல்லத்தக்க வல்லபமுடையவர்கள், இந்த ஆதிசைவ சிவாசாரியர்களேயாவார்கள்; ஆதலால், இவர்கள்பாற் கேட்டு இவர்களது சொற்படிக்கே திருப்பணியாதி கைங்கரிய கர்த்தாக்கள் அவைகளைச் செய்யக்

கடவர்; சிவதீக்ஷையைப் பெற்றுச் சிவாகமங்களைக் கற்றமட்டோடுள்ள ஏனையவருணத்தாரின் சொற்படி செய்யலாகாதோ வென்னில்? செய்யலாகாது; எதனுலெனின்? சிவஸம்பந்தமானவற்றை, தமது ஜாதியதர்மமெனக் கொண்டு அநவரதமும் ஆலயத்துட்புகுந்து வஹித்து அவையனைத்தின்கண்ணும் பலவாற்றாற் றேர்ந்து பெற்ற இந்த ஆதிசைவ சிவாசாரியர்களினது அநுபவாதிக்யத்தை ஏனைவருணத்தோர்கள் பெறுதற்கியலாமையால் அவர்களது நிரநுபவச் சொல்லைமட்டுங்கொண்டு செய்யலாகாதென நிச்சயமாய் அறிக.

வேதாகமபண்டிதர்களாயும் சிவார்ச்சநாபரர்களாயும் லோககுருவாயுமுள்ள இந்த ஆதிசைவ சிவாசாரியர்களுக்கும் பரமசிவனுக்கும் பேதமில்லை என்றும், அறியாமையாற் பேதங் கல்பிப்பவன் கெடுவனென்றும், இவர்களைச் சிவமாகவே பாவிக்கவேண்டு மென்றும் சிவாகமங்களிலே கூறப்பட்டிருக்கின்றன. புராணாதிகளிற் கூறப்பட்டனவோ அபரிமிதம்; சமுத்திரத்தையும் பர்வதத்தையும் போன்று அளவிடுதற்கரிய இவர்களது மகிமையில் அடியேன் இதுகாறுங் கூறியுள்ளது திவலையையும் அணுவையும் போலும்; "சிவத்துவிசப் பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ" எனப்பெரிய புராணத்திற் சேக்கிழார்பெருமானே கூறமுடியாதென்று கைவிடுவாரானல் மற்றெவர்களாற் கூறமுடியும்? முற்றக் கூறமுடியாவென்பது தேற்றம்; ஆதலால் இதனை, இவ்வளவி னிறுத்திக் கொண்டு, இவ்வாதிசைவ சிவாசாரியர்கள்பாற் றெரிந்து இவர்கள் கூறும் விதரணைப்படி செய்யத்தக்க திருப்பணியைப்பற்றி, இதனையடுத்து, திருப்பணிச் சருக்கமென ஒருசருக்கம், கூறப்படும்; அதனையும், தயவுசெய்து, பார்வையிடக் கோருகின்றேன்; சுபம்.

ஆதிசைவ சிவாசாரிய மகிமைச் சருக்கம்
முற்றிற்று.

# திருப்பணிச் சருக்கம்.

---

நூதனச்செய்யுள்.

* பொருப்பிறைவில் கைக்கொண்ட புராதனன்றன் போகசத்திக்
கிருப்பிடமாய்க் கருத்தாவின் களத்திரத்திற் கேமமதாய்க்
கருப்பவிற்குச் சுத்தியதாய்க் கழறுமர்த்த மண்டபச்சீர்
திருப்பணியின் சருக்கமென வைத்திதன்கட் செப்புதுமால்.

---

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

திருப்பணி என்னுஞ் சொல்லுக்கு, சிறப்புப் பொருந்திய கைங்கரிய மென்பது பொருளாகும்; அச்சொல்லானது அடைமொழி விசேஷணத்தாற் சிவகைங்கரியமெனக் கொள்ளப்பட்டு அக்கைங்கரியங்க ளெல்லாவற்றிற்குஞ் செல்லும்; செல்லுமேனும் ஆலயங்கட்டுதற் கைங்கரியத்தை யோகரூடிப் பெயராய் நின்றுணர்த்துதலால் அதற்கு மிகவுரித்தாகக் கொள்ளப்பட்டு உலகத்தனைவராலும் வழங்கிவரப்படும். ஆலயங்கட்டுதற் பணியினுள்ளும் (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால்) போடப்பட்ட திருப்பணிப்பிளானில் விசுவநாதர் விசாலாக்ஷிக்கு விலக்கப்பட்ட அர்த்தமண்டபம் இன்றியமையாச் சிறப்பினதாயும் அவசியஞ் செய்யவேண்டிய முக்கியாங்கமாயு மிருத்தல்பற்றி அது ஸம்பந்தமான விதிவிலக்குமட்டும், இச்சருக்கத்திற் கூறப்படும்.

சிவாலயத் திருப்பணியானது, வேதசிவாகமாதிகளிற் கூறப்பட்ட விதிவிலக்கை யுணர்ந்து, ஆதிசைவ சிவாசாரிய மஹான்

---

* பொருப்பிறை-மஹாமேருபர்வதம்.
களத்திரத்திற்கேமம்—மனைவியைக்காப்பாற்றுங்களத்திரகாரகம்.
கருப்பஇல்—கெர்ப்பக்ரஹம்.

கள் கூறும் விதாணைப்படி, செய்யத்தக்க தென்கிற முறைமை பற்றி, வேத சிவாகம மகிமைச் சருக்கமெனவும் ஆதிசைவ சிவாசாரிய மகிமைச் சருக்கமெனவும் இரண்டு சருக்கங்களை முன்னர்க் கூறிக்கொண்டு, அவைகட்குப்பின்னர், இத்திருப் பணிச் சருக்கங் கூறப்பட்டது.

இனி, (தி-ராம-தி-சுப-அவர்களாற்) போடப்பட்ட பிளான் ஸம்பந்தமாகச் சிலவிஷயம் ஸமூகத்திற் றெரிவித்துக்கொண்டு, அப்பாற் றிருப்பணிவிஷயத்தைக் கூறுகின்றேன்.

வயக்கிரமத்தா லுயர்ந்தவர்களாகிய (தி-ராம-தி-சுப-அவர்கள்) விசுவநாதர் விசாலாக்ஷிக்குப் பிளான்போட்டு அர்த்த மண்டப ரஹிதமாய்த் திருப்பணி செய்யலாமென்ற சொல்லானது, பௌஷ்யத்தில் கருத்ருகளத்திரமாரக துக்கந்தருதல் பற்றி இழிந்ததாய் முடிதலால், அதனைத் தள்ளுவதும், அவ்வயக்கிரமத்தா லிழிந்தோனாகிய (அடியேன்) அர்த்தமண்டப ஸஹிதமாய்த்தான் திருப்பணி செய்யவேண்டுமென்று முறையிடுஞ் சொல்லானது, கர்த்ருகளத்திர காரகசுகந்தருதல்பற்றி உயர்ந்ததாய் முடிதலால், இதனைக் கொள்ளுவதும், (தி-வகைப் பொதுவார்களது) ஸமுகத்துக்குத் தக்கதாகும்;

எதனாலென்னில்? உயர்ந்தோராற் கூறப்படும் விஷயம் இழிந்ததாயிற் றள்ளவேண்டு மென்பதும், இழிந்தோனாற் கூறப் படும் விஷயம் உயர்ந்ததாயிற் கொள்ளவேண்டு மென்பதும், யார்? எத்தனையைச் சொன்னபோதிலும்? அவற்றுட் குணவசனமே கிராஹ்யயோக்கியமாயுள்ள தென்பதும் நூற்றுணிபாகும்; இதற்குப் பிரமாணம்:—

## விநாயகபுராணம்.

### அரசியற்கைப் படலம்-49.

"இழிந்தவ னுயர்ந்த தொன்றை யியம்பினு முயர்ந்தோன் வாயில்
இழிந்ததொன் றுறினு முள்ள வியல்பறிந் தோம்பி நீக்கி"

திருக்குறள்—423.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

நீதிநெறி விளக்கம்—33.

"ஏதிலார் யாதும் புகல விறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு"

---

# கனம்பொருந்திய, தி-வகையார்களே!

விசுவநாதர் விசாலாக்ஷிக்கு (தி-ராம-தி-சுப-அவர்களாற்) சாஸ்த்திர விரோதமாகப் போடப்பட்டிருக்கிற பிளான்படிக்கு அர்த்தமண்டபம் வைக்காமற் திருப்பணி செய்தால் அது, தீமைச்செயலாகும்; ஆதலால் அந்தப்பிளான்படி செய்வது, (நமது-தி-வகையாகிய உயர்குடிப் பிறந்தார்க்குத்) தக்கதன்று;

ஏனென்னில்? உயர்குடிப் பிறந்தார்க்கு நல்லவைசெய்தல், இயற்கைக்குணமாகும்; தீயவைசெய்தல், இழுக்காகும்; நல்லவையுந் தீயவையுமாகிய எல்லாமும் அவர்களாற் கலந்து செய்யப்படுமாயின் அதனால், குடிப்பிறப்பாற் போந்தபயனில்லையாய் முடியும்; ஆதலாற் குடிப்பிறந்தார், குற்றம்வரத்தக்க செயலைச் செய்ய ஒருகாலத்துந் துணியார்; ஒருவாறு பராமுகத்தாற் செய்வரேல், குடிப்பிறந்தாரது அக்குற்றம், வானச்சந்திரனிடத்துள்ள களங்கத்தைப் போலவும், இடபத்தின் கழுத்தருகிலிருக்கிற திமிலைப் போலவும் உலகத்தில் எடுப்பாய் வெளிப்படத்தோன்றும்; ஏனைச் சிறுகுடிப் பிறந்தார் செய்யுங்குற்றமெப்படியாகுமெனில்? பிரகாசியாமல் விரைவில் மறைந்துபோம்; அதனாற் குடிப்பிறந்தார், தமது பிறப்பினேற்றத்திற் கிணங்கத் தீமைச் செயலைத் தவிர்தலினும், நன்மைச் செயலைப் புரிதலினுமே கண்ணுயிருப்பார்கள். இதற்குப் பிரமாணம்:—

## நாலடியார்—144-186.

"நல்லவை செய்த லியல்பாகுந் தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகும்—எல்லாம்
உணருங் குடிப்பிறப்பி னூதிய மென்னோ
புணரு மொருவர்க் கெனின்"

"பெருவரை நாட பெரியார்கட் டீமை
கருநரைமேற் சூடேபோற் றோன்றுங்—கருநரையைக்
கொன்றன்ன வின்னா செயினுஞ் சிறியார்மேல்
ஒன்றானுந் தோன்றாக் கெடும்"

## திருக்குறள்—957-202.

"குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து"

"தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்"

---

☞ சிவாலயத்தில் முன்னே ஏற்பட்ட
அங்கத்தைக் குறைத்தால், அதனாற்
சர்வதோஷங்களுமுண்டாகு மென்பது.

இனி, (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால்) விசுவநாதர் விசாலாக்ஷிக்கு, கெர்ப்பக்கிரகம் அர்த்தமண்டபமென்கிற இரண்டங்கத்தோடு புராதநாலயமிருக்கவும், இனிப்புதிதாய்க் கட்டுவதாகத் தீர்மானித்துப் போட்டப்பட்டிருக்கிற நூதநாலயப் பிளானில் மேற்கண்ட இரண்டங்கத்து ளொன்றாகிய அர்த்த மண்டபங் குறைக்கப்பட்டிருப்பதால், அந்தபிளான்படி செய்வது, சிவாலயபூர்வாங்க ஹீநதோஷமாகும்; எவ்வா றென்னில்? ஒரு ஆலயத்தைக் கட்டப்புகுவோர், அவ்வாலயத்தில் முன்னிருந்த அங்கலெக்ஷத்துக்கும் விசாலத்துக்கும் குறைத்துச் செய்வார்களேயானல் ஸர்வதோஷத்தையுமடைவார்கள்; கூட்டிச் செய்வார்களேயானல் ஸர்வசுபங்களையுமடைவார்கள்;

அர்த்தமண்டப சூந்யமாகத் திருப்பணி செய்தால் அவ்வாறு செய்த கர்த்தாவும், செய்யப்பட்ட கிராமமும், நாசமடைவதோடு, துர்ப்பிக்ஷமு முண்டாகும்; கெர்பக்ரஹத்தைக் கபாலமாகிய சிரசென்றும், அர்த்தமண்டபத்தை முகமென்றும் ஒன்றைவிட்டொன்று பிரித்தற்கியலாத அவிபக்தாங்கமாக ரூபகஞ் செய்து சிவாகமம் விதித்தலால், அவ்விரண்டுள், யாதேனுமொன்று தனியே செய்யப்படும்பக்ஷத்தில் அது, பூர்த்தியற்றந்யூநாங்கமாக முடியும்; மந்த்ரஹீனத்தாலாசாரியரும், க்ரியாஹீனத்தாற்சிற்பியும், அங்கஹீனத்தாற்கர்த்தாவும் நாசமடைவார்களென்று கீழ்க்காட்டப்பட்ட பிரமாணப்படி ஆகமம் விதித்தலால், ஈண்டுக்குறிப்பிட்ட அர்த்தமண்டப அங்கஹீனம், கர்த்ருநாசத்தை நிச்சயமாய்த் தருவதாகும்; இவற்றிற்குப் பிரமாணம்:—

## பூர்வகாரணாகமம்.

சீர்ணோத்தாரணவிதிப் படலம்-38.

"[illegible] ।
[illegible] ॥"

[தமிழில்]

"ஹீநமாநோத் த்ருதேதாம்நி சாஸ்த்ரோக்தே நாதிகம்குரு
தஸ்மாத்ஹீநம் நகர்த்தவ்யம் உத்க்ருஷ்டம் சுபதம்ஸ்ம்ருதம்"

## சுப்ரபேதாகமம்.

சீர்ணோத்தாரணவிதிப் படலம்-27-28.

"[illegible]
[illegible]"

"[illegible]"

[தமிழில்.]

"ப்ராகார மண்டபாதீநாம் யச்சீர்ணம் தத்ரதத்விநா
குர்யாத்பூர்வ வத்தீமாந் ஸுதிருடம்ஹி மநோரமம்"

"அந்யதா யதிகுர்யாச்சேத் ஸர்வதோஷா வகம்ந்ருணாம்"

## சீரணோத்தாரண தசகம்.

"𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵 𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑍇𑌨 𑌹𑍀𑌨𑌞𑍍𑌚𑍈𑌵 𑌨𑌕𑌾𑌰𑌯𑍇𑌤𑍍"

[தமிழில்]

"தஸ்மாத்ஸர்வ ப்ரயத்நேந ஹீநஞ்சைவ நகாரயேத்"

சீரணோத்தாரணதசகத்தில் 47-வது பக்கத்திலெழுதப்பட்ட

## சில்பவிஸ்வகர்மீயம்.

"𑌮𑌾𑌨𑍋𑌨𑍍𑌮𑌾𑌨𑌾𑌦𑌿 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌵𑌿𑌮𑌾𑌨𑌂 𑌮𑌣𑍍𑌡𑌪𑌨𑍍𑌤𑍍𑌵𑌾
𑌤𑌨𑍍𑌮𑌾𑌨𑌾𑌦𑌧𑌿𑌕𑌂𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌹𑍀𑌨𑌞𑍍𑌚𑍇𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌦𑍋𑌷𑌕𑍃𑌤𑍍"

[தமிழில்]

"மாநோந்மாநாதி ஸம்யுக்தம் விமாநம் மண்டபந்துவா
தந்மாநா ததிகங்குர்யாத் ஹீநஞ்சேத் ஸர்வதோஷக்ருது"

## சகலாகமஸார ஸங்க்ரஹம்.

சீரணோத்தாரண படலம்.

"𑌗𑌰𑍍𑌭𑌾𑌲𑌯 𑌵𑌿𑌹𑍀𑌨𑍇𑌤𑍁 𑌅𑌰𑍍𑌧𑌮𑌣𑍍𑌡𑌪 𑌹𑍀𑌨𑌕𑍇
𑌮𑌹𑌾𑌮𑌣𑍍𑌡𑌪 𑌹𑍀𑌨𑍇𑌤𑍁 𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑌾 𑌕𑍍𑌷𑌯𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍
𑌗𑍍𑌰𑌾𑌮𑌨𑌾𑌶𑌞𑍍𑌚 𑌦𑍁𑌰𑍍𑌭𑌿𑌕𑍍𑌷𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌵𑌰𑍍𑌣𑌿𑌨𑌾𑌮𑍍"

[தமிழில்]

"கெர்ப்பாலய விஹீநேது ஹ்யர்த்தமண்டப ஹீநகே
மஹாமண்டப ஹீநேது தத்கர்த்தா க்ஷயமாப்நுயாத்
க்ராமநாசஞ்ச துர்பிக்ஷம் ஜாயதே ஸர்வவர்ணிநாம்"

## பூர்வகாமிகாகமம்.

ஆசாரியலக்ஷண விதிப்படலம்-432.

"𑌗𑌰𑍍𑌭𑌗𑍇𑌹𑌂 𑌶𑌿𑌰𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌅𑌰𑍍𑌧𑌞𑍍𑌚𑌾𑌪𑌿 𑌲𑌲𑌾𑌟𑌕𑌮𑍍"

[தமிழில்]

"கர்பகேஹம் சிரஸ்தாநம் ஹ்யர்த்தஞ்சாபி லலாடகம்"

## சகஸ்ராகம நிரூபணம்.

"𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌹𑍀𑌨𑍇𑌨𑌤𑍁 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌹𑍀𑌨𑍇𑌨𑌤𑍁 𑌶𑌿𑌲𑍍𑌪𑌿𑌨𑌂
𑌸𑌂𑌪𑌹𑍀𑌨𑍇𑌨𑌤𑍁 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌂 𑌕𑍍𑌷𑍇𑌮𑌨𑌾𑌶𑌨𑌮𑍍"

[தமிழில்]

"ஆசார்யம் மந்த்ரஹீநேது க்ரியாஹீநேது சில்பிநம்
அங்கஹீநேது கர்த்தாரம் த்ரிவர்க்க குலநாசநம்"

---

ஸ்ரீ கெர்பக்ரஹத்திற் பூஜாநைவேத்தியங்களை வைத்துச் செய்யலாகாது; செய்தால், ஆசாரியருக்குப் பீதியும், ஊராருக்கு வியாதியும், கர்த்தாவுக்கு நாசமும், மூர்த்திக்குத் தோஷமும் உண்டாகுமென்பது.

இனி, (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியார்) விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்தமண்டப மில்லாதபடி கெர்ப்பக்கிரஹத்தைமட்டும் வைத்துப்போட்ட நூதநாலயப்பிளானை, நமது (தி-வகைப்பொதுவாரனைவரும்) கூடித் திருப்பணிவேலைக்குப் பதின்மரை நியமனஞ்செய்த டயத்திற் காட்டியபோது, பூஜாநைவேத்தியங்களை யெங்கே வைத்துச் செய்கிறதென்று (அடியேன்) கேட்டதாகவும், கெர்ப்பக்கிரஹத்தில் வைத்துச் செய்யலாமென்று (அவர்கள்) பதிற்சொன்னதாகவும், அதில்வைத்துச் செய்தாற் றோஷமென்று (அடியேன்) மறுத்ததாகவும் மேலேயுள்ள திருப்பணிமுயற்சி வர்த்தமானச் சருக்கத்திற் சொல்லியிருக்கின்றேனல்லவா? அவ்வாறு, கெர்ப்பக்கிரஹத்திற் செய்யலாகாதென்பதற்கு ஆகமப்பிரமாணத்தை இங்கே காட்டுதும்; கெர்ப்பக்கிரஹத்தில் பூஜாநைவேத்யாதி யுபசாரங்கள் செய்யலாகாது; மூர்க்கத்தனத்தாலாவது அறியாமையாலாவது செய்தால் சிவாசாரியரென்று சொல்லப்படுகிற குருக்கள் மநோபயத்தையடைவார்; தர்மகர்த்தா நாசத்தையடைவார்; கிராமவாஸிகளுக்குச்சொத்துவிரயமும், தரித்திரமும், காலரா, அம்மை முதலிய சமஸ்த ரோகங்களும், நாசமுமுண்டாகும்; இம்மட்டோ, ஐயோ! ஐயோ! சிவலிங்கமும் தோஷத்தையடையுமே; இவற்றிற்குப் பிரமாணம்:——

## சகலாகமஸார ஸங்க்ரஹம்.

### நித்யார்ச்சநாவிதிப் படலம்.

"[illegible]
[illegible]
[illegible]"

[தமிழில்]

"நைவேத்யாத் யுபசாராணி கெர்பகேஹே நகாரயேது
மூர்க்காதக்ஞாநதஃ குர்யாது ஆசார்யோ பயமாப்நுயாது
துர்ப்பிக்ஷம் க்ராமவாஸிநாம் தத்கர்த்தா க்ஷயமாப்நுயாது"

### சகஸ்ராகம நிருபணம்.

"[illegible]
[illegible]"

"[illegible]
[illegible]"

[தமிழில்]

"கெர்ப்பக்ருஹேந்ந நைவேத்யம் கிராமநாசந் தநக்ஷயம்
விஷூச்யாதி ஸமாயுக்தம் மஹாமாரி ப்ரகோபநம்"

"தீபாரா தநகங்கெர்ப்பே ஸர்வரோக ஸமுத்பவம்
கெர்ப்பக்ருஹேந்ந நைவேத்யம் லிங்கதோஷம் ப்ரஜாயதே"

---

☞ பூஜா நைவேத்யாதி யுபசாரங்கள், வேறிடத்திற்செய்தால் அபசாரங்களாய்முடிதலால், அவை செய்தற்குரிய அர்த்தமண்டபம் இருக்கவேண்டியதவசிய மென்பது.

இனி, (தி- ராம- தி- சுப்பிரமணியஞ் செட்டியாராற்) போடப்பட்ட பிரஸ்தாப நூதநாலயப் பிளானில், விசுவநாதர் விசாலாக்ஷிக்கு இனிக்கட்டுகிறதில்லையென்று விலக்கியிருப்பதான அர்த்தமண்டபம் அவசியஞ் செய்தே தீரவேண்டிய முக்கியாங்கமா மென்பதற்கு ஆகமப்பிரமாணம் பின்னே

காட்டுவதாக முன்னேயுள்ள திருப்பணிமுயற்சி வர்த்தமானச் சருக்கத்திற் சொல்லியிருக்கின்றேனல்லவா? அந்தப் பிரமாணத்தை இங்கே காட்டுதும்; அர்த்தமண்டபத்திற்ருன் பூஜா நைவேத்யாதி ஸர்வோபசாரங்களும் செய்யவேண்டும்; அங்கே செய்யாத பூஜாநைவேத்யங்கள் (நிஷ்பலம்) வீணாய் முடியும்; அங்கே செய்யாத உபசாரங்களெல்லாமும், அபசாரங்களாக முடியும்; அர்த்தமண்டபத்தைத் தவிர்த்து வேறிடத்தில் அவைகளைச் செய்தால், செய்தவன் பாபியாகிறான்; வேறிடத்திற் செய்தாற் சிவசக்திதேவதா கோபமுண்டாகும்; அர்த்தமண்டபத்தைத் தவிர வேறிடத்தில் பூஜாநைவேத்யாதி யுபசாரங்களை எந்தக் காரணத்தாலாவது தவறிச்செய்துவிட்டால், அந்தத் தோஷநிவர்த்தியின் பொருட்டு சாந்தி, ஹோமம், மஹாபிஷேகம், பாவாடை முதலியன ஸமர்ப்பித்துச் சிவஸந்நிதியிலே நின்று "கருணாநிதே யான் செய்த அபராதத்தைப் பொறுத்தருளும்" என்று முறையிட்டு வணங்கி மன்னிப்புக்கேட்டுக் கொள்ளல் வேண்டும்; விதியிதுவேயாதலால், ஸர்வப்ரயத்தனத்தாலும் கெர்ப்பக்ருஹத்தோடு அர்த்தமண்டபத்தை விடாமல் வைத்துக் கட்டவேண்டுமென்பதே உறுதியாகும்; இவற்றிற்குப் பிரமாணம்:—

## சகலாகமஸார ஸங்க்ரஹம்.

### நித்யார்ச்சநாவிதிப் படலம்.

"𑌦𑍀𑌪𑌾𑌰𑌾𑌧𑌨𑌕𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌰𑍍𑌧𑌮𑌣𑍍𑌡𑌪 𑌇𑌷𑍍𑌯𑌤𑍇
𑌅𑌰𑍍𑌧𑌮𑌣𑍍𑌡𑌪𑌹𑍀𑌨𑍇 𑌤𑍁 𑌪𑍂𑌜𑌾𑌨𑍈𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌮𑍍"

"𑌉𑌪𑌚𑌾𑌰𑌾𑌣𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌹𑍍𑌯𑌪𑌚𑌾𑌰𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌯𑌤𑍍𑌨𑍇𑌨 𑌮𑌣𑍍𑌡𑌪𑍇𑌷𑍍𑌵𑌰𑍍𑌧𑌮𑌣𑍍𑌡𑌪𑌮𑍍"

[தமிழில்]

"தீபாரா தநகம்ஸர்வம் அர்த்தமண்டப இஷ்யதே
அர்த்தமண்டப ஹீநே து பூஜாநை வேத்யம்நிஷ்பலம்"

“ உபசாராணி ஸர்வாணி அபசாராம்ஃ ப்ரகீர்த்திதாஃ
தஸ்மாத்ஸர்வ ப்ரயத்நேந கெர்ப்பஞ்சை வார்த்தமண்டபம் ”

“𑌤𑌦𑌰𑍍𑌧𑌮𑌣𑍍𑌡𑌪𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾 𑌰𑌾𑌤𑌨𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑌂
𑌮𑍂𑌰𑍍𑌤𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑌂 𑌭𑌵𑍇𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌤𑌦𑍇𑌵 𑌮𑍂𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌭𑌾𑌵𑌯𑍇𑌤𑍍”

“𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌚𑌾𑌰𑌞𑍍𑌚 𑌦𑍍𑌵𑌾𑌰𑌬𑌾𑌹𑍍𑌯𑍇 𑌚𑌕𑌾𑌰𑌯𑍇𑌤𑍍”
𑌏𑌵𑌂𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌚 𑌵𑌿𑌧𑌿𑌵𑌤𑍍 𑌅𑌨𑍍𑌯𑌥𑌾 𑌪𑌾𑌪𑌸𑌂𑌭𑌵𑌃”

“𑌮𑍋𑌹𑍇𑌨 𑌗𑍁𑌰𑍁𑌦𑍇𑌤𑌤𑍍𑌰 𑌦𑍇𑌵𑌤𑌾 𑌕𑍋𑌪𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍
𑌤𑌦𑍍𑌦𑍋𑌷 𑌶𑌮𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌹𑍋𑌮𑌂 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍”

“𑌮𑌹𑌾𑌭𑌿𑌷𑍇𑌕𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌭𑍂𑌤 𑌹𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌦𑍇𑌤𑍍
𑌮𑌯𑌾𑌕𑍃𑌤 𑌮𑌿𑌦𑌂𑌕𑌰𑍍𑌮 𑌕𑍍𑌷𑌮𑌸𑍍𑌵 𑌕𑌰𑍁𑌣𑌾𑌨𑌿𑌧𑍇”

[தமிழில்]

“ ததர்த்தமண்ட பங்குர்யாத் ஆசார்யா ராதநம்ஸ்மிருதம்
மூர்த்ந்யாகாரம் பவேத்வாரம் ததேவ மூர்த்திபாவயேத் ”

“ தஸ்மாத் ஸர்வோப சாரஞ்ச த்வாரபாஹ்யே சகாரயேத்
ஏவம்க்ருத்வாச விதிவத் அந்யதா பாபஸம்பவம் ”

“ மோஹேந குருதேதத்ர தேவதா கோபமாசரேத்
தத்தோஷ ஸமநார்த்தாய சாந்திஹோமம் ஸமாசரேத் ”

“ மஹாபிஷேகம் கர்த்தவ்யம் ப்ரபூத ஹவிஷந்ததேத்
மயாக்ருத மிதங்கர்ம க்ஷமஸ்வ கருணாநிதே ”

“𑌅𑌨𑍍𑌨𑌾𑌦𑍀𑌂𑌶𑍍𑌚𑍈𑌵 𑌨𑍈𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌗𑌰𑍍𑌭𑌗𑍇𑌹𑍇 𑌨𑌕𑌾𑌰𑌯𑍇𑌤𑍍
𑌦𑍀𑌪𑌾𑌰𑌾 𑌧𑌨𑌕𑌂𑌸𑌰𑍍𑌵𑌂 𑌅𑌰𑍍𑌧𑌮𑌣𑍍𑌡𑌪 𑌇𑌷𑍍𑌯𑌤𑍇”

“𑌗𑍋𑌮𑌯𑌾 𑌲𑍇𑌪𑌨𑌂𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌵𑌾𑌗𑍍𑌰𑍇 𑌮𑌣𑍍𑌡𑌪𑍇𑌨𑍍𑌯𑌸𑍇𑌤𑍍
𑌸𑍍𑌥𑌾𑌲𑍀𑌕𑌾 𑌕𑍍𑌷𑌾𑌲𑌨𑌂𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨𑍈𑌵𑍇𑌦𑍍𑌯𑌞𑍍𑌚 𑌪𑍍𑌰𑌪𑍂𑌰𑌯𑍇𑌤𑍍”

[தமிழில்]

“ அந்நாதீம்ச்சைவ நைவேத்யம் கெர்ப்பகேஹே நகாரயேத்
தீபாரா தநகம்ஸர்வம் அர்த்தமண்டப இஷ்யதே ”

“ கோமயா லேபநம்க்ருத்வா தேவாக்ரே மண்டபேந்யஸேத்
ஸ்தாலீகா க்ஷாளநம்க்ருத்வா நைவேத்யஞ்ச ப்ரபூரயேத் ”

## சகஸ்ராகம நிரூபணம்.

"அதாத ஸம்ப்ரவக்ஷ்யாமி நைவேத்ய லக்ஷணம்பரம்"

"அர்த்தமண்டப மத்யேது கோமயா லேபநந்ததா
ரங்கவல்யா த்யலங்க்ருத்ய கதளீதள ஸம்யுதம்"

"தீபாதீந் தஸ்யமத்யேது ஹவிஸ்தாலீம் நிதாயச
ஸூபாபூப க்ருதோபேதம் அந்நம் பஞ்சவிதந்ததா"

"உபதம்ச ஸமாயுக்தம் பக்ஷ்யபோஜ்ய ஸமந்விதம்
ஸ்தாலிகாயாந்து ஸம்ஸ்தாப்ய தூபதீபந் தடேத்குரு:"

"தீபாராதந காலேது ஆசார்ய அர்த்தமண்டபே
வாமஹஸ்தேந கண்டாந்து தக்ஷிணே ம்ருகமுத்ரயா"

"நைவேத்ய மூலபீஜேன மந்த்ரேண ஸம்யுதம்
ஹஸ்தாப்ஜேன ஸம்யுக்தம் தாம்பூலஞ்ச ஸமந்விதம்"

"ஸர்வோபசார ஸம்யுக்தம் அர்த்தமண்டப மத்யமே
உபசாராணி க்ருத்வாய [illegible] விசேஷத:"

"நவநைவேத்ய [illegible] ஹவிஷைவ ச
அர்த்தமண்டப [illegible]"

[தமிழில்]

"அதாதச் சம்ப்ரவக்ஷ்யாமி நைவேத்ய லக்ஷணம்பரம்"

"அர்த்தமண்டப மத்யேது கோமயா லேபநந்ததா
ரங்கவல்யா த்யலங்க்ருத்ய கதளீதள ஸம்யுதம்"

"தீபாதீந் தஸ்யமத்யேது ஹவிஸ்தாலீம் நிதாயச
ஸூபாபூப க்ருதோபேதம் அந்நம் பஞ்சவிதந்ததா"

"உபதம்ச ஸமாயுக்தம் பக்ஷ்யபோக்ஷ்ய ஸமந்விதம்
ஸ்தாலிகாயாந்து ஸம்ஸ்தாப்ய தூபதீபந் ததேத்குரு:"

"தீபாராதந காலேது ஆசார்யச் சார்த்தமண்டபே
வாமஹஸ்தேந கண்டாந்து தக்ஷிணே ம்ருகிமுத்ரயா"

" நைவேத்யம் தூபதீபஞ்ச சத்ரசாமர ஸம்யுதம்
பஸ்மதர்ப்பண ஸம்யுக்தம் தாளவ்ருந்த ஸமந்விதம் "

" ஸர்வோபசார ஸம்யுக்தம் அர்த்தமண்டப மத்யமே
உபசாராணி க்ருத்வாத கெர்ப்பகேஹம் விசேத்குரு: "

" நவநைவே த்யகஞ்சைவ ப்ராபூத ஹவிஷந்ததா
அர்த்தேச மண்டபேகுர்யாத் அந்யதா கில்பிஷீபவேது "

## பூர்வகாமிகாகமம்.

மண்டபலக்ஷணப் படலம்-425. நைவேத்ய விதிப்படலம்-61-66-85.

"𑌗𑌰𑍍𑌭𑌗𑍃𑌹𑌸𑍍𑌯 𑌬𑌾𑌹𑍍𑌯𑍇 𑌤𑍁 𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌕𑌾𑌰𑌯𑍇𑌤𑍍"

"𑌪𑌾𑌤𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍇𑌨𑍍 𑌮𑍁𑌖𑌮𑌣𑍍𑌡𑌪𑍇
𑌪𑌾𑌨𑍀𑌯𑌮𑌪𑍍𑌯𑌨𑍇𑌨𑍈𑌵 𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌤𑍍𑌸𑌂𑌗𑍍𑌰𑌾𑌹𑌯𑍇𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑌾𑌤𑍍"

"𑌶𑌿𑌵𑌾𑌗𑍍𑌰𑍇 𑌮𑌣𑍍𑌡𑌪𑍇 𑌶𑍁𑌦𑍍𑌧𑍇 𑌶𑍁𑌭𑍍𑌰𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑌿 𑌵𑌿𑌸𑍍𑌤𑍃𑌤𑍇
𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑍍𑌯𑍁𑌪𑌰𑌿 𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑍍𑌥𑌾𑌲𑌿𑌕𑌾𑌦𑌿 𑌗𑌤𑌂 𑌹𑌵𑌿𑌃"

"𑌤𑌤𑍋 𑌗𑌰𑍍𑌭𑌗𑍃𑌹𑌂 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌦𑌦𑍍𑌯𑌾𑌦𑌾𑌚𑌮𑌨𑍀𑌯𑌕𑌂
𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌲𑍍𑌯𑌂 𑌤𑍁 𑌸𑌮𑌾𑌨𑍀𑌯 𑌚𑌣𑍍𑌡𑍇𑌶𑌾𑌯 𑌨𑌿𑌵𑍇𑌦𑌯𑍇𑌤𑍍"

[தமிழில்]

கெர்பக்ரஹஸ்ய பாஹ்யேது ஸ்தித்துவா கர்மாணிகாரயேத் "

" பாத்ராண்யுத்ருத்ய ஸர்வாணி விந்யஸேந் முகமண்டபே
பாநீயமப் யநேநைவ ஸ்தாநாத்ஸங் க்ராஹயேத்க்ரமாத் "

" சிவாக்ரே மண்டபேசுத்தே சுப்ரவஸ்த்ராதி விஸ்த்ருதே
த்ரிபாத்யுபரி விந்யஸ்ய ஸ்தாலிகாதி கதம் ஹவி: "

" ததோகெர்ப க்ருஹங்கத்வா தத்யாதா சமநீயகம்
நிர்மால்யந்து ஸமாநீய சண்டேசாய நிவேத யேத் "

## சூக்ஷ்மாகமம்.

நைவேத்ய விதிப்படலம்-136.

"[illegible] 𑌚𑍈𑌵 𑌸𑌂𑌗𑍃𑌹𑍍𑌯 𑌸𑍁𑌪𑍂𑌰𑍍𑌣𑍈𑌵 [illegible]
𑌸𑍍𑌥𑌾𑌲𑌿𑌕𑌾𑌕𑍍𑌷𑌾 𑌚 𑌸𑌂𑌗𑍃𑌹𑍍𑌯 𑌨𑍈𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌯𑍇𑌤𑍍"

[தமிழில்]

"கோமயா லேபநங்க்ருத்வா அர்த்தமண்டப மத்யதஃ
ஸ்தாலிகாக்ஷாளநங்க்ருத்வா நைவேத்யஞ்ச ப்ரபூரயேத்"

## நித்யகர்மகலாதீபிகை.

இதில் ஆவாகநப்ரகரணத்தில் சுப்ரபேதாகமத்திற் சொல்லப் பட்டதாகப் பிரமாணங்காட்டிய சுலோகம்.

"𑌨𑍈𑌵𑍇𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍁𑌪𑌚𑌾𑌰𑌞𑍍𑌚 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍 𑌸𑌾𑌧𑌕𑍈𑌸𑍍𑌸𑌹
𑌕𑌾𑌲𑌂𑌪𑍍𑌰𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌅𑌰𑍍𑌧𑌮𑌣𑍍𑌡𑌪𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍"

[தமிழில்]

"நைவேத்யா த்யுபசாரஞ்ச ஆசார்யஸ் ஸாதகைஸ்ஸஹ
காலம்ப்ராதி விசேஷேண அர்த்தமண்டப மாசரேத்"

## பரார்த்த நித்ய பூஜா பத்ததி.

உபஸந்தி பூஜாப்ரகரண சூர்ணிகை.

"𑌨𑍈𑌵𑍇𑌦𑍍𑌯𑌾𑌦𑌿 𑌦𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌦𑍇𑌶𑌿𑌕𑌸𑍍𑌸𑌾𑌲𑌙𑍍𑌕𑌾𑌰𑌾𑌭𑌰𑌣𑌸𑍍𑌸𑌰𑍍𑌵
𑌵𑌾𑌦𑍍𑌯𑍋𑌪𑌚𑌾𑌰𑍈𑌸𑍍𑌸𑌹 𑌨𑌾𑌨𑌾𑌵𑌿𑌧𑌾𑌨𑍍𑌨𑍋𑌪𑌦𑌂𑌶 𑌤𑌾𑌮𑍍𑌬𑍂
𑌲 𑌪𑌾𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑍍". (என்பதுமுதல்)

"𑌦𑍇𑌵𑌾𑌗𑍍𑌰𑌮𑍁𑌪𑌗𑌮𑍍𑌯 𑌨𑍈𑌵𑍇𑌦𑍍𑌯 𑌮𑌣𑍍𑌡𑌪𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑍇𑌤𑍍"
(என்பது வரைக்கும்.)

[தமிழில்]

"நைவேத்யாதி தாநார்த்தம் தேசிகஸ்ஸாலங்காராபரணஃ
ஸர்வ வாத்யோப சாரைஸ்ஸஹ நாநாவிதாந்ந உபதம்ச
தாம்பூல பாத்ராதீந்" (என்பது முதல்)

"தேவாக்ர முபகம்ய நைவேத்ய மண்டபே ஸ்தாபயேத்"
(என்பது வரைக்கும்.)

---

இனி, மேற்பிரமாணங் காட்டப்பட்ட சகலாகம ஸாரஸங்க்ரஹத்தில், பூஜாநைவேத்யாதி யுபசாரங்களை அர்த்தமண்டபத்தைத் தவிர்த்து வேறிடங்களில் வைத்துச் செய்தால், தேவதா கோபமுண்டாகு மென்று சொல்லப்பட்டதன்றோ? அதனால்,

(தி - ராம - தி - சுப்பிரமணியஞ் செட்டியார்) அந்தராள மென்றுன்று கட்டப்போகிறோம் அங்கே நைவேத்யாதிகளை வைத்துச் செய்யலாமென்று திருப்பணிமுயற்சி வர்த்தமானச் சருக்கத்திற்கண்டதான பிற்கூறிய சொல்லும், தூரீகரிக்கப்படும்;

சிவபெருமானுக்கும் பார்வதிக்குங் கோபம்வருமானால், அதற்கெதிர்நிற்பா ரொருவரு மில்லை; அக்கோபத்தால், விண்ணவருள்ளுந் தண்டிக்கப்பட்டா ரநேகரென்பதையும், இன்னும் விளைந்த விளைவையும் அறிவிக்குநூல் பற்பலவுள்ளன; கீழ்ப்பிரமாணங் காட்டப்படும் பாக்கள் வெளிப்படைப் பொருளனவாதலால், அவைகளைப் படித்துப் பார்த்தும் அறியலாம்; சிவசிவை கோபித்தாற் சர்வலோகங்களும் இலவாம்; இவற்றிற்குப் பிரமாணம்:—

## சிவதருமோத்தரம்.

### சனன மரணவியல்-49.

“காமனுந் திருவுருக் காயப் பட்டனன்
பூமக னொருசிரம் போக்கப் பட்டனன்
நாமக ளுசியு நறுக்கப் பட்டனள்
சேமமாஞ் சிவனவன் சினந்து சிறவே”

## திருமந்திரம்-353-358.

“தந்தை பிரான்வெகுண் டான்றக்கன் வேள்வியை
வெந்தழ லூடே புறப்பட்ட விண்ணவர்
முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்
சிந்தின ரண்ணல் சினஞ்செய்த போதே”

“அரிபிர மன்றக்க னருக்க னுடனே
வருமதி வாலை வன்னிநல் லிந்திரன்
சிரமுக நாசி சிறந்தகை தோள்தான்
அரனரு ளின்றி யழிந்தநல் லோரே”

## கந்தபுராணம்.

### வீரபத்திரப்படலம்-14-15. யாகசங்காரப் படலம்-3.

“அந்தி வான்பெரு மேனியன் கறைமிட றணிந்த
எந்தை தன்வடி வாயவ னுதல்விழி யிடையே

வந்து தோன்றியே முன்னுற நின்றனன் மாதோ
முந்து வீரபத் திரனெனுந் திறலுடை முதல்வன்"

"அங்கவ் வேலேயி லுமையவள் வெகுளியா லடல்செய்
நங்கை யாகிய பத்திர காளியை நல்கச்
செங்கை யோரிரண் டாயிரம் பாதிசெம் முகமாய்த்
துங்க வீரபத் திரன்றனே யடைந்தன டுணையாய்"

"ஈசனு முமையுமேவந் தெய்தின ரென்பா ரன்னூர்
காய்சின முதவவந்த காட்சியர் காணு மென்பார்
பேசரிதந்தோ வந்தோ பெரிதிவர் சீற்றமென்பார்
நாசம்வந் திட்ட தன்றே நம்முயிர்க் கெல்லா மென்பார்"

## காஞ்சிப்புராணம்.

### தக்கீசப் படலம்-31-32.

"இருள்குடி யிருந்த கூந்த லிறைவிதன் மாற்றங் கேளாத்
தெருள்குடி யிருந்த சிந்தை தைவரச் சிவந்த நோன்றாள்
அருள்குடி யிருந்த பெம்மா னழிதகைத் தக்க னெஞ்சின்
வெருள்குடி யிருத்து மொய்ம்பின் வீரபத் திரனைத் தந்தான்"

"எண்ணரு முலக மீன்ற சிற்றகட் டெம்பி ராட்டி
வண்ணவார் புருவ மீப்போய் நெரிப்பவாய் துடிப்பப்பொங்கிக்
கண்ணறு சினமீக் கொண்டு பத்திர காளி யென்னும்
பெண்ணணங் கரசை யீன்றாள் பிறங்கெரி சிதறுங் கண்ணாள்"

## பேரூர்ப் புராணம்.

### கௌரி தவம்புரி படலம்-19-20.

"ஆழ்வினை விடமிடற் றடக்கி கோபியாத்
தாழ்வினைச் சடையொன்று தரையி னெற்றினன்"

"எற்றிய சடையினின் றெரிபொன் மேனியும்
நெற்றியின் விழியுநீ டலையின் கோவைகள்
முற்றிய வுரமுமொய் படைகை யேந்திய
வெற்றியும் விளங்குற வீரன் றோன்றினன்"

## திருப்பெருந்துறைப் புராணம்.

### வீரபத்திரப் படலம்-2-12.

"தெறுவலிக் குறுத்தாட் பூதச் சேனையோ னெற்றி நாப்பண்
உறுவிழி திறந்தா னங்கின் றுதித்தனன் வீர னென்பான்"

"சிறுவிதி மனைவி முன்னுச் செறிந்தபன் மாதர் தம்பாற்
குறுகுபு முன்போ யம்மை கோபத்தில் வருபெண் டெய்வம்
நறுவிரைக் குழல்வார் காது நாசிவன் முலைமுன் னுகச்
செறுவலி கொண்டு கொய்து தெறுசின மொழிந்த தன்றே"

## மாயூரப் புராணம்.

யாக சங்காரப் படலம்-4.

"முனிவர னுரைத்த லோடு முடிவிலா முனிவு பொங்கப்
பனிமதி முடித்த பெம்மான் படர்சடை யொன்று பற்றித்
தனிநிலத் தறைந்தா னுகத் தரைமுத லுலகம் யாவும்
நனிநடு நடுங்க வீர நம்பன்வந் துதயஞ் செய்தான்"

## சேதுபுராணம்.

இராமனருச்சனைச் சருக்கம்-233.

"புரிசடைப் புரான னன்னேன் வெறுத்திடி னுலக முண்டோ"

## கொன்றைவேந்தன்.

"தெய்வஞ் சீறிற் கைதவ மாளும்"

---

☞ அர்த்தமண்டப மிருந்தாற்ருன் கெர்ப்பக்ரஹத்துக்குப் பரிசுத்தம் ஏற்படு மென்பதும், அது, கெர்ப்பக்ரஹத்தைப் போன்றுயர்ந்த தென்பதும்.

இனி, அர்த்தமண்டப மிருந்ததாற்ருன் கெர்ப்பக்ரஹத் துக்குப் பரிசுத்தம் ஏற்படுமென்றும், அர்த்தமண்டபமானது கெர்ப்பக்ரஹத்துக்கு ஸமாநமான மேன்மையையுடைய தென் றும் சிவாகமம் விதிக்கின்றன; அதனை, மறுதலைப் பொருள் கோளால் நிதானிக்கும்போது, அர்த்தமண்டபமின்றித் தனியே கட்டப்படுங் கெர்பக்ரஹம் அநாசாரமுடையதாமெனக் கொள் ளப்பட்டு நிக்ருஷ்டமாய் முடிதல் போலவே, (தி-ராம-தி-சுப்பிர மணியஞ் செட்டியாரால்) விசுவநாதர் விசாலாக்ஷிக்குப் போடப்

பட்ட அர்த்தமண்டப ரஹிதப்பிளானும், நிக்ருஷ்டமாய்முடியும்; ஆதலால், அந்தப் பிளான்படி செய்யாமல் அர்த்தமண்டப ஸஹிதமாய்த் திருப்பணி செய்வதே உத்தமமென்றறிக ; இவற்றிற்குப் பிரமாணம் :—

### பூர்வகாமிகாகமம்.

மண்டபஸ்தாபநவிதிப் படலம்-8-9.

"𑌮𑍂𑌲𑌧𑌾𑌮𑍍𑌨𑍇 𑌭𑌵𑍇𑌚𑍍𑌛𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌮𑌣𑍍𑌡𑌪𑌞𑍍𑌚 𑌦𑍍𑌵𑌿𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌯𑍋𑌃"

"𑌅𑌨𑍍𑌤𑌰𑌾𑌲 𑌪𑍍𑌰𑌦𑍇𑌶𑍋𑌕𑍍𑌤𑌂 𑌵𑍇𑌶𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌂
𑌅𑌗𑍍𑌰𑌮𑌣𑍍𑌡𑌪 𑌮𑍀𑌦𑍃𑌕𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌾𑌸𑌾𑌦 𑌸𑌮𑌤𑍁𑌙𑍍𑌗𑌕𑌮𑍍"

[தமிழில்]

" மூலதாம்நே பவேத்சுத்திம் மண்டபஞ்ச த்விபார்சவயோ :"

" அந்தராள ப்ரதேசோக்தம் வேசயுக்தம் ப்ரகீர்த்திதம்
அக்ரமண்டப மீதிருக்ஸ்யாது ப்ராஸாத ஸமதுங்ககம் "

---

☞ அர்த்த மண்டபம் போகசக்தி ஸ்தானமாதலால் அச்சக்தியைப் பூசித்து அநந்தரம் அவள் துவாராவாக நிவேதிக்க அம்மண்டபமிருக்கவேண்டிய தவசியமாமென்பது.

## கனம்பொருந்திய, திவகையார்களே!

இனி, சிவலிங்கப் பெருமானுக்கு, யோகசக்தி விட்டகலாதொட்டியுறைகின்ற பீடமென்றும், போகசக்தி ஸமீப ஸ்தானமாகிய அர்த்தமண்டபத்தி லிருப்பவளென்றும், வீரசக்தி பிரதக்காய் வெளியாலயத்திலிருப்பவ ளென்றும், அந்தந்தச் சக்திகளை அந்தந்த ஸ்தானங்களிற் பூசிக்கவேண்டுமென்றும், அவ்வாறு பூசிப்பதிற் போகசக்தியை அர்த்தமண்டபத்திலே வடதிசையிலே ஆஸநமூர்த்திமூல உமாமந்திரங்களா லாவாகித்துப் பூசிக்கும்படிக்கும், பூசித்தபின்பு சிவாசாரியர் நைவேத்தியத்தைத் தமது திருக்கரத்தினலெடுத்து அர்த்தமண்டப வாஸியா

கிய போகசக்தியினது திருக்கரத்திற் கொடுத்ததாகவும் அந்தப் போகாநுக்ரஹ மாதா அவளது திருக்கரத்தினுற் சிவபெருமானது திருக்கரத்திற் கொடுத்ததாகவும் இம்முறையாற் சிவகாமேறி நைவேத்தியஞ் சிவார்ப்பணமானதாகவும் பாவித்துப் பூசை செய்யவேண்டுமென்றும் சிவாகமங்கள் விதித்திருக்கின்றன; திருவாரூர் முதலிய சிற்சில புராதநக்ஷேத்திரங்களில் அர்த்தமண்டபத்திற் போகசக்திவிக்ரஹங்களே இருக்கின்றன; அவைகளை அங்கங்கே இப்பொழுதும் நேரிற் பார்க்கலாம்; விக்ரஹம் ஏற்படாத ஆலயங்களில், அர்த்தமண்டபத்தில் வடபாகத்தில் போகசக்தியிருப்பதாகவும், அவளது துவாராவாக நிவேதனஞ்சமர்ப்பித்ததாகவும், சிவாசாரியர் பாவித்துப் பூசிப்பதே கிரமமாகும்; அதுவே கிரமமென்பதை, கீழே பிரமாணமாகக் காட்டப்பட்ட பரார்த்த நித்தியபூஜா பத்ததியில் "அர்த்தமண்டபே உத்தரதிசி உமாமந்த்ரேண ஆஸநமூர்த்தி மூலேநாவாஹ்ய" எனச் சொல்லப்பட்டிருத்தலாலும், சிவத்விஜமஹான்கள் இன்றைக்குங்கூறக் கேட்குமநுபவத்தாலும் நன்கறியலாம்; இங்கே (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால்) விசுவநாதருக்குப் போடப்பட்ட நூதநாலயப் பிளானைப் பற்றி ஆராயும்போது அந்தப்பிளானில், போகசக்திஸ்தானமாகிய அர்த்தமண்டபத்தையே கட்டுகிறதில்லையென்று விட்டுவிட்டமையால் இவ்வாறு பிளான்போட்ட செய்கையானது, போகசக்திக் கிடமில தாக்கியும் சிவாசாரியராற் செய்யத்தக்க அச்சக்திபூஜாபாவனைகட்கிடமில தாக்கியும் நின்று, சிவபூஜாவிதிக்கு இடையூறுய் முடிதலால், அது, பண்டிதர்கள் செய்யத்தகாத செயலேயாகும்; ஆகவே, அத்தச் (சுப, அவர்களாற்) போடப்பட்ட பிளான் இந்த காரணத்தாலுந் தள்ளத்தக்கதென்பதும், (அடியேனது) முறையீட்டின்படி அர்த்தமண்டபம் வைத்துத் திருப்பணிசெய்ய வேண்டியதே சாஸ்த்ரோக்தமென்பதும், கொள்ளத்தக்கதென்பதும் மலையின்மேலேற்றிய தீபம்போல் வெட்டவெளிச்சமாம் இவற்றிற்குப் பிரமாணம்:—

## பரார்த்த நித்யபூஜாபத்ததி.

### போகசக்தி பூஜாப்ரகரணம்.

"𑌅𑌗𑍍𑌰𑌮𑌣𑍍𑌡𑌪𑍇 𑌉𑌤𑍍𑌤𑌰𑌾𑌦𑌿𑌶𑌿 𑌉𑌮𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌆𑌸𑌨𑌮𑍂𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌮𑍂𑌲𑍇𑌨
𑌆𑌵𑌾𑌹𑍍𑌯𑍇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑍋𑌕𑍍𑌤𑌂"

"𑌯𑍋𑌗𑌂𑌭𑍋𑌗𑌞𑍍𑌚 𑌵𑍀𑌰𑌞𑍍𑌚 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍇𑌷𑌾 𑌤𑍍𑌰𑌿𑌧𑌾𑌭𑌵𑍇𑌤𑍍"

"𑌯𑍋𑌗𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑍁 𑌪𑍀𑌠𑌂𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌭𑍋𑌗𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌸𑌮𑍀𑌪𑌗𑌾
𑌵𑍀𑌰𑌂𑌬𑌾𑌹𑍍𑌯𑌾 𑌲𑌯𑍇𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑍇𑌷𑍁 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍"

[தமிழில்]

"அக்ரமண்டபே உத்தராதிசி உமாமந்த்ரேண
ஆஸந மூர்த்திமூலேந ஆவாஹ்யேத்யாதி நோக்தம்"

"யோகம்போகஞ்ச வீரஞ்ச சக்திரேஷா த்ரிதாபவேத்"

"யோகசக்திஸ்து பீடம்ஸ்யாத் போகசக்திஸ் ஸமீபகா
வீரம்பாஹ்யா லயேசக்திஃ தத்தஸ்தாநேஷு பூஜயேத்"

## சகலாகமஸாரஸங்க்ரஹம்.

### நித்யார்ச்சநா விதிப்படலம்-754.

"𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌹𑌸𑍍𑌤𑌮𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌗𑍌𑌰𑍀𑌹𑌸𑍍𑌤𑍇 𑌨𑌿𑌵𑍇𑌦𑌯𑍇𑌤𑍍
𑌗𑍌𑌰𑍀 𑌤𑍁 𑌶𑌿𑌵𑌹𑌸𑍍𑌤𑍇 𑌤𑍁 𑌨𑍈𑌵𑍇𑌦𑍍𑌯𑌞𑍍𑌚 𑌨𑌿𑌵𑍇𑌦𑌯𑍇𑌤𑍍"

[தமிழில்]

"ஆசார்ய ஹஸ்தமுத்ருத்ய கௌரீஹஸ்தே நிவேதயேத்
கௌரீது சிவஹஸ்தேது நைவேத்யஞ்ச நிவேதயேத்"

## பூர்வகாரணாகமம்.

### நித்யார்ச்சநா விதிப்படலம்-397.

"𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑍋 𑌹𑌸𑍍𑌤𑌮𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌗𑍌𑌰𑍀𑌹𑌸𑍍𑌤𑍇 𑌨𑌿𑌵𑍇𑌦𑌯𑍇𑌤𑍍
𑌗𑍌𑌰𑍀𑌹𑌸𑍍𑌤𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌶𑌿𑌵𑌹𑌸𑍍𑌤𑍇 𑌨𑌿𑌵𑍇𑌦𑌯𑍇𑌤𑍍"

[தமிழில்]

"ஆசார்யோ ஹஸ்தமுத்ருத்ய கௌரீஹஸ்தே நிவேதயேத்
கௌரீஹஸ்தம் ஸமுத்ருத்ய சிவஹஸ்தே நிவேதயேத்"

---

{ பாலாலயத்துக்குமே அர்த்தமண்டப மிருக்கவேண்டு மென்னும் விதியுளதென்பது. }

## கனம்பொருந்திய, தி வகையார்களே!

இனி, நூதநாலயங் கட்டி முடியும் வரைக்கும் மூர்த்தியைத் தாருவில் ஆவாஹனஞ் செய்துவைப்பதான டெம்பரரியாயுள்ள பாலாலயத்துக்குமே அர்த்தமண்டப மிருக்கவேண்டிய தவசியமெனச் சிவாகமம் விதித்திருக்கின்றன; மூர்த்தி, சில காலம் வஸிக்கத்தக்கதான பாலாலயத்துக்கே அர்த்தமண்டபம் வைத்துக் கட்டும்படி ஆகமம் விதித்திருக்குமானல், நூதநாலயத்துக்கு அஃதவசிய மிருக்கவேண்டிய அங்கமென்பதைக் கேட்கவாவேண்டும்? இது, கேளாமலே சாமானியர்கட்கும் பொட்டலிற் கிடக்கும் விளாங்கனியைப் போல இனிது விளங்கத்தக்கது; அர்த்தமண்டபத்தின் ப்ரபலம் இவ்வாறிருக்க, சிவாகமச் சட்டத்தையுந் தூரிகரித்துவிட்டுத் (தி - ராம - தி-சுப்பிரமணியஞ் செட்டியார்) விசுவநாதர் விசாலாக்ஷிக்கு, தாம் போட்டபிளானில், நூதனமா யினிக்கட்டப்போகிற நீடித்துப் பர்மனன்டாயிருக்கக்கூடிய யவ்வநமூலாலயத்துக்கே அர்த்தமண்டபத்தைக் கட்டவேண்டியதில்லையென விலக்கிப் போட்ட அநியாயத்தை நினைத்தாற் பரிதாபம்-பரிதாபம்-ஆறாத பரிதாபமாம்; பாலாலயத்துக்கும் அர்த்தமண்டப மிருத்தல் வேண்டு மென்பதற்குப் பிரமாணம்:——

### பூர்வகாமிகாகமம்.

பாலஸ்தாபந விதிப்படலம்-20.

"[Grantha script verse, line 1]
[Grantha script verse, line 2]"

[தமிழில்]

"பாலாலயாக்ரே கர்த்தவ்யம் மண்டபம் சதுரச்ரகம்
தத்ஸமம்வா ததர்த்தம்வா த்ரிபாதம்வா க்ரமண்டபம்"

## பாலாலயப் பெயர்க்காரணமும், அதில் மூர்த்தியிருக்கத்தக்கதான கால அளவும்.

இனி, நூதநாலயங் கட்டி முடியும்வரைக்கும் மூர்த்தியைத் தாருவில் ஆவாகனஞ்செய்துவைக்கும் பொருட்டு டெம்பரரியா யமைக்கின்ற ஆலயத்துக்குப் "பாலாலயம்" என்னும் பெயர் வந்த காரணம் யாதெனில்? ஒருவருஷமுதலாக மநுஷ்யபாலப் பருவத்தினளவான பனிரண்டு வருஷ வரையிலும், தாருவிலா வாஹிக்கப்பட்ட மூர்த்தி அங்கிருக்கலா மானதால், அந்தப் பெயர், அந்தப் பருவ அறுதிபற்றி வந்த காரணப் பெயராகும்; மூர்த்தி, திருப்பணிவேலை முடிவடையும் பெற்றிக்கேற்க ஒன்று முதற் பனிரண்டு வருஷவரைக்கும் பாலாலயத்திலிருக்கலாம்; இருக்கலா மென்பதை, சிவலிங்கப்பெருமானிடத்திற் பாலஸ்தாபந காலத்தில், கர்த்தாவும் சிவாசாரியருஞ் சேர்ந்து மேற் கண்டகால அளவைத் தெரிவித்துப் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டு மென்னுங் கீழ்க்காட்டிய சிவாகம விதியாலறியலாம்; இதற்குப் பிரமாணம்:—

### பூர்வகாமிகாகமம்.

பாலஸ்தாபந விதிப் படலம்-87-88-89.

"𑌮𑍂𑌲𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌤𑍁 𑌸𑌂𑌪𑍂𑌜𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌤𑍍𑌯𑍈𑌰𑍍 𑌹𑌵𑌿𑌷𑌾 𑌸𑌹
𑌪𑍍𑌰𑌣𑌮𑍍𑌯 𑌦𑍇𑌵𑌦𑍇𑌵𑍇𑌶𑌂 𑌕𑌰𑍍𑌤𑍍𑌰𑌾 𑌕𑌰𑍍𑌮 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌃"

"𑌬𑌾𑌲𑌕𑌸𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌯 𑌯𑌾𑌵𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌬𑍍𑌦𑌕𑌂
𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑌿𑌨𑍇 𑌨𑌵𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 [illegible]"

"𑌇𑌤𑌿 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌪𑍍𑌯 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌤𑍁 𑌦𑍇𑌶𑌿𑌕𑍇𑌨 𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌃
𑌲𑌿𑌙𑍍𑌗𑌸𑍍𑌯𑍈𑌵𑌂 𑌸𑌮𑌾𑌵𑌾𑌹𑍍𑌯 [illegible]"

[தமிழில்]

" மூலலிங்கந்து ஸம்பூஜ்ய கர்தாத்யைர் ஹவிஷாஸஹ
ப்ரணம்ய தேவதேவேசம் கர்த்தாகர்ம விசக்ஷண:"

" ஏகவத்ஸர மாரப்ய யாவத்ஸ்யாத் த்வாதசாப்தகம்
தேஷ்வந்தரே நவீக்ருத்ய புநஸ்ஸம்ஸ்தா பயாம்யகம் "

" இதிவிக்ஞாப்ய தத்கர்த்தா தேசிகேந ஸஹைவது
லிங்காத்தேவம் ஸமாவாஹ்ய கும்பமத்யே ந்யஸேத்குரு: "

---

## அர்த்தமண்டபமின்றித் திருப்பணி செய்தால், செய்த கர்த்தாக்களின் குடும்பப் பெண்டுகளெல்லாம், நாசமடைவார்களென்பது.

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

இனி, (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால்) விசுவநாதர் விசாலாக்ஷிக்குப் போடப்பட்டிருக்கிற நூதநாலயப் பிளான்படி அர்த்தமண்டபம் வைக்காமற் திருப்பணி செய்தால் ஸம்பவிக்குமென் றிதுகாறுங் கூறிப்போந்த தோஷங்களே யினுல், எவர்க்கும் கேட்டமாத்திரத்திலேயே மனமுமுடலும் நடுநடுங்கத்தக்கதான ஒரு கஷ்டநிஷ்டூரமுஞ் ஸம்பவிக்குமென்று தெரிகிறது; இதனைக் கேட்டவர்கள், எப்படிப்பட்ட வாக்குவல்லபமுடையார் போதித்தாலும் அர்த்தமண்டப மில்லாதபடி திருப்பணி செய்வதற் கொருகாலத்துந் துணியார்கள்; மேலும், போதித்தோரை வெறுத்து அவர்பால் அணுகவுமாட்டார்கள்; அந்தக் கஷ்டநிஷ்டூரம் யாதெனில்? எல்லாவுயிர்கட்கும் போகத்தை நுகர்விக்கும் லோகமாதாவாகிய போகஸக்தியின் வாஸஸ்தானமாதல் பற்றிப் போகாலயமென்னும் பெயரைப்பூண்டதான அர்த்தமண்டப மில்லாதபடி திருப்பணிசெய்தால், செய்த யஜமான்களினுடைய குடும்பப் பெண்டுகளெல்லாம் நாசமடைவார்களென்பதாம்; இவ்வாறு பதிநூலாகிய சிவாகமம் விதித்திருக்கின்றது; இதற்குப் பிரமாணம்:——

### பூர்வகாரணுகமம்.

பிராயச்சித்த விதிப்படலம்-227.

"𑌭𑍋𑌗𑌾𑌂𑌗𑍇𑌵 𑌵𑌿𑌹𑍀𑌨𑍇 𑌤𑍁 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌣𑌾𑌂 𑌨𑌾𑌶𑌂 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿
𑌭𑍋𑌗𑌾𑌲𑌯𑌂 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌾𑌦𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌤𑍍 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑌾𑌤𑍍"

[தமிழில்]

"போகாங்கேச விஹீநேது ஸ்த்ரீணும்நாசம் பவிஷ்யதி
போகாலயம் ப்ரகல்பயாதஃ பூர்வவத் பூஜயேத்க்ரமாத்"

---

மேலே பிரமாணங் காட்டப்பட்ட சுலோகத்திலுள்ள (போகாலயம்) என்னும் பதத்துக்கு, (பள்ளியறை) என்ற அர்த்தமாகாதோவெனில்? ஆகாது; எதனுலென்முல்? மேற்படி பூர்வகாரணுகமம் பிராயச்சித்த விதிப்படலம்-228-ல் "𑌶𑌯𑍍𑌯𑌾𑌗𑌾𑌰𑍇 𑌤𑍁 𑌪𑌰𑍍𑌯𑌂𑌕𑍇 𑌦𑍀𑌪𑌮𑌾𑌲𑌾 𑌵𑌿𑌹𑍀𑌨𑌕𑍇" "சய்யாகாரேது பர்யங்கே தீபமாலா விஹீநகே" என, பள்ளியறையைச் சய்யாக்ரஹமென்ற பெயராலெடுத்தாண்டு அதன் லக்ஷணம், வேறு சொல்லப்படுவதனுலென அறிக.

---

**புருஷர்களுக்கு வாழ்க்கைத் துணையாகிய மனைவிபோனால் யாவும்போய் இல்லறமே நடவா தென்பதுடன், அவளில்லாத வீடானது, காடும் புலிகிடந்த தூறுமா மென்பது,**

**கனம்பொருந்திய, தி-வகையார்களே!**

இனி, மேற்கண்ட சிவாகமப் பிரமாணமூலமாய், அர்த்தமண்டபமின்றித் திருப்பணி செய்தாற் செய்தோர்களின் மனைவிமார்க்கு நாசமுண்டாகு மெனத் தெரிதலால், (தி-ராம-தி-சுப-அவர்களால்) அர்த்தமண்டப ஹீனமாய்ப் போடப்பட்டிருக்கிற

களத்திரமாரக ஹேதுவான பிளான்படி செய்யலாகா தென்ப தும், களத்திரகாரக ஹேதுவான அர்த்தமண்டபத்தை வைத்தே செய்யவேண்டு மென்பதும் நன்குதுணியப்படும்; அந்தவிஷய மொருவாறிருக்கட்டும்; குடும்பத்திலிருந் தில்லற நடாத்து வோர்க்கு, மனைவிமார்கள்தானு? முக்கியஸ்த்தர்க ளென்பதைப் பற்றி யோசிப்போம்.

புருஷ வாஞ்சாஸ்தானமாயும் பிரஜாவிர்த்திக் கேதுவாயு முள்ளவர்கள், மனைவிமார்களேயாம்; இல்வாழ்வார்க்கு வாழ்க் கைத்துணையா யிருந்து இன்பம், வாழ்வு, நன்குமதிப்பு, புகழ், தம்பதி ஸமேத கர்த்தவ்ய பஞ்சயக்ஞங்களாலாய புண்ணிய முத லிய இகபரசுகமனைத்தையுந்தரத் தக்கவர்களும், மனைவிமார்களே யாம்; அவர்கள் நாசமடைவரானுல்? க்ரஹஸ்த்தருக்கு ஆகாரம், கல்வி, பெலம், நல்லொழுக்கம், உல்லாசநடை, செல்வம், சிற் றின்ப முதலிய வஸதிகளனைத்தும் போய்விடும்; மனைவியரில்லாத மனைக்கு எத்தனை பெருஞ்செல்வம் வரினும், அது, இல்வாழ்க் கையாகமாட்டாது; மனைவியரில்லாதமனை, பாழுமாம்; காடு மாம்; புலிகிடந்த தூறுமாம்; புருஷர்களைப் பிரபலப் படுத்து வோர், மனைவிமார்களேயாம்; மனைக்கு உறுதியும், விளக்கமும், மனைவிமார்களேயாம்; நமது தெய்வப் புலமைத் திருவள்ளுவ தேவர் திருக்குறளிலே "வாழ்க்கைத் துணைநலம்" "புதல் வரைப் பெறுத" லென்னும் அதிகாரங்களினருகே "அன்பு டைமை" யென்னு மதிகாரத்தை வைத்ததானது, புருஷர்க ளெல்லாரும் மேற்காட்டிய நயங்கருதி மனைவியர்மாட்டு அன்பு வைத்தற்குரிய ரென்னுந் தொடர்புணர்த்துதற் பொருட் டன்றே? அதுநிற்க, தொடர்புகொண்ட ஸ்த்ரீபுருஷாந்யோந்ய ப்ரபாவமானது, ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளருளிய திருக் கோவையாரிலே "சொற்பா லமுதிவள் யான்சுவை" எனவும், "காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்— ஆகத்து ளோருயிர் கண்டனம்" எனவும் வருவனவாதியாகிய

"* காமஞ் சான்ற ஞானப் பனுவல்" களுக்குக், காமபரமாக அர்த்தம் பண்ணும்போது நன்கு விளங்காநிற்கும்; ஆதலால், இல்லறத்திருக்கும் புருஷர்கள், மனைவிமார்பால் அன்புடையராவரேயன்றி, அவர்க்கு நாசம்வருஞ் செயலைச்செய்யக் கனவினுஞ் சம்மதிப்பரோ? ஒருகாலத்துஞ் சம்மதியார்; இவ்வாற்றால், குடும்பத்திலிருந் தில்லறநடாத்தும் புருஷர்களுக்கு மனைவிமார்களே, பிராணஸமாந முக்கியஸ்த்தராவார்கள்; இதற்குப் பிரமாணம்:—

பாரதம்.

சம்பவச் சருக்கம்-62.

"இல்வாழ் பவர்க்கு மடவாரல தியாவரின்பம்
நல்வாழ்வு தேசு புகழ்யாவு நடத்துகிற்பார்"

திருக்குறள்-51.

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை"

நாலடியார்-361.

"மழைதிளைக்கு மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
இழைவிளக்கு நின்றிமைப்பி னென்னும்—விழைதக்க
மாண்ட மனையாளை யில்லாத னில்லகம்
காண்டற் கரியதோர் காடு"

மூதுரை.

"இல்லா ளகத்திருக்க வில்லாத தொன்றில்லை
இல்லாளு மில்லாளே யாமாகின்—இல்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்"

நல்வழி.

"நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா வுண்டிபாழ்
ஆறில்லா வூருக் கழகுபாழ்—மாறில்
உடற்பிறப் பில்லா வுடம்புபாழ் பாழே
மடக்கொடி யில்லா மனை"

---

* இது சிதம்பர மும்மணிக்கோவையி லுள்ளது.

## நன்னெறி.

“காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே—ஓதுகலை
எண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கருன்
கண்ணிரண்டு மொன்றையே காண்”

## நீதிநெறி விளக்கம்.

“கற்புடைத் தன்பு முடைத்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு—மக்கட்பே
றென்பதோர் செல்வமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு”

## நீதிவெண்பா.

“மாதா மரிக்கின் மகனுவி னற்சுவைபோம்
தாதா வெனிற்கல்வி தானகலும்—ஓதினுடன்
வந்தோன் மரித்துவிடின் வாகுவலிபோ மனையேல்
அந்தோ வினையாவும் போம்”

## திருக்குற்றுலப் புராணம்.

### தருமசாமிச் சருக்கம்-11.

“தருமமெனும் பண்டமிடுஞ் சகடமா மனைவாழ்க்கை
கருமநுகம் பிணித்துமனைக் காதலியுந் தானுமென
இருவராய் முறைசெலுத்தி னெத்துணைத்தூ ரமுஞ்செல்லும்
ஒருவராய்ப் பூண்டிழுப்பி னோரிறையுஞ் செல்லாதால்”

## அறநெறிச்சாரம்.

“மருவிய காதன் மனையாளுந் தானும்
இருவரும் பூண்டீர்ப்பி னல்லால்—ஒருவரால்
இல்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று”

## நான்மணிக்கடிகை-18-20-99-103.

“மனைக்கு ஆக்கம் மாண்ட மகளிர்”

"மனைக்குப்பாழ் வாணுதலின்மை"

"பாழொக்கும் பண்புடையா ளில்லாமனை"

"மனைக்கு விளக்கம் மடவாள்"

## திரிகடுகம்.

"நல்விருந் தோம்பலி னட்டாளாம் வைகலும்
இல்புறஞ் செய்தலி னீன்றதாய்—தொல்குடியில்
மக்கட் பெறலின் மனைக்கிழத்தி யிம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன்"

## தனிப்பாடற்றிரட்டு.

ஔவையார் பாடல்-65.

"தாயோ டறுசுவைபோந் தந்தையொடு கல்விபோம்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்—ஆயவாழ்
வுற்றா ரொடும்போ முடற்பிறப்பாற் றோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம்"

## குமரேசர் சதகம்-14-76-63.

"பதிவிளக்குவது பெண் குடிவிளக்குவதரசு"

"கைக்குறுதி வேல்வின் மனைக்குறுதி மனையாள்"

"மங்கைய ரிலாமனைக் கெத்தனை பெருஞ்செல்வம்
வரினுமில் வாழ்க்கை யில்லை
மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு
மலைமேவு குமரேசனே"

---

## அர்த்தமண்டபத்தின் பர்யாய நாமங்கள்.

இனி, அர்த்தமண்டபத்தின் பரியாய நாமங்கள் எவை யெனில்? அக்ரமண்டபம், உபசாரமண்டபம், அர்ச்சாமண்டபம், ப்ரசந்நமண்டபம், முகமண்டபம், போகாலயம், நைவேத்ய மண்டபம் என்பன முதலியவைகளாம்;

---

## அர்த்தமண்டபங் கட்டவேண்டிய அளவுந் தரமும்.

அர்த்தமண்டபத்தை, கெர்பக்ரஹத்துக்குச் சமமான அகல நீள அளவிற் கட்டவேண்டும்; அவ்வாறு கட்டுவதே உத்தம பக்ஷமாகும்; இடவிஸ்தீரண மின்றேல், முக்காற்பாகமான அளவில் வைத்துங் கட்டலாம்; அவ்வாறு கட்டுவது மத்யம பக்ஷமாகும்; மிகவும் இடம் சுருக்கமாகவிருந்தால், அரைப்பாகமான அளவில் வைத்துங் கட்டலாம்; அவ்வாறு கட்டுவது அதமபக்ஷமாகும்; இவற்றிற்குப் பிரமாணம்:—

### பூர்வகாரணாகமம்.

ப்ராஸாதலக்ஷணப் படலம்-22.

"𑌸𑌮𑌂 𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑌮𑌰𑍍𑌧𑌂 𑌵𑌾 𑌹𑌰𑍍𑌮𑍍𑌯𑌸𑍍𑌯 𑌵𑌕𑍍𑌤𑍍𑌰𑌮𑌣𑍍𑌡𑌪𑌮𑍍
𑌤𑌦𑌰𑍍𑌧𑌮𑌣𑍍𑌡𑌪𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌰𑌾𑌧𑌨𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍"

[தமிழில்]

"ஸமம்த்ரிபாத மர்த்தம்வா ஹர்மியஸ்ய வக்த்ரமண்டபம்
ததர்த்தமண் டபங்குர்யா தாசார்யா ராதநம்ஸ்ம்ருதம்"

### சுப்ரபேதாகமம்.

ப்ராஸாதலக்ஷணப் படலம்-95.

"𑌪𑍍𑌰𑌾𑌸𑌾𑌦𑌾𑌰𑍍𑌧𑌂 𑌮𑍁𑌖𑌾𑌯𑌾𑌮𑌂 𑌵𑌿𑌸𑍍𑌤𑌾𑌰𑌂 𑌸𑌮𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇
𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑌂 𑌵𑌾 𑌮𑍁𑌖𑌾𑌯𑌾𑌮𑌂 𑌸𑌾𑌰𑍍𑌧𑌮𑌣𑍍𑌡𑌪 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇"

[தமிழில்]

"ப்ராஸாதார்த்தம் முகாயாமம் விஸ்தாரம் ஸமமுச்யதே
த்ரிபாதம்வா முகாயாமம் ஸார்த்தமண்டப முச்யதே"

### குமாரதந்திரம்.

சுலோகம்-30.

"[illegible] 𑌮𑌣𑍍𑌡𑌪𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 [illegible] 𑌸𑌮𑍇𑌨 𑌵𑌾
𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑌂 𑌵𑌾𑌽𑌰𑍍𑌧𑌂 𑌵𑌾 𑌤𑌦𑍍𑌵𑌦𑍍 𑌹𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑌣𑍍𑌡𑌪𑌮𑍍"

[தமிழில்]

"அக்ரதோ மண்டபம்குர்யாத் கெர்ப்பகேஹை ஸமேநவா
த்ரிபாதம்வா ததர்த்தம்வா ததேவ ஹ்யர்த்தமண்டபம்"

---

மூற்கூறப்பட்ட திருப்பணிமுயற்சிவர்த்தமானச் சருக்கத்தின் கண்ணும், இந்தச் சருக்கத்தின் கண்ணும், எடுத்துக்காட்டிய சுருதியுக்தி யநுபவப் பிரமாணங்களைக் கொண்டு, விசுவநாதர் விசாலாக்ஷிக்கு, (தி - ராம - தி - சுப்பிரமணியஞ் செட்டியாரால்) அர்த்தமண்டபமின்றிப் போடப்பட்டிருக்கிற பிளான்படி செய்யலாகாதென்பதும், அர்த்தமண்டபம் வைத்துத் திருப்பணி செய்யவேண்டியதே யவசியமென்பதும் ஆஸ்திக ரனைவராலும் நன்கு துணியப்படும்;

## கனம்பொருந்திய, தி-வகையார்களே!

அதுநிற்க; நமது-தி-வகையிலுள்ளவரும், திருப்பணித் தலைமையைச் சிலநாள் வஹித்தவரும், வஹித்தநாளில் விநாய கருக்காவரணதேவதையாக விசுவநாதலிங்கத்தைப் பெயர்த்தொதுக்கிவைக்கக் கருதி மூன்றும்பிளான் போட்டவருமான (தி-அ-சு-அ-சுப்பிரமணியஞ் செட்டியாரென்பவர்) இனிமேற் கட்டப்படும் நாதநாலயத்தில், சில மூர்த்திகளை, பூர்வஸ்தானத்தினின்றும் மாற்றி வேறிடத்திற் பிரதிஷ்டை செய்யப்போகிறதாகச் சில காலத்திற்கு முன்பு அடியேனுடைய நேரிற் சொன்னூர்; அந்த விஷயத்தைப்பற்றியும் நமது (தி-வகையார்களது) ஸமூகத்திற் றெரிவித்துக்கொள்ளவேண்டிய தவசியமாகும்; அதனைக் கூறுகின்றேன்; தயவு செய்து கேளுங்கள்;

ஸ்ரீவிசுவநாதப் பெருமானுக்கெதிரே அவருக்கு நேத்திராங்கமாக, கலியுகாதி (5019)-ல் நிகழ்ந்த காளயுக்திஹூத்தில்

சூரியசந்திர விக்கிரகங்களிரண்டு ஸ்தாபிக்கப்பட்டிருப்பதாக முந்திய உபயாலயச் சேர்க்கைச் சருக்கத்திற் கூறியிருக்கின்றே னல்லவா? அவைகள், இன்றைக்கும் விசுவநாதருக் கெதிரே யிருந்து ஆராதிக்கப்பட்டு வருகின்றன; அவைகளை, இனிக்கட் டப்போகிற நூதநாலயத்தில் விசுவநாதருக் கெதிரேவைக்க விடாமல் மாற்றி, ஸ்ரீ விநாயகப்பெருமானுக்கெதிரே அவருக்கு நேத்திராங்கமாக இருந்துவரும்படி ஸ்தாபிக்கிறதென்றுயோசித் திருப்பதாகத் தகவல் சொன்னார்கள்; விநாயகருக்கு வேண்டு மானால் வேறின்னுமிரண்டு சூரியசந்திர விக்கிரகங்களைப் புதுச் சிலையிலடிப்பித்து அவைகளை அவருக்கெதிரே வெயனுகப் பிர திஷ்டிக்கலாமேயொழிய, விசுவநாதருக் கெதிரிலிப்போதிருந்து வருவதை அங்கே சூந்யமாக்கிப் போட்டு, அவைகளை, விநாய கருக் கெதிரிற் கொண்டுபோய் வைக்கலாகாது; ஒரு மூர்த்தி யைச் சூழ்ந்த பரிவாரத்தைப் பிடுங்கி, மற்றொருமூர்த்திக் கெதிரே நட்டால், அது, பெரிய ஆபத்தைத் தரக்கூடிய குற்ற மாகும்;

☞ ஒரு மூர்த்திக்கு முன்னேயிருந்து வந்த பரிவாரத்தை, மற்றொரு மூர்த்திக்கு உபயோகமாகும்படி பிரதிஷ்டித்தல், குற்றமா மென்பது.

அஃது எவ்வாற்றாற் குற்றமாகுமென்னில்? ஒரு ஆலயத் தில் புநராவர்த்தநாதி ஜீர்ணோத்தாரணகாலங்களில் ஒரு மூல மூர்த்திக்குப் பரிவாரங்களாக இருந்துவருகிற ஆதித்யாதி விக்ர ஹங்களை, மற்றொருமூர்த்திக்கு உபயோகப்படுத்தல் முதலிய எவ்வித காரணத்தினாலாவது ஸ்தாநபேதம் பண்ணினால், அதனு லேற்படுந்தோஷத்திற்கு, மூர்த்திஸங்கரதோஷ மென்றுபெயர்; மந்த்ரஸங்கரம், தந்த்ரஸங்கரம், திரவியஸங்கரம், மூர்த்திஸங் கரம், ஆசார்யஸங்கர மென்னும் பஞ்சஸங்கரதோஷத்துளொன்

முகிய இந்த மூர்த்திஸங்கரதோஷத்தை, ஒருவன் செய்வானுனால், அவன், நிச்சயமாய் நாசத்தையடைவான்; அத்தோஷம் அறியாமையால் நேர்ந்துவிட்டால், அதன்பொருட்டுப் பரிகாரமுஞ்செய்து, பேதித்தெடுத்த அம்மூர்த்தியை முன்போலப் பூர்வஸ்தானத்திற் பிரதிஷ்டையுஞ்செய்து, (புநஹா) மறுபடியும் கும்பாபிஷேகஞ் செய்யவேண்டும்; அப்படிச் செய்தபிறகுதான், கர்த்தா சௌக்யமடைவன்; என்று சிவாகமமார்க்க க்ரந்தங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது; இதற்குப் பிரமாணம்:—

ஸ்ரீலோசந சிவாசாரியரியற்றிய,

## பிராயச்சித்தவிதாநம்.

சுலோகம்-179 முதல் 182-வரை.

“𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑌂𑌕𑌰𑌮𑍇𑌵𑍋𑌕𑍍𑌤𑌂 𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌸𑌂𑌕𑌰𑌂 𑌶𑍃𑌣𑍁
𑌮𑍂𑌲𑌬𑍇𑌰𑌾 𑌵𑍃𑌤𑌾𑌨𑍍𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑍇 𑌪𑍍𑌰𑌕𑌲𑍍𑌪𑌯𑍇𑌤𑍍”

“𑌸𑍍𑌥𑌾𑌨𑌭𑍍𑌰𑌂𑌶𑌕𑌰𑌂𑌚𑍈𑌵 𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌸𑌂𑌕𑌰𑌦𑍋𑌷𑌕𑍃𑌤𑍍
𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌸𑌂𑌕𑌰𑌦𑍋𑌷𑍇𑌣 𑌕𑌰𑍍𑌤𑍃𑌨𑌾𑌶𑍋 𑌭𑌵𑍇𑌦𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌮𑍍”

“𑌤𑌦𑍍𑌦𑍋𑌷𑌶𑌮𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌃
𑌸𑍌𑌵𑌰𑍍𑌣𑌾𑌦𑌿 𑌵𑌿𑌧𑌾𑌨𑌾𑌨𑌿 𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑍀𑌨𑍍 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑍇𑌤𑍍𑌤𑌤𑌃”

“𑌪𑍁𑌨𑌃𑌸𑌂𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑌣𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌤𑍃𑌸𑍌𑌖𑍍𑌯𑌂 [𑌮𑌹𑍋𑌤𑍍𑌸𑌵𑌂
𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌸𑌂𑌕𑌰𑌮𑍇𑌵𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑌂𑌕𑌰𑌂 𑌶𑍃𑌣𑍁”

[தமிழில்]

“ தந்த்ரஸங்கர மேவோக்தம் மூர்த்திஸங்கர கம்ச்ருணு
மூலபேரா வ்ருதாந்தேவாந தத்தத்ஸ்தாநே ப்ரகல்பயேத்”

“ஸ்தாநப்ரம்ச கரஞ்சைவ மூர்த்திஸங்கர தோஷக்ருத்
மூர்த்திஸங்கர தோஷேண கர்த்ருநாசோ பவேத்த்ருவம்”

"தத்தோஷ சமநார்த்தாய சாந்திம்குர்யாத் விசக்ஷண:
ஸௌராதிபரிவாராணி பூர்வவத் ஸ்தாபயேத்க்ரமாத்"

"புநஸ்ஸம்ப்ரோக்ஷணங்குர்யாத் கர்த்தாஸௌக்யம் லபேத்த்ரு
மூர்த்திஸங்கர மேவோக்தம் ஆசார்ய ஸங்கரம்ச்ருணு" [வம்

இன்னமும், விசுவநாதர் விசாலாக்ஷிகோயிற் திருப்பணி ஆரம்பிப்பதற்குள்ளும், முற்றுப் பெறுவதற்குள்ளும் நமது வகையிலுள்ள சிற்கிலருள் தத்தம் மனம்போனவாறு யார்? யார்? எந்த? எந்த? மாதிரியானபிளான்களைப் போடவிருக்கின்றார் களோ? எந்த? எந்த? மூர்த்திகளை ஸ்தாநபேதஞ் செய்யவிருக் கின்றார்களோ? அவைகள் (பௌஷ்யம்) எதிர்காலநிகழ்ச்சிய னவாதலால் அடியேன் அறிந்திலன்; அது நிற்க;

ராஜ்ஜிய காரியத்திற்கு, ஆவனவும் ஆகாதனவுமாகிய செயல்களையறிந்து அவற்றுள் ஆவனவற்றையே விரும்புமியல் புடையாரைத் தேர்ந்து நியமிக்க வேண்டுமெனவும், அவ்வாறு தேர்ந்து நியமித்திருந்த போதிலுமே அதில் அவர் கோணு தொழுகுதலைத் தினந்தோறும் ராஜாக்கள் ஆராய்ந்தாற்றான் அதன்வழித்தாய உலகத்திற்கு க்ஷேமமுண்டாகுமெனவும் திருக் குறள்-511, 520-ல், "நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த—தன் மையா னாளப்படும்" "நாடொறும் நாடுக மன்னன் வினைசெய் வான்—கோடாமை கோடா துலகு" எனவருபவைகளின்மூலம் விதித்திருத்தலால், அதுபோலவே, ஈண்டு இத்திருப்பணிக் காரி யத்திற்கும், அவ்வியல்புடையாரைத் தேர்ந்து நியமிக்கவேண்டு மென்பதும், அவ்வாறு தேர்ந்து நியமித்திருந்த போதிலுமே இதில் இவர் கோணுதொழுகுதலைத் தினந்தோறும் (இ-வகைப் பொதுவார்) கவனித்தாற்றான் இதன்வழித்தாய அனைவர் குடும் பத்திற்கும் க்ஷேமமுண்டாகு மென்பதும் நிச்சயமாய்த் துணி யப்படும்.

திருப்பணித் தலைமையைப் பதவிக்கிரமத்திற் பெற்று நடாத்திவருவோர்களை மேற்சொன்னபடி ஆராயும்போது, அவர்

களுள், ஒவ்வொருவரும் அக்காரியத்தைத் தத்தம் மனம்போன வாறு அசாஸ்திரிகமாய்ச் செய்வார்களேயானால்? உடனே வல் விரைந்து தடுத்து விதிப்படி செய்விக்கவேண்டிய பொறுப் பானது (தி-வகைப் பொதுவார்களுக்கே) கடன்மையாகும்; எதனு லென்றால்? நாலடியார் 180-ல் " மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த—இனத்தா லிகழப் படுவர்—புனத்த— வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே—எறிபுனந் தீப் பட்டக் கால்" எனவருஞ் செய்யுள், காட்டுத் தீயானது, வனப் பொதுவைப்பற்றும்போது வேங்கை யெட்டி யொதியாதி விரு க்ஷங்களோ டொருங்கிருந்த சந்தந குங்கும தாடிமலிகுச வகுள சம்பக பாடலபாரிஜாத கதளீசூதபநஸ கபித்தாமலக நாளி கேர திராக்ஷாதி விருக்ஷங்களேயுந் தஹிக்குமென் றுணர்த்துமாறு போல, அசாஸ்த்ரிகப் பிளான்படி, செய்கையுமுற்று மானல் அதனுன் மூண்டெழுகின்ற சிவாபராதத் தீயானது, வகைப் பொதுவைப் பற்றும்போது அப்பிளான்களின் செய்கையைச் செய்தவர்களோடு, ஒத்தொருங்கிருந்த அனைவரையுமே தாக்கு மென்றுணரக்கிடத்தலாற்றான், சாஸ்திர விதிப்படி செய்விக்க வேண்டிய பொறுப்பானது, (தி - வகைப் பொதுவார்களின்) கடன்மையாயிற்றென அறிக.

ஆலயாங்கஹீ மூர்த்திபேதாதி அசாஸ்த்ரிகச் செயல் களை இதற்கு முன்செய்து அதனுற் பாவமும்பழியு மெய்தி அறம்பொருளின்பச் சிதைவாற் பரிதபித்த குடும்பத்தோரும், இவ்வுலகத்திற் சாக்ஷியமாய் இப்பொழுதும் இருக்கின்றார்கள்; அவர்களின் பேரூரெழுதுதலே, முறையன்றென விடுத்தேன்; விஜாரித்தறியலாம்; அதனையடியே னெழுதாமையைப் பற்றி மன் னிப்பதும், பொதுவார் ஸமூகத்துக்கு முறையேயாம்.

இதுகாறுங் கூறிப்போந்த சுருதி, யுக்தி, யநுபவப் பிரமா ணங்களை அங்கீகரித்து, நமது (கனம்பொருந்திய—தி-வகையார்

கள்) விசுவநாதர் விசாலாக்ஷி கோயிற்றிருப்பணியை அசாஸ்த்ரிகமாக்கப் பிளான்போட்டுக் கொண்டுவந்து முன்னிற்பார்களை யெல்லாம் அதட்டி யொழித்துவிட்டுச் சாஸ்த்ர விதிப்படி ஸாங்கோபாங்க ப்ரத்யங்க ஸஹிதம் மிகச்சிறப்பாகச் செய்து புண்ணியத்தையும் புகழையும் அடைவார்களெனத் திண்ணமாய் நம்புகின்றேன்.

## கனம்பொருந்திய,தி வகையார்களே!

அவ்வாறு நம்புகின்ற (அடியேனுக்கு) இந்த விசுவநாதர் விசாலாக்ஷிகோயிற் றிருப்பணியைப் பற்றி, உங்களது ஸமூகத்தை நோக்கி வேண்டிக் கொள்ளுதலும் மரபாதலால், இச்சருக்கத்தை இம்மட்டில் நிறுத்திக்கொண்டு, இனி, இதனை யடுத்தசருக்கம், வேண்டுகோட்சருக்க மெனப் பெயர்வைத்தமைக்கப்படும்; அதனையுந் தயவு செய்து பார்வையிடக் கோருகின்றேன். சுபம்.

திருப்பணிச் சருக்கம்

முற்றிற்று.



# வேண்டுகோட் சருக்கம்.

நூதனச்செய்யுள்.

ஆலயத்தின் திருப்பணியை யாகமத்தின் விதிப்படிக்சே
யமைக்க வுந்தம்
பாலவரு ளழிவழக்கை யார்சொலினு மவர்வனுவைப்
பார்த்தொ துங்காச்
சிலமுற்றுச் சுகமடைய நீதியினை வாய்திறந்து
செப்ப வும்மன்
மேலுயர்தி ருவகையார்க் கிவ்வேண்டு கோட்சருக்கம்
விளம்பு வாமால்.

---

## கனம்பொருந்திய, தி வகையார்களே!

விசுவநாதர் விசாலாக்ஷிக்கு போகஸக்திஸ்தானமும் கெர்பக்ரஹசுத்தியுமாகிய அர்த்தமண்டபமானது, நைவேத்ய தீபாராதந ஷோடசோபசாரஞ் செய்தற் கின்றியமையாத முக்யாங்கமாதலால், அதனை வைத்தே திருப்பணி செய்யுமாறு வேண்டிக் கொள்வதோடுங்கூட, இடவிசாலமின்மை கருதி கெர்பக்ரஹத்தை ஏற்கனவே சுருக்கமாகவைத்துச் செய்யும்படி நேர்ந்திருப்பதனுலும், அதற்குச் சமமான அளவில் அர்த்தமண்டபத்தை யேற்படுத்தாவிட்டால், பின்னுக்கொருகாலத்தில் ஷோடசோபசாரஞ்செய்யத் தொடங்கும் போது, சாந்தியதீதம்-சாந்தி-வித்தை-பிரதிஷ்டை-நிவர்த்தி யென்னும் பஞ்ச கலாரூப தீபங்களை நிஷ்கள சிவஜ்யோதிர்மய பூரணகும்பதீபாவ்ருதமாய்ப் பரப்பி, உபய பரிசாரக ஸஹிதமாய்ச் சிவாசாரியர் நின்று ஆராதனைசெய்ய இடமுடைப்படு மாதலாலும்; வேண்டும் போது பிரித்து விசாலப்படுத்திக் கட்டிக்கொள்ளக்கூடிய காரியம், இது வல்லவாதலாலும்; இப்பொழுதே கெர்பக்ரஹ

ஸமான உத்தம பக்ஷ அளவில் அர்த்தமண்டபத்தை அமைக்கும்படி வேண்டிக் கொள்ளுகின்றேன்.

விசுவநாதர் விசாலாக்ஷி கோயிலைச் சென்ற ராக்ஷஸவூ ஆவணிமீ 14உ நமது (தி-வகைப்பொதுவி) லொப்புவித்த காலத்திற் பிறந்திருக்கிற யாதாஸ்திற்கண்ட பிரகாரம் ஷை சுவாமி அம்மை இரண்டிற்கும் இரண்டு கோபுரச்சந்நிதிகளாக வைத்துக் கட்டும்படி இந்தப் பிளானிலேயே துலங்கப் போட்டு ஏற்பாடு செய்யுங்க ளென்று துர்மதிவூ ஆவணிமீ 24உயில் அப்போது திருப்பணித் தலைமையை வஹித்துப் பிளான்போட்டவர்களான (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரிடம்) (அடியேன்) சொன்னதாகவும்; அதற்கு (ஷை-சுப-அவர்கள்) விசுவநாதர் விசாலாக்ஷிக்கு ராஜகோபுரத்துடனிரண்டு சந்நிதிகளாக வைக்கிற பக்ஷத்தில் பிள்ளையாருக்கும் விசுவநாதருக்கும் கோபுரமிரண்டு கிழக்கே யமைக்க நேருவதால் அவ்விரண்டும் மிகநெருங்கி அடிப்பரப்பினொருபக்க வர்க்கவேலை மறைபடுமென்று பதிற்சொன்னதாகவும், அப்பால் (அடியேன்) விசுவநாதருடைய கோபுரத்தின் அகலநீளவுயரங்களை யியன்ற வரையிலுங் குறைத்து அதமபக்ஷமுறையி லடக்கிச் செய்தால் மறைபடாதென்றும் தெற்குமதிலிற் றனியே விசாலாக்ஷிக்குக் கோபுரமமைப்பதாக விருப்பதால் அது மற்றொன்றின் வர்க்கவேலையை மறைக்குமென்று சொல்ல ஹேதுவில்லை யென்றும் தக்கஸமாதானஞ் சொன்னதாகவும், அதற்கு (ஷை-சுப-அவர்கள்) இரண்டு சந்நிதிகளாக வைத்துக் கோபுரத்துடன் செய்தாற் செலவதிகமாகு மானதால் அவ்வாறு சந்நிதிவைத்துச் செய்யமுடியாதென்று மறுத்துச் சொல்லி விட்டதாகவும் முந்தின திருப்பணி முயற்சி வர்த்தமானச் சருக்கத்திற் சொல்லியிருக்கின்றேனல்லவா? (ஷை-சுப-அவர்கள்) செலவதிகமாகுமென்று அப்போது சொன்னசொல்லானது, விசுவநாதர் விசாலாக்ஷியின் திருப்பணிச் சம்பந்தமாக அப்போது வரவுவந்த அசல்தொகைக்கு மேலே

போய்ச் செலவதிகமாமென்கின்ற கருத்தாற் சொன்னதேயாம்; விசுவநாதர் விசாலாக்ஷி திருப்பணிக்கு ரூ-16109-4-3 ரூபாய் பதினாறுயிரத்தி நூற்றொன்பதே காலுங் கால் வீசம் துர்மதிஞூ கார்த்திகைமீ 1உயில் உண்டியன்மூலம் (அடியேனாற்) கொடுக்கப்பட்டபடியால் அத்தொகையளவை நினைத்து ஷை சுவாமியம்பாளிரண்டுக்கும் இரண்டுகோபுரச் சந்நிதிகளாக வைப்பதனாலாகுஞ் செலவு, ஷை உண்டியற் றொகையளவி லடங்காமலதிகரித்து மேற்போமென்று, அப்பவே செய்யக்கருதியுள்ள (சுப-அவர்கள்) சொன்னமையால் அச்சொல், அக்காலத்துக்குச்சரி; சென்ற துர்மதி ஞூத்திலேயே செய்கிறதாக முயன்ற திருப்பணி, ஏதோ தெய்வீகமாய் ஒன்பதுவருஷகாலமாக இதுவரைக்கும் நடைபெறாமல் நின்றுபோய் இப்போது ஆரம்பித் திருப்பதாலும்,

**☞ ஒன்பது வருஷத்துக்கு முன்னே உண்டியல் மூலங் கொடுக்கப்பட்ட அசல் ரூபாய் (16109-4-3) பதினாறுயிரத்தி நூத்தி ஒன்பதே காலுங்கால் வீசத்துக்கு ஷை துர்மதிஞூ கார்த்திகைமீ 1உயிலிருந்து நாளது பிரமோதூதஞூ ஐப்பசிமீ 30உவரைக்கும் ஞூ (9)-க்கு மதுராஸ்நடப்புவட்டிப் படிக்கு வட்டியுள்படக் கூடுதல், நாளது பிரமோதுதஞூ கார்த்திகைமீ 1உக்கு ரூ (36001-4-0) முப்பத்தாறுயிரத்தி ஒண்ணே கால் ரூபாய் ஆகின்றபடியாலும்,**

முந்தின யாதாஸ்த்தின் க்ஷரத்து மேன்மையுறும்படி, அதமபக்ஷ முறையிலேனும், இயைந்தவரையிலடக்கமாக, விசுவநாதர் விசாலாக்ஷியிரண்டுக்கும் இரண்டு கோபுரச்சந்நிதிகளாக வைத்து மேற்கண்ட கூடுதற்றொகையாற் கட்டிமுடிக்கலாமென்கிற விஷயமானது, எவற்றையும் அளந்தறியுஞ் சமர்த்தர்களாய் விளங்குகின்ற நமது (கனம்பொருந்திய தி-வகையார்களனைவர்க்கும்) இயல்பாகத் தோன்றக் கூடியதேயாகும்; ஆகுமேனும்,

(அடியேனும்) ஷை விசுவநாதர் விசாலாக்ஷி இரண்டுக்கும் இரண்டு கோபுரச் சந்நிதிகளாக வைத்துத் திருப்பணியைச் செய்யுமாறு வேண்டிக்கொள்ளுகின்றேன்.

பிள்ளையார் விசுவநாதர் கோயிலைப் புதிதாய்க் கட்டுகிற தென்று தி-வகைப் பொதுவிற் பேசித் தீர்மானமானவுடன் முதலிற் திருப்பணித் தலைமையை வஹித்த (தி-ராம-தி-சுப்பிரமணியஞ் செட்டியாரால்) விசுவநாதர் விசாலாக்ஷிக்கு அர்த்த மண்டபமின்றிப் போடப்பட்ட அசாஸ்த்திரிகப் பிளான்படி செய்யலாகா தென்று (தி-வகைப்பொதுவார்களின் கூட்டத்தில்) சென்ற துர்மதிளு ஆவணிமீ 24உ-யிலும் துந்துபிளு வைகாசிமீ 6உ-யிலும் (அடியேன்) பரிதாபத்தோடு நின்று முறையிட்டதனையும், பிளான்படிக்குத்தான் செய்வோமென்று வகைச் சமூக மத்தியிலிருந்து (ஷை-சுப-அவர்கள்) அம்முறையீட்டை வற்புறுத்தி மறுத்ததனையும் கேட்டுக்கொண்டு அக்காலத்திலங்கிருந்த நமது கனம்பொருந்திய (தி-வகையார்களெல்லாரும்) தடைவிடையு மொன்றையு முரையாதிருந்தார்க ளென்று முந்தின திருப்பணி முயற்சி வர்த்தமானச் சருக்கத்திற் சொல்லியிருக்கின்றேனல்லவா? அது சம்பந்தமாக வேண்டிக் கொள்ளப்படுவன சிலவுண்டு; அவை யாவெனிற் கூறுதும்;

நமது கனம் பொருந்திய (தி-வகையார்களின் மஹாஸபையானது) மேற்கண்டவாறு கூட்டங்கூடியிருந்த தேதியிரண்டனுள், பின்னிட்ட தேதியிலேனும், அர்த்தமண்டப முறையீடாகிய பிராதைப் பயிலிலெடுத்துக் கொண்டு, அது, ஆகமச் சட்டத்தைப் பொறுத்த விஷயமாதல் பற்றி அச்சட்டத்திற் பியாஸான ஐந்து ஆதிசைவ சிவாசாரியர்களாகிய மெம்பர்களின் புல்பெஞ்சுக்கனுப்பி, சிவாலயத்தை அர்த்தமண்டபமில்லாதபடி செய்யலாமா? அல்லது, அதனை வைத்தேதான் செய்யவேண்டுமா? என்ற விபரத்துடன் ஐந்து லெட்டர்களையு மெழுதிப் போட்டு விட்டு, பதில் வருவனவற்றுள், மெஜாரட்டியைத் தீர்

மானமாக எடுத்துக் கொள்ளுவோமென்றுவது, உத்திரவு செய்திருக்கலாம்; இந்தச் சபை, இவ்வாறு உத்திரவு செய்வதற்குங் கூடத் திருவுளம்பற்றுதிருந்தமைக்குக் காரணத்தை, அடியேனறிந்திலன்; இது சம்பந்தமாக முறையிட்ட அடியேன் மேற்றாய குற்றத்தால், இச்சபை பராமுகமாய் அக்காலத்தி லிருந்ததுபோலும்; அவ்வாற்றுலிருந்தபோதிலும் கைவல்ய நவநீதம், தத்துவ விளக்கப்படலம், 91-ல் "சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்—னின்றது புசிப்பார் வெய்யினிலவாய் விண் விழுது வீழ்ந்தும்—பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா யொன்றும் பாரார்—நன்றுதீ தென்னுர் சாக்ஷி நடுவான சிவன்முத்தர்" என்ற செய்யுளில் ஆரம்பத்திலும், பட்டினத்தடிகள் பாடல் பொது-45-ல் "நானெனத் தனைபுத்தி சொன்னுலுங் கேட்டிலை நன்னெஞ்சமே—யேனிப் படிக்கெட் டுழலுகின்றுயினி யேதுமிலா—வானத்தின் மீனுக்கு வன்றூண்டி விட்ட வகையதுபோற்—போனத்தை மீள நினைக்கின் றனையென்ன புத்தியிதே" என்ற செய்யுளிற் கடாசியிலுங் கூறியபடி போனதைப்பத்தி இப்போது அடியேன் வருந்துவது, கூடாததாகும்; ஆதலால், முன்னே நடந்தது ஒருவாறுயொழிக;

இனி, இதுமுதற்கொண்டாவது நமது (கனம்பொருந்திய-தி-வகையார்) பொதுக்காரியங்களிலேனும், தனது காரியங்களிலேனும், வைதிகத்தில் அசாஸ்த்திரிகமாகவேனும், லௌகிகத்தில் அநீதியாகவேனும், ஒருவர், பலரைச் சேர்த்துக்கொண்டு மற்றொருவரை அடர்த்து அதட்டிவிட்டு அழிவழக்கை நாட்டப் புகுந்தால், அதற்கிடங்கொடாமல் இகபரநினைந்து நீதியை வாய் திறந்துகூறி நிலைநிறுத்திப் புகழ் புண்ணியங்களை அடையுமாறு அவ்வகையார்களையே மிகவும் வணக்கத்துடன் இன்சொல்லால் வேண்டிக்கொள்ளுகின்றேன்.

இனி, (தி-வகைப்பொதுவார்) பொதுக்காரியமாகிய திருப்பணி வேலையைப் பார்க்கும்படி சொல்லித் தலைமையையுங்

கொடுத்த பின்பு, அத்தலைமையை வஹிக்கின்றவர் அக்காரியத்திற்கு, கல்லாதிகளை வரவழைப்பதுந் தொழிலாளிகளை வேலை வாங்குவதுமாகிய உதவியைச் செய்துவருகின்ற நிகழ்காலத்திலேயே, அவரே, அசாஸ்த்திரிகமாகத் திருப்பணியைச் செய்வித்தலாகிய இடரையும் செய்வாரானால், அவர் ஒன்று, அவராற் செய்யப்படு முதவி ஒன்று, அவராற் செய்யப்படுமிடர் ஒன்று, ஆகமொத்தம் (டோட்டல்) மூன்றனுள், எதனைக் கொள்ளலாம்? எதனைத் தள்ளலாம்? என்று கேட்பீர்களாயின், திருப்பணித் தலைமையை வஹித்தவரையும் அவராற் செய்யப்படு முதவியையு மட்டுமே கொள்ளவேண்டு மென்பதும், அவராற் செய்யப்படுமிடரைத் தள்ளவேண்டு மென்பதுமே, அக்கேள்விக்கு விடையாகும்; இச்செய்கை, எதனைப்போல்வதெனின்? உழவர்கள், தம்மாலுழுது விதைத்து நட்டுப் பாதுகாக்கப்படும் பயிருக்கு நிலமும் ஜலமுமாகிய இரண்டும் அப்பயிரை வளர்க்கு முபகாரத்தைச் செய்துவருகின்ற நிகழ்காலத்திலேயே, அப்பயிர்க்கிடராகிய புல்லாதி களைகளையும் வளர்த்து வருமேனும், நிலம் ஜலம் உபகார மென்பவைகளைத் தள்ளாமற் கொண்டும், அந்த நிலஞ்சலத்தால் வளர்த்துவிடப்பட்ட களைகளைக் கொள்ளாமற் களைந்தெறிந்துவிட்டு மிருக்கின்ற செய்கையைப் போல்வதாகும்; இதற்குப் பிரமாணம்:—

## விநாயக புராணம்.

### திருநாட்டுப் படலம்-111.

"தாமாக்கும் பொருட்குதவி தனைப்புரிவா ரதற்கிடரும்
தாமாக்கி னவர்தம்மைத் தணவாமே யிடர்களைவார்
தாமாக்கும் பயிர்க்கூறுய்த் ததைகளையு நிலநீரும்
தாமாக்க வவைமுனியார் களைமுனிவார் தகுமுழவர்"

---

இனி, விசுவநாதர் விசாலாக்ஷியின் நித்தியப்படிப் பாலபிஷேகத்துக்காக, சென்ற தூர்மதிஞு கார்த்திகைமீ 1வ்யில் ஷை

தேதிமுதல் நடப்புவட்டியுடன் கொடுக்கும்படி ஷை பாற்கட்டளைப் பேரால் ரூ (1730-8-0) ரூபாய் ஆயிரத்தியெழுநூற்று முப்பதரைக்கு மதுராஸ் உண்டியல் (அடியேனுற்) கொடுக்கப்பட்டிருப்பதாக, முந்தின திருப்பணிமுயற்சி வர்த்தமானச் சருக்கத்திற் சொல்லியிருக்கின்றேனல்லவா?

☞ ஷை தொகைக்கு ஷை தேதியிலிருந்து நாளது பிரமோதூதஞு ஐப்பசிமீ 30உ வரைக்கும் ஞு 9-க்கு மதுராஸ்நடப்பு வட்டிப்படிக்குக் கூடுதல் நாளது பிரமோதூதஞு கார்த்திகைமீ 1உக்கு ரூ. (3866—0—0) மூவாயிரத்தி யெண்ணூத்தி அறுபத்தாறு ரூபாய் ஆகின்றது.

நாளது வரையிலும், ஷை பாற்கட்டளை நடக்கவில்லை, ஏனை மூர்த்திக ளெல்லாவற்றைக்காட்டிலும் விசேஷமுடைய ஈண்டுள்ள சுவேதநிற வாணலிங்க விசுவநாதமூர்த்திக்கும்; அம்மூர்த்தியைப்பிரியாத விசாலாக்ஷியம்மைக்கும் நித்தியப்படி காலந்தோறும் பாலபிஷேகஞ் செய்து வரவேண்டியது முக்கியமென்று ஆன்றோர் கூறியதை யெண்ணித்தான், அடியேங்களது முன்னோர்கள் அதற்குப் பணமெடுத்து வைத்தார்கள்; ஒரு சிசுவின்போஷகர்மாட்டே, அச்சிசுவினது போகபோக்கியப் பொருள்களையு மொப்புவித்தாற்றான், போஷணை தடைபடாது நடைபெறுமென்கின்ற தீர்க்காலோசனையால் (அடியேன்) ஷை பணத்தை, விசுவநாதர் விசாலாக்ஷி கோயிலின் விசாரணையை வஹிக்கின்ற நமது (கனம்பொருந்திய - தி - வகையார்களின் பொதுவில்) ஒப்புவித்தேன்; ஷை கட்டளையை ஷை பணம் அசல் வட்டியுள்பட இப்போது ஸ்ட்டாக்கிலிருந்துவருவதை மூலதனமாகவைத்து, அதற் கேற்ப, இதுமுதற் கொண்டேனும் பிரதிதினமுங் காலந்தோறுந் தவறாமல் நடாத்துவிக்குமாறு வேண்டிக்கொள்ளுகின்றேன்.

இனி, நமது-தி-வகைப் பொதுக்காரியங்களுக்கு, முன்னிலையிடத்தும் படர்க்கையிடத்தும் அளவளாவிக்காரியசித்தி செய்வதற்கு சுருதியுக்தியநுபவ ஆற்றலால் வலிகாலமிடமறிந்து நால்வகை யுபாயத்துளொன்றை ஏற்ற பெற்றி யுபயோகித்துச் சித்திக்கப்பண்ணிக்கொண்டு மீளத்தக்க ஆத்யந்த மிருதுவசந பெகுஜநவசியமுடையாரை நமதுவகைக்குள் ஆராய்ந்து நியமித்தலினும், மேற்கூறப்பட்ட இலக்கணமமையப் பெறுதோர், தாமேதலையிட்டுக்கொண்டு முன்னிற்பாராயினும், வலுவில் மேல் விழுந்து தடுத்து அவரை அகற்றுவதிலுமே நமது வகைக்கு வெற்றியும் லாபமும் நிறையுமாதலால், அவ்விதஞ் செய்து வருமாறுவேண்டிக்கொள்ளுகின்றேன்.

இனி, பிள்ளையார் விசுவநாதர் விசாலாக்ஷிக்கு நடத்தப் பெறுகின்ற நித்திய நைமித்திக விசேஷங்களிலும், ரதோற்சவம் ஏற்படுத்தினல் அதனிலும், சிவாகமத்தால் விதித்தனவற்றைச் செய்வதும், விலக்கினவற்றையும் விதியாதன வற்றையுந் தவிர்வதுமே, இம்மை மறுமை வீடென்னும் மும்மையின்பங்களையும் நிறையத் தருமாதலால், அவ்விதமே செய்வித்துவர வேண்டிக் கொள்ளுகின்றேன்.

## கனம்பொருந்திய, தி வகையார்களே!

ஸ்ரீ கைலாஸ விநாயகப் பெருமானைப் பற்றி, உங்களது ஸமூகத்திற் றெரிவித்துக்கொள்ளத்தக்க இரண்டொரு விஷயமுமுண்டு; பின்பு செவ்விநோக்கி (அடியேன்) தெரிவிக்கும்போது அங்கீகரிக்கத் திருவருள்புரியுமாறு, அப்பெருமானது உபய

சரணாரவிந்தங்களை அநேகவந்தனஞ்செய்து வேண்டிக்கொள்ளுகின்றேன்; சுபம். சுபம். சுபம்.

வேண்டுகோட் சருக்கம்
முற்றிற்று.

---

ஸ்ரீ குஞ்சிதபாதந்துணை
திருச்சிற்றம்பலம்.

---

# விசுவநாதர்கோயிற் றிருப்பணிமுறையீடு முற்றிற்று.



---

## அறிவிப்பு.

☞ இம்முறையீட்டில், காலதேசவர்த்தமானம் நோக்கி வழக்கச்சொற்களும் ஏகதேசத்தி லெழுதப் பெற்றிருக்கும்.

# வாழ்த்து.

---

நூதனச்செய்யுள்.

தேவைநகர் கைலாஸ விநாய கப்போர்த்
　　தெய்வசிகா மணிபுத்தி சித்தி செல்வப்
பாவைவிசா லாக்ஷிவிசு வேசர் தண்ட
　　பாணிசைவம் வைதிகமபல் லாண்டு வாழ்க
பூவுலகின் மழைபொழிக மறையோர் வேந்தர்
　　புங்கவரா னீறுண்டி * பொறியைந் தோங்க
சேவுயர்த்தா ராலயத்தை விதிப்ப டிக்குத்
　　திருப்பணிசெய் வோர்களெலாஞ் செழித்து வாழ்க.

---

ஸ்ரீ கைலாஸவிநாயகர் துணை.

---

* பொறியைந்து-பஞ்சாக்ஷரம்.

